# SANTÔR KULA MARAPUKATTAL:

BEING

## A TREATISE

ANSWERING THE OBJECTIONABLE STATEMENTS MADE REGARDING THE *SANTOR RACE* IN THE *JATISANGRAHASARAM*,

A BOOK PUBLISHED A. D. 1872,

AND FULLY DEVELOPING HISTORICAL FACTS &c., THROWING LIGHT ON THEIR HISTORY.

---

BY THE

REV. S. WINFRED,

A GRADUATE OF THE LATE BATTICOTTA SEMINARY, JAFFNA.

---

Madras:

PRINTED BY C. FOSTER AND CO.,

FOSTER PRESS, 23, RUNDALL'S ROAD, VEPERY.

1874.

Price Rs. 2-8-0.

சான்றோர்குல

# மரபுகாத்தல்.

இஃது

கிறிஸ்தாப்தம் கஅஎஉ ௵ அச்சிடப்பட்ட

**ஜாதிசங்கிரகசாரம்என்னும்நூலில்**

சான்றோர்குலத்தவர்களைச்சுட்டி
எழுதப்பட்டிருக்கின்ற தப்புகளை, நூல்வழக்காலும் உலகவ
ழக்காலும் அகற்றுதற்கும், உண்மையை
ருசுப்படுத்துதற்கும்

**ச. வின்பிரிட்டு ஐயர்**

அவர்களியற்றியது.

சென்னபட்டணம் வேப்பேரி:
சி. பாஸ்ட்டர் அன்டு கோ அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

சாலிவாகன சகாப்தம் களகூஎ-க்குச்சரியான
கிறிஸ்தாப்தம் கஅஎச ௵.

விலை ரூ 2 - அணா 8.

# PREFACE.

THE author has undertaken the publication of this little volume with the view of answering the objectionable statements lately made by the author of the *Jatisangrahasaram*, a closely printed octavo volume of 420 pages. Few Sections treating on points tending to throw difficulties on the way of antiquarians are also added, with full explanations and illustrations.

In 1850 A. D., the Rev. R. Caldwell, LL. D., of Edyengudi in the Tinnevelly District, published a small pamphlet on the origin, present state, and religion of the Santôr, with the view, as he seems to think, of getting pecuniary aid from various quarters to spread secular and religious knowledge among them; and though some of the statements made in the book are objectionable, they will not be discussed in this brief preface.

When arrangements were made by the Madras Government for taking the Census in the year 1870 A. D., a book called *Jatierpattukorikai* was published, offering a few hints to show that the Santôr are of Kshatrya origin.

At the same time, some of the leading members of the race presented a petition to the Census Committee protesting against the wrong position assigned to them in the proposed *scale of castes* and requesting to permit them to collect and state all arguments in support of the proposition that the Santôr form a branch of the Kshatryas of the Tamil country; the

Committee yielded to their request. A similar concession was also made to all other caste people who presented petitions of the like sort.

Subsequent to this, many commenced to dive deeply into the depths of antiquities and spent their midnight oils in studying the mythical dialect of the Hindus greatly resembling the hieroglyphics of Egypt, and for bringing out truths apparently myths and facts concealed under symbols. In A. D. 1871, a pamphlet, by the name of *Santôr Marapu,* was published, briefly describing the original locality, the Kshatrya origin, the Religion, the Language, the causes of downfall, &c., of the Santôr race, followed by an Appendix giving a succinct view of the rise and fall of the Telugu dynasty in the Tamil country, and a short account of Sura Pandian and his descendants as treated in the 3rd Kandam of Brahmiapuranam, ranked as the first of the eighteen Puranams.

The *Jatisangrahasaram* referred to above was printed and circulated next year. The author of the work has made great many incongruous statements regarding the Santôr people quite repugnant to what are mentioned in ancient books and documents.

The chief topics handled and discussed in the following pages are:

(1.) Full commentary on the 50th Sutram in the 2nd Chapter of Thivagaram, a Standard Tamil work of great antiquity.

(2.) Detailed explanation of the 34th Stanza in Section II, of *Sudamaninigandu,* a poetic Vocabulary of Tamil words.

(3.) Full account of *Kalvilaignar,* toddy-sellers.

(4.) The origin of the *Santôr race.*

(5.) Full description of the title of *Grammanies,* a Sanskrit word denoting rulers, or heads of villages.

(6.) An explanation of the title of *Nadar,* rulers of land.

The following Books were consulted in writing this treatise: Surapandia Puranam, Santôr Puranam,* Thivagaram, Sudamani Nigandu, Tolkapiam, Kamban's Ramayanam, Maha-Bharatam, Peria-Puranam, *Talavilasam* &c., together with a few European authors such as the works of Prof. Max Müller, Dr. Muir, &c.

In conclusion the author entertains the hope that if all the particulars given in this Book be carefully studied, the reader will be convinced that the subject is fully gone into and accurately described; and he will thus be in a position to draw his own conclusions from the evidence of facts laid before him, and not blindly follow any Sectarian leader. The author has reasons to say with Prof. Max Müller, 'let everything be weighed in the just scales of argument. Those who argue for victory, and not for truth, can have no hearing in our Court. There is too much serious work to be done to allow time for wrangling or abuse. Strong arguments require honest labour, sound judgment, and, above all, a genuine love of truth.'

*April 21st* 1874, Trichinopoly. S. WINFRED.

---

* A Tamil work, compiled from Sanscrit authorities, by a guru named *Sattainadan,* in Kollom year, 829.

# பாயிரப்பிரகரணம்.

1. சான்றோர்குலத்தவர்களைச்சுட்டி, தென்பாண்டிநாட்டுத் தென் கடற்கரைப் பூமியைச்சேர்ந்த இடையன்குடியில் நெடுநாளாய் மிஷநெரியாக விருந்துவருகிற கனம்: ஆர். கால்வெல்லையர் (The Rev. R. Caldwell,) சிறுநூலொன்று அங்கிலேயபாஷையில் எழுதி, கிறிஸ்தாப்தம் ௧௮௪௯-ளு அச்சியற்றுவித்துப் பிரசுரஞ் செய்தனர். அந்தநூலுக்கு,

'The Tinnevelly Shanars'

எனப் பெயரிட்டிருக்கின்றனர். அந்த நூலில், மேற்படி சான்றோர்குலத்தவர்களுடைய பூர்வ வுற்பத்தியையும், அவர்களுடைய குலநிலையையும், அவர்களுடைய மதவிஷயங்களையுஞ்சுட்டி எழுதியிருக்கிறவைகளிற் சில ஆட்சேபிக்கிறதற் கேதுவானவைகளாயிருக்கின்றன. அவைகளை இங்ஙனம் இப்போது எடுத்து விபரித்துப்பேசுதற் கேதுவில்லாமையால், வேறொரு சமயத்தில் அவ்வாறுசெய்ய நினைத்திருக்கின்றனம்.

2. 'மகாகனம்பொருந்திய சென்னபட்டணம் கவர்ன்மெண்டார் ஷாங்ஷன் பண்ணிய சாதியேற்பாட்டுக்கோறிக்கை' என்றொரு சிறுநூலை மேற்படி சான்றோர்குலத்தவருள் ஒருவர் எழுதி, கிறிஸ்தாப்தம் ௧௮௭௪-ளு அச்சியற்றுவித்துப் பிரசுரஞ்

செய்திருக்கிறார். இந்த நூல் எழுதுதற்குச் சென்னைநகர் அங்கிலேய துரைத்தனத்தார் அனுமதிப்படிக்குப் பிரசுரஞ் செய்யப்பட்ட சாதியேற்பாட்டுச் சட்டங் காரணமாம். அந்தச் சட்டத்தால் சான்றோர் குலநிலை தலைகீழாக ஏற்காததானத்தில் வைக்கப்பட ஏதுவாயிருந்தது. மேற்படி ஜாதியேற்பாட்டுக் கோறிக்கை என்னும் நூல் எழுதியவர் அதைக்கண்டு, நம்முடைய குலநிலை இராசாங்கத்தாருக்குத் தீர்க்கமுறத் தெரியாதகாரணத்தையிட்டு அது மேற்படி சட்டத்தில் தப்பானதானத்தில் குறிக்கப்பட ஏதுவாயிருக்கிறதென்றும், மேற்படி குலநிலை ஏற்பாட்டிற்குச் சம்மதப்படாத குலத்தவர்கள் தங்கள் நியாயங்களைத் தெரியப்படுத்திக்கொள்ளும்படியாக மேற்படி இராசாங்கத்தார் உத்தரவு செய்திருப்பதால், நாம் காலதாமதமின்றி நம்முடைய குலநிலைக்குரிய நியாயங்களை மேற்படி இராசாங்கத்தாருக்குத் தெரியப்படுத்திக்கொள்ளுதற்கு வேண்டிய பிரயத்தனங்கள் செய்யவேண்டுமென்றும் தம்முடைய குலத்தவர்களுக்குத் தெரிவித்திருக்கிறார்.

3. சான்றோர்குலப் பெரியோர்களிற் சிலர் சென்னை நகரத்து மியுனிசிப்பல் கம்மிஷனர்களைச் சேர்ந்த சென்சஸ் (=குடிமதிப்பு) கம்மிட்டியாருக்கு விண்ணப்பங்கள்மூலமாய்த் தங்கள் குலநிலை மேற்படி ஜாதியேற்பாட்டுச் சட்டத்தால் சரியான அந்தஸ்தில் வைக்கப்பட ஏதுவில்லையென்றும், தங்கள் குலம் பூர்வ தமிழரசர்குலத்தையொட்டிய சத்திரியகுலமென்றும், அதன் விபரங்களை உலகவழக்

காலும் நூல்வழக்காலும் தெரிவிக்கக் கருதியிருக்கி றோமென்றுஞ் சொல்லிக்கொண்டதின்பேரில், நீங் கள் உங்கள் குலத்தைக்குறித்துத் தெரிவிக்கக் கருது கிறவைகளைத் தெரியப்படுத்திக்கொள்ளலாமென்று உத்தரவு பெற்றுக்கொண்டனர்.

4. சான்றோர்குலத்தவர்கள் செய்தபிரகாரம், பிறகுலத்தவர்களிற் பலகுலத்தவர்களுந் தத்தங் குல நிலைகள் மேற்படி சட்டத்தாற் சரியான தானங்களில் வைக்கப்பட ஏதுவில்லையென்பதாக மேற்படி கம் மிட்டியாருக்கு விண்ணப்பங்கள்மூலமாகத் தெரி வித்துக்கொண்டனர். அவர்களுக்கும் அவ்வாறே உத்தரவளிக்கப்பட்டது.

5. இந்தப்பிரகாரம் மேற்படி சட்டத்தால் குல நிலைப் பூர்வோத்திரங்களைக் கிண்டிக் கிளறிப் பார்ப் பதற்கு ஏதுவுண்டானமையால், புராதனப்பிரியர் ஒருவர் 'சான்றோர் மரபு' எனப் பெயர்கொண் ட நூலொன்றெழுதி, கிறிஸ்தாப்தம் ௲௮௱௭௰௧-ஒஅ அச்சியற்றுவித்துப் பிரசித்தஞ்செய்தனர். அந்த நூலில், மேற்படி நூலெழுதியவர் சான்றோர்குலப் பூர்வோத்திரம் இன்னதென்றும், அவர்களுடைய பூர்வவுற்பத்தி ஸ்தானம் இன்னதென்றும், அவர் கள் தமிழ்நாட்டுச் சத்திரியகுலத்தவர்களென்றும், அவர்கள் தமிழ்நாட்டு ஆதிபூர்வச் சிவபக்தர்களென் றும், அவர்கள் பூர்வ ஆரியமாகிய தமிழ்ப்பாஷைக் குடையவர்களென்றும், அவர்கள் சுய அரசிழந்த கா ரணத்தால் மிகு தாழ்வடைதற்கு ஏதுவானார்களெ ன்றும், பதினெண்புராணங்களிலொன்றாகிய பிரா

மிய புராணத்து மூன்றாவது காண்டமாகிய பிரமோத்திர காண்டத்திலடங்கிய சுராபாண்டிய இராசனது சரித்திரத்தால், மேற்படி சான்றோர்குலத்தவர்கள் சுராபாண்டியனெனப் பெயர்கொண்ட சத்திரிய ரிஷியாகிய காந்தமாரிஷியின் பரம்பரையிலுதித்தவர்களென்றும் பல நியாயங்களைக்கொண்டு தெளிவுகாட்டி எழுதியிருக்கின்றனர்.

இந்தநூல் மேற்படி சான்றோர்குலம் தமிழ்நாட்டுச் சத்திரியகுலம் என்பதற்கு ருசுக் கூறுகின்றது.

6. இப்படியிருக்கிற சமயத்தில், கிறிஸ்தாப்தம் ௲௮௱௭௰௨-ஆம் 'ஜாதிசங்கிரகசாரம்' என்றொரு நூல் பிரசுரமாயிற்று. அந்தநூல் எழுதியவர் அதில் சான்றோர்குலத்தினரைச்சுட்டி எழுதியிருக்கிறவைகள் பூர்வ ஏற்பாடுகளுக்கும், நாளது இயல்பு வழக்கங்களுக்கும், பெரியோர்கள் யுத்திக்கும், பூர்வநூல்களுக்கும் ஒருவிதத்திலும் பொருந்தாதவைகளாயிருக்கின்றன.

மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலில் சான்றோர் குலத்தினரைச்சுட்டி மேற்படி நூலாசிரியர் எழுதியிருக்கிறவைகளில் ஆறு முக்கியவிஷயங்கள் அடங்கி யிருக்கின்றன. அவைகளை முறையே ஒவ்வொன்றாக எடுத்து விபரித்துரைத்து, நியாயப்பிரயோகத்தால் தப்புகளைப்போக்கி, உண்மையை நிறுத்த முயலுவோம். அந்த ஆறுவிஷயங்களும் வருமாறு:

(i.) திவாகரம் மக்கட்பெயர்த்தொகுதி, 50-வது சூத்திரத் தாற்பரியம். ஜாதிசங்கிரகசாரம், 14-வது பக்கம் காண்க.

(*ii.*) சூடாமணிநிகண்டு, மக்கட்பெயர்த்தொகுதி, 34-வது கவித்தாற்பரியம். ஜாதிசங்கிரகசாரம், 16-வது பக்கம், காண்க.

(*iii.*) கள்விலைஞர் என்னும் பெயருக்குத் தாற்பரியம். ஜாதிசங்கிரகசாரம், 358-வது பக்கம் காண்க.

(*iv.*) சான்றோர்குலத்தவர்களுடைய உற்பத்தி. ஜாதிசங்கிரகசாரம், 388-வது, 389-வது பக்கம் காண்க.

(*v.*) கிராமணிகள் என்னும் பட்டப்பெயருக்குத் தாற்பரியம். ஜாதிசங்கிரகசாரம், 389-வது பக்கம் காண்க.

(*vi.*) நாடான் என்னும் பட்டப்பெயருக்குத் தாற்பரியம். ஜாதிசங்கிரகசாரம், 389-வது பக்கம் காண்க.

இந்த ஆறுவிஷயங்களையும் முறையே முதலாறு பிரகரணங்களிலும் ஒவ்வொன்றாகவெடுத்துத் தப்பை ருசுப்படுத்தி, உண்மையைத் திருஷ்டாந்த பூர்வமாய்க் காண்பித்தபின்னர், இந்தப் பொருளுடன் சம்பந்தப்பட்டிருக்கின்ற வேறு சில முக்கிய விஷயங்களை ஏழாவது பிரகரணமுதல் அதற்குப்பின் வருகின்ற பிரகரணங்களில் எடுத்துக் கூறுவோம்.

ஐரோப்பியர்கள் தங்கள்குலம் ஆரியர்குலமென்று ருசுப்படுத்த முயலுவதுபோல, குலப் பூர்வோத்திரமாராய்தல் எக்குலத்தவர்களுக்கும் இயற்கை. ஆனதால், சான்றோர்குலத்தவர்களுக்கும் இயற்கையாம்.

மேலே கூறியிருக்கிறபிரகாரம், சான்றோர்குலத்தவர்களைச்சுட்டிப் பலநூல்கள் எழுதப்பட்டிருப்பதினாலும், பூர்வநூல்களிருப்பதாலும், தர்க்கிப்பவர்களுக்குத் தங்கள் குலப் பூர்வோத்திர உண்மையைத் தெளிவுற எடுத்துரைக்கவேண்டியது மேற்படி குலத்தவர்களது கடமையாம். இதனால் இந்தநூல் எழுதவேண்டியதற்குக் காரணந் தெளிவாக விளங்குகின்றது.

இந்தநூலை வாசிப்பவர்கள் தப்பை நீக்குதற்கும், உண்மையை நிலைநிறுத்துதற்கும் எடுத்துக் கூறப்பட்டிருக்கின்ற நியாயங்களைச் சீர்தூக்கி நிதானித்துத் தெளிவடையக்கடவர்கள்.

இந்நூல் எழுதுதற்கு ஆதாரமான நூல்களுக்குப் பெயர் விபரம் வருமாறு: சுராபாண்டியபுராணம், சான்றோர்புராணம், தொல்காப்பியம், வீரசோழியம், கம்பராமாயணம், பாரதம், பெரியபுராணம், காசிகாண்டம், அமரகோஷம், தாலவிலாசம், பனைமரச்சோபனம், சேந்தன்திவாகரம், சூடாமணிநிகண்டு, நாலடியார், குறள், பழமொழி, சாதகாலங்காரம், கலிங்கத்துப்பரணி, ஔவையார்நூல்கள், வெற்றிவேற்கை, திருவாதவூரர்புராணம், அருணசலப்புராணம், திருக்கழுக்குன்றப்புராணம், திருவானைக்காப்புராணம், திருமூலர் திருமந்திரம் மூவாயிரம், சிதம்பரபுராணம், விவேகசிந்தாமணி, மதுரைவீரன் கதை, சாதகசிந்தாமணி, சான்றோர்மரபு, சாதியேற்பாட்டுக்கோறிக்கை, திருநெல்வேலித் தலப்புராணம், சோமபான சோடசக் கட்டளைக் கலித்துறை

என்று சொல்லப்படும் 'சுராகிரகண சோடசவிரதம்,' பத்திரகாளி பஞ்சரத்தினம், W. Taylor's Oriental Manuscripts, Tod's Annals and Antiquities of Rajust'han, Winslow's Tamil and English Dictionary, Rottler's Tamil and English Dictionary, Miss S. Tucker's South India Sketches, The Tinnevelly Shanars by the Rev. R. Caldwell, LL. D., Report of the Edyengudi District for the year ending 30th June, 1845, Dr. Caldwell's lecture on Tinnevelly and the Tinnevelly Mission, Dr. Muir's Sanskrit Texts, The Rig-Veda, &c.

௲௮௱௭௰௫ ௵<br>
ஏப்பிரல் ௴ ௨௧௳<br>
திரிசிரபுரம்.

ச. வி.

# TABLE OF CONTENTS.

# பொருளடக்கம்.

பக்கம்.

பக்கம்.

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௫௪ | ௨௫ | சகரம் | சக்கரம். |
| ௨0௨ | ௧0 | வசம் | வம்ச. |
| ௩௩௫ | ௨௫ | திருமரை | திருமறை. |

சான்றோர்குல

# மரபுகாத்தல்.

## க. பிரகரணம்.

சான்றோர் குலத்தைச்சுட்டி, ஜாதிசங்கிரகசாரம், 14-வது பக்கத்தில், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 50-வது சூத்திரத்தை ஆதாரமாகக்கொண்டு கூறியிருக்கிற தப்புத் தாற்பரிய உரையைக் கண்டித்தல்.

ஜாதிசங்கிரகசாரநூல், 14-வது பக்கத்திற் சொல்லியிருக்கிறதாவது :—

சூத்திரரின் கீழ்ப் பதின்றோராவது, திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 50-வது சூத்திரம் :

கள்வினைஞர், அல்லது சாணார் பெயர்.

"பழையர் துவசர் படுவர்கள்வினைஞர்."

இதின் தாற்பரியம்.

"பழையர், துவசர், படுவர், கள்வினைஞர் இந்நான்குஞ் சாணார் பெயர் என்பதாம்."

இந்தப்பிரகாரம், ஜாதிசங்கிரகசாரநூலிற் கண்டிருக்கின்றது.

1868-ஆம் சிதம்பரம் கருணானந்த சுவாமிகளால் பரிசோதித்துச் சிந்தாத்திரிப்பேட்டையிலிருக்கும் பிரபாகர அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்ட திவாகரப்பிரதியிலும், வேறு திவாகரப்பிரதிகளிலும், ஓலையேட்டுப்பிரதிகளிலும், கண்டிருக்கிறபடி மேற்படி சூத்திரத்தை இங்ஙனம் பேர்த்தெழுதுகிறோம். அதைக் கூர்ந்து கவனித்துப் பார்க்கவேண்டும். அந்தச் சூத்திரம் வருமாறு :—

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 50-வது சூத்திரம் :

கள்விலேஞர் பெயர்.

"பழையர் துவசர் படுவர்கள்விலேஞர்" என்பதாம்.

இதின்தாற்பரியம்.

"பழையர், துவசர், படுவர் இம்மூன்றுங் கள்விலேஞர் பெயர்" என்பதாம்.

முதல்முதல் இந்த ஜாதிசங்கிரகச்சாரநூலில் பேர்த்தெழுதிய சூத்திரத்தை, திவாகரநூலிற் கண்டிருக்கிற சூத்திரத்தோடு ஒத்துப்பார்ப்போமாக.

ஜாதிசங்கிரகசாரநூலில் பேர்த்தெழுதியிருக்கிற திவாகரச்சூத்திரம் :

கள்வினேஞர், அல்லது சாஞர் பெயர்.

"பழையர் துவசர் படுவர்கள்வினேஞர்" என்பதாம்.

திவாகரநூலிற் கண்டிருக்கிற சூத்திரம் :

கள்விலேஞர் பெயர்.

"பழையர் துவசர் படுவர்கள்விலேஞர்" என்பதாம்.

இவ்விரு சூத்திரங்களும் ஒன்றல்ல. பூர்வநூற் சூத்திரம் ஒருவகையாயும், ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் பேர்த்தெழுதியிருக்கிற சூத்திரம் வேறுவகையாயும் வருகின்றன. இந்தப்பேதத்திற்குக் காரணம், மேற்படி நூலாசிரியர் மேற்படி குலத்தவர்களையிட்டு ஏதோவொன்றைச்சொல்ல நோக்கங்கொண்டவராய், திவாகரச் சூத்திரந் தமது நோக்கத்திற்கு ஏற்காதென்று அச்சங்கொண்டவராய், மேற்படி திவாகரச் சூத்திரத்தைத் தமது நோக்கத்துடன் பொருந்தச்செய்யக் கருதி, ஒரு புதுச்சூத்திரங் கட்டியிருக்கிறதாகத் தோன்றுகின்றது. அவர் செய்திருக்கிற சூத்திரத்திற் கண்டிருக்கிற 'கள்வினேஞர், சாஞர்' என்னும் இரண்டு பதங்களும் மேற்படி திவாகரச் சூத்திரத்தில் இல்லவே இல்லை.

மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் திவாகரச் சூத்திரத்தில் 'கள்விலேஞர்' என்று கண்டிருக்கிற பெயர் சான்

ளூர் குலத்திற்கு ஒருபோதும் ஏற்காதென்று உணர்ந்தவராய், 'கள்ளிலேனூர்' என ஆதி நூலிற் சொல்லப்பட்டிருக்கிற இயற்கைப்பெயரை, 'கள்வினைஞர்' எனச் செயற்கைப் பெயராகத் தித்தி யெழுதியிருக்கிறூர்.

'கள்விலேனூர்' என்னுந் தொடர்மொழிக்கு 'கள் விற்போர்' என்பது இயல்பான தாற்பரியம்.

'கள்வினைஞர்' என்னுந் தொடர்மொழியில் வருகிற 'வினை' என்னும் பதத்திற்கு 'செய்கை' என்பது கருத்தாம். ஆனதால், இந்தத் தொடர்பதத்திற்கு 'கட்செய்கிறவர்கள்' என்பது தாற்பரியமாம்.

ஆகையினாலே, மேற்படி ஜாதிசங்கிரகசாரநூல் செய்தவர், 'சாணூர்' என்னும் பெயர்ப்பதத்தை இந்தச் சூத்திரத்தின்மேலே ஏற்றி ஆணி கடாவுதற்கு, 'கள்விலேனூர்' என்னுந் தொடர்பதம் உதவாததால், அந்தப் பதத்தை வேண்டுமென்றே 'கள்வினைஞர்' எனத் தித்தி எழுதியிருக்கிறூரென்று நன்ருய்த் தோன்றுகின்றது.

'சாணூர்' என்னும் பதமோ, மேற்படி திவாகரச் சூத்திரத்தில் இல்லவே இல்லை. இல்லாத பதத்தை மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் தமது மனோரதப்பிரகாரம் பாணித்து, பழஞ்சூத்திரத்துள்ளே திணிக்கத்துணிந்தது எவ்வகைத் தொழிலோ? புத்திமான்கள் நிதானித்துச் சொல்லட்டும்.

மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் 'கள்விலேனூர்' என்னும் பதத்தை 'கள்வினைஞர்' எனத் தித்தி யெழுதி நூலில் உபயோகப்படுத்தியிருப்பதையும், நூலிலில்லாத ஒரு புதுப்பதத்தைப் பூதிப்பிடியாகச் 'சாணூர்' எனப் பாணித்து ஆதிச் சூத்திரத்தில் அப்பிவைத்திருப்பதையும் பார்க்கும்போது, அவர் அவ்வாறு செய்தது அயோக்கியச் செய்கை எனத் தெரியவருகின்றது. இது நிற்க,

கள்விலேனூர் பெயர்.

"பழையர் துவசர் படுவர் கள்விலேனூர்"

என்பது சூத்திரம்.

இந்தத் திவாகரச் சூத்திரத்தில், 'கள்விலேஞர்' என்னுந் தொடர் பதத்துடன் ஒருபொருள்கொண்ட பதங்கள், 'பழையர் துவசர் படுவர்' இம்மூன்று பதங்கள் என்று சொல்லியிருக்கின்றது.'

மேற்படி ஜாதிசங்கிரகசார நூலாசிரியரோ, 'பழையர் துவசர் படுவர் கள்ளினைஞர்' இந் நான்குஞ் 'சாணர்' பெயர் என்கிருர்.

திவாகர நூலாசிரியர் மூன்று பெயர்கள் கள்விலேஞருக்கு வரும் என்கிருர்.

ஜாதிசங்கிரகசார நூலாசிரியரோ, 'கள்விலேஞர்' என்ற பதத்தைக் 'கள்ளினைஞர்' என்ருக்கியதுமன்றி, 'கள்ளினைஞர்' எனத் தாம் கல்பித்த பதத்தைப் 'பழையர் துவசர் படுவர்' என்னும் மூன்றுபதங்களோடு சேர்த்து, நூலிலில்லாத 'சாணர்' என்னும் பதத்தை நூதனமாக வருவித்து, திவாகர நூலாசிரியர் கருத்து மாறுபட எழுதியிருக்கிருர்.

திவாகரஞ் செய்த சேந்தன் அம்பன் நாட்டிற்குச் சிற்றரசன், அரசர் குலத்திலுதித்த சத்திரியன், மகாவித்துவான். ஆனதால், 'கள்விலேஞர்' சாணரேயாயின், மேற்படி திவாகர ஆசிரியர் மேற்படி சூத்திரத்தில் அதை அமைத்து,

சாணர் பெயர்,
"பழையர் துவசர் படுவர் கள்விலேஞர் சாணர்"
என்று எழுதலாமே.

அவ்வூாறு அவர் எழுதாததால், இந்தச் சூத்திரஞ் சான்ருேர் குலத்தைக் குறித்ததல்லவென்று நன்ருய் விளங்குகின்றது. இதற்குத் தகுந்த ருசுவெடுத்துக்காட்டுதற்கு முன்னே, மேற்படி ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் சான்ருேர் குலத்தவர்களைச் சுட்டிச் சொல்லத் துணிந்த விஷயங்களையெல்லாம் இந்த 50-வது சூத்திரத்தின் மேலேற்றி நிறுத்திவைத்திருப்பதால், மேற்படி திவாகரச் சூத்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிற ஒருபொருட் சொற்களின் இயல்பான தாற்பரியத்தை விபரப்பட இங்ஙனம் பார்ப்போமாக.

கள்விலைஞர் பெயர்,

"பழையர் துவசர் படுவர்கள்விலைஞர்."

இந்தச் சூத்திரத்தில் திவாகரநூலாசிரியர் தாம் எடுத்த பெயர்ப்பொருளைக் கொள்ளும் பல சொற்களைக் கூறுமிடத்து, தலைப்பிலே எடுத்த பெயரை வைக்கிறார். சூத்திரத்தில் பொருளிலொத்த பல சொற்களைக் கூறியபின்னர், இந்தச் சொற்களெல்லாம் எடுத்த பெயர்ப்பொருள் கொள்ளுமெனக் காட்டுதற்கு அந்தப் பெயரைக் கடைசியில் வைத்துச் சூத்திரத்தை முடிக்கிறார். தலைப்புச்சொல்லை விட்டால்,

"பழையர் துவசர் படுவர்கள்விலைஞர்"

என்பது சூத்திரம்.

இதின் தாற்பரியம்.

பழையர், துவசர், படுவர் இம்மூன்று பதங்களும் கள் விற்குங் குலத்திற்குப் பெயர்கள் என்பதாம்.

ஆனதால், கள்விலைஞர், பழையர், துவசர், படுவர் என்னும் இந்த நான்கு பெயர்களுக்கும் இங்ஙனந் தாற்பரியங் கூறுவோம். அவற்றுள்,

I. கள்விலைஞர் என்பதற்குக் கள் விற்கிறவர்கள் என்பது கருத்தாம். கள் என்னும் பதத்துக்கு (i) கற்பகமது என்றும், (ii) புஷ்பங்களினுள்ளே ஊறி வடிகிற தேன் என்றும் அருத்தமாகும்.

'மது' என்னும் பதத்துக்கு மதுரம் என்பது பொருளாம். மது, மதுரம் என்னும் இவ்விரு பதங்களுக்கும் இனிமை என்பது கருத்து.

இறக்கியபிரகாரம் அப்பட்டமான 'கள்' மதுரமாயிருப்பதால், அதற்கு 'மதுரம்' என்றும், 'மது' என்றும் பெயர்கள் வரும்.

கற்பக விருக்ஷமாகிய தாலவிருக்ஷங்களின் பாளைகளிலிருந்து இயல்பாய் ஊறி வடிகிற மதுவுக்குப் பூர்வகாலத்தில் கள் என்று பெயர். அப்பட்டமான (=சுத்தாங்கமான) அந்த

அமுதத்தை இறக்கிய பிரகாரம் மானிடகுலத்தவர்கள் உண்டு சுகிப்பதற்குக் கடவுள் அந்த விருக்ஷத்தில் நாவுக்கு மதுர மான இனிமை யூட்டி வைத்திருக்கிறார்.

தால விருக்ஷ வேர்கள் பூமிக்குள் பாம்புபோல ஊடுருவிச் சென்று, பாதாள கங்கைக்குள்ளிறங்கி, அந்தப் பாதாள கங்காசலத்தில் ஊஞ்சலாடி என்றும் நீருண்ணுகின்றன. அந்த நீரானது வேர்கள் வழியாகத் தாலவிருக்ஷத்து உடலுக் குள்ளேறி, அதினுள் கடவுள் அமைத்து வைத்திருக்கிற தித் திப்புப்பண்டத்தில் விரவி ஊறி முதிர்ந்து சுவைபெற்றுப் பாளையின் வழியாக வடியுது. அப்படி வடியும் பானத்துக்கு அமுதம் என்று பெயர்.

அமுதம் என்னும் பதத்துக்கு இனிமை என்றும், பால் என்றும் அருத்தமாகும். தாலவிருக்ஷமது இனிமை கொண் டிருப்பதால், அதற்கும் 'அமுதம்' என்றும் 'பால்' என்றும் பெயர்கள் வரும்.

பசுவின் மடியிலூறிவரும் இனிய நீருக்கும் அமுதம் என்று பெயர். ஆனதால், ஆடுமாடுகள்வைத்துப் பால் விருத்தி செய்யும் ஆயர்கள் அமுதர் என்றும், அமுத குலத்தவர்களெ ன்றுஞ் சொல்லப்படுகிறார்கள்.

கற்பகங்களாகிய பனை தெங்கு ஈந்து விருக்ஷச்சோலை கள் வைத்து, அமுதவிருத்தி செய்கிறவர்களாகிய சான் றோர் குலத்தவர்களுக்கும் அமுதர் என்றும், அமுத குலத்தவர் களென்றும் பெயர்கள் வருகின்றன.

இமயமலை நாடுகளில் கிழ்பாரிசத்திலிருக்கிற நாட்டில், ஆதிகாலத்திலே சுரர்குலத்தவர்களாகிய சத்திரியர்கள் குடி யேறிப் பெருகினார்கள். சுரர்குலத்தவர்களுக்கு அரசனாகிய இந்திர மகாராஜன் தன் நாட்டிலும், தனக்கு இராச நகரமா கிய அமராவதியிலும், ஏராளமாக வைத்து உண்டுபண் ணிப் பரிபாலனஞ் செய்துவந்த கற்பகக் காவுகளாகிய மேற்படி மூவகைச் சோலைகளில் அமுத உற்பத்திசெய்து உண்டு மகிழ்ந்தவர்கள் சுரர்குலத்தவர்களானதால், அவர்க ளுக்கும் அமுதர் என்றும், அமுத குலத்தவர்களென்றும் பெ

யர்கள் வந்திருக்கின்றன. இந்தச் சுரர்குலத்தவர்களுக்கு அமரர் என்றும், தேவர் என்றும் வேறுபெயர்களுமுண்டு. அதினல், இந்திரனுக்கு 'அமரர்பதி' என்றும், 'சுரகிராமணி' என்றும், 'தேவர்கோன்' என்றும் பெயர்கள்வரும்.

சுரர், அமுதர், அமரர், தேவர் இந்த நான்கு பெயர்களும் அதிதி புத்திரர்களாகிய இக்குலத்தவர்களுக்கு அமுத உற்பத்திசெய்த காரணத்தையிட்டே வந்திருக்கின்றன. ஆனதால் அமுத உற்பத்திசெய்த முதற் பாண்டியனை விசேடிப்பதற்கு அவனுக்குச் சுராபாண்டியன் எனப் பெயர் வந்திருக்கின்றது. சுரா என்னும் பதத்துக்கு அமுதம் என்பது கருத்தாம்.*

இமவற்பருவதத்தில் தாலந், தெங்கு, ஈந்து முதலான கற்பகவிருக்ஷச் சோலைகள் வைத்து விருத்திசெய்ததற்கு மேற்கோள் இங்ஙனங் கூறுவோம். அவை வருமாறு :—

(i) திருக்கழுக்குன்றப் புராணம், கயிலாயச்சருக்கம், 13-வது கவி :

" நாகம் பஞ்சரஞ் சந்தனங்குங்குமநறவங்
காகதுண்ட மூண்டகங் கன்னிகாரங்காகோளி
பூகஞ் சண்பகந் தெங்குமாப் பலவு பூங்கதலி
மாகங் கண்ணுற மருங்கெலா நெருங்குவ பெருங்கா."

---

* சுயப்பிரகாச தேசிக அரங்கநாதக்கவிராயர் இயற்றிய சோமபான சோடசக் கட்டளைக்கலித்துறை, 5-வது கவி :

" தமிழும் மதுரஞ்சுரா மதுரைப்பெயர் தாமுஞ்சுரா
அமிர்தர்கள் கள்ளரரிக் கள்ளழகர் சான்றோனரயன்
கமிழுஞ் சுரநதிவேணியனுஞ் சொக்கநாயகன்மே
லமை குலப்பாண்டிய நாடன் பழையன் அருமதியே."

இந்தக் கவியில், சுரர்கள் அமுதமாகிய சுராவுக்குடையவர்களானதால், அவர்களுக்கு அமிர்தர், கள்ளர் எனப் பெயர் வந்திருக்கின்றது.

கள்ளர் = கள்ளுக்குடையவர்கள்,
= அமுதர்,
= சுரர் என்பது கருத்தாம்.

அன்றியும், மதுரை = கள்.
மதுரையர் = கள்ளர். திருவாசகம், திருப்பாண்டிப்பதிகம், 2-வது கவி காண்க.

இந்தக் கவியில், கயிலாச பருவதச் சாரலில் புன்னை, செருந்தி, சந்தனம், குங்குமம், நறவம், அகில், தாழை, கோங்கு, அசோகு, கமுகு, சண்பகம், தெங்கு, மா, பலா, வாழை என்னுமிம்மரங்களெல்லாஞ் சோலைகளாய் ஆகாயத்தினிடத்திற் பொருந்தும்படி சாரலில் நெருங்கி யிருக்கும் என்று கூறியிருக்கின்றது. இதிற் கூறியிருக்கிற சோலைகளுக்குள் அமுத விருக்ஷமாகிய தெங்கு விருக்ஷச் சோலை சொல்லப்பட்டிருக்கின்றது.

(ii) மேற்படி கயிலாயச் சருக்கம், 14-வது கவி :

"பொன்றழைப்பன நித்திலமுகைப்பன புனைபூண்
சென்றழைப்பன பைந்துகிற்காய்ப்பன செழும்பொற்
கொன்றை மத்தமுமிலைந்தவனுணையிற்குழுமி
மன்றலிற்பல கோடிகற்பாடவி வயங்கும்."

இந்தக்கவியில், அந்தக் கயிலாசகிரிச்சாரிபில் எண்ணுதற்கரிய பலன்களையளிக்கின்ற அநேககோடி கற்பகவிருக்ஷச்சோலைகள் விளங்கிக்கொண்டிருக்கும் எனச் சொல்லியிருக்கின்றது. இக்கவியில் உலகியல்புக்குப் பொருத்தமின்றிக் கூறியிருக்கின்ற குறிப்பு விசேடணங்களை யகற்றி விடவேண்டும்.

சுரர் குலத்தவர்களுக்குரிய தேவர் என்னும் பட்டப்பெயர் பூர்வத்தில் தமிழ் நாட்டரசர்களுக்குண்டாயிருந்ததுமன்றி*

* சுரர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்குத் 'தேவர்' என்கிற பட்டப்பெயர் வழங்கிவந்தபிரகாரம், நாடாளும் அரசர்களுக்குந் 'தேவர்' என்கிற பட்டப்பெயர் வந்து வழங்கியிருக்கின்றது. ஆனதால், தமிழ் நாட்டரசர்களுக்குந் 'தேவர்கள்' என்கிற பட்டப்பெயருண்டு. எவ்வாறெனில்,

1. அரசர்களுடைய நாயகிமார்களுக்கு 'தேவி' என்கிற பட்டப்பெயர் ஏதொரு விகற்பமுமின்றி நூல் வழக்கிலும் உலகவழக்கிலும் வந்து வழங்கியிருப்பதால், அரசருக்கு 'தேவர்' என்பது பட்டப்பெயராம். பெண்பால் 'தேவி' ஆனதால், ஆண்பால் 'தேவன்' என்பதாம், திருட்டாந்தமாக,

சீதைக்கு 'சீதாதேவி' எனப் பட்டப்பெயர் வந்திருக்கின்றமையால்,

இராமருக்கு 'இராமதேவர்' எனப் பட்டப்பெயருண்டு.

இக்காலத்தில் மறவர்குலத்தவர்களுக்கும், கள்ளர்குலத்தவர்களுக்கு முண்டு. ஆனதால், இந்த மறவர்குலத்தவர்களுங் கள்ளர்குலத்தவர்களுஞ் சுரர்குலத்தவர்களாகிய சத்திரியக்கிளைப் பிரிவார்களென எண்ணுதற்கிடமுண்டு. இவ்விருபிரிவார்களில்,

1. மறவர்குலத்தவர்கள் பூர்வத்தில் சத்திரியக்கிளைப் பிரிவார்களிலொரு பிரிவைச் சேர்ந்தவர்களாய், ஐந்திணைப்பூமிப் பிரிவுகளிலொன்றாகிய பாலைநிலநாட்டிற் குடியேறிப் பெருகியபின், அந்தப்பாலைநிலநாடு ஆதியில் அவர்களுக்கு ஆதீனமாயிற்று. மேற்படி பாலைநிலநாட்டில் கற்பக அமுது உற்பத்திசெய்து உண்டுவந்தவர்கள் இந்த மறவர்குலத்தவர்களே. அந்த அமுத உற்பத்தி செய்துவந்ததினிமித்தமே அந்தக் குலத்தவர்களுக்குச் சுரர்குலத்தவர்களுக்கொப்பத்தம் தேவர் என்கிற பட்டப்பெயர் வந்திருக்கின்றது. பிற்காலத்தில் அரசாட்சி மாறுதல்களில் மேற்படி மறவர்குலத்தவர்

---

இராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், வாலிவதைப்படலம், 78-வது கவி :

" கோவியற்றருமமுங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுத வொண்ணா வுருவத்தாயுடைமையன்றோ
ஆவியைச் சனகன்பெற்ற வன்னத்தையமிர்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்பு திகைத்தனைபோலுஞ் செய்கை."

இந்தக்கவியில், சீதைக்குத் 'தேவி' எனப்பெயர் வந்திருக்கின்றது.

2. அரசர்களைநோக்கிப் பேசுமிடத்து 'தேவரீர்' எனப் பட்டப்பெயர் வந்து வழங்குகின்றது. 'தேவர்' என்னும் பெயரின் விளிவேற்றுமை 'தேவரீர்' என்பதாம். 'தேவரீர்' என்பதற்கு 'அரசனே' என்பது பொருளாம்.

3. தெலுங்குப்பாஷையில் அரசரை நோக்கிப் பேசுமிடத்து 'தேவரா' எனப் பட்டப்பெயர்வந்து வழங்குகின்றது. 'தேவரா' என்பதற்கு 'அரசனே' என்பது பொருளாம்.

4. சோழனுக்கு 'சோழதேவர்' எனப் பட்டப்பெயர் வந்து வழங்கியிருக்கின்றது.

5. சிவன் பிரமா விஷ்ணு முதலானவர்கள் சுரர்குலத்தவர்களானதால், அவர்கள் இக்காலத்திலும் தேவர்கள் எனப் பெயர் பெற்றிருக்கிறார்கள்.

இந்தக் கவியில், கயிலாச பருவதச் சாரலில் புன்னை, செருந்தி, சந்தனம், குங்குமம், நறவம், அகில், தாழை, கோங்கு, அசோகு, கமுகு, சண்பகம, தெங்கு, மா, பலா, வாழை என்னும் மரங்களெல்லாஞ் சோலைகளாய் ஆகாயத்தினிடத்திற் பொருந்தும்படி சாரலில் நெருங்கி யிருக்கும் என்று கூறியிருக்கின்றது. இதிற் கூறியிருக்கிற சோலைகளுக்குள் அமுத விருக்ஷமாகிய தெங்கு விருக்ஷச் சோலை சொல்லப் பட்டிருக்கின்றது.

(ii) மேற்படி கயிலாயச் சருக்கம், 14-வது கவி :

"பொன் றழைப்பன நித்திலமுகைப்பன புனைபூண்
சென் றழைப்பன பைந்துகிற்காய்ப்பன செழும்பொற்
கொன்றை மத்தமுமிலைந்தவனுணையிற்குழுமி
மன்றலிற்பல கோடிகற்பாடவி வயங்கும்."

இந்தக்கவியில், அந்தக் கயிலாசகிரிச்சாரலில் எண்ணுதற்கரிய பலன்களையளிக்கின்ற அநேககோடி கற்பகவிருக்ஷச்சோலைகள் விளங்கிக்கொண்டிருக்கும் எனச் சொல்லியிருக்கின்றது. இக்கவியில் உலகியல்புக்குப் பொருத்தமின்றிக் கூறியிருக்கின்ற குறிப்பு விசேடணங்களை யகற்றி விடவேண்டும்.

சுரர் குலத்தவர்களுக்குரிய தேவர் என்னும் பட்டப்பெயர் பூர்வத்தில் தமிழ் நாட்டரசர்களுக்குண்டாயிருந்ததுமன்றி*

---

* சுரர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்குத் 'தேவர்' என்கிற பட்டப்பெயர் வழங்கிவந்தபிரகாரம், நாடாளும் அரசர்களுக்குந் 'தேவர்' என்கிற பட்டப்பெயர் வந்து வழங்கியிருக்கின்றது. ஆனதால், தமிழ் நாட்டரசர்களுக்குந் 'தேவர்கள்' என்கிற பட்டப்பெயருண்டு. எவ்வாறெனில்,

1. அரசர்களுடைய நாயகிமார்களுக்கு 'தேவி' என்கிற பட்டப்பெயர் ஏதொரு விகற்பமுமின்றி நூல் வழக்கிலும் உலகவழக்கிலும் வந்து வழங்கியிருப்பதால், அரசருக்கு 'தேவர்' என்பது பட்டப்பெயராம். பெண்பால் 'தேவி' ஆனதால், ஆண்பால் 'தேவன்' என்பதாம், திருட்டாந்தமாக,

சீதைக்கு 'சீதாதேவி' எனப் பட்டப்பெயர் வந்திருக்கின்றமையால்,

இராமருக்கு 'இராம தேவர்' எனப் பட்டப்பெயருண்டு.

இக்காலத்தில் மறவர்குலத்தவர்களுக்கும், கள்ளர்குலத்தவர்களுக்கு முண்டு. ஆனதால், இந்த மறவர்குலத்தவர்களுங் கள்ளர்குலத்தவர்களுஞ் சுரர்குலத்தவர்களாகிய சத்திரியக்கிளைப் பிரிவார்களென எண்ணுதற்கிடமுண்டு. இவ்விருபிரிவார்களில்,

1. மறவர்குலத்தவர்கள் பூர்வத்தில் சத்திரியக்கிளைப் பிரிவார்களிலொரு பிரிவைச் சேர்ந்தவர்களாய், ஐந்திணைப்பூமிப் பிரிவுகளிலொன்றாகிய பாலைநிலநாட்டிற் குடியேறிப் பெருகியபின், அந்தப்பாலைநிலநாடு ஆதியில் அவர்களுக்கு ஆதீனமாயிற்று. மேற்படி பாலைநிலநாட்டில் கற்பக அமுது உற்பத்திசெய்து உண்டுவந்தவர்கள் இந்த மறவர்குலத்தவர்களே. அந்த அமுத உற்பத்தி செய்துவந்தநிமித்தமே அந்தக் குலத்தவர்களுக்குச் சுரர்குலத்தவர்களுக்கொப்பத்தம் தேவர் என்கிற பட்டப்பெயர் வந்திருக்கின்றது. பிற்காலத்தில் அரசாட்சி மாறுதல்களில் மேற்படி மறவர்குலத்தவர்

---

இராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், வாலிவதைப்படலம், 78-வது கவி :

"கோவியற்றருமமுங்கள் குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுத வொண்ணு வுருவத்தாயுடைமையன்றே
ஆவியைச் சனகன்பெற்ற வன்னத்தையமிர்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்பு திகைத்தனை போலுஞ் செய்கை."

இந்தக்கவியில், சீதைக்குத் 'தேவி' எனப்பெயர் வந்திருக்கின்றது.

2. அரசர்களைநோக்கிப் பேசுமிடத்து 'தேவரீர்' எனப் பட்டப்பெயர் வந்து வழங்குகின்றது. 'தேவர்' என்னும் பெயரின் விளிவேற்றுமை 'தேவரீர்' என்பதாம். 'தேவரீர்' என்பதற்கு 'அரசனே' என்பது பொருளாம்.

3. தெலுங்குப்பாஷையில் அரசரை நோக்கிப் பேசுமிடத்து 'தேவரா' எனப் பட்டப்பெயர்வந்து வழங்குகின்றது. 'தேவரா' என்பதற்கு 'அரசனே' என்பது பொருளாம்.

4. சோழனுக்கு 'சோழதேவர்' எனப் பட்டப்பெயர் வந்து வழங்கியிருக்கின்றது.

5. சிவன் பிரமா விஷ்ணு முதலானவர்கள் சுரர்குலத்தவர்களானதால், அவர்கள் இக்காலத்திலும் தேவர்கள் எனப் பெயர் பெற்றிருக்கிறார்கள்.

கள் சுய அரசாட்சியை இழந்துபோய்விட்டதினாலே, அவர்கள் தங்கள் சுயநாடு விட்டு, மருதநிலப்பூமியாகிய சான்றோர்குலத்தவர்கள் நாட்டிற்கு வலசைவாங்கிப்போய், அவர்களுக்குள்ளே காவற்றொழிற்சீவனத்துக்கு ஏற்பட்டுக்கொண்டு, கற்பக விருக்ஷச் சோலைக்காவல், ஊர்க்காவல், திசைக்காவல் காத்துவருகிற காலத்தில், பழைய வழக்கப்படிக்கு இராக்காலங்களில் ஒளிப்பாக மேற்படி விருக்ஷங்களிலேறி அமுதம் உண்டுவருவது நெடுகிலும் வழக்கம்.

அன்றியும், மறவர் நாடாகிய சேதுபதிநாடு எனப் பெயர் கொண்ட இராமநாதபுரஞ் சீமையில் நாளதும் மேற்படி மறவர்குலத்தவர்கள் மேற்படி கற்பக அமுதம் உற்பத்தி செய்து உபயோகப்படுத்திக்கொண்டு வருகிறார்கள்.

2. கள்ளர்குலத்தவர்களுக்கும் தேவர் என்கிற பட்டப் பெயருண்டு. அவர்களும் பாலைநிலநாட்டார். அவர்கள் பூர்வத்தில் தங்கள் நாடுகளில் மூன்றாவது வகைக் கற்பக விருக்ஷமாகிய ஈந்து விருக்ஷச் சோலைகள் வைத்துப் பரிபாலனஞ்செய்து ஈந்து மதுவிறக்கி உண்டு மகிழ்ந்து வந்தவர்கள், அதினாலே அவர்கள் நாட்டுக்கு ஈச்சநாடு* (=ஈந்து நாடு) என்றும், அந்தக் கள்ளர்குலத்தவர்களுக்கு 'ஈச்சநாட்டுக் கள்ளர்' என்றும் பெயர்கள் வந்திருக்கின்றன. பூர்வத்தில் இந்தக்குலத்தவர்கள் 'கள்' உற்பத்திசெய்த காரணத்தையிட்டே அக்குலத்தவர்களுக்குக் 'கள்ளர்' என்றும், அவர்கள் நாட்டுக்குக் 'கள் நாடு' என அருத்தங்கொண்ட 'ஈச்சநாடு' என்றும் பெயர்கள் வந்திருக்கின்றன.

---

* ஈந்து விருக்ஷத்துக்கு 'ஈச்ச விருக்ஷம்' என நூல்களில் பெயர் வந்து வழங்கி யிருக்கின்றது. திருட்டாந்தமாக, திருமூலர் திருமந்திரம், பிறர்மனை நயவாமை, 1-வது கவி:

"ஆத்தமனையாளகத்திலிருக்கவே
காத்தமனையாளைக் காமுறுங்காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாம
லீச்சம் பழத்துக்கிடருற்றவாறே."

இந்தக் கவியில் ஈந்துமரத்துக்கு 'ஈச்சமரம்' எனப் பெயர் வந்திருக்கிறது.

'கள்' என்னும் பெயர்ப் பதத்தினின்று பிறந்த 'கள்ளர்' என்னும் பெயருக்குக் கள்ளுக்குடையவர்கள், அல்லது அமுதத்துக்குடையவர்கள் என்பது தாற்பரியம்.

இதுவுமன்றி, 'கள்' என்னும் மற்றொரு பதமுமுண்டு. அதற்குத் 'திருடு' என்பது கருத்தாகும். அந்தக் 'கள்' என்னும் பதத்தினின்று, 'கள்ளம், கள்ளன், கள்வன்' என்னும் பதங்கள் பிறந்து வந்திருக்கின்றன. இதில் கள்ளன் என்பதற்குத் திருடன் என்பது கருத்தாம். மேற்படி கள்ளர் குலத்தவர்களுக்கு அக்குலத்தவர்களுக்குள்ளிருந்த திருட்டுத் தொழிலையிட்டே 'கள்ளர்' என்னும் பெயர் வந்ததென்றெண்ணுவது யுத்திக்குப் பொருந்தவில்லை.* பிறகுலத்தவர்களுக்குள்ளே களவுத்தொழிலிருப்பதுபோலவே. அந்தக் குலத்தவர்களுக்குள்ளுங் களவுத்தொழிலுமுண்டு. மேலும், திருட்டுத் தொழிலையிட்டு இந்தப் பெயர் வந்திருக்குமாயின், இது பட்டப்பெயராகப் பிற்காலத்தில் வந்து வழங்கியிருக்கவேண்டும். அப்படியாயின், இந்தக்குலத்தவர்களுக்குப் பூர்வபெயரென்ன? அப்படிக்கு ஒரு பெயரில்லையே. மறவர் குலத்தவர்களுக்குக் குலப்பெயர் மறவர். பிற்காலத்தில் அவர்கள் களவுத்தொழிலில் மிகுந்துபோனதினாலே, அக்குலத்தவர்களுக்கு மேற்படி களவினிமித்தம் 'திருடர், கள்ளர்' எனப் பட்டப்பெயர் வந்து வழங்குவதுண்டு.

அன்றியுங் கள்ளர் நாட்டுக்குப் பூர்வத்தில் 'ஈச்சநாடு' என்று பெயர் வந்ததற்குக் காரணமென்ன? களவுத்தொழிலையிட்டா அந்தப்பெயர் வந்தது? அல்லவே, ஈந்து விருக்ஷங்களை யிட்டல்லவா? ஆதலால், ஈந்து விருக்ஷச் சார்பிலுதித்த அதின் அமுதமாகிய கள்ளால் அந்த நாட்டுக்குக் 'கள்நாடு' என்றும், 'கள்ளர்நாடு' என்றும் பெயர்கள் வந்திருக்கின்றன.

'பொன்' என்னும் பெயர்ப்பதத்தினின்று, 'பொன்னன்' என்னும் பதமும்,

'பல்' என்னும் பெயர்ப்பதத்தினின்று, 'பல்லன்' என்னும் பதமும்,

பிறந்து வந்திருக்கின்ற பிரகாரம்,

---

* அப்படி வந்ததாகக் கூறுவது சிலரது வழக்கு.

'கள்' (=அமுதம்) என்னும் பெயர்ப் பதத்தினின்று,
'கள்ளன்'என்னும் பதமும் பிறந்து
வந்திருக்கிறது.

இந்த மறவர்குலத்தவர்களுங் கள்ளர்குலத்தவர்களுஞ் சுரர்களாகிய சத்திரியக்கிளைப்பிரிவார்களாம். சுரர்களுடைய நாட்டிற்குச் சுரர்நாடு, அமுதர்நாடு, தேவர்நாடு, அமரர்நாடு, சோர்க்கநாடு, சுவர்க்கநாடு என்று பெயர்கள் வரும். ஆனதால்,

சுரர்நாடு=அமுதர் நாடு
=கள்ளர்நாடு ஆம்.

கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நட்சத்திரத்தில் சுரர் குலத்தவர்கள் தங்கள் எதிரிகளாகிய மாபலிச்சக்கரவர்த்தியையும், அவனைச்சேர்ந்த அசுரகுலத்தவர்களையுஞ் செயித்து, வெற்றிபெற்றதை நினைப்பதற்குக் கார்த்திகைத்தீபம், சுவர்க்கப்பனைத்தீபம் எனப் பெயர்கொண்ட உற்சவங் கொண்டாடிவருகின்றனர். அந்தக் கார்த்திகைத்தீப உற்சவ விபரம் வருமாறு :—

1872-ஆ நவம்பர்மீ 14உ திருவானைக்காவிலும், 15உ ஸ்ரீரங்கத்திலும் கார்த்திகைத்தீபம் எனப்பெயர்பெற்ற உற்சவங்கொண்டாடப்பட்டது. அப்போது, அநேகவாயிரஞ் சனங்கள் மேற்படி சுவர்க்கப்பனைத்தீப தரிசனைக்கு வந்தனர்.

பூர்வம் ஆதிச் சங்கராசாரியர் தமது மாதாவினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, தாம் இயற்றிய வேதாங்கமாகிய 'சங்கரபார்த்தவியம்' என்னும் நூலை யரங்கேற்றவும், சுராபான அமிர்தபான உற்பத்திக்குரிய விஞ்சை மந்திரோபதேசம் பெறவும் வடதேசம் நோக்கிச் செல்லுகையில், வழிமார்க்கத்திலே குத்திகொண்டாபுரம் என்னுந் தலத்தையடுத்த மலைக்குகையில் வாசஞ்செய்துகொண்டிருந்த சிங்கிரிப்பட்டரைக் கண்டபோது, அவர் சங்கராசாரியரை நோக்கி, கார்த்திகை மாதத்துப் பௌரணைத்திருவிழா யார்நிமித்தம் ஏற்படுத்தப் பட்டதென்று வினவ, உடனே சங்கரர் கார்த்திகைமாதத்துப் பௌரணையில் மாபலிச்சக்கரவர்த்திக்கு மோக்ஷங்கொடுத்துச்

சுவர்க்கப்பனைத் தீபதரிசனைக்கொண்டாடுகின்ற நாள் என வி டைகொடுத்ததாக பிராமியபுராணத்துப் பிரமோத்திர காண் டத்திற் சொல்லியிருக்கின்றது.

விஷ்ணு வாமன அவதாரஞ்செய்து, மாபலியைச்செயித்த கதைக்கு விபரம், கம்பராமாயணம், பாலகாண்டம், வேள் விப்படலம், 15 - வது கவிமுதல், 37 - வது கவிவரையினும் பார்க்கலாம். இதில் விசுவாமித்திர மகாமுனிவர் ஸ்ரீராம ருக்கும், லக்ஷ்மணருக்கும் இந்தக் கதையைச் சொல்லி யிருக்கிறார்.*

பலிச்சக்கரவர்த்தியானவன் சுரர்நாட்டையுங் கட்டிக்கொ ண்டு சுரர்குலத்தவர்களுக்கு மிகுந்த இமிசை வருவித்துக்கொ ண்டு வருகிறகாலத்தில், அவன் அசுர குலக்குருவாகிய சுக்கி ராசாரியையும், தபோதனர்களாகிய முனிவர்களையும் வரு வித்து, அவர்கள் முன்னிலையில் அசுவமேதயாக மொன்றியற் றினன். அப்போது சுரர்குலத்தவர்களும், அவர்களுடைய அ ரசனுகிய இந்திரனும் விஷ்ணுவிடத்திற்போய், மாபலிச்சக் கரவர்த்தியின் கொடுங்கோலரசினின்று இரட்சிக்கவேண்டு மென்று விண்ணப்பஞ் செய்தனர். விஷ்ணுவானவர் அதற் கிசைந்து வாமனரூபியாகி, மாபலிச் சக்கரவர்த்தியினிடத் திற்போய் மூன்றடி மண்பிச்சைகேட்டு, சக்கரவர்த்தி தத்தம் பண்ணிக்கொடுக்கப் பெற்றுக்கொண்டு விசுவரூபியாகி, ஓரடி யால். பூமியையும், உடலால் ஆகாசத்தையும், சதுர்புஜங்க ளால் திக்குகளையும் மூடி, பின்னோரடியால் தேவருலகைக் கவர்ந்து, மூன்ருவதடியால் பலிச்சக்கரவர்த்தியைப் பாதா ளத்தில் இருத்தியபின்னர், அவனுக்குச் சொர்க்கமளிப்போ மென்று வாக்குக்கொடுத்து, சுக்கிராசாரியைக்கொண்டு யா காக்கினி வளர்த்து அசுவமேதயாகமும் முடிக்கச்செய்து, இந் திரனுக்குச் சுரர்நாடாகிய தேவலோகத்தை மறுபடியுங் கொடுத்தருளினர்.

இது விஷயங்களை நினைவுகூருதற்பொருட்டுப் பூர்வீகமுதல் தமிழ்நாட்டில்,

* Vide Garrett's Classical Dictionary of India, art. *Bali*.

'கள்' (=அமுதம்) என்னும் பெயர்ப் பதத்தினின்று,
'கள்ளன்'என்னும் பதமும் பிறந்து
வந்திருக்கிறது.

இந்த மறவர்குலத்தவர்களுங் கள்ளர்குலத்தவர்களுஞ் சுரர்களாகிய சத்திரியர்களைப்பிரிவார்களாம். சுரர்களுடைய நாட்டிற்குச் சுரர்நாடு, அமுதர்நாடு, தேவர்நாடு, அமரர்நாடு, சோர்க்கநாடு, சுவர்க்கநாடு என்று பெயர்கள் வரும். ஆனதால்,

சுரர்நாடு=அமுதர் நாடு
=கள்ளர்நாடு ஆம்.

கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நட்சத்திரத்தில் சுரர்குலத்தவர்கள் தங்கள் எதிரிகளாகிய மாபலிச்சக்கரவர்த்தியையும், அவனைச்சேர்ந்த அசுரகுலத்தவர்களையுஞ் செயித்து, வெற்றிபெற்றதை நினைப்பதற்குக் கார்த்திகைத்தீபம், சுவர்க்கப்பனைத்தீபம் எனப் பெயர்கொண்ட உற்சவங் கொண்டாடிவருகின்றனர். அந்தக் கார்த்திகைத்தீப உற்சவ விபரம் வருமாறு:—

1872-ஆ நவம்பர்ீ 14உ திருவானைக்காவிலும், 15உ ஸ்ரீரங்கத்திலும் கார்த்திகைத்தீபம் எனப்பெயர்பெற்ற உற்சவங்கொண்டாடப்பட்டது. அப்போது, அநேகவாயிரஞ் சனங்கள் மேற்படி சுவர்க்கப்பனைத்தீப தரிசனைக்கு வந்தனர்.

பூர்வம் ஆதிச் சங்கராசாரியர் தமது மாதாவினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, தாம் இயற்றிய வேதாங்கமாகிய 'சங்கரபார்த்தவியம்' என்னும் நூலை யரங்கேற்றவும், சுராபான அமிர்தபான உற்பத்திக்குரிய விஞ்சை மந்திரோபதேசம் பெறவும் வடதேசம் நோக்கிச் செல்லுகையில், வழிமார்க்கத்திலே குத்திகொண்டாபுரம் என்னுந் தலத்தையடுத்த மலைக்குகையில் வாசஞ்செய்துகொண்டிருந்த சிங்கிரிப்பட்டரைக் கண்டபோது, அவர் சங்கராசாரியரை நோக்கி, கார்த்திகை மாதத்துப் பௌரணைத்திருவிழா யார்நிமித்தம் ஏற்படுத்தப் பட்டதென்று வினவ, உடனே சங்கரர் கார்த்திகைமாதத்துப் பௌரணையில் மாபலிச்சக்கரவர்த்திக்கு மோக்ஷங்கொடுத்துச்

சுவர்க்கப்பனைத் தீபதரிசனைக்கொண்டாடுகின்ற நாள் என வி டைகொடுத்ததாக பிரமியபுராணத்துப் பிரமோத்திர காண் டத்திற் சொல்லியிருக்கின்றது.

விஷ்ணு வாமன அவதாரஞ்செய்து, மாபலியைச்செயித்த கதைக்கு விபரம், கம்பராமாயணம், பாலகாண்டம், வேள் விப்படலம், 15-வது கவிமுதல், 37-வது கவிவரையினும் பார்க்கலாம். இதில் விசுவாமித்திர மகாமுனிவர் ஸ்ரீராம ருக்கும், லக்ஷுமணருக்கும் இந்தக் கதையைச் சொல்லி யிருக்கிறார்.*

பலிச்சக்கரவர்த்தியானவன் சுரர்நாட்டையுங் கட்டிக்கொ ண்டு சுரர்குலத்தவர்களுக்கு மிகுந்த இமிசை வருவித்துக்கொ ண்டு வருகிறகாலத்தில், அவன் அசுர குலக்குருவாகிய சுக்கி ராசாரியையும், தபோதனர்களாகிய முனிவர்களையும் வரு வித்து, அவர்கள் முன்னிலையில் அசுவமேதயாகமொன்றியற் றினன். அப்போது சுரர்குலத்தவர்களும், அவர்களுடைய அ ரசனாகிய இந்திரனும் விஷ்ணுவிடத்திற்போய், மாபலிச்சக் கரவர்த்தியின் கொடுங்கோலரசினின்று இரட்சிக்கவேண்டு மென்று விண்ணப்பஞ் செய்தனர். விஷ்ணுவானவர் அதற் கிசைந்து வாமனரூபியாகி, மாபலிச் சக்கரவர்த்தியினிடத் திற்போய் மூன்றடி மண்பிச்சைகேட்டு, சக்கரவர்த்தி தத்தம் பண்ணிக்கொடுக்கப் பெற்றுக்கொண்டு விசுவரூபியாகி, ஓரடி யால் பூமியையும், உடலால் ஆகாசத்தையும், சதுர்புஜங்க ளால் திக்குகளையும் மூடி, பின்னோரடியால் தேவருலகைக் கவர்ந்து, மூன்றாவதடியால் பலிச்சக்கரவர்த்தியைப் பாதா ளத்தில் இருத்தியபின்னர், அவனுக்குச் சொர்க்கமளிப்போ மென்று வாக்குக்கொடுத்து, சுக்கிராசாரியைக்கொண்டு யா காக்கினி வளர்த்து அசுவமேதயாகமும் முடிக்கச்செய்து, இந் திரனுக்குச் சுரர்நாடாகிய தேவலோகத்தை மறுபடியுங் கொடுத்தருளினர்.

இது விஷயங்களை நினைவுகூருதற்பொருட்டுப் பூர்வீகமுதல் தமிழ்நாட்டில்,

---

* Vide Garrett's Classical Dictionary of India, art. *Bali*.

" அந்தணர்திறத்தும் சான்றோர்தே எத்தும்,
அந்தமில்சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும்"

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்திற் கூறியிருக்கிறபடியே, 'சான்றோர்' எனப் பெயர்பெற்று விளங்கிய தமிழரசர் சிவாலயங்களிலும் விஷ்ணுவாலயங்களிலும், தேவர் நாடாகிய இமயபருவத நாட்டில் அழகுற விளங்கியிருந்த கற்பகம் எனப் பெயர்பெறும் பனை தெங்கு என்னும் விருக்ஷங்களை நட்டு, அதைச்சூழப் பனையோலையால் பெருந்தூண்போல விளங்கும்படி வேய்ந்து, அதில் ஓமாக்கினியைக் கொளுத்துவித்து, கண்டோரெவரும் மகிழும்படி செய்துவந்தனர்.

'தாலாங்கன்' எனப் பெயர்பெற்ற சிவனுடைய அம்சம் 'பனை' என்றும்,* விஷ்ணுவின் அம்சம் 'தெங்கு' என்றும் நூல்கள் முறையிடுகிறபடி இவ்விருக்ஷங்களே தொன்று தொட்டுக் கார்த்திகைத் தீபதரிசனைக்கென்று உபயோகிக்கப் பட்டு வந்திருகின்றன. பலிச்சக்கரவர்த்திக்குக் கெருவபங் கஞ்செய்த விஷ்ணுவின் அம்சமாகிய கற்பகத்தெங்கு இக்காலத்தில் சகசமாய் உபயோகப்படுத்தப்பட்டுவருகிறது.

மேலும், சுவர்க்கநாட்டுக் கரசனாகிய இந்திரனுக்கு இழந்த நாடு கிடைத்தமையாலும், பலிச்சக்கரவர்த்திக்குப் பிற்கால

---

* சிவனுக்குத் 'திருப்பனைநாதர்' என்றொருபெயருமுண்டு. மாயூர (மாயவரம்) த்திற்குச் சமீபத்தில் 'திருப்பனை' எனவும், 'திருப்பனந்தாள்' எனவும் பெயர்கொண்ட ஒரு கிராமமிருக்கின்றது. அந்தக்கிராமத்தில் 'திருப்பனைநாதர் கோவில்' என்றொரு சிவாலயமுண்டு. அந்த ஆலயத்தில் திருப்பனைநாதர் விமானத்திற்குப் பின்புறத்தில் மூன்று கிளைகளையுடைய ஒரு பனைமரம் நிற்கின்றது. அந்தப் பனைவிருக்ஷம் சிவனுடைய அம்சமாக எண்ணப்பட்டு வருகிறது.

பூர்வகாலத்தில் அமுதவிருக்ஷங்களாகிய கற்பகவிருக்ஷங்கள் மிகு அருமையும் பெருமையுமுடையவைகளாக எண்ணப்பட்டு வந்ததை இது தெளிவுறக் காட்டுகின்றது.

கும்பிடு பொருளாகிய சிவனுக்குத் தாலாங்கன், பனைமரநாதன் என்னும் பெயர்கள் பூர்வ சிறந்த நாமங்களானதால், தாலவிருக்ஷமாகிய பனைவிருக்ஷங்கள் அந்த ஆதிகாலத்தில் மிகவுஞ் சிறந்த விருக்ஷங்களாக மதிக்கப்பட்டிருந்திருக்கவேண்டுமென்பதற்குச் சந்தேகமில்லை.

த்தில் இந்திரப்பட்டங் கிடைக்குமென வாக்களிக்கப்பட்ட தாலும், சுரர்நாட்டுக்குங் குறிப்படையாளமாக விஷ்ணுவின் அம்சமாகிய தெங்கு, சிவாம்சமாகிய பனையின் ஓலைகளால் வேயப்பட்டு, தெய்வத்துக்குக் குறிப்படையாளமான ஓமாக்கினி பற்றியெரியும்படி செய்வது வழக்கமாயிருக்கின்றது. இதைச்சுட்டி நூலாசிரியர் ஒருவர் தமது நூலில்,

> " கார்த்திகை மாதந்தனிலே
> சேத்திரத் தெருவில்நாட்டுங்
> கற்பகத்தருவுடையோர் தாமையா" என்றும்,
> " சொற்கமென்ற இந்திரனின்
> சோலையில் வாழைந்தருவிற்
> கற்பகத்தருவுடையோர் தாமையா" என்றும்,
> " சொற்கமாசந்தனிலே
> சோதிவிளக்கேற்றுவித்து
> சொற்கத்தோராகநிற்போர் தாமையா" என்றும் எழுதியிருக்கிறார்.

விஷ்ணுவானவர் தேவர்கள் பொருட்டு பலிச்சக்கரவர்த்தியைச் செயித்து விசுவரூபங்கொண்டு நின்ற காரணத்தால், தேவர்களும் அவரைச் சூழ்ந்திருந்ததற்குக் குறிப்பாக, ஓமாக்கினி சொர்க்கப்பனையிற் பற்றியெரிவதற்கு முன்னுதாக, ஆலயத்தினுள்ளிருக்கின்ற சுவாமி அம்மன் சிலைகளை சிறப்புடன் எடுத்து அந்தச் சொர்க்கப்பனையை வலஞ்சுற்றிவருவது வழக்கம்.

மேற்படி ஓமாக்கினியைப் பார்ப்பாரொருவன் ஐந்து பந்தங்களிற் கொளுத்தி, ஒருங்கேசேரக் கையிற்பிடித்துக்கொண்டு, ஓலைகளால் வேயப்பட்டு நடுக்கொண்டு நிற்கின்ற கற்பகத்தைப்பற்றிப் பிடித்துக்கொண்டு, நுனிமட்டுமேறி அங்கிருந்துகொண்டு, சதுர்புஜங்களினாலும் 'விஷ்ணுவானவர் திக்குகளையளவிட்டார்' என்று பாகவத புராணத்திற்சொல்லியிருப்பதற்குக் குறிப்பாக நாலுபந்தங்களை நாலுதிக்கிலும் வீசி எறிந்துவிட்டு, ஐந்தாவது பந்தத்தால் 'விஷ்ணுவின் முகத்தினிடத்து அக்கினியிருந்தது' என்கிற புராண சித்தாந்தத்திற் கிசைய நுனியில் நெருப்புவைத்துவிட்டு, சரசரவெ

ன் றிறங்கி, அடியில் ஓலைகளுக்கிடையிலிருக்கும் வாசல்கள் வழியாய் வெளியேறிவிடுகிறான். இதைச்சுட்டி மேற்படி ஆசிரியர் தமது நூலில்,

"பூசுரன் பிராமணனைப் போந்தையிலன்றேற்றுவித்து
மாசுரனுமாக்கிவைத்த பேரையா" என்று எழுதியிருக்கிறார்.

விஷ்ணுதேவர்செய்த அருஞ்செயலைச் சிவனுங் கூடவேயிருந்து பார்த்ததாகச் சொல்லியிருப்பதால், தமிழ்நாட்டரசர் தாங்கள் விசேஷமாய் வணங்கிவந்த சிவாலயங்களிலும், விண்டுவுக்கென்றியற்றிய விஷ்ணுவாலயங்களிலுஞ் சுவர்க்கப்பனை கொளுத்தும் வழக்கம் ஏற்படும்படிசெய்து, அரசர்கள் நாடுகளி லரசுசெலுத்தி நாடாள்வாராவதுமன்றி, சத்துருக்கள் பிடித்த நாட்டைப் போர்செய்து பறித்துக்கொள்ளுந் தொழிலுக்கிசைய விஷ்ணு அன்றையத்தினந் தேவர்களிழந்துவிட்ட நாட்டை அவர்களுக்குப் பிடுங்கிக்கொடுத்தமையால், கார்த்திகைத்தீப உற்சவத்துக்கு 'நாடன்நாள்' என்றொரு பெயருண்டாயிற்று. இதற்கிசைய மேற்படி ஆசிரியர் தமது நூலில்,

"நாடனென்ற மூவரசர் நற்குலத்தராயிருந்து
நாடன் திருவிழாக்கொண்டோரையா" என்றும்,
"நாடனைத்து மோராளவாய் நட்புடன ளந்தநானே
நாடனு னென்றமைத்த பேரையா" என்றும் எழுதியிருக்கிறார்.

சொர்க்கப்பனையிலேறிய பார்ப்பான்*இறங்கி வெளியேறி

---

* ஆலயங்களுக்கெதிரே நிறுத்தியிருக்கின்ற கொடிமரங்களுங் கற்பகத்தருப்பாவனையாகச் செய்யப்பட்டிருக்கின்றன. உற்சவகாலங்களில் பார்ப்பார் அவைகளில் ஏறிக் கொடிக் கட்டும்படியாகப் பூர்வ அரசர்கள் ஏற்பாடு செய்திருந்தனர்.
சோமபானசேடசக் கட்டளைக்கலித்துறை 4-வது கவி:
"தாவியென்றே சுரரெல்லாரும் போற்றுந் தருகற்பகம்
பாலவிலோசன ரூபஞ்சுவர்க்கப் பனைபுறப்பதி
மேலுணர்வார் பலராமன் வியாதனும்வீடுமனுஞ்
சாலவுஞ்சங்கராசாரியுஞ் சேரனுஞ் சார்ந்தனரே."
இந்தக்கவியில், சுவர்க்கலோகத்துக் கற்பகவிருக்ஷத்துக்குச் சுவர்க்கப்பனையெனப் பெயர் வந்திருக்கின்றது.

னவுடனே, மேற்படி பனையடியிலும் ஓமாக்கினியைப்பற்ற வைப்பர். அப்போது அக்கினியானது நாலுபக்கத்திலுஞ் சூழ்ந்து, ஓலைகளின் மேற்புறத்தில் மஞ்சள்தடவிக் கட்டியிருக்குந் துணிகளின் வழியாய்ப் பற்றியெரியும்.

பலிச்சக்கரவர்த்தி கையிற் புனல்வார்த்தவுடன் விஷ்ணு கொண்ட விசுவரூபத்தைச்சுட்டி,

மேற்படி பாலகாண்டம், வேள்விப்படலம், 34-வது கவியிற் கூறியிருப்பதாவது:

"கயந்தருநறும்புனல் கையிற்றீண்டலும்
பயந்தவர்களுமிகழ் குறளன் பார்த்தெதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பிளோங்கினன்
உயர்ந்தவர்க்குதவிய வுதவியொப்பவே."

என்று எழுதியிருப்பதுபோல, ஆலயங்களின் கோபுரங்களுக்கு மேலாகத் தெரியும்படி சுடர்விட்டெரிந்து, சற்றுநேரத்தில் அவிந்துபோகின்றது. பிறகு எரிபடாது கருகிப் போய் நடுக்கொண்டு நிற்குங் கற்பகத்தருவை அடியில் தறித்துத் தரையில் வீழ்த்துவர்.

இமவற்பருவதச் சாரலிற் கற்பகவிருக்ஷங்களாகிய தாலந் தெங்கு ஈந்து என்னும் மூவகை அமுத விருக்ஷச்சோலைகள் சொர்க்கநாட்டில் உண்டுபண்ணப்பட்ட பிரகாரமாகவே, தென்பாண்டிநாட்டிற்போய்க் குடியேறிய மேற்படி சுரர்குலத்தைச்சார்ந்த சத்திரியர்களாகிய சான்றோர் குலத்தவர்கள் கற்பகவிருக்ஷங்களாகிய தாலவிருக்ஷச்சோலைகளையும், தெங்கு விருக்ஷச்சோலைகளையும், ஈந்துவிருக்ஷச்சோலைகளையும், கடற்கரைப்பூமிகளிலும் நதிப்பாய்ச்சல் போக்குகளிலும், மலைநாடுகளிலும், நடுநாடுகளிலும் மிகவும் விஸ்தாரமாகப் பரிபாலித்து வந்திருக்கிறார்கள்.

இந்தக்காரணத்தையிட்டே, சீதாதேவியைத் தேடிப்பார்க்கப்போன அனுமான் தென்பூமியாகிய பாண்டிவளநாட்டுக்கு வந்தபோது, இந்தப்பாண்டிவளநாட்டை இமயகிரிச்சாரலிலிருக்கின்ற சுரர்நாட்டோடு சமரசப்படுத்திப் பேசியிருக்கிறான். அவைகளை இங்ஙனம் பேர்த்தெழுதுகிறோம்.

(iii) கம்பராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம், ஆறுசெல் படலம், 51-வது கவி:

"அலையபொன்னியகன் புனனாடொரீ இ
மலையின் மாட்சிகுலாமலை மண்டலம்
விலையினீங்கிய பண்பினர் மேயினார்
இலையதென்றமிழ் நாடுசென்றெய்தினார்."

இந்தக்கவியில், தென்திசை நோக்கிச் சீதாதேவியைத்தே டிப்போன அனுமானும், அவனோடுகூடப்போன கிஷ்கிந்தா நாட்டுச் சத்திரியர்களும், பொன்னி எனப் பெயர்கொண்ட காவிரிநதியானது வந்துபாய்கின்ற விசாலம்பொருந்திய புனனாடெனப் பெயர்பெற்ற சோழநாட்டில் தேடியபின்னர், அந்நாடுதாண்டி அப்பால் நடந்து தமிழ்நாடெனச் சிறப்புப் பெயர்பெற்ற பாண்டிவளநாடுவந்து சேர்ந்தார்கள் எனக் கூறியிருக்கின்றது.

(iv) மேற்படி ஆறுசெல்படலம், 52-வது கவி:

"அத்திருத்தகுநாட்டினை யண்டர்நா
டொத்திருக்கு மென்றுலுரை யொக்குமோ
எத்திறத்தினு மேழுலகும்புகழ்
முத்துமுத்தமிழுந்தந்து முற்றலால்"

இந்தக்கவியின் தாற்பரியம்.

அனுமானனவன் பாண்டிவளநாட்டு வடவெல்லைமுதல் தென்கடல் பரியந்தம், மேற்படி நாட்டை ஏகத்துக்கு ஆராய்ந்துதேடியும், சீதாதேவியைக் காணோமே என்று கிலேசித்த போதிலும், பரதகண்டத்துக் கடைப்பூமியாகிய பாண்டிவள நாட்டையும் அதின் சிறப்புகளையுங் கண்ணுற்று மகிழ்ந்தான். இந்தப்பாண்டிவளநாட்டை இமையோர் பருவதமட்டுமிருக்கி ன்ற மற்ற ஐம்பத்தைந்து நாடுகளோடும் ஒப்பிட்டுப்பார்த் தான். பார்க்கும்போது, பாண்டிவளநாட்டோடு ஒப்பிடப்ப டத்தக்க நாடுகள் ஒன்றுமில்லாதிருந்தபோதிலும், ஒரு விஷ யத்தில் இமயகிரிச் சாரலிலிருக்கின்ற சுரர்நாட்டோடு மாத்தி ரம் இந்தப் பாண்டிவளநாட்டை ஒப்பிடலாமென்றும், மற்

ற்றொரு விஷயத்தில் சுரர் நாட்டிற்கில்லாத ஒரு சிறப்பு பாண்டிவளநாட்டிற் கிருக்கிறதென்றுங் கண்டான்.

சுரர்நாடெங்ஙனும் கற்பகக் காடுகளாகிய தாலவிருக்ஷச் சோலைகளும், தெங்குவிருக்ஷச்சோலைகளும், ஈந்துவிருக்ஷச் சோலைகளும், பார்த்த பார்த்தவிடங்களிலெல்லாம் நிறைந்து, அச்சோலைகளின் நிழல்களில் ஒதுங்கி இளைப்பாற வருகிறவர்களுக்கு அமுதளித்துத் தகையாற்றி, அகமகிழ்ச்சியளித்தன. அதுபோலவே, பாண்டிவளநாடெங்ஙனும் பார்த்த பார்த்த விடங்களிலெல்லாங் கற்பகக்காடுகளாகிய தாலவிருக்ஷச்சோலைகளும், தெங்குவிருக்ஷச்சோலைகளும், ஈந்துவிருக்ஷச்சோலைகளும் நிறைந்து, அச்சோலைகளின் நிழல்களில் ஒதுங்கி இளைப்பாற வருகிறவர்களுக்கு அமுதளித்துத் தகையாற்றி, அகமகிழ்ச்சி யளித்தன. அனுமானும், அவனோடு கூடப்போன கிஷ்கிந்தாநாட்டுச் சத்திரியர்களும், சுரர்நாட்டில் கற்பகவிருக்ஷச்சோலைகளிலிருந்து அமுதம் உண்டு மகிழ்ந்த பிரகாரம், இந்தப் பாண்டிவளநாட்டிலுங் கற்பகவிருக்ஷச்சோலைகளிலிருந்து அமுதம் உண்டு மகிழ்ந்தார்கள்.

இதுவிஷயத்தில் இவ்விருநாடுஞ் சமரசப்பட்டிருந்தன வென்று கண்டனர்.

மற்றொருவிஷயத்தில் சுரர்நாட்டிற்கில்லாத சிறப்பு தமிழ்நாட்டிற்கு இருக்கிறதென்று அந்தக்கவி கூறுகிறது.

இந்தப் பாண்டிவளநாட்டில், எம்மலையினுங் கீர்த்திபடைத்த பொதியமாமலையில், எந்த ரிஷியினுங் கீர்த்திசிறந்த கும்பமுனியாகிய அகஸ்தியரிஷியானவர் அருமையுடன் வளர்த்த இயலிசைநாடகமென்னும் முத்தமிழ்நூல்களிற் சிறந்த இலக்கண இலக்கிய இதிகாச ஆகம வேதபுராணங்கள் வாசிப்போர்கள் கற்போர்களனைவரும் அமுதமென உண்ணத்தக்க அரும்பொருள்களை யுடையவைகளாய், இனிய தமிழிலமைந்து இன்பந்தருகின்ற பிரகாரஞ் சுரர்நாட்டிலில்லாமையால், இந்தப் பாண்டிவளநாடு அந்தச் சுரர்நாட்டிலும் மிகு சிறப்புடைய நாடு என்கிறார் புராணிகர்.

சுரர்நாட்டில் கற்பகவிருக்ஷச்சோலைகள் ஆதிகாலத்தில் ஏராளமாக வைத்து உண்டுபண்ணியதற்கு மேற்கோள் வருமாறு:—

(v) திருக்கழுக்குன்றப்புராணம், கயிலாயச்சருக்கம், 13 - வது கவி:

"நாகம்பஞ்சரஞ் சந்தனங்குங்கும நறவங்
காகதுண்டமுண்டகங் கன்னிகாரங்காகோளி
பூகஞ்சண்பகந் தெங்குமாப்பலவு பூங்கதலி
மாகங்கண்ணுற மருங்கெலாநெருங்குவ பெருங்கா."

இந்தக்கவியில், புன்னை, செருந்தி, சந்தனம், குங்குமம், நறவம், அகில், தாமரை, கோங்கு, அசோகு, கமுகு, சண்பகம், தெங்கு, மா, பலா, வாழை என்னும் இம்மரங்களெல்லாஞ் சோலைகளாய் ஆகாயத்தினிடத்திற் பொருந்தும்படி இமயமலைச்சாரலில் நெருங்கியிருக்கும் எனக் கூறியிருக்கிறது.

இதில் பற்பல விருக்ஷச் சோலைகளுக்குள்ளே தெங்குவிருக்ஷச்சோலைகள் இமயமலைச் சாரலிலிருக்கிறதாக உரைத்திருக்கின்றது.

(vi) மேற்படி கைலாயச்சருக்கம், 14 - வது கவி:

"பொன்றழைப்பன நித்திலமுகைப்பன புனைபூண்
சென்றழைப்பன பைந்துகிற்காய்ப்பன செழும்பொற்
கொன்றைமத்தமுமிலைந்தவனுணையிற்குழுமி
மன்றலிற்பலகோடி கற்பாடவி வயங்கும்."

இந்தக்கவியில், கைலாயகிரியையுடைய இமவற்பருவதச் சாரலில், 'பலகோடிகற்பாடவி வயங்கும்' என்று கூறியிருக்கின்றது; அதற்குத் திரளான கற்பகச்சோலைகள் அங்ஙனமுண்டு என்பது தாற்பரியம்.

கற்பகம், கற்பம் என்பவைகள் ஒருபொருட் சொற்களாம்.

கற்பாடவி = கற்பம் + அடவி,
= கற்பகக்காடு,
= கற்பச்சோலை, என்பது பொருளாம்.

கற்பம் தாலவிருக்ஷமானதால், தாலவிருக்ஷச் சருக்கரைக்கு 'கற்பக்கட்டி' என உலகவழக்கில் வந்து வழங்குகின்றது.

(vii) திருநெல்வேலித் தலப்புராணம், நைமிசாரணியச்சருக்கம், 11-வது கவி :

"மாவொடுபலவுங்கோங்கு மாதளை வன்னிவேங்கை
பூவலர் பாரிசாதம் புன்னைசெண்பகம் பொன்னூர
மேவுசந்தனின்னீள் பிண்டி விரவுபாடலமாலூராங்
காவுயர்கொன்றைதெங்கு கற்பகச்சோலைசூழும்."

இந்தக்கவியில், இமவற்பருவதச் சாரலிலிருக்கின்ற நைமிசாரணியவனத்திற் பற்பலவகை விருக்ஷச்சோலைகளோடு தெங்குவிருக்ஷச்சோலைகளும் கற்பகவிருக்ஷச் சோலைகளுமிருந்தனவெனக் கூறியிருக்கின்றது.

மேற்படி நைமிசாரணியவனத்தில் தவஞ்செய்துவந்த ரிஷிகளுக்கு இவ்விருக்ஷங்கள் அமுதுணவளித்தது விளங்குகிறது.

(viii) கம்பராமாயணம், பாலகாண்டம், கையடைப்படலம், 7-வது கவி :

"என்னனையமுனிவரு மிமையவருமிடையூறொன்
றுடையரானால்
பன்னகமுநகுவெள்ளிப் பணிவரையும் பாற்கடலும்
பதுமபீடத்
தன்னகருங்கற்பகநாட் டணிநகரு மணிமாடயோத்தி
யென்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ விகல்கடந்த
புலவுவேலோய்."

இந்தக்கவியில், சத்திரியரிஷியாகிய விசுவாமித்திர மகாமுனிவர் சுரர்நாட்டைக் கற்பகவிருக்ஷங்கள் மிகுந்திருந்த காரணத்தையிட்டு, கற்பகநாடு என்று சொல்லியிருக்கிறார்.

(ix) மேற்படி கையடைப்படலம், 1 - வது கவி:

" நனைவருகற்பக நாட்டுநன்னகர்
அனைவருமணைதர வயிர்க்குஞ் சிந்தையான்
நினையவுமரியது விசும்பினீண்டதோர்
புனைமணிமண்டபம் பொலியவெய்தினான்."

இந்தக்கவியில், இந்திரமகாராஜனுடைய நாட்டிற்கு 'நனை வருகற்பகநாடு' எனப் பெயர் வந்திருக்கிறது.

'நனைவருகற்பகநாடு' என்பதற்கு "மதுவைத்தருகின்ற கற்பகவிருக்ஷச்சோலைகளையுடைய நாடு" என்பது பொருளாம்.

(x) மேற்படி கையடைப்படலம், 8-வது கவி:

" இன்றளிர்க்கற்பக நறுந்தேனிடைதுளிக்கு நிழலிருக்
கை யிழந்துபோந்து,
நின்றளிக்குந் தனிக்குடைக்கீழதிறைதுங்கிக் குறையிரந்து
நிற்பநோக்கிக்,
குன்றளிக்குங் குலமணித்தோட் சம்பரனைக் குலத்தோடுந்
தொலைத்துநீகொண்,
டன்றளித்த வரசன்றே புரந்தரனின்றுள்கின்ற
தரசவென்றான்."

இந்தக் கவியில், அசுரனாகிய சம்பரனால் இந்திர மகாராஜன் செயிக்கப்பட்டு 'இன்றளிர்க்கற்பகநறுந்தேனிடைதுளிக்கு நிழலிருக்கையை' இழந்துவிட்டனனென்றும், தசரதமகாராஜன் மேற்படி சம்பரனை வென்று இந்திரனுக்கு அரசளித்தனனென்றும் விசுவாமித்திர மகாமுனிவர் கூறியிருக்கிறார்.

இதில், 'இன்றளிர்க்கற்பக நறுந்தேனிடைதுளிக்கு நிழலிருக்கை' என்பதற்கு "மதுரம் பொருந்திய ஓலைக்குருத்துகளையுடைய கற்பக விருக்ஷங்களின் வாசனைபொருந்திய மதுவானது திவலை திவலையாக ஒழுகுகின்ற நிழலில் வாசஞ்செய்தல்" என்பது பொருளாம்.

இவைகளினால் கற்பகவிருக்ஷங்கள் தாலவிருக்ஷங்கள் எனத் தெளிவுற விளங்குகின்றது.

நாலடியார், பொருட்பால், நட்பாராய்தல், 6 - வது கவி :

"கடையாயார் நட்பிற் கமுகனையரேனை
யிடையாயார் தெங்கினனையர் — தலையாயா
ரெண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே
தொன்மையுடையார் தொடர்பு."

இந்தக் கவியில், சிநேகத்தில் அதமர் கமுகவிருக்ஷத்திற் கும், மத்திமர் தெங்குவிருக்ஷத்திற்கும், உத்தமர் தாலவிரு க்ஷத்திற்கும் ஒப்பிடப்பட்டிருக்கின்றனர்.

இச்செய்யுளில், உத்தமராகிய தலையாயரை 'எண்ணரும் பெண்ணைக்கு' ஒப்பிட்டிருக்கிறார். 'எண்ணரும் பெண்ணை' என்பதற்கு உரையாசிரியர் 'நினைத்தற்கரிய பனைமரம்' எனவும், அங்கிலேயபாஷையில் மொழிபெயர்த்தவர்' The palmyra tree (whose uses are) difficult to reckon' எனவும் தாற் பரியம் பண்ணியிருக்கின்றனர்.

இதினாலும் கற்பகவிருக்ஷமாகிய பனைவிருக்ஷமானது நினை த்தற்கரிய பிரயோசனங்களையெல்லாந் தரத்தக்க விருக்ஷ மென்றும், தாலவிருக்ஷத்தைப்போல உபயோகமுள்ள விரு க்ஷம் வேறொரு விருக்ஷமுமில்லை என்றும் நன்றாய் விள ங்குகின்றது. ஆனதால், விரும்பியதையெல்லாந் தரத்தக்க விருக்ஷமென்று பூர்வீகத்தார் இந்தத் தாலவிருக்ஷத்தை மிக வும் புகழ்ந்துபேசி, அது மற்றெல்லா விருக்ஷங்களிலும் நெடுங்காலமிருக்கத்தக்க விருக்ஷமானதினாலே அதற்கு 'கற் பம்' என்றும், 'கற்பகம்' என்றும் பெயரிட்டனர். கல்பகா லம் (=கற்பகாலம்) என்பது மிக நீண்ட ஓர் காலவளவாம். அது 4,320,000,000 (சா௱௬உகோடி) வருடங்கொண்டது. கலிங்கநாட்டிலும் தெற்கே தொண்டை வளநாட்டிலும் மற் றத் தமிழ்நாடுகளுக்கொப்பந்தந் தாலவிருக்ஷங்கள் மிகுதி யாகவைத்து உண்டுபண்ணிய காரணத்தையிட்டே அவை களிலிருக்கின்ற நதிகளில், நெல்லூருக்குச் சமீபத்திலிருக் கிற நதிக்கு உத்தரபெண்ணை நதி என்றும், கூடலூர் மஞ் சக்குப்பத்துக்குச் சமீபத்திலிருக்கிற நதிக்குத் தக்ஷண பெ

ண்ணை நதியென்றும் பெயர்கள் வந்திருக்கின்றன. நாளதும் இவ்விரு நதித்தீரங்களிலும் அவைகள் செல்லுகின்ற நாடுக ளிலுந் தாலந் தெங்கு ஈந்து விருக்ஷச்சோலைகளைத் திரள் திரளாகப் பார்க்கலாம்.

இந்த மகா அபூருவமான கற்பகவிருக்ஷத்தில் விளைகின்ற பிரயோசனங்களை வடமொழியில் 'தாலவிலாசம்' என்னும் நூலிலும், தென்மொழியில் 'பனைமரச்சோபனம்' என்னும் நூலிலும் விபரப்படப்பார்க்கலாம்.

தாலவிருக்ஷங்கள் ஆயிரம் வருடத்திற்கு மேற்பட இருக் கத்தக்க விருக்ஷங்களாம்.

இப்படியிருக்க, இக்காலத்திலோ இலகிரிக்கு ஏதுவாகிய பதார்த்தங்கள் கலப்பதினால் இனிப்பற்றுச் சளித்துப் புளித் துப்போன பழநறைக்குக் கள் என்றுபெயர்.

சுண்ணப் பிரயோகத்தால் அமுதத்தின் வீறைத் தணித் துத் தெளிந்த மதுவைப் பூர்வகாலங்களில் அரசர்கள் முத லான மேன்மக்கள் அந்திசந்திகளில் உண்டு மகிழ்ந்து வந் தார்கள். ஆனதால், அவ்வகைக் கற்பக அமுதத்துக்கு 'தே ரோரமுதம், தெள்ளமுதம், தெள்ளிய கற்பகவமுதம், தேவ ரமுதம், சுரரமுதம், தேவர்கள் கற்பகவமுதம்' எனப் பெயர் கள் வரும்.

சூத்திரர் முதலிய தொழிற்காரர்களுக்கென்று உண்டுபண் ணப்படுகின்ற சளித்துப் புளித்த பழநறையாகிய கள்ளுக்கு 'ஏரோர்கள்' எனப் பெயர்வரும்.

மேல்திசை நாட்டார்களாகிய ஐரோப்பியர்கள் வசிக்கின்ற நாடுகளில் இவ்வகை உயர்சாதியான அமுதவிருக்ஷங்களில் லாமையால், அவர்கள் கொடிவகைகளிற் சிறந்த கொடியா கிய திராக்ஷக்கொடிகள் நட்டு திராக்ஷச்சோலைகள் உண்டு பண்ணி, அதின்பழங்களி லுற்பத்தியாகின்ற அமுதத்தை உண்டு மகிழ்ந்துவருகின்றனர். இந்தத் திராட்ச அமுதத்தி லும், மேன்மக்களுக்கு உயர்வாகிய மதுவும், கீழ்மக்களுக்கு இழிவாகிய மதுவும் உண்டுபண்ணி யருந்திவருகிறார்கள்.

மானிடகுலத்தவர்கள் ஆதிகாலமுதல் நாளதுவரையிலும் இவ்வகை அமுதங்களிலோர்வகை யமுதம் அருந்திவந்திருப்பது இதனால் தெரியவருகிறது.*

இக்காலத்தில் நம்முடைய தேசத்துப் பெரியோர்கள், யூரோப்பியர்கள் உண்டுவருகிற திராக்ஷக் கொடியமுதம் மிகுதியாக அருந்திவருகின்ற காரணத்தால் தாலவிருக்ஷவமுதை அவ்வளவாய் விரும்பவில்லை. பூர்வகாலத்திலோ அப்படியல்ல.

இந்தக் கற்பகவமுதத்தை அரசர்களும், அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களும் உண்டுமகிழ்ந்து வந்தார்கள் என்பதற்கு இதிகாசச் சாட்சிவருமாறு :

கம்பராமாயணம், பாலகாண்டம்,
உண்டாட்டுப்படலம்.

இந்தப்படலத்தைப் பார்க்கும்போது, இராமருக்கும் சீதாதேவிக்கும் விவாகம் நிறைவேறுகிற முன்னுக்கு, மேற்படி திருமணக்கோலங் காணும்பொருட்டு, சனகமகாராஜனது நகரமாகிய மிதிலாபுரிக்குத் தசரதமகாராஜன் தன் இனசனங்களோடும், ரதகெஜதுரகபதாதிகளாகிய சதுரங்கசேனையோடும், அயோத்திமாநகரத்தினின்று புறப்பட்டுப்போகையில், நதிகளும் பொய்கைகளும் வாவிகளும் மிகுந்த அழகிய ஒருவனத்தில் தாலவிருக்ஷச்சோலைகளும், தெங்குவிருக்ஷச்சோலைகளும், ஈந்துவிருக்ஷச்சோலைகளுமாகிய கற்பகவிருக்ஷக்காவுகளில் இறங்கி, அந்திப்பொழுதில் அரசர்குலத்து ஆடவர்களும் ஸ்திரிகளும் புறப்பட்டு, அங்குள்ள சோலைகளில் புஷ்பங்கள்கொய்து, நதிகள் பொய்கைகள் வாவிகளில் நீராடி, பூரணசந்திரோதயமானதால் விளையாடிக்கொண்டு,

*பிரளயகாலத்திற்கு முன்னிருந்த மானிட குலத்தவர்கள் வேள்விசெய்யுங் காலங்களிலும் பிறசமயங்களிலும் அமுதம் அருந்திவந்த காரணத்தையிட்டே பிரளயத்திற்குத் தப்பிப்பிழைத்த வைவசுவதமநு (Noah) முதல்முதல் அமுதக்கொடியாகிய திராக்ஷக்கொடிகள் நட்டு, அமுதமுண்டுபண்ணியருந்தியதுமன்றி, வேள்வியுஞ் செய்தனன்.
Gen. 8, 20—22; 9, 20—29.

அங்குள்ள கற்பகவிருக்ஷவமுதத்தை மேற்படி அமுதவிருக்ஷ இலைத்தொன்னைகளிலும், பொற்கின்ணங்கள் வெள்ளிக்கி ண்ணங்களிலும், வெண்கலவட்டில்களிலும் வார்த்து உண்டு மகிழ்ந்ததாகக் காண்கிறோம்.

இந்தப்படலத்திலிருந்து இரண்டுகவிகள் எடுத்து இங்ஙனந் திருட்டாந்தங்களாகக் கூறுவோம்.

(xi) உண்டாட்டுப்படலம், 6-வது கவி:

"பூக்கமழோதியர் போதுபோக்கிய
சேக்கையின்பச்செருச் செருக்குஞ் சிந்தையார்
ஆக்கியவமிர்தென வம்பொன் வள்ளத்து
வாக்கியபசுநறு மாந்தன் மேயினார்."

இந்தக்கவியில், மேற்படி திருமணக்கோலங்காணப்போன வர்கள் வழிமார்க்கத்தில் கற்பகச்சோலைகளில் பொன்வட் டில்களிலே பசுநறுவாகிய கற்பகவமிர்தத்தை வார்த்து உண் டனர் எனக் கூறியிருக்கிறது.

(xii) மேற்படி உண்டாட்டுப்படலம், 10-வது கவி:

"விடனுக்குநெடியநோக்கினமுதொக்குமின்சொலார்தம்
மடனுக்குமடனுமுண்டேவாணுதலொருத்திகாணத்
தடனுக்குநிழலைப்பொன்செய்தண்ணறுந்தேறல்வள்ளத்
துடனுக்கவுவந்து நீயே யுண்ணுதிதோழியென்றாள்."

இக்கவியில், ஸ்திரீகளிலொருத்தி பொற்கிண்ணத்தில் வார்த்திருந்த அமிர்தத்திலுள் தன் சாயையைக்கண்டு, அது தன் தோழி என்பதாக எண்ணி, அவளைப்பார்த்து, 'ஓதோழீ, நீயே இந்த அமுதத்தை உண்ணு' என்றாள் எனச் சொல்லி யிருக்கின்றது.

பாரதம், ஆதிபருவம், மாலையிடு சருக்கம்.

இந்தச் சருக்கத்தைப் பார்க்கும்போது, வாரணாவதநகரத் தில் அரக்குமாளிகையில் வெந்தழியாது உயிர்தப்பிப் பிழை த்த தருமன், வீமன், விசயன், நகுலன், சகதேவன், எனப் பெயர்கொண்ட பாண்டவர்கள் ஐந்துபேர்களும் தங்கள்

மாதா குந்தமாதேவியுடன் வனசஞ்சாரஞ்செய்து, பிறகு வேத்திரகிய நகரத்தில்வந்து வாசஞ்செய்துகொண்டிருக்கையில், பாஞ்சாலநாடாள்வோனான யாகசேனனெனப் பெயர்கொண்ட துருபதமகாராஜனுடைய புத்திரி துரோபதைக்குக் கலியாணம் என்பதாகவும், கலியாணவோலை ஐம்பத்தாறு தேசத்து இராசாக்களுக்கும் போயிருக்கிறது என்பதாகவும், பஞ்சபாண்டவர்கள் அந்தணனொருவன் மூலமாய்த் தெரிந்துகொண்டு, தக்ஷணமே பார்ப்பனவேடம் பூண்டு, தங்கள் மாதா குந்திதேவியையுங் கூட்டிக்கொண்டு, பார்ப்பார்களோடு வழிகூடி, துருபதமகாராஜன் நகரிபோய்ச் சேர்ந்து, அவ்விடத்தில் தங்கள் மாதாவாகிய குந்தியை ஒரு குசவன் வீட்டிலிருத்திப்போட்டு, இராசசபையில் பார்ப்பாரோடு பார்ப்பாராக உழுக்காந்திருந்தார்கள். அப்படி உழுக்காந்திருக்கையில், பிரமாண்டமான மங்கலக்கோதண்டத்தைத் தூக்கி வளைத்து நாணேறிட்டுக் குறிதப்பாமல் அஸ்திரப்பிரயோகஞ் செய்யுதற்குத் திறமில்லாதுபோன சகல அரசர்களுக்கும் முன்பாகப் பார்ப்பனவேடம் பூண்டிருந்த அருச்சுனனானவன் எழுந்து, அந்த மங்கலக்கோதண்டத்தைத்தூக்கி, தனுநூலுக்கு ஆசிரியன் இவனென்று சொல்லும்படியாக விதிமுறை பிறழாது நாணேறிட்டு குணத்தொனி முழக்கி, இலக்குத்தப்பாது அஸ்திரப்பிரயோகஞ்செய்து, வெற்றி சிறந்தவனாய் இராசசபைக்குத் திரும்பிவந்து, அவர்கள் பார்க்க அகமகிழ்ச்சியோடு பசுஞ்செம்பொன் மாலைசூடிய துரோபதையை இரு கரங்களாலுந் தூக்கி, செயம்பொருந்திய தனுவைத்தாங்கிய கரத்தில் ஏந்தியெடுத்துக்கொண்டு, தன் மாதாவிருந்த இடநோக்கி நடந்தான். உடன்பிறந்தவர்கள் நாலுபேரும் இருமருங்கினும் இணைபிரியாது சென்றனர். இவ்வாறு பாண்டவர்கள் ஐந்துபெயர்களும் துரோபதையுமாக குந்தமாதேவியை இருத்திவைத்திருந்த குயவன்வீட்டு முற்றத்தில் அந்திப்பொழுதில்வந்து சேர்ந்தனர். அந்தவேளையில் குந்தமாதேவியானவள் வீட்டுக்குள்ளே யிருந்தாள். உள்ளே யிருந்தவளைநோக்கிப் பாண்டவர்கள் சொல்லுகிறார்கள் :

(xiii) ஆதிபருவம், மாலையிடுசருக்கம், 67 - வது கவி :

" அன்றிலக்கெய்தகோவுந் துணைவருமான வெம்போர்
வென்றுகொற்றவையோடொக்கு மின்னிடைப் பொன்
னுந்தாமுஞ்
சென்றுமட்கலஞ்செய்கன்மி செழுமனை முன்றிலெய்தி
இன்றுபெற்றனமோரையமென்செய்வததனையென்றார்."

இதின்தாற்பரியம்.

துருபதமகாராஜனுடைய வதுவைமண்டபத்தில் மனைத்தனுக்கொண்டு குறித்தலக்கெய்து செயவீரனாய் துரோபதையைக் கைப்பற்றிய அருச்சுனனும், அவன் உடற்பிறப்பாளரும்எதிர்த்துவந்த அரசர்களைச்செயித்தவர்களாய், காளிதேவிக்குச்சமானமான துரோபதையையுங் கூட்டிக்கொண்டு, குலாலனுடைய வீட்டுமுற்றத்தில் வந்து நின்றுகொண்டு, வீட்டுக்குள்ளிருந்த அன்னையைநோக்கி, 'அம்மா, இன்றைக்கு நாங்கள் போனவிடத்தில் பிச்சையொன்று அகப்பட்டது, அதை நாங்கள் என்னசெய்ய' என்றுகேட்டார்கள் என்பதாம்.

இந்தக்கவியில் 'கொற்றவையோடொக்குமின்னிடைப்பொன்' எனக் கூறியிருப்பதற்கு, 'காளிகாதேவிக்குச் சமானமான மின்னற்கொடிப்போன்ற சிற்றிடையினையுடைய இலக்ஷிமீகரம் பொருந்திய துரோபதை' என்பது கருத்தாம். ஆதிகாலத்திலே காளிகாதேவியே அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்குக் குலதெய்வமென்பது இதினாலும் நன்றாய் விளங்குகின்றது. காளிகாதேவி அரசர்குலத்தவர்களுக்குக் குலதெய்வமில்லாது போயின், அத்தேவியை அரசர்குலப்பெண்ணுக்கு ஒப்பிட்டுப்பேசுவார்களா?* பூர்வ தமிழரசர்களுடைய பழம்பதிகளெல்லாம் வடக்குவாசலில் காளிகாதேவியின் ஆ

* 'அம்மன் ஆதியுகத்தில் சத்தியாகவும், கிரேதாயுகத்தில் பதுமாட்சியாகவும், திரேதாயுகத்தில் சீதையாகவும், துவாபரயுகத்தில் துரொபதையாகவும், கலியுகத்தில் காளியாகவும் விளங்கினதாக பிரமியபுராணம், பிரமோத்திர காண்டம் கூறுகிறது. சதுர்யுகங்கள் முதன் முதல் குருபதியோகத்தால் ஏற்பட்டன.

லயத்தை யுடைத்தாயிருக்கின்றன. போர்த்தொழிற்கு அவள் நாயகியானதால், அரசர்குலத்தவர்கள் அவள் பாதங்காத்திருந்து பதினெண்ணாயுதவித்தைகள் கற்றுவந்தனர்.

சான்றோர்குலத்தவர்கள் வசிக்கும் நாடுநகரங்களெங்கும் காளிகாதேவியின் ஆலயங்களை விஸ்தாரமாகப் பார்க்கலாம். காளிகாதேவியானவள் யுத்தத்திற்கும், வெற்றிக்கும், பதினெட்டாயுத வித்தைக்கும் நாயகியானமையால், அவள் சத்திரியகுலத்தவர்களுக்கு இன்றியமையாத குலதெய்வமாம். ஆனதால், சான்றோர்குலத்தவர்களுக்குக் 'காளிபுத்திரர்' எனப் பெயர்வந்திருக்கின்றது. இதனாலுஞ் சான்றோர்குலத்தவர்கள் அரசர்குலத்தவர்களென விளங்குகிறது.

(xiv) பத்திரகாளி பஞ்சரத்தினம், 2-வது கவி:

" எத்தனையோகோடி யாயிரமுருவ நானெடுத்தெய்த்தேனை
யிப்புவிதன்னிலே
இனியாகிலுஞ்செல்வ வளமையுதருறையா திருந்தினது
கழறுதிக்கச்
சித்தம்வைத்தாளவே வேண்டிநின்றன் கழல்கள்
சிந்தித்தனன்கருணைபார்
சிவிதாருகவயிரி மாரிகங்காளியுயர் தேசோன்மயாநந்தியே
உத்தமியநாதிசிவசத்திகுண்டலிநீலி யோங்காரியாளியூர்தி
உளநாடியடிதேடி கனதோடி யிசைபாடி யுத்தமர்கள்
பணிசெய்மோடி
சுத்தமிகுசாமுண்டி சான்றோரின்குலதெய்வ
சுகுணிபிட்டாபுரத்தாய்
சோதனைக்கெடவாளி பூதவெற்படையாளி
சோதிபத்திரகாளியே."

இந்தக்கவியில், சிவபிரானுடைய தேவியாகிய காளிகாதேவிக்குச் 'சான்றோரின் குலதெய்வ சுகுணிபிட்டாபுரத்தி' எனப் பெயர்வந்திருக்கிறது.

'சான்றோரின் குலதெய்வ சுகுணிபிட்டாபுரத்தி' என்பதற்குச் சான்றோர்களாகிய அரசர்குலத்தவர்கள் சந்ததிக்குப்

(xiii) ஆதிபருவம், மாலையிடுசெருக்கம், 67-வது கவி:

" அன்றிலக்கெய்தகோவுந் துணைவருமான வெம்போர்
வென்றுகொற்றவையோடொக்கு மின்னிடைப் பொன்
னுந்தாமுஞ்
சென்றுமட்கலஞ்செய்கன்மி செழுமனை முன்றிலெய்தி
இன்றுபெற்றனமோரையமென்செய்வததனையென்றார்."

இதின்தாற்பரியம்.

துருபதமகாராஜனுடைய வதுவைமண்டபத்தில் மணத் தனுக்கொண்டு குறித்தலக்கெய்து செயவீரனாய் துரோபதையைக் கைப்பற்றிய அருச்சுனனும், அவன் உடற்பிறப்பாளரும் எதிர்த்துவந்த அரசர்களைச் செயித்தவர்களாய், காளிதேவிக்குச்சமானமான துரோபதையையுங் கூட்டிக்கொண்டு, குலாலனுடைய வீட்டுமுற்றத்தில் வந்து நின்றுகொண்டு, வீட்டுக்குள்ளிருந்த அன்னையைநோக்கி, 'அம்மா, இன்றைக்கு நாங்கள் போனவிடத்தில் பிச்சையொன்று அகப்பட்டது, அதை நாங்கள் என்னசெய்ய' என்றுகேட்டார்கள் என்பதாம்.

இந்தக்கவியில் 'கொற்றவையோடொக்குமின்னிடைப்பொன்' எனக் கூறியிருப்பதற்கு, 'காளிகாதேவிக்குச் சமானமான மின்னற்கொடிப்போன்ற சிற்றிடையினையுடைய இலக்ஷிமீகரம் பொருந்திய துரோபதை' என்பது கருத்தாம். ஆதிகாலத்திலே காளிகாதேவியே அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்குக் குலதெய்வமென்பது இதினாலும் நன்றாய் விளங்குகின்றது. காளிகாதேவி அரசர்குலத்தவர்களுக்குக் குலதெய்வமில்லாது போயின், அத்தேவியை அரசர்குலப்பெண்ணுக்கு ஒப்பிட்டுப்பேசுவார்களா?* பூர்வ தமிழரசர்களுடைய பழம்பதிகளெல்லாம் வடக்குவாசலில் காளிகாதேவியின் ஆ

---

* 'அம்மன் ஆதியுகத்தில் சத்தியாகவும், கிரேதாயுகத்தில் பதுமாட்சியாகவும், திரேதாயுகத்தில் சீதையாகவும், துவாபரயுகத்தில் துரொபதையாகவும், கலியுகத்தில் காளியாகவும் விளங்கினதாக பிராமியபுராணம், பிரமோத்திர காண்டம் கூறுகிறது. சதுர்யுகங்கள் முதன் முதல் குருபதியோகத்தால் ஏற்பட்டன.

லயத்தை யுடைத்தாயிருக்கின்றன. போர்த்தொழிற்கு அவள் நாயகியானதால், அரசர்குலத்தவர்கள் அவள் பாதங்காத்திருந்து பதினெண்ணுயுதவித்தைகள் கற்றுவந்தனர்.

சான்றோர்குலத்தவர்கள் வசிக்கும் நாடுநகரங்களெங்கும் காளிகாதேவியின் ஆலயங்களை விஸ்தாரமாகப் பார்க்கலாம். காளிகாதேவியானவள் யுத்தத்திற்கும், வெற்றிக்கும், பதினெட்டாயுத வித்தைக்கும் நாயகியானமையால், அவள் சத்திரியகுலத்தவர்களுக்கு இன்றியமையாத குலதெய்வமாம். ஆனதால், சான்றோர்குலத்தவர்களுக்குக் 'காளிபுத்திரர்' எனப் பெயர்வந்திருக்கின்றது. இதனுலுஞ் சான்றோர்குலத்தவர்கள் அரசர்குலத்தவர்களென விளங்குகிறது.

(xiv) பத்திரகாளி பஞ்சரத்தினம், 2-வது கவி:

" எத்தனையோகோடி யாயிரமுருவ நாளெடுத்தெய்த்தேனை
யிப்புவிதனிலே
இனியாகிலுஞ்செல்வ வளமையதுதுறையா திருந்துனது
கழறுதிக்கச்
சித்தம்வைத்தாளவே வேண்டிநின்றன்கழல்கள்
சிந்தித்தனன்கருணைபார்
சிலிதாருகவயிரி மாரிகங்காளியுயர் தேசோன்மயாநந்தியே
உத்தமியநாதிசிவசத்திகுண்டலிநீலி யோங்காரியாளியூர்தி
உளநாடியடிதேடி கனதோடி யிசைபாடி யுத்தமர்கள்
பணிசெய்மோடி
சுத்தமிகுசாமுண்டி சான்றோரின்குலதெய்வ
சுகுணிபிட்டாபுரத்தாய்
சோதனைக்கெடவாளி பூதவெற்படையாளி
சோதிபத்திரகாளியே."

இந்தக்கவியில், சிவபிரானுடைய தேவியாகிய காளிகாதேவிக்குச் 'சான்றோரின் குலதெய்வ சுகுணிபிட்டாபுரத்தி' எனப் பெயர்வந்திருக்கிறது.

'சான்றோரின் குலதெய்வ சுகுணிபிட்டாபுரத்தி' என்பதற்குச் சான்றோர்களாகிய அரசர்குலத்தவர்கள் சந்ததிக்குப்

பூர்வ மாதாவாகிய காளிகாதேவி மேற்படி குலத்தவர்களுக்குக் குலதெய்வமென்பதும், அவளுக்குப் பிட்டாபுரத்தி என்பது இடத்தால் வந்தபெயரென்பதுங் கருத்தாம்.

அன்றியும், இந்தப் பதினெட்டாயுத வித்தைத்திறமையால் சான்றோர்குலத்தவர்களுக்குக் 'கருக்குப்பட்டயச் சான்றோர்' என்றொரு சத்திரியப் பட்டப்பெயருமுண்டு.

(xv) மேற்படி மாலையிடுசெருக்கம், 68 - வது கவி :

"உள்ளிருந்தன்னைமைந்த ருரைத்தசொற்கேட்டுத்தேவர்
தெள்ளமுதென்னமக்காள் சேரநீரருந் துமென்று
புள்ளினமொடுங்குமாலைப் பொழுதிவள் புறம்பரெய்திக்
கள்ளவிழ்கூந்தலாளைக் கரும்பென விரும்பிக்கண்டாள்."

இங்ஙனம், அவ்வாறு கேட்ட புத்திரர்களை நோக்கி, அது தேவர் தெள்ளமுதாயினும் நீங்கள் ஐந்துபேரும் பகிர்ந்து சாப்பிடுங்கள் என்று சொன்னாளென்பதாகக் கூறியிருக்கின்றது.

இதில், கற்பகமதுவுக்குத் 'தேவர் தெள்ளமுது,' எனப் பெயர் வந்திருக்கிறது.

(xvi) சிதம்பரப்புராணம், சிதம்பரமான்மியச்சருக்கம், 15 - வது கவி :

"உளங்குவிந்தரு மறைச்சிகையுணர்ந்த மெய்த்தவர்கள்
வளங்குலாவியதவத்தினால் வாழ்வதங்கடைந்தோர்
களங்கவல்வினை நீக்கிய கங்கையங்கரைமேல்
விளங்குகின்றதுதனைநிகர் வெதிரிகாச்சிரமம்."

(xvii) மேற்படி சருக்கம், 16 - வது கவி :

"விரிபசுந்தழைவிளங்கிய வெதிரியென்றுரைத்தற்
குரியசெங்கனி யிரந்தையங் கானநின்றொளிர
வரியிலங்கியகற்பக மளவில்பன்மரங்க
டெரிவரும்பல பறவைமாத்திகழ்ந்திடா நிற்கும்."

இந்த இரண்டு கவிகளிலும், சூதரிஷியானவர் நைமிசாரணிய முனிவர்களைப்பார்த்துச் சொல்லுகிறார் : 'கங்காநதித்

தீரத்தில் வெதிரிகாச்சிரமம் என்றொரு சிறந்த ஸ்தலமிருக்கின்றது. அதைச்சூழப் பற்பல விருக்ஷங்கள் நிறைந்த ஒரு சோலையுண்டு. அந்தச்சோலையில் எண்ணிறந்த கற்பகவிருக்ஷங்களாகிய தாலவிருக்ஷங்களிருக்கின்றன' என்றார்.

இதனால், கங்கா நதி பாய்கின்ற நாடுகளிலும் கற்பகச்சோலைகளிருந்தனவென்று தெரியவருகிறது.

(xviii) காசிநாடாள்வோனை துளசிமகாராஜன் புத்திரன் மதுரைவீரன்கதை, காசிநாட்டுச்சிறப்பு.

"மாதமும்மாரி வழங்கும்வளநாடு,
காதமணம்வீசுங் கற்பகஞ்சேர் நன்னாடு,
கரும்புக்கணுக்கள் முத்துக் காட்டுமகாநாடு,
விரும்பியறம்வளர்க்கு மேலான நன்னாடு."

இதிலும், கங்காநதித்தீரத்திலிருக்கின்ற காசிவளநாட்டில் கற்பகச்சோலைகளாகிய தாலத்தோப்புகளிருக்கின்றன என்று கூறியிருக்கிறது.

அதுவுமல்லாமல், அமுத உற்பத்திசெய்பவர்கள் பூர்வகால முதல் கள் குடிப்பதுமில்லை, கள் வியாபாரஞ் செய்வதுமில்லை. கள்ளருந்தி மயக்கங்கண்டால், அவர்கள் அமுதவுற்பத்தி செய்யுதற்கு அயோக்கியர்களாய்ப் போவார்களே. சான்றோர் குலத்தவர்கள் வசிக்கும் நாடுகளில் இதுவே சட்டம். ஆயினும், இக்காலத்திற் சீவனத்தின்பொருட்டு பிறநாடுகளிற் போய் வசிக்கும் சான்றோர்குலத்தவர்களிற் சிலர் முதலாளிகளாய் துரைத்தனத்தாருக்குள் குத்தகைகள் எடுத்து, சூத்திரகுலத்தவர்களைக்கொண்டு மேற்படி வேலைகளை நடப்பித்துவருகிறதுண்டு. இதற்கு அரசாட்சி மாறுதலே காரணமாம்.

ஆதிகாலத்திலே, பூர்வ தமிழரசர்கள் தாலமதுவைக் கள்ளாக்கி விற்பனைசெய்யுதற்குக் கள்விலைஞர்களாகிய குழுவினரை ஏற்படுத்திவைத்ததால், அக்குழுவினரால் அந்த விற்பனை நடந்துவந்திருக்கிறது.

இங்ஙனங் கள்விலைஞர் என்னும் பெயருக்குத் தாற்பரியங் கூறியாயிற்று. இனி இரண்டாவது பெயராகிய 'பழையர்' என்னும் பெயருக்குத் தாற்பரியமெடுத்துரைப்போம்.

II. 'பழையர்' என்னும் பெயர்ப்பதத்துக்குக் 'கள்விற்போர்' என்பது பொருளாம்.

அகராதிநூலாசிரியர்கள் பழையர் என்னும் பெயருக்கு 'Those who sell fermented palm-tree sap' என்று அருத்தம் பண்ணியிருக்கிறார்கள். அதற்குத் தமிழில் 'களித்துப் புளித்த பழநறையாகிய கள்' என்பது கருத்தாம்.

பழையர் என்னும் பதம் பழைமை (=பழமை) என்னும் மூலபதத்தினின்று பிறந்திருப்பதால், அதற்கு "பழய கள்விற்பவர்கள் (=களிந்த புளித்த பழநறையாகிய கள்விற்பவர்கள்)" என்பது கருத்தாம்.

இனி 'துவசர்' என்னும் பெயர்ப்பதத்துக்குத் தாற்பரியங் கூறுவோம்.

III. 'துவசர்' என்னும் பெயர்ப்பதத்துக்கும் 'கள்விற்போர்' என்பது கருத்தாம்.

'துவசர்' என்னும்பெயர் 'துவசம்' என்னும் மூலபதத்தினின்று பிறந்த பதமாம். துவசம் என்பதற்குக் கொடி என்று அருத்தமாகும். பூர்வகாலத்துத் தமிழரசர்கள் சூத்திரகுலத்தவர்கள் உண்டு களிப்பதற்கு அப்பட்டமான கற்பகமது அவர்களுக்குக் கிடைப்பதற்கு ஏதுவில்லாத காரணத்தையிட்டு, அந்த அப்பட்டமான, அல்லது வடிந்த மேனியான மதுவை அமுதவுற்பத்தி செய்கிறவர்களிடத்தில் வாங்கி, அதைப்பழநறையாகிய கள்ளாக்கி, விற்பனைத்தொழில் நடத்துதற்கு ஒரு குழுவினரை ஏற்படுத்திவைத்தபோது, கள்விற்குங் கடைச்கு அறிகுறியாக ஒருதுவசம் ஏற்படுத்திக் கொடுத்தார்கள். அந்தத் துவசத்தைக் கள்விலைஞர்கள் தங்கள் கடைகளுக்கு முன்னாகத் தூக்கிவைத்து வந்தார்கள். அதனாலே கள்விற்பனை செய்தவர்களுக்குத் 'துவசர்' எனப் பெயர் வந்திருக்கின்றது.

இனி 'படுவர்' என்னும் பெயர்ப்பதத்திற்குத் தாற்பரியங் கூறுவோம்.

IV. 'படுவர்' என்னும் பெயர்ப்பதத்திற்கும் 'பழநறை யாகிய கள்விற்பவர்கள்' என்பது பொருளாம்.

'படுவர்' என்னும் பதம் படு என்னும் மூலபதத்தினின்று பிறந்த மொழியாம். படு என்பதற்குப் பழநறையாகிய கள் என்பது கருத்தாம். இதை உய்த்தாராய்ந்து பார்ப்பவர்களுக்குக் கற்பகமது உற்பத்திசெய்கிறவர்கள் ஒரு குலத்தினர் என்றும், மேற்படி மதுவைப் பழநறையாக்கி விற்பவர்கள் வேறொரு குலத்தினர் என்றும் நன்றாய் விளங்குகின்றது.

ஆனதால், ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் பழயர், துவசர், படுவர் என்னும் இந்த மூன்று பதங்களில் எந்தப்பதத்தி லிருந்தாவது 'சாணார்' என்று தாம் வருவித்து வைத்துக் கூறிய பதத்தைப் பிறக்கச்செய்ய வகைகாணுமையால், கண்ணைமூடிக்கொண்டு சும்மா 'சாணார்' என்று பூதிப்பிடியாக எழுதிவைத்திருக்கிறார். ஆனதால், 'சாணார்' என்னும் பதம் பிறப்பதற்கு மூலபதந்தேடி, சூடாமணி நிகண்டாசிரிய ரிடத்தில் தட்சணைவைத்துப் படிக்கப்போகிறார். நாமும் அவரோடு கூடவேபோய், அங்கே என்ன இருக்கிறதென்று பார்ப்போமாக.

இந்த முதலாவது பிரகரணத்தில், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 50-வது சூத்திரத்திற்குத் தாற்பரியங் கூறிய பிரகாரம், மேற்படி ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் கூறியிருக்கிற நிகண்டுச் சூத்திரத்திற்கும் இனித்தாற்பரியங் கூறி விபரங் காட்டுவோம்.



# உ. பிரகரணம்.

சான்றவர்கள் குலத்தைச்சுட்டிச் சாதிசங்கிரக சாரம் 16-வது பக்கத்தில், நிகண்டு மக்கட்பெயர்த் தொகுதி, 36-வது கவியை ஆதாரமாகக்கொண்டு கூறியிருக்கிற தப்புத்தாற்பரியவுரையைக் கண்டித்தல்.

சூடாமணிநிகண்டு, மக்கட்பெயர்த்தொகுதி, 36-வது கவி:

கள்விற்போர் பெயர் அல்லது சாணார் பெயர்.

"தொக்ககள்விற்போர்நாமஞ் சௌண்டிகர்துவசரோடு
தக்கதோர்பிழியர்மற்றும் படுவருஞ் சாற்றுமன்றே."

இதின் தாற்பரியம்.

"சௌண்டிகர், துவசர், பிழியர், படுவர் இந்நான்கும் கள்வினைஞர் அல்லது சாணார்பெயர்" என்பதாம்.

இந்தப்பிரகாரம், ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் எழுதியிருக்கிறார்.

இந்தச்சூத்திரம் சூடாமணிநிகண்டில் கண்டிருக்கிறபடி பேர்த்தெழுதப்பட்டிருக்கின்றது. ஆயினும், தாற்பரிய வுரையில் வழுவுண்டு. அவற்றை இங்ஙனம் எடுத்து விபரப்படக் கூறிக் காட்டுவோம்.

1. நிகண்டுச் சூத்திரத்தில் 'கள்விற்போர்கள்' என்று கண்டிருக்க, ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரோ அந்தப் பெயரை 'கள்வினைஞர்' என முன்போலவே தித்தி யெழுதியிருக்கிறார்.

2. 'சாணார்' என்னும் பதத்தைத் தமது மனோரதப்பிரகாரம் பூதிப்பிடியாகச் சும்மா எழுதிவைத்திருக்கிறார். இந்தப் பெயர்ப்பதம் மேற்படி சூத்திரத்தில் இல்லவே இல்லை.

3. திவாகரநூலாசிரியர் 'கள்விலைஞர்' எனக் கூறியிருப்பதற்கு, நிகண்டாசிரியர் 'கள்விற்போர்' எனத் தாற்பரியப்பதங் கூறிக் காட்டியிருக்கிறார். இந்த நிகண்டாசிரியர் கருத்தின்

படிக்கு அகராதிநூலாசிரியர்களும் 'Those who sell fermented palm-tree sap' எனத் தாற்பரியம் எழுதிவைத்திருக்கிறார்கள்.

4. கள்விற்போர்களுக்கு 'சௌண்டிகர், துவசர், பிழியர், படுவர்' என நான்குபெயர்கள் கூறியிருக்கிறார். இந்நான்கு பெயர்களுள் 'துவசர், படுவர்' என்னும் இரண்டுபெயர்களும் திவாகரநூலாசிரியர்காலத்தில் வழங்கிய பதங்களேயாம்.

5. 'பழையர்' என்னும் பதம் நிகண்டிலில்லை. இந்தப்பதம் நிகண்டாசிரியர்காலத்தில் உலகவழக்கில் மிகுந்து உபயோகப்படுத்தப்படாது போயிற்றென்று தோன்றுகின்றது.

6. திவாகரச்சூத்திரத்திற் கண்டிராத 'சௌண்டிகர், பிழியர்' என்னும் இரண்டுபதங்கள் நிகண்டுச்சூத்திரத்தில் அமைந்திருக்கின்றன. இந்த இரண்டுபதங்களுக்கும் விபரம் இங்ஙனங் கூறுவோம். முதல் 'சௌண்டிகர்' என்னும் பதத்திற்குத் தாற்பரியஞ் சொல்லுவோம்.

7. 'சௌண்டிகர்' (Sans. *Soundika*) என்னும்பதம் வடமொழிப்பதம். இது வடமொழி நிகண்டாகிய அமரத்தில் கண்டிருக்கிறது. இந்தச் சௌண்டிகர் என்னும் பதத்தின் உற்பத்திக்கு மூலபதங்கள் 'சௌண்டி (Sans. *Soundee*)+கம் (Sans. *Kam*)' என்பவைகளாம். இந்த இரண்டுபதங்களில் 'சௌண்டி' என்னும் பதத்திற்கு 'திப்பிலி' என்றும், 'கம்' என்னும் பதத்திற்கு 'நீர்' என்றும் தாற்பரியமாகும். ஆகையினாலே 'சௌண்டிகம்' என்பதற்கு 'திப்பிலிக்குணத்தைப் பெற்ற நீர்' என்பது பொருளாம். ஆனதால், 'சௌண்டிகர்' என்னும் பெயருக்கு 'திப்பிலிநீர்போன்ற பழநறையாகிய கள்ளைவிற்போர்' என்றும், 'Those who sell fermented palm-tree sap' என்றும் அருத்தமாகும். திப்பிலிக்குணம் கட்குணத்துக்கு ஒத்திருப்பதால், இவ்விரு குணங்களேயுஞ் சமரசப்படுத்திக் கண்டுகொள்க. ஆதலால், 'சௌண்டி + கம்' என்னும் மூலபதங்களினின்று 'சௌண்டிகர்' என்னும் பதம் பிறந்திருக்கின்றது.

திப்பிலிக்குணம் கார்ப்பு, அல்லது புளிப்பேறிய உறைப் பாம். கள்ளும் கலப்புவகையால் புளிப்பேறிய உறைப்புக் குணமுடைய நீராம். இந்தக் கள்ளுக்கு இவ்வாறு புளிப்பும் உறைப்பும் ஏற்றிச் சளிக்கச்செய்து கள் விற்பனைசெய்யுங் குழுவினர்களுக்குச் 'சௌண்டிகர்' என்று பெயர்வந்திருக் கிறது.

வடமொழியார்களுக்குள்ளே உற்பத்திசெய்த கற்பகமதுவை வாங்கிக் கள்ளாக்கி விற்பனைசெய்த குழுவினருக்கு 'சௌண்டிகர்' என்று பெயர் திவாகரநூலாசிரியர்காலத்தில் இந்தச் சௌண்டிகர் என்னும் பெயர் தமிழ்நாடுகளில் வந்து வழங்காத காரணத்தை யிட்டு, திவாகரத்தில் இந்தச் 'சௌண்டிகர்' என்னும்பெயர் வரவில்லையென்று அறிக.

ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரோ தமது நூலில், 390 - வது பக்கத்தில் 'சௌண்டிகர்' என்கிற மொழியானது மரூஉவாகத்தமிழிற் 'சாணர்' என வழங்கிவருகிறது என்கிறார்.

அவர் ஏதொரு முகாந்திரமுமின்றித் தமது மனோபிஷ்டப் பிரகாரம் பூதிப்பிடியாக இவ்வாறு சொல்லுகிறாரேயன்றி, சௌண்டிகர் என்னும் பதத்தினின்று சாணர் என்னும் பதம் மருவாக வந்ததற்கு விதிகூறாது போயினார். ஆனதால், இவ்வாறு மருவியதற்கு அவர் தாமே விதிகூறிக் காட்டவேண்டியது அவருடைய கடமை. இதுநிற்க,

'சாணர்' என்னும்பெயர் தமிழ்மொழி, 'சௌண்டிகர்' என்னும் பெயரோ சமஸ்கிருதமொழி. சமஸ்கிருதமொழியினின்று தமிழ்மொழி மரூஉவாகவருவது யாம் எங்ஙனுங் கேட்டிலம். இது ஆச்சரியம்! ஆச்சரியம்!

ஆயினும், ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் மனதுக்கு 'சௌண்டிகர்' என்னுஞ் சமஸ்கிருதமொழியானது 'சாணர்' என்னுந் தமிழ்மொழியாக மருவிவந்ததற்கு யாதொரு நியாயமுந் தோன்றாதகாரணத்தினாலேதான் மேற்படி 390 - வது பக்கத்தில் பின்னும் அவர் சொல்லுகிறார் :

கண்ணு, கன்று எனவும்,
குண்ணு, குன்று எனவும்,

திரிந்து வழங்கிவருகிற பிரகாரம், சாணார் என்னும் பதம் சான்றார் எனத் திரிந்து வழங்கிவருகிறது என்கிறார்.

இவ்வாறு அவர் கூறியிருக்கிற தாற்பரியத்தைத் தெளிவுற இங்ஙனம் எடுத்து அதின் வழுவைக்காட்டுவோம்.

'சௌண்டிகர்' என்னும்பதம் 'சாணார்' என மருவி, பின்பு 'சாணார்' என நின்ற மரூஉமொழியானது 'சானறார்' எனத் திரிந்து வழங்கிவருகிறது என்று முதல் எழுதுகிறார்.

இவ்வாறு எழுதியவர் அதின்கீழாகச் 'சிலர் சான்றாரென்கிற மொழியிலிருந்து சாணார் என்று மருவினதாக யூகிக்கிறார்கள்' என்கிறார். இப்படிச் 'சாணார்' என்னும் பதத்துக்கு மூன்றுவகை யுத்திக்குறிப்பு மேலே காட்டியிருக்கிறார்.

இதைப்பார்க்கும்போது, சௌண்டிகரைச் சாணாராக்கி, சௌண்டிகரைச்சுட்டி நூல்களிற் கூறியிருக்கிற இழிவுகளையெல்லாம் ஏகமாய்த்திரட்டி, தம்முடைய இருகண்களையும் மூடிக்கொண்டு, அவைகளைச் சான்றோர் குலத்தவர்கள்மேல் ஏதொரு முகாந்திரமுமின்றி வாரிக்கொட்டுகிறார்.

இவர் யாதொரு முகாந்திரமுமின்றி, கள்விற்று வயிறு பிழைக்கின்ற சௌண்டிகர்களைச் சாணார் எனக்கூறி, சௌண்டிகர்களாகிய ஒரு குழுவினருக்குள் உண்டாயிருக்கிற ஈனங்கள் மற்றொரு குலத்தவர்களுக்கு உண்டாயிருப்பதுபோல கூறியிருக்கும்பிரகாரம், விளையாட்டுப்பிள்ளைகளும் நாவின் ஓசைக்கிணங்கச் சொற்களை மனோரதப்படி திரித்து, அருத்தங்கள் கூறிச் சிரித்து விளையாடிவருகிறார்கள். இது விளையாட்டுப்பேச்சுப்போலிருக்கிறது. இவ்வாறு விளையாட்டுப்பேச்சுகள் பேசவேண்டுமானால், வேணுமென்ற உதாரணங்கள் இங்ஙனம் எடுத்துக்கூறலாம். ஆயினும் ஒரு உதாரணங்கூறிக் காட்டுவோம்.

ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் சௌண்டிகர்களைச் 'சாணார்'

என்கிறார். அதுபோலொத்த திருட்டாந்தத்துக்குப் 'பள்ளி' என்னும் பதத்தை எடுத்துக்காட்டுவோம்.

'பள்ளிகள்' என்னும் பெயர்ப்பதம் தமிழ்நாட்டில் வசிக்கும் ஒரு குலத்தவர்களுக்குப் பெயராம். இவர்களுடைய பூர்வ உற்பத்தியை ஆராய்பவனொருவன் 'பள்ளர்கள்' என்னுங் குலப்பெயருக்கு, 'பள்ளிகள்' என்னும் பெயர் ஒற்றுமைபற்றி வருவதால், 'பள்ளர்கள்' என்னும் பதத்தினின்று 'பள்ளிகள்' என்னும் பதம் மரூஉவாகவந்து வழங்குகிறதென்றும், ஆனதால் 'பள்ளர்கள், பள்ளிகள்' என்னும் பெயர்கள் ஒருகுலத்துப்பெயர்கள் என்றும், பள்ளர்குலத்தவர்களும் பள்ளிக்குலத்தவர்களும் ஒரு குலத்தவர்களென்றுங் கூறி, 'முக்கூடற்பள்ளு' என்னும் நூலில் பள்ளர்குலத்து ஆண்களையும் பெண்களையுஞ் சுட்டி ஈனமாக எழுதியிருப்பவைகளையெல்லாந் தெரிந்தெடுத்துப் பள்ளிக்குலத்தவர்கள் மேலேற்றிவைத்துரைப்பானேயாயின் வெகுநேர்த்தியாயிருக்கும். ஆகிலும், நிந்தைமொழிபேசுவது நமக்குப் பிரியமின்மையால், இங்ஙனம் அவைகளைப் பேர்த்தெழுதாது நிறுத்துகிறோம். ஜாதிசங்கிரகசாரநூலாசிரியருக்கு வேண்டுமேயாயின், மேற்படி முக்கூடற் பள்ளிலிருந்து தேவையான நிந்தைமொழிகளை எடுத்துத் திரட்டிப் பள்ளிக்குலத்தவர்கள்மேலேற்றி எழுதியனுப்புவது பிரயாசமன்று. ஆனதால், சாணார் சௌண்டிகராகுங்காலத்தில், பள்ளிகள் பள்ளர்களாவது பிரயாசமல்ல. ஆகையினாலே, ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் தகுந்த முகாந்திரங்களின்றி, இவ்வாறு எழுதியது அவருக்கு யோக்கியமன்று.

மேற்கூறியவிஷயங்களைத் திரட்டிப் பார்வையிடும்போது, சௌண்டிகர்கள் பிரத்தியேகமான குலத்தவர்களென்றும், கள்விற்பனைக்காக ஏற்படுத்தப்பட்டவர்களென்றும் நன்றாய் விளங்குகிறது.

'சாணார்' என்னும் பதம் மரூஉவாகி வழங்குகிற பதம் என்று ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் சொல்வது நிசந்தான். ஆயினும், அப்பதம் 'சௌண்டிகர்' என்னும் சமஸ்கிருதப்

பதத்தினின்று மரூஉவானதல்ல. 'சான்றோர்' என்னும் அப்பட்டமான தமிழ்ப்பதத்தினின்று 'சாணார்' என மரூஉ வாகவந்ததென்று இங்ஙனந் தெளியக்கூறி எண்பிப்போம்.

'சாணார்' என்னும்மொழி மரூஉமொழியானதால், அது அவ்வாறு மரூஉவாய் வருதற்கு மூலமான நிறைபதம் 'சான்றார்' என்னும் பதமாம். இந்தச் 'சான்றார்' என்னும்பதம் 'சால்' என்னுங் கறந்தமேனியான தமிழ் வினைமுதலினின்று பிறந்துவந்த மொழியாம்.

'சால்' என்னும் வினையின் முக்காலத்துத் தன்மை ஒருமை வினைமுற்றுகள் வருமாறு :

(i) சாலுகிறேன்,
(ii) சான்றேன்,
(iii) சாலுவேன்.

இவற்றுள், 'சான்றேன்' என்னும் இறந்தகாலவினைமுற்றி னின்று பிறந்த வினையாலணையும் ஆண்பாற்பெயர்கள்,

சான்றவன்,
சான்றான்,
சான்றோன்,

என்பவைகளாம்; அவற்றின் பலர்பாற்பெயர்கள்,

சான்றவர்,
சான்றார்,
சான்றோர்,

என்பவைகளாம்.

இந்தப் பெயர்ப்பதங்களின் விகுதிகளில், அன், ஆன், ஒன் என்னும் விகுதிகள் ஒரு பொருள்குறித்த ஆண்பால் விகுதிக ளும், அர், ஆர், ஓர் என்னும் விகுதிகள் ஒரு பொருள்குறித்த பலர்பால் விகுதிகளுமாம்.

இம் மூன்றுபெயர்களுக்கும் பொருள் ஒன்றேயாம்.

இந்தச் 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் பெயர் கள் சுராபாண்டியன் வமிசத்தவர்களுக்கு ஒரு விசேஷித்த

காரணத்தையிட்டுக் கிடைத்த கௌரவப்பட்டப்பெயராம். இதற்கு இதிகாசபுராணசாட்சிகளுண்டு. இவ்விடத்தில் அதை யெடுத்துக் கூறவேண்டிய அவசியமில்லாமையால் அதை இங்ஙனஞ் சொல்லாதுவிடுகிறோம்.

மேலேசொல்லிய 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் பதங்களைச்சுட்டி, இதனடியில் நாம் எழுதப்போகிற வைகளைச் சீர்தூக்கி உய்த்தாராய்க.

இங்ஙனஞ் சில திருட்டாந்தங்கள் எடுத்துக் கூறுவோம்.

'நில்' என்னும் வினையின் இறந்தகாலத்தன்மை ஒருமை வினைமுற்று 'நின்றேன்' என்பதாம். இதினின்று பிறந்துவருகின்ற வினையாலணையும் ஆண்பாற்பெயர்கள்,

நின்றவன்,
நின்றான்,
நின்றோன்,

என்பவைகளாம்.

இம்மூன்று பதங்களுக்கும் பொருள் ஒன்றேயாம்.

'நின்றவன், நின்றான், நின்றோன்' என்னும் இம்மூன்றுபதங்களும் ஒரு பொருளில் வரவில்லையென்று சொல்வார் யாருமில்லை. இப்படியிருக்க, 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் மூன்றுபதங்களும் ஒருபொருளில் வரவில்லையென்று யார் சொல்லத்துணியலாம்?

இன்னும் ஒருவினையை எடுத்துக்காட்டுவோம்.

'செல்' என்னும் வினையின் இறந்தகாலவினைமுற்று 'சென்றேன்' என்பதாம். இதினின்று பிறந்துவருகின்ற வினையாலணையும் ஆண்பாற் பெயர்கள்,

சென்றவன்,
சென்றான்,
சென்றோன்,

என்பவைகளாம்.

'சென்றவன், சென்றான், சென்றோன்' என்னும் இம்மூன்று பதங்களும் ஒருபொருளில் வரவில்லையென்று சொல்லுவார் யாருமில்லை. இப்படியிருக்க, 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் மூன்றுபதங்களும் ஒருபொருளில் வரவில்லையென்று யார் சொல்லத் துணியலாம்?

வேண்டுமேயாயின், இன்னமும் அதுபோலொத்த ஒருவினையை எடுத்துக்காட்டுவோம்.

'வெல்' என்னும் வினையின் இறந்தகாலவினைமுற்று 'வென்றேன்' என்பதாம். இதினின்று பிறந்துவருகின்ற வினையாலணையும் ஆண்பாற் பெயர்கள்,

வென்றவன்,
வென்றான்,
வென்றோன்,

என்பவைகளாம்.

'வென்றவன், வென்றான், வென்றோன்' என்னும் இம்மூன்று பதங்களும் ஒருபொருளில் வரவில்லையென்று சொல்லுவார் யாருமில்லை. இப்படியிருக்க, 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் மூன்று பதங்களும் ஒருபொருளில் வரவில்லையென்று யார்சொல்லத் துணியலாம்?

இன்னமும் வேண்டுமாயின், இதுபோலொத்தவினைகளையும், வேறுவகைவினைகளையும் எடுத்து, அவற்றின் இறந்தகாலமுற்றுவினையினின்று பிறந்துவருகிற வினையாலணையும் ஆண்பாற்பெயர்களை வருவித்துப்பார்க்கலாம். திருட்டாந்தமாக,

'கல்' என்னும் வினையை இங்ஙனம் எடுத்துக்காட்டுவோம்.

'கல்' என்னும் வினையின் இறந்தகால வினைமுற்று 'கற்றேன்' என்பதாம். இதினின்று பிறந்துவருகின்ற வினையாலணையும் ஆண்பாற்பெயர்கள்,

கற்றவன்,
கற்றான்,
கற்றோன்,

என்பவைகளாம்.

'கற்றவன், கற்ருன், கற்ரோன்' என்னும் இம்மூன்று பெயர்களும் ஒருபொருளில் வரவில்லையென்று சொல்லுவார் யாருமில்லை. இப்படியிருக்கச் 'சான்றவன், சான்ருன், சான்ரோன்' என்னும் மூன்றுபெயர்களும் ஒருபொருளில் வரவில்லையென்று யார் சொல்லத் துணியலாம்?

ஆகையால், 'சான்றவன், சான்ருன், சான்ரோன்' என்னும் இம்மூன்று பெயர்களும் ஒருபொருட்பெயர்களென்று நன்ருய்த் துலங்குகின்றனவல்லவா?

பூர்வகாலத்தில், தமிழ்நாடுகளில் அரசுபுரிந்துவந்த சுரா பாண்டியன் வமிசத்தார்களுக்கு ஒரு விசேஷ காரணத்தை யிட்டுக் கொடுக்கப்பட்ட இந்த கௌரவப்பட்டப்பெயர் அரசர்குலத்தவர்களெல்லாருக்கும் பொதுப்பெயராயிற்று.

ஆதிநூல்களில், 'சான்றவர், சான்ருர், சான்ரோர்' என்னும் இந்த மூன்றுபெயர்களும் தமிழ்நாட்டு அரசர்குலத்தவர்களெல்லாருக்கும் பொதுப்பெயர்களாகக் கூறப்பட்டிருக்கின்றன.

தமிழரசர்கள் நாடாண்டகாலத்தில், அக்குலத்தவர்கள் தங்களுக்கு அலங்காரமகிமையெனத் தரித்து மகிழ்ந்துவந்த 'சான்றவன், சான்ருன், சான்ரோன்' என்னும் மூன்றுபெயர்களில், 'சான்ருன்' என்னும்பெயர் மேற்படி அரசாட்சி ஒழிந்தபின்பு, அந்தத் தமிழரசர்குலமேன்மைக்கு வேர்ப்புழுக்கள் போலான வடுகர்களும், வடமொழிப்பார்ப்பார்களும், தமிழ்நாட்டுச் சூத்திரர்களுமாகிய பகைவர்களால் அக்குலத்தவர்கள் சொல்லிமுடியாத துன்பங்களுக்குள்ளாகி, நாடுநகரங்களைவிட்டு எடுபட்டு, துயரசாகரத்தில் அமிழ்ந்தியகாலத்தில், 'சாணர்' என மரூஉமொழியாகி வழங்கத்தலைப்பட்டது; என்னத்தினுலென்ருல், தமிழரசர் அரசாட்சிக்காலங்களில் எழுதப்பட்ட சங்கச்செய்யுள்களாகிய நூல்களிலெல்லாம், யாதாமொரு விகற்பமுமின்றி, 'சான்றவன், சான்ருன், சான்ரோன்' என்னும் பெயர்கள் வந்திருக்கிறதேயன்றி, 'சாணன்' என்னும் பெயர் வரவேயில்லை. ஆனதால், 'சான்ருன்' என்

னும் அப்பட்டமான நிறைபெயர் பிற்காலங்களில் 'சாணன்' என மரூஉவாயதாக விளங்குகின்றது. இவ்வாறு சொற்கள் மரூஉவாக வழங்குதற்கு உதாரணம் வருமாறு:

இக்காலத்து உலகவழக்கில்,

நின்றான், என்னும்பதம், நிண்ணான் எனவும்,
கொன்றான், என்னும்பதம், கொண்ணான் எனவும்,
தின்றான், என்னும்பதம், திண்ணான் எனவும்,
கன்று, என்னும்பதம், கண்ணு எனவும்,

குன்று, என்னும் பதம், குண்ணு எனவும், மரூஉவாய் வழங்குகின்ற பிறகாரம் சான்றான், என்னும்பதம், சாணான் என மரூஉவாக வழங்கலாயிற்று.

'சான்றான்' என்னும்பெயர் குலப்பெயரென்பதை எவரும் ஒப்புகின்றனர். அது குலப்பெயரேயாயின், அந்தப்பெயரு டன் ஒருபொருளில் வருகின்ற 'சான்றவன், சான்றோன்' என் னும் பெயர்களும் குலப்பெயர்களாய்த்தானிருக்கவேண்டும். சும்மா எதிர்க்கட்சி செய்யவேண்டுமென்கிற பேய்த்துணிவு கொள்ளாது, சத்தியத்தை இயல்பாய் உய்த்தாராய்ந்தறியப் பிரியமுடையோர்களெவர்களோ அவர்கள் உள்ளத்திற்கு இது துலாம்பரவுண்மையெனத் தோன்றுமென்பதற்குச் சந்தேக மில்லை.

ஆனதால், 'சான்றார்' என நாளது பெயர்பெற்றிருக்கின்ற குலத்தவர்கள் எந்தக்குலத்தவர்களோ அந்தக்குலத்தவர்ளுக் கே 'சான்றவர்' என்றும், 'சான்றோர்' என்றும் பெயர்கள் வருகின்றன.

இனிச் 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் இம் மூன்று பெயர்களும் ஆதிநூல்களில் ஒரு குலத்தவர்களுக்கு வந்து வழங்கியிருப்பதை இங்ஙனம் விபரப்பட எடுத்துக்கா ட்டுவோம்:

I. சுராபாண்டியன் வமிசத்தாருக்குச் 'சான்றவர்' என நூல்களிற் பெயர் வந்திருப்பதற்கு ருசுவருமாறு:

(i) சான்றோர் புராணம், பாயிரப்படலம், 2-வது கவி:

"சீர்மேவுகேரளத்தி ஞஞ்சிநாட்டதனினிறை
 செல்வமோங்கும்,
பார்மேவுதருமபுரம் வளநகரிற்சிதம்பரன்றன்
 பாகம்பெற்றோன்,
ஏர்மேவுகுலமுடையா னிரவிமுன்னரெண்ணூற்றோ
 டிருபத்தொன்பான்
பேர்மேவுநல்லாண்டிற் சான்றவர்கள்பிறந்தகதை
 பேசலுற்றும்."

இக்கவியினுல், இந்தப்புராணம் சாலிவாகன சகாப்தம் 1576க்கும், கிறிஸ்தாண்டு 1654க்குஞ் சரியான கொல்லாண்டு 829ல் எழுதப்பட்டதென்றும், வடுகர்களால் தமிழரசர்களுடைய அரசாட்சி அழிக்கப்பட ஏதுவாயிருக்கிறகாலத்தில் எழுதப்பட்டதென்றும், அந்தக்காலத்தில் 'சான்றோர்' குலத்தவர்கள் 'சாணர்' என்றல்ல 'சான்றவர்' எனப் பெயர்பெற்றிருந்தார்களென்றும், அக்காலத்திற்குப்பிறகு எதிரிகளால் அந்த அப்பட்டமானபெயர் மருஉமொழியாகச் 'சாணர்' எனக் கூறப்பட்டு மயக்குமொழியாயிற்றென்றுந் தெரியவருகிறது.

ஆனதால், சான்றோர்குலத்தவர்கள் மேற்படி எதிரிகளையிட்டுத் தங்கள் குலத்திற்கு மருஉமொழியாகவும், தங்கள் குலத்துப் பூர்வவுண்மை துலங்காதபடிக்கு மறைவுமொழியாகவும் வந்து வழங்கியிருக்கின்ற 'சாணர்' என்னும் பெயருக்கு, தங்கள் குலத்துக்குரிய அப்பட்டமான பூர்வ சிறந்த பெயர்கள் 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்று இந்த நூலிலும் பிறநூல்களிலுங் கூறியிருக்கிறபடியே வருமென்று, எக்குலத்தவர்களையும் ஒரு கண்ணுல்பார்த்து, அந்தந்தக் குலத்துக்குரிய ஆசார ஒழுக்கவழக்கங்களை அழிக்காது பாதுகாத்துவருகின்ற அங்கிலேயர் அரசுசெலுத்தும் இச்சுயாதீன அரசாட்சியின் காலத்தில் அறிந்துகொள்வதுமல்லாமல், தங்கள் பூர்வ ஆசார ஒழுக்கவழக்கங்களில் தேற்சியடையவும், தங்கள்குலத்து இளைஞர்கள் கல்வி விருத்தி யடையுதற்

கேற்ற பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிப்பதற்கு வேண்டிய பொக்கிஷங்கள் சேர்க்க நியாயமான ஏற்பாடுகள் நாட்டுக்கு நாடு செய்யவும், ஒருமித்து முயல்வது இன்றியமையாத காரியமென உணர்ந்துசாக்கிரதை கொள்ளவேண்டியது அக்குலத்தவர்களது கடமையாகின்றது.

(ii) மேற்படிபுராணம், நாட்டுப்படலம், 13 - வது கவி :

" இன்னதன்மைய பல்வளமெய்திட
மன்னுசீருறு சான்றவர்வாழ்வுறும்
கன்னல்சேர்வயல் சூழ்மணிக்கங்கையாம்
நன்னலம்புனை நாட்டியல்கூறுவாம்."

இந்தக்கவியால், சான்றவர்குலத்தவர்கள் தமிழ்நாட்டிற் செங்கோலோச்சிய சத்திரியர்களாகிய அரசர்குலத்தவர்கள் எனத் தெளிவாக விளங்குகின்றது.

'கங்கை' என்பது எந்த திவ்விய நதிக்கும் பொதுப்பெயராகவும், வடநாட்டில் சிறந்து விளங்குகின்ற கங்காநதிக்கும், தென்நாட்டில் புகழ்பெற்றிருக்கின்ற கோதாவிரி நதிக்கும் சிறப்புப்பெயராகவும் பூர்வ சமஸ்கிருத நூல்களில் வந்து வழங்குகிறது. ஆனதினாலே பூர்வத்தில் துறவறவாசிகளாகிய முனிவர்கள் கங்காநதியையும் கோதாவிரி நதியையும் ஏகநதிகளாக மதித்து இவ்விருநதிகளின் சலத்தையும் ஒன்று போல யாதொரு வித்தியாசமுமின்றி மதித்து அனுபோகத்திற்குள்ளாக்கி உபயோகப்படுத்தி வந்தனர்.

இந்த முகாந்திரத்தையிட்டே நாளதும் வட இந்தியா நாடுகளினின்று மகாசிறந்த ஆலயங்களையுடைய தென்னிந்தியா நாடுகளுக்குத்தலயாத்திரை செய்யப்புறப்பட்டுவருகின்றயோகிகள் கங்காசலக்குப்பி எனப் பெயர்கொண்ட மேருக்குப்பிகளில் கங்காநதியின் சலத்தை நிரப்பிக் காவடிகளில் வைத்துத் தோள்மீதெடுத்து இராமேசுரம் நோக்கிப் புறப்பட்டு வருகையில், கோதாவிரி நதித்தீரத்திற்கு வருகிறதற்குள்ளாக மேற்படி குப்பிகளிலடைத்திருந்த சலம் உஷ்ணத்தால் ஆவியாக எழும்ப, மேற்படி குப்பிகளின் சலம் வற்றிக் குறைந்துபோ

இறபடியால், கோதாவிரி நதிசலத்தால் மேற்படி குப்பிகளை நிரப்பிக்கொண்டு இராமேசுரம் நோக்கிப் பிரயாணப்படுவது வழக்கம். ஆனதால், கங்காநதிச் சலமும், கோதாவிரிநதிச் சலமும் ஒருதன்மையுடையவைகளாக இந்துக்களால் மதிக்சப்பட்டு வருகின்றன. ஆகவே கோதாவிரி நதிக்கு 'கங்கா கோதாவிரி' எனப் பெயர் வந்திருக்கின்றது.

'காமல்'* என்றுபெயர்பெறும் ஓர் வித்வான் எழுதுவது :

"Under the name of the Ganges, either the Ganges proper, or the Godavery, may occasionally be understood. In the Peninsula, each of these rivers is known by the name of the Gunga, and they are looked upon as sister streams. The Godavery is here considered the elder of the two, perhaps from its being the first known to the inhabitants of these regions; and the Ganges proper is deemed the more holy, apparently from the present religion of India, having originated, or been more early established, on its banks. The ancient books of the Hindoos, indeed, bear testimony that even in the most remote times, these two rivers have occasionally been considered as one; for, in more than one place in the Puranas (such as the Vayu Purana, the Brahmanda Purana, &c.), the Ganges proper is described as passing through Calinga, a country which we know to be the region watered by the Godavery. So far, therefore, as regards the course of the Ganges through Calinga, described in these ancient books, it must be the Godavery to which they allude.—*See Asiatic Researches, Vol. III, article 3rd.*

In a foot-note the same author states as follows :—

"So intimate is the connection between these two rivers, that those who carry the sacred water of the Ganges to

* Vide A. D. Campbell's Telugu Grammar, Introduction, p. v.

the south of India, when they arrive on the banks of the Godavery, invariably replace the water of the Ganges, evaporated on the journey, by water taken from its sister stream the Godavery. The whole is notwithstanding considered to be the pure water of the Ganges, and this ceremony is never omitted. If it were, it is believed, and perhaps with reason, that the water would disappear before it could reach Rameswaram."

திருநெல்வேலித்தலப்புராணம், தாம்பிரபன்னிச்சருக்கம், 16-வது கவி:

"தன்னதியாந்தமிழ்ப்பொருநை நதியுடனேகாவேரி
நதியுஞானந்
தன்னையருடென்கங்கை தானுகுநடுநிலைய
தானகங்கை
மின்னுதுங்கபத்திரையுங் கிருட்டிணவேணியுங்
கோதாவிரியுமாகு
முன்னுபகீரதியமுனை யுத்தரகங்காநதியென்
றுரைப்பர்மேலோர்."

இந்தக் கவியில் தென்னாட்டிலிருக்கின்ற பொருநைநதிக்குங் காவேரிநதிக்கும் தென்கங்கையென்றும், துங்கபத்திரை நதிக்கும் கிருட்டிணவேணிநதிக்கும் கோதாவிரிநதிக்கும் நடுநிலைக் கங்கையென்றும், பகீரதி நதிக்கும் யமுனை நதிக்கும் உத்தரகங்கை என்றும் பெயர்கள் வருகின்றன எனக் கூறியிருக்கின்றது.

ஆனதால், மேற்கூறிய கவியிற் சொல்லியிருக்கிற "கங்கை" என்பது மேற்படி நாட்டிலிருக்கின்ற திவ்விய நதிகளைக்குறிக்கிறது.

(iii) சான்றோர்புராணம், பகீரதிப்படலம், 14-வது கவி:

"ஏர்மேவு மிலங்கையர் வேந்தரென
சீர்மேவு செகந்தனில் வாழ்வுபெறுந்
தார்மேவிய சான்றவர் தம்புகழ்போற்
பார்மீது பரந்தது பானிலவே."

இங்ஙனம், 'இந்தத் தமிழ்நாட்டில் பூர்வத்தில் அரசபுரிந்த சான்றவர் குலத்தவர்கள் ஒரு காலத்தில் இலங்கையையுஞ் செயித்து, அதைத் தங்கள் செங்கோலுக்குள்ளமைத்து ஆண்டுவந்த காலத்தில், அவர்கள் 'இலங்கைவேந்தர்' எனவும், 'இலங்காபுரிமன்னர்' எனவும் பட்டப்பெயர்கள் பெற்று வாழ்ந்து வந்தனர் என்றும், இந்தச் சான்றவர்குலத்தவர்களுடைய கீர்த்தியானது பூலோகத்தில் எவ்வாறு பரவிற்றோ அவ்வாறு சந்திரனுனது உதயமாகிப் பால்போன்ற தன் வெண்ணிறக்கிரணங்களை ஆகாயமண்டலமெங்ஙனும் பரப்பிற்று எனக் கூறியிருக்கின்றது.

(iv) மேற்படி புராணம், தாருகன்வதைப்படலம், 145-வது கவி :

"வெய்யகூர்ங்கணை யையிரண்டாயிரம் விடுத்தா,
னையன்மேனியை யகன்றபுண்ணுக்கின னசுரன்,
வையமாளுடை சான்றவர்க் கரசனுமலர்ந்த
செய்யபூச்சொரிமுருக்குயர் வரையெனச்சிறந்தான்."

இந்தக் கவியில், சான்றவர் குலத்தரசர்கள் எழுவரில் ஒருவனுன திலகபாண்டியனுகிறவன் அக்கினியக்கன் என்கிற அசுரனோடு எதிர்த்துப் போர்புரிகையில், மேற்படி அசுரனுனவன் பாணப்பிரயோகத்தால் மேற்படி திலகபாண்டியனுடைய உடலைத்துளைத்து ரணமாக்க, அந்தரணங்களினின்றொழுகிய உதிரமானது அவனுடைய உடலைச் செந்நிறம் பெறச் செய்ததால், தமிழ்ப்பூமியை யாண்டுவந்த சான்றவர்க்கரசனுகிய திலகபாண்டியன் அந்த அசுரன் முன்பு மிகு பராக்கிரமத்துடன் போர்செய்து, செந்நிறமலர்களால் இலங்குகின்ற முருக்கம் மரம்போல உயர்ந்த செந்நிறமேனியையுடைய பருவதமென நின்றான் என்று கூறியிருக்கின்றது.

இந்தச் செய்யுளில், திலகபாண்டியனுனவன் 'வையமாளுடைய சான்றவர்க்கரசன்' என்னப்பட்டிருக்கிறான்.

(v) மேற்படிபடலம், 159-வது கவி :

"செருக்களத்திலின்றுன்னோடு சிறிதுபோர்செய்யும்
விருப்பத்தால்வந்தெனென்றனன் சான்றவர்வேந்தன்,
நெருப்பினன்னவனினக் கிளையாரொடுநீயு
முருப்பவெங்கணை யொன்றினுக்கிரையெனவுரைத்தான்."

இந்தக்கவியில், அசுரர்களுடைய சேனைகளும், சான்றவர்களுடைய சேனைகளும் இரணக்களம் நிரம்ப அணிவகுத்து நிற்கின்ற வேளையில், சான்றவர்க்கரசனான திலகபாண்டியன் அசுரராஜனைப்பார்த்து, நான் உன்னோடு சற்று போர்செய்து, உன் திறத்தைப் பார்க்கவேண்டுமென்கிற ஆசையினாலே வந்திருக்கிறேனென்று சொல்ல, அசுரராஜன் மேற்படி சான்றவர்க்கரசனை நோக்கி, நல்லது நான் உன்னையும், உன் தம்பிமார்கள் ஆறுபெயர்களையும் என்கரத்திலிருக்கின்ற இந்த ஒரே அம்புக்கு இரையிடவந்திருக்கிறேன் என்று சொன்னான் எனக் கூறியிருக்கின்றது.

இந்தச் செய்யுளிலும், திலகபாண்டியனானவன் 'சான்றவர்வேந்தன்' என்னப்பட்டிருக்கிறான்.

(vi) மேற்படி படலம், 163-வது கவி :

"குதித்தவன்றனையுதைத்தன னுதையுண்டகொடியோன்
மிதித்தனன்புகழ்ச்சான்றவன் றனைமிதியுண்டோன்
அதிர்த்தகைத்தலத்தறைந்தன னடியுண்டவசுரன்
கதித்தசுந்தரன்மார்பிடைப் புடைத்தனன்கரத்தால்."

இக்கவியில், திலகபாண்டியனுக்கிளைய சகோதரனான சுந்தரபாண்டியனோடு அசுரராஜனாகிறவன் தனுப்போர்செய்து, சுந்தரபாண்டியனை வெல்ல முடியாதெனக்கண்டு, தனது இரதத்தினின்று பூமியிற் குதித்தான். அவ்வாறு குதித்தவனை சுந்தரபாண்டியனாகிறவன் ஓடிப்போய்க் காலாலுதைத்தான் அப்படி உதைபட்ட அசுரராஜன் உன்னியெழும்பிச் சுந்தரபாண்டியனை எட்டிமிதித்தான். இவ்வாறு மிதிபட்ட சுந்தரபாண்டியனானவன் விசைகொண்டு அசுரராஜனுடைய இருபுஜங்களிலும் அறைந்தான். அப்படி அறைபட்ட அசுரராஜன்

தன்னிருகரங்களாலுஞ் சுந்தரபாண்டியனுடைய மார்பில் குத்தினன் எனக் கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளிலும், சுந்தரபாண்டியன் 'சான்றவன்' என் னப்பட்டிருக்கிறன்.

(vii) மேற்படி படலம், 172 - வது கவி :

"அன்னகாலையிலெய்தனன் சான்றவர்க்கரசன்
மன்னும்வாளியின்மாயையால் வரவுணர்ந்திலனல்
கன்னலொன்றினிற்சென்றது நிசாசரன்கவித்த
பொன்னின்மவுலியந்தலைகொண்டு விரைவிற்போயதுவால்."

இங்ஙனம், இந்தப்பிரகாரம் இரண்டுபெயர்களும் போர் புரிகையில், சான்றவர்க்கரசனுகிய திலகபாண்டியனனவன் தனது தனுவைவளைத்து அஸ்திரந்தொடுத்து அசுரராஜன் மேல் ஏவினன். ஏவிய அஸ்திரமானது மாயாஸ்திரமான தால், அது அசுரராஜன் கண்ணுக்குத் தோற்றுதகாரணத் தையிட்டு, அந்த அஸ்திரமானது ஒருநொடிப்பொழுதிற் செ ன்று, அந்த அசுரராஜனுடைய ஊட்டியிற்பாய்ந்து, சிரசிற் சூடிய கிரீடத்துடன் சிரசை யறுத்துக்கொண்டு போய்விட்டது எனக் கூறியிருக்கின்றது.

இச்செய்யுளிலும், திலகபாண்டியனை 'சான்றவர்க்கரசன்' எனக் கூறியிருக்கின்றது.

(viii) மேற்படி படலம், 180 - வது கவி :

" முண்டகத்தன்வாளிவிஞ்சை முனிமகன்றொடுத்தனன்
முண்டகத்தன்வாளியான் முடித்தனன்நிசாசரன்
விண்டுவத்திரந்தொடுத்து விட்டனனற்சான்றவன்
விண்டுவத்திரத்தினல் விலக்கினன்றயித்தியன்."

இந்தக்கவியில், வித்தியாதரரிஷியெனவும், காந்தமாரிஷி யெனவும் பெயர்கொண்ட சத்திரியரிஷியான சுராபாண்டி யன்புதல்வன் திலகபாண்டியனுகிய சான்றவர்க்கரசன் முன் அரியதவஞ்செய்து பிரமனிடத்திற் பெற்ற திவ்வியாஸ்திரத் தை அசுரன்மேல் ஏவினன். அவன் ஏவிய அஸ்திரத்தை தன்னிடத்திலிருந்த பிரமாஸ்திரத்தால் தடுத்தனன். அது

கண்டு, சான்றவர்க்கரசன் தான் முன் விஷ்ணுவினிடத்தில் பெற்றிருந்த அஸ்திரம் ஒன்றை அசுரன்மேல் எய்தனன். அப்போது, திதிபுத்திரனுகிய அசுரகுலராஜனும் விஷ்ணு தனக்களித்திருந்த மற்றொரு அஸ்திரத்தை ஏவி, அந்த அஸ்திரத்தைத் தடுத்தான் எனக் கூறியிருக்கின்றது.

இந்தச் செய்யுளிலும், திலகபாண்டியனுகிறவன் 'நற்சான்றவன்' எனப் பெயர்பெற்றிருக்கின்றனன்.

(ix) மேற்படி படலம் 187-வது கவி:

"வெட்டினுனுதிரவாளெடுத்துமதி
  தீரன்மேனியில்விழாவணம்
கட்டினுனெடியகேடகங்கொடுநற்
  சான்றவர்க்கரசன்கட்டிதல்
லெட்டுமாதிரமுஞ்சவன்கையி
  லெடுத்தகேடகமிடத்த
தொட்டினுனெடியவாள்விதிர்த்துலகு
  தட்டுமாறிடவதட்டினுன்."

இக்கவியில், அசுரராஜனுனவன் உதிரமொழுகுகின்ற தன் வாளாயுதத்தைக் கையிற்கொண்டு சான்றவர்க்கரசன்மீது சாடி மேற்படி வாளாயுதத்தால் வெட்ட, சான்றவர்க்கரசனுனவன் மேற்படி வெட்டை, தனது கேடகங்கொண்டு தட்டித் தடுத்துவிட்டனன். மேற்படி வெட்டைத் தடுத்தவுடன், மேற்படி சான்றவர்க்கரசன் தனது கேடகத்தை இடதுபுஜத்துடன் அணைத்துக்கட்டிக்கொண்டு, வலக்கரத்தில் வாளாயுதமெடுத்து, நாலட்டமுஞ் சுழற்றிவீசி, அட்டகாசஞ்செய்துகொண்டு, மேற்படி அசுரராஜன்மீது பாய்ந்துசென்றனன் எனக் கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளிலும், திலகபாண்டியன் 'நற்சான்றவன்' எனப் பெயர்பெற்றிருக்கின்றனன்.

(x) சான்றோர்புராணம், கலியாணப்படலம், 16 - வது கவி:

“திரைத்தலம்புகழ் குஞ்சரன் சான்றவர்சிங்க
முரைத்தவாய்மொழி மனக்கொண்டு பாய்ந்தனனுதிரங்
கரைத்தகண்ணினள் விமலையைக்கரந்து போய்ப்புரிசை
நிரைத்தவச்சிரநகரும்பரெய் தினனிலைவான்.”

இந்தக்கவிக்குச் சார்புரை.

நாடுநகர் நீங்கித் துறவறவாசியான காரணத்தால் காந்தமாரிஷியெனப் பெயர்கொண்ட சத்திரியரிஷியான சுராபாண்டியன்புதல்வர்கள் ஏழுபெயர்களும் பிட்டாபுரத்தில் காளிதரிசனை செய்துகொண்டு காந்தவிஞ்சையபுரத்திலிருந்து அரசுபுரிந்து வருகையில், தங்கள் நாடெங்கனும் வசிக்குங் குடிகள் மிருகசில்லறைகளுக்காற்றமாட்டாமல் வந்து முறையிட, காளிகாதேவி வாக்குப்பிரகாரம் குஞ்சரபாண்டியன் முதலான ஏழுபாண்டியர்களும்* வனமிருகங்களால் இடைஞ்சல்பட்ட குடிசனங்களுக்குச் சுகமுண்டாகும்படி தக்ஷணமே இரதகஜதுரகபதாதிகளாகிய சதுரங்கசேனைகளோடு வனவேட்டைகளாடி துஷ்டமிருகசங்காரஞ்செய்து வரும்படியாகப் புறப்பட்டுப்போனார்கள். அந்தப்படி அந்த ஏழுபாண்டியர்களும் அட்டதிக்கெங்கனுஞ் சென்று வேட்டைகளாடிக் கொண்டு வருகையில், விந்தியபருவதத்து வடபாரிசத்தில், ஒருநாள் நடுமதியத்தில் ஒருசோலையிலிறங்கித் தகையாறிக் கொண்டிருந்தார்கள். அவ்விடத்திற்குச் சமீபத்திலிருந்த வயிரைமாநகரத்திற் செங்கோற்செலுத்திய விஞ்சயன் என்கிற அரசனை வச்சிராபுரத்திலிருந்த அசுரராசன் விகடனென்பான் இராக்காலத்தில் ஒளிப்பாய்வந்து சங்காரஞ்செய்துபோட்டு, அந்த விஞ்சயவரசனின் பத்தினியாகிய விமலையைச் சிறையெடுத்துக்கொண்டு போய்விட்டான். அந்த விமலைக்கு ஏழு புத்திரிகளிருந்தார்கள். அவ்வேழுகன்னிகைகளும், தங்கள்

* பிராமியபுராணம், பிரமோத்திரகாண்டத்தில் ஏழு பாண்டியருக்கும் முறையே ‘காந்தவீரன், குலசேகரன், கூட்பாண்டி, உக்கிரதிருட்டி, பரஞ்சோதி, சினம்பலன், கவுண்டலீயன்’ என்று பேரிட்டிருக்கிறது.

பிதாவுக்கு நேரிட்ட வன்கொலையையும், தங்களைப்பெற்ற மாதா அசுரன்கையிற் சிறையாகிப்போனதையுங்கண்டு, ஆருத்துயரத்துள் அமிழ்ந்தினவர்களாய் அரண்மனையை விட்டு வெளியேறி, அசுரன் தங்கள்மாதாவைக்கொண்டுபோன திசைநோக்கி, கோகோவென்றலறி யழுது புலம்ப லுற்றனர். ஸ்திரீசனங்களின் அபயக்குரலோசை கேட்டு, குஞ்சரபாண்டியனென்கிறவன் தன் தம்பிமார்களுக்குள்ளொருவனை சுந்தரபாண்டியனைப்பார்த்து, நீபோய் இந்த அபயச்சத்தத்திற்குக் காரணமறிந்துவா என்று சொல்லி யனுப்பினான். அந்தப்பிரகாரம், சுந்தரபாண்டியனென்கிறவன் புறப்பட்டுப்போய் அந்தக்கன்னியர்கள் ஏழுபெயர்களும் அழுது கொண்டு நிற்பதைக்கண்டு, அவர்களிடத்தில் அதற்குக் காரணம் வினவ, அந்த ஏழுகன்னிகைகளில் இளையவள் நடந்த சங்கதிகள் யாவற்றையும் மேற்படி சுந்தரபாண்டியனுக்கு விபரப்படச்சொன்னாள். அதுகேட்டு, சுந்தரபாண்டியனானவன் தலைது தமயனிடத்திற்கு மாறிவந்து, அந்தக் கன்னிகைகள் சொன்ன சங்கதிகளையெல்லாம் அவனுக்குத் தெரியப்படுத்தினான். அந்தச்சங்கதிகளைக்கேட்டு, குஞ்சரபாண்டியனானவன் மிகவுங் கிலேசித்து, தன் தம்பிமாருள் ஒருவனாகிய சுந்தரவாகு பாண்டியனையழைத்துச் சொல்லுகிறான்: " நீ உடனே புறப்பட்டு, விகடாசுரனிருக்கின்ற வச்சிராபுரத்துக்குப்போய், அவ்விடஞ்சேர்ந்தவுடனே மேற்படி விகடனைநோக்கி, நீ தக்ஷணமே விமலையை விட்டுவிடு, விடாது போவியேயாயின், எங்கள் புஜபலத்தால் உன்னைவென்று விமலையைச் சிறைமீட்போமென்று சொல்லு. விமலையை விட்டுவிட்டானேயாயின் நன்று. விடாதுபோனானேயாயின், போராயுததாரியாய்ப் போருக்கு ஆயத்தப்படச்சொல்லிவிட்டுவா" என்றுசொல்லி, அவனை வச்சிராபுரத்துக்குத் தூதனுப்பினான். அப்படித் தூதனுப்பியபோது நடந்ததை இந்த 16-வது கவி கூறுகின்றது.

இக்கவியில், குஞ்சரபாண்டியன் எனப் பெயர்கொண்ட "சான்றவர் சிங்கமாகிறவன்" கூறிய மேற்படி வாக்குகளைச் சுந்தரவாகுபாண்டியன்கேட்டு மனதிற்கொண்டு, புறப்

பட்டுப்போய் மேற்படி விகடாசுரன் மேற்படி விமலையைக் கொண்டுபோய்ச் சிறைவைத்திருந்த வச்சிரபுரஞ்சேர்ந்தான் எனக் கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளிலும், குஞ்சரபாண்டியனுக்குச் 'சான்றவர் சிங்கம்' எனப் பெயர்வந்திருக்கிறது.

(xi) மேற்படி புராணம், சம்பரன்வதைப்படலம், 20-வது கவி :

"கொலைகடிய வாளுருவிக் குதித்துவருதானவனை
யலைதடியும் வண்ணமெனவணிதோளைத்தடிந்தனனற்
றலைதடிகூர்வாளியினாற் றலைதடிந்தான் சான்றவனு
மலைதடியத்தரைவீழ்ந்த வண்ணமெனத்தலைவீழ்ந்த."

இங்ஙனம், சம்பராசுரன்மகன் பூகம்பனென்கிறவன் தன்வாளாயுதத்தை உறையினின்றுருவிச் சுழற்றி வீசிக் குதித்துக் கொண்டு வருகிறதைச் சான்றவர்வேந்தன் கண்டு, வாள்வீசிக்கொண்டு, அவனுக்கு எதிராகச்சென்று, தன் வாளாயுதத்தால் பூகம்பனுடைய இருபுஜங்களையுங் கொய்ததுமன்றி, தனுவை நாணேற்றிட்டு பாணப்பிரயோகஞ்செய்து, ஒருபாணத்தினால் மேற்படி அசுரனுடைய சிரசை யறுத்து விட்டனன். அப்போது மலையிடிந்து பூமியின்மீது விழுவதுபோல, பூகம்பனுடைய சிரசானது தரைமீது வீழ்ந்தது எனக் கூறியிருக்கின்றது.

இந்தக்கவியிலும், மேற்படி பாண்டியர்களில் ஒருவன் 'சான்றவன்' என்னப்பட்டிருக்கிறான்.

(xii) சான்றோர்புராணம், திருக்காஞ்சிப்படலம், 50-வது கவி :

"கொல்லுங்களிற்றுக் கல்வியாணர் கோமான்
றவிரமாநகரத்
தெல்லுண்டிலகு செம்மணிப்பூணிளைஞர்
சேரவுட்பட்டா
ரல்லும்பகலு நெடுங்காமக் கடலினமிழ்ந்த
செயல்கேட்டான்
வில்லுஞ்சமரான் சான்றவர்கோன் மின்னார்
தம்மைவரவழைத்தான்."

இந்தக்கவியில், கல்லியாணன்நாட்டுக்குச் 'சான்றவர்வேந்தன்' படையெடுத்துப்போனபோது, மேற்படி எதிரிகளை ஸ்திரீகள்விஷயத்தில் மயக்கிச் செயிக்க உபாயஞ்செய்தான் என்று சொல்லியிருக்கின்றது.

இச்செய்யுளிலும், மேற்படி பாண்டியர்களில் ஒருவன் 'சான்றவர்கோன்' என்னப்பட்டிருக்கிறான்.

(xiii) மேற்படி திருக்காஞ்சிப்படலம், 57-வது கவி:

"இறக்கும்படையினுடன் சென்றுனிகல்சேர்புரிசை
நெடுவாயிற்
றிறக்கும்வயவர்தமைத்தறித்தான் சேனைத்
திரளையுள்விடுத்தா
னறக்கண்ணில்லா நகரனைத்து மழிக்கவென்றான்
சான்றவர்கோன்
மறக்கணரசன்றனைச்சூழ்ந்தான் மடியுங்காலந்
தடையென்றே."

இக்கவியில், மேலேகூறிய உபாயம்போல சான்றவர்க்கரசன் காரியத்தை முடித்தான், நகரம்பிடிபட்டது, எதிரிகள் சங்காரமானார்கள் என்று கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளிலும், மேற்படி பாண்டியர்களிலொருவன் 'சான்றவர்கோன்' என்னப்பட்டிருக்கிறான்.

(xiv) மேற்படி திருக்காஞ்சிப் படலம், 60-வது கவி:

"கள்ளார்கமலத்திருமுகத்தான் காளிவளர்த்த
சான்றவர்கோ
னள்ளார்நாகேசரிதன்னை நன்மைபுகன்று
மனமகிழ்ந்து
மன்னார்வயல்சூழ் காஞ்சிநகர் வாழுமாக்களெதிர்
கொள்ளத்
தள்ளாவளவன் கல்லியாணன்றனையுமுடன்
கொண்டேகினனால்."

இந்தக்கவியில், சான்றவர்வேந்தன் மேற்படி கல்லியாணனுடைய நகரத்தையும் நாட்டையுங் கட்டிக்கொண்டான் என்

றும், மேற்படி நகரத்தைக் கைவசப்படுத்துதற்குத் தனக்குத் துணைசெய்த நாகேசரிக்கு வேண்டுமான திரவியங்கள் கொடுத்தான் என்றும், மேற்படி சோழராசனுடைய கல்வியாணனை யுங் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு, தனது நகரமாகிய காஞ்சிபுரத்துக்கு மாறிவரும்போது, காஞ்சிநகரத்துக் குடிசனங்களனைவோரும் அவர்களுக்கு எதிர்கொண்டுபோய் மிகுந்த சிறப்புகள்செய்து அழைத்து வந்தனர் என்றுங் கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளிலும், மேற்படி பாண்டியர்களிலொருவன் 'சான்றவர்கோன்' என்னப்பட்டிருக்கிறான்.

(xv) சான்றோர்புராணம், இளவரசுகாத்தபடலம், 20-வது கவி:

"வருகவென்னலுஞ்சான்றவன் வந்தனன்
தருகவென்றுணைத்தம்பியை யென்றனன்
கருதுமன்னன் கருத்துணர்ந்தான்பண்டை
யுருவிரண்டுயிரொன்றெனுந் தம்பியை."

இந்தக்கவிக்குச் சார்புரை.

மேலேகூறிய பாண்டியர்களிலொருவனை சான்றவர்வேந்தனுகிறவன் மேற்படி காஞ்சிபுரத்தில் வெற்றிவேந்தனாய்த் தன் கிளைப்பிரிவாருடன் அரசுபுரிந்துவருகையில், தழைத்துப் பெருகி தமிழ்நாட்டு அரசர்குலத்துப் பற்பல கிளைப்பிரிவார்களோடு சம்பந்தங்கலந்து தமிழ்நாட்டைத் தங்கள்குலத்தவர்களால் நிரப்பினார்கள். அப்படியிருந்து வாழ்ந்து வருகிற நாளையிலே, அவர்களிற் சிலர் சோழனுக்குள் சேனைத்தலைவர்களாகிப் பதினெண்வகைப் போராயுதவித்தைகளில் வல்லவர்களானார்கள். அப்படியிருக்கும்போது, ஒருநாள் சோழன் தன்சேனைகளோடு வனத்தில் வேட்டையாடுதற்குப் போயினன். அவன் போனபிறகு, அரசன்தேவியானவள் தன் நாயகனுடன்பிறந்த இளையராஜன்மீது மோகமுற்றவளாய் ஒருநாளிரவில் தன் தோழிப்பெண்களிலொருத்தியை மேற்படி இளையராஜனிடத்திற்குத் தூதனுப்பினாள். தூதியான

வள் போய் இளையமன்னன்காதில் அந்தச்செய்தியைச் சொன்னாள். அதுகேட்டவுடன், இளையராஜன்

"பாயுஞ்சோரிப்பசும்புண்ணிற்றீயினூற்
காயுநெய்யுகுத்தாலெனக் கண்டனன்
தீயவாய்மொழிகேட்டலுந்திக்கென
மேயதன்செவிபொத்தினன் மேன்மையான்."

உதிரமொழுகிக்கொண்டிருக்கின்ற இரணத்தில் அடுப்பிலே கொதித்துக்காய்கின்ற நெய்யை விட்டால் எத்தன்மையாயிருக்குமோ அத்தன்மையாகத் தூதிசொல்லிய வார்த்தைகளைக் காதிற் கேட்டுணர்ந்தவனாய், உடனே தன்னிருசெவிகளையும் பொத்திக்கொண்டு, தூதியைப்பார்த்து, 'நீ சிறுபெண்ணானமையால் தப்பினாய், இல்லையாயின், என் மந்திரவாளுக்குன்னை இரையிடுவேன், ஓடித் தப்பி யுயிர்பிழை' என்றனன். இந்த வசனங்கேட்டு, அந்தத் தூதியானவள் அரசன்தேவியினிடத்திற்கு மாறிப்போய் நடந்தகாரியங்களைத் தெரியப்படுத்தினாள். இந்தச் செய்தியைக் கேட்டமாத்திரத்தில், மன்னன்தேவியாகிறவள் தன்கைகளில் தரித்திருந்த வளையல்களைத்தட்டி யுடைத்து, உடைந்ததுண்டுகள்கொண்டு தேகமடங்கலுங் கீறிக்கிழித்துக்கொண்டு, தூசியிற்புரண்டுருண்டுகொண்டு, இளையமன்னன்மீது மிகைசொல்லி அரசன் வந்தவுடன் அவன்உடலினை இருதுண்டமாக்குவிப்பேனென்று சொல்லிக்கொண்டனள். வேட்டைநாட்டத்திற் சென்ற அரசன் மாறிவந்தவுடன், நினைத்த கருமம் முடிப்பதற்கு இளையமன்னன்மீது படுபழி சுமத்தலுற்றாள். தக்ஷணமே அரசனானவன் அவள்வாய்மொழியை நிசமென நம்பிக்கொண்டு, அவள்கருத்துக்கிசைந்து தன் உடன்பிறந்த தம்பியைக் கொல்லுதற்கு எண்ணம்வைத்து, மேலே கூறிய 20-வது கவியிற் கூறியிருக்கிற பிரகாரம் உரைக்கலுற்றனன்.

அந்த 20-வது கவியில், இவ்வாறு சினங்கொண்ட மன்னனானவன் சான்றவர்குலத்திலகனை அழைத்து, நீ போய் என் தம்பியைக் கூட்டிவா என்றான். அந்தப்படி அவன் இளையமன்னனைக்கூட்டிவந்து அரசன் முன்னே நிறுத்தினான் எனக் கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளிலும், மேற்கூறிய பாண்டியர்குலத்தவன் 'சான்றவன்' எனப் பெயர்பெற்றிருக்கின்றனன்.

(xvi) மேற்படி இளவரசுகாத்தபடலம், 32-வது கவி :

" அச்சொலையுணர்ந்திளங்கோவுமனமாற நல்லறிவுள்ள
சான்றவர்க்குண்
மிச்சமுளவன்வருட முந்நான்குசென்றவுடன்மிக்க
கூத்தரையழைத்தா
னிச்சையுளவிளவரசு நாடகமியற்றிநிலமெங்கு
மாடுகவென்றனன்,
கச்சமில்லாத நாடெங்கு மந்நாடகங்கற்றவர்க
ளாடலுற்றார்."

இக்கவியில், அரசனானவன் இளையமன்னனை வனத்திற் கொண்டுபோய் வெட்டி உதிரக்குறிகாட்டும்படியாக மேற்படி சான்றவர்குலத்திலகனுக்குக் கட்டளைசெய்தான், அவன் இளையமன்னனைக் கூட்டிக்கொண்டுபோய், உயிர்வதை செய்யாமல் மறைவாய்வைத்துவிட்டு, ஒரு மிருகத்தையடித்து உதிரக்குறிகாட்டினான். இளவரசனை பன்னிரண்டு வருடம் ஒளிப்பாய் வைத்திருந்தபிறகு, சான்றவர்குலத்திலகனானவன் நாடகமாடுகின்ற கூத்தர்களை வரவழைத்து, இந்த இளயமன்னனுடைய கதையை பெயர்மாற்றாட்டஞ் செய்தமைத்து, இளவரசுநாடகமொன்றுகட்டி நாடெங்குமாடிவரும்படியாகத்திட்டஞ்செய்தனன் எனக் கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளிலும், மேற்படி பாண்டியர்குலத்தவர்களுக்குச் 'சான்றவர்' எனப் பெயர் வந்திருக்கிறது.

(xvii) சான்றோர்புராணம், மாரிபெட்வித்தபடலம்,
6-வது கவி :

" என்னான்முதற்கற்புடையோரைத்
தேர்வதியலாதியன்றிடினு
முன்னாட்பயின்ற பழிமுன்னிமொழியார்
வணிகரெனைவேண்டி
நின்னாலியல்வதெனவுரைத்தானேரி வெற்பன்
சான்றவனுஞ்
செந்நூல்புனையுந்திருமார்பிற் சிறியமறையின்
வடிவெடுத்தான்."

இந்தக்கவியில், சோழராசன் காவிரிப்பூம்பட்டணத்துச் செட்டிகள்குலத்துப்பெண்ணைச் சிறையெடுத்த பாதகத்தால், சோழநாட்டில் நெடுநாள் மழையில்லாமல் நாடழிகிறதை மேற்படி சோழராசன்கண்டு மிகு துயரமுற்றவனாய், நாடு நீங்கி வனம்புகக்கருதியிருக்கிறவேளையில், சான்றவர்குல வேந்தர்களிலொருவனான மானதீரபாண்டியன் மேற்படி சோழராசனிடத்திற்கு வந்து, 'நீர் நாடுவிட்டு வனம்போக நினைத்திருக்குஞ் செய்கை எவரும் நகைக்கத்தக்க செய்கையாம், நீர் அப்படிச்செய்யலாகாது. செட்டிக்குலத்துப் பெண்ணைக் கற்பழிக்கத்துணிந்த காரணத்தால் மழையில்லாது போயிற்று. மேற்படி வணிகர் குலத்துக் கற்புடைய மங்கையொருத்தி வாக்கால் மழைபெய்விக்கிறேன்' என்றுசொல்லி, அரசனை வனத்துக்குப்போகவிடாது நிறுத்தி, அதற்கு வேண்டிய பிரயத்தனங்கள் செய்தான் எனக் கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளிலும், மானதீரபாண்டியன் காஞ்சிநகரத்தில் அரசபுரிந்த காரணத்தையிட்டு 'நேரிவேற்பன் சான்றவன்' என்னப்பட்டிருக்கிறான்.

அதுவுமன்றி இந்தக்கவியில், மானதீரபாண்டியன் 'செந்நூல்புனையுந்திருமார்பன்' என்னப்பட்டிருக்கின்றமையால், சான்றவர்குலத்தவர்கள் பூர்வகாலத்தில் பூணூல் தரித்திருந்தது விளங்குகின்றது.

மேலே எடுத்துக்கூறிய மேற்கோள்களை உய்த்தாராய்ந்து பார்ப்பவர்களுக்கு மேற்படி சுராபாண்டியன் வமிசத்தவர்கள் 'சான்றவர்கள்' என்னப்பட்டிருக்கின்றமையால், சான்றவர்குலஞ் சத்திரியகுலமென்பது நன்றாய்த் தெரியவருகிறது.

மேற்படி சான்றவர்குலத்தவர்களுக்குச் சான்றார்குலத்தவர்கள் எனவும் பெயர்வருகின்றதென்று இனிக் காட்டுவோம்.

II. சுராபாண்டியன் வமிசத்தாருக்குச் 'சான்றார்' எனவும் நூல்களிற் பெயர் வந்திருப்பதற்கு ருசுக்களை இங்ஙனங் கூறுவோம்.

(i) சான்றோர்புராணம், தாருகன்வதைப்படலம், 132-வது கவி :

" குதைவெங்கதையிநெடுந்தூணி துணியக்கொடு
வெங்கணையின்றித்
தகையும்புயத்தார்தானவர்கள் சாடுங்காலைத்
தம்மார்பிற்
புதையுங்கணைக்கைகொடுபிடுங்கிப் புனைகார்முகத்திற்
றொடுத்தெய்ய
வதையுண்டனர்தானவர்க்கரசர் சான்றாரிருவர்
மனங்களிப்ப."

இந்தக்கவியில், சான்றோர்குலத்திலகரிருவர் அசுரராசனோடு போர்புரிகையில், தன்னிடத்தில் அஸ்திரங்களில்லாது மயங்கிப்போய் நிற்கையில், அசுராள் தங்கள்மீது சாடிவருகிறதைப்பார்த்து, தங்கள் மார்புகளிற் புதைந்திருந்த அஸ்திரங்களைப்பிடுங்கி வில்லில்தொடுத்தெய்து எதிரிகளைச் சங்காரஞ் செய்து மனங்களித்தனர் எனக் கூறியிருக்கின்றது.

இச்செய்யுளில், சுராபாண்டியன்குலத்தவர்களுக்குச் 'சான்றார்' எனவும் பெயர்வந்திருக்கிறது.

ஆனதால் 'சான்றவர்குலம், சான்றார்குலம்' என்னும் பெயர்கள், ஒருபொருட்பெயர்களாம்.

(ii) மேற்படி புராணம், சம்பரன்வதைப்படலம், 25-வது கவி :

" மைந்துடையதன்றுணையு மணிச்சான்றார்
கடற்படையுஞ்
சிந்தைதளர்ந்துயிர்போனார்திரள்சங்கின்
முழக்கத்தா
னொந்தனர்வானவர்மதன னொடிவரையிற்
றனைபொற்றாள்
புந்திநினைந்தனன்வந்து புறப்பட்டான்
செழுந்தவத்தோன்."

இந்தக்கவியில், பூகம்பன்புத்திரன் மதனனுகிறவன் சான்ருர்குலத்தவர்கள் கையால் தன்பிதா மடிந்ததுகண்டு, செருக்களத்திற்புகுந்து, அவர்களுடன் எதிர்த்துப் போர்புரிந்தானெனக் கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளிலும், மேற்படி சுராபாண்டியன்குலத்தவர்கள் 'சான்ருர்' எனவும் பெயர்பெற்றிருக்கின்றனர்.

(iii) சான்ருேர்புராணம், திருக்காஞ்சிப்படலம், 13-வது கவி :

"பாகம்வகிர்ந்தான் பெண்ணெருத்தி பாகன்மகிழ்ந்து மழைவிடைமேல்
மாகம்பொலியத்தோன்றினன் மகிழ்ந்தான் சான்ருர்குலதிலக
னகம்புளகமுறப்பாடியாடியமுதான் கலிகொடுத்த
வேகம்படைத்தோனிதிபெற்ருலென்ன மிகவுங்களித்தனனல்."

இக்கவியில், காந்த விஞ்சயநகரத்தில் சுராபாண்டியன் வமிசத்தவர்கள் பெருகி, அந்நாட்டையாண்டுவருகையில், அவர்களுக்குள்ளே சித்திரதரபாண்டியனும் அவனைச்சேர்ந்தவர்களுங் காஞ்சிபுரத்துக்குவந்து, அவ்விடத்தில் பரமசிவனைநோக்கித் தவஞ்செய்தார்களென்றும், பரமசிவன் அவர்களுக்குத் தரிசனையானரென்றும், அதுகண்டு அவர்களெல்லாரும் ஆனந்தசந்தோஷமடைந்தவர்களாய், புதையல் கண்டெடுத்த தரித்திரன் மகிழும் வண்ணம் மகிழ்ந்தார்களென்றுங் கூறியிருக்கிறது.

இந்தச்செய்யுளிலும், மேற்படி சித்திரதரபாண்டியனுகிறவன் 'சான்ருர்குலதிலகன்' என்னப்பட்டிருக்கிருன்.

(iv) சான்ருேர்புராணம், பொன்னியணைப்படலம், 54-வது கவி :

"கேட்டகரிகாலன்கிலேசித்துத் தன்னினைவில்
நாட்டுந்தொழிற்குநவையோர்ந் திருப்பரென்று
வாட்டுநெறிமுறையுடையோன் மகரன்மொழி
கூட்டுமுயர்சான்ருர் கொலையொன்றுளதென்ருன்."

இந்தக்கவியில், கரிகாலசோழன் நாளையில், சித்திரதரபாண்டியன்* புத்திரர்களில் இரண்டுபேர், காவிரிநதிக்கு உடைப்படைக்குங்காலத்தில், கூடைதொட்டு மண்ணெடோமென்று சொன்னகாரணத்தையிட்டு, தலைவெட்டுண்டும், மதயானையின்காலால் இடறுண்டும், வன்கொலையாகி மடிந்து போனார்கள். இவ்விருபழியினிமித்தஞ் சோழன் பூமியில் ஆறுவருடம் மழைகுன்றிப்போனகாரணத்தை விசாரித்ததில், மகரன்மூலமாய் மேற்படி பாண்டியர்குலத்துச் சான்றார்கள் இரண்டுபெயருடைய பழியினிமித்தம் வந்த பஞ்சமெனச் சோழன் அறிந்துகொண்டானென்று சொல்லியிருக்கின்றது.

இச்செய்யுளிலும், மேற்படி சுராபாண்டியன்குலத்தவர்களுக்கு 'சான்றார்' எனப் பெயர்வந்திருக்கின்றது.

(ர) மேற்படி புராணம், பொன்னியணைப்படலம், 63-வது கவி :

" மீன்றமூலகின்மகரனும் பெயர்வேண்டுமென்றான்,
தோன்றாதுசெய்தபிழை பொறுமென்றேதொழுதான்,
வான்றோய்புகழான் வளவனுடுசொல்புற்ற
சான்றாண்மையென்னும் பெயர்தானுங் கொடுத்தனனல்."

இந்தக்கவியில் 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் பெயர்களினுற்பத்திக்கு மூலபதம் இன்னதென்பதும், அந்த மூலபதத்தினின்று சித்திரதரபாண்டியனுடைய குலத்தவர்களுக்குப் பாணித்தளித்த கௌரவப்பட்டப்பெயர் இன்னதென்பதுந் தெளிவுறக்கூறப்பட்டிருக்கிறது.

இதை இங்ஙனஞ் சற்றுவிபரப்பட எடுத்துக்காட்டுவோம்.

பூர்வகாலத்தில் உயிரினுமேன்மை குலமேன்மையென நினைத்துப் பூலோகத்தில் புகழைநாட்டிய சித்திரதரபாண்டியன் வமிசத்தவர்களுக்கு நெடுகிலுங் கீர்த்திபெற வழங்கிவ

---

* 'சினம்பலபாண்டியன்' என்று சுராபாண்டியபுராணத்தில் கூறியிருக்கிறது.

ரும்படியாக ஒரு சிறந்த கௌரவப்பட்டப்பெயர் கொடுக்க வேண்டுமென்று மகரன் என்பவன் கரிகாலசோழனது சபா மண்டபத்திற்கூடிய மகாநாட்டுச் சபையார்களுக்கு முன்பாக வணங்கிச்சொல்ல, இராசசபையார்கள் அதற்குச் சம்மதித்து, கரிகாலசோழன் சமூகத்தில் 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் ஒருபொருள்கொண்ட மூன்று கௌரவப் பட்டப்பெயர்களைப்பாணித்து, சித்திரதரபாண்டியன் வமிசத்தவர்கள் இதுமுதல் சூரியான் சந்திராளுள்ளவரையிலும் பூலோகத்தில் 'சான்றவர், சான்றார், சான்றோர்' எனச் சிறந்து விளங்கிவரும்படியாக கௌரவப்பட்டப்பெயர் தரித்தனர்.

நற்குணநற்செய்கைகள், புஜபலபராக்கிரமங்கள், ஆள்வினைத்திறங்கள், பதினெட்டாயுதவித்தைத்திறங்கள் முதலானவைகளினிமித்தமாக இந்தக்கௌரவப்பட்டப்பெயர் ஆதியில் இக்குலத்தவர்களுக்குக் கொடுக்கப்பட்டது.

கரிகாலசோழன்நாட்களுக்குமுன்னே 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும்பெயர்கள் தமிழ்நாடுகளில் வழங்கவில்லை. பிற்காலத்தில் ஈழ சேர சோழபாண்டியர்குலத்தவர்களனைவருக்கும், 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் பெயர்கள் பொதுப்பெயர்களாகிப்போயின. இதற்கு விபரம் இந்தநூலின் பின்பாகத்தில் வரும். இதுநிற்க,

'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் பெயர்களின் உற்பத்தித்தாற்பரியம் இங்ஙனஞ் சற்றுவிபரப்படக் கூறிக்காட்டுவோம்.

மேலேகூறிய 63-வது கவியில், "வான்றோய் புகழால்வளவனெடுசொல்புற்ற சான்றாண்மையென்னும் பெயர்தான் கொடுத்தான்" என்று சொல்லியிருக்கின்றது. இதில் 'வளவன்' என்னும்பெயர் சோழனுக்கு வருகின்ற பெயர்களிலொன்றாம். 'வளவன்' என்னும் பெயருக்கு நீர்வளம், நிலவளம் முதலான நாலாவளங்களும் பொருந்திய சோழநாட்டரசன்என்பது கருத்தாம். சித்திரதரபாண்டியன்குலத்தவர்கள் மிகு கீர்த்திகள் பெற்றிருந்தமையால், வளவனுகிய

சோழனுக்குச் சமமான கீர்த்தியுடையவர்களானார்கள். ஆன தால் அவர்களுக்குச் 'சால்பு நிறைந்த சான்றாண்மை பொரு ந்தியவர்கள்' என இந்த மேன்மை சிறந்த பட்டப்பெயர் தரிப் பிக்கப்பட்டது.

'சால்பு, சான்றாண்மை' என்னும் இரண்டுபதங்களுக்குந் தாற்பரியம் இங்ஙனம் கூறுவோம்.

1. சால்பு. இது 'சால்' என்னும் வினைமுதலடியிற்பிற ந்த தொழிற்பெயர்.

பகுதி. சால், நிகழ். சாலுகிறேன்,
செல். சான்றேன்,
எதிர். சாலுவேன்.

இந்தவினைக்கு மூன்றுகருத்துண்டு:

(i) மிகு. மிகுகிறேன், மிகுந்தேன், மிகுவேன்.
(ii) அமை. அமைகிறேன், அமைந்தேன், அமைவேன்.
(iii) நிறை. நிறைகிறேன், நிறைந்தேன், நிறைவேன்.

'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் மூன்று கௌரவப்பட்டப்பெயர்களும் முக்கியமாக மூன்றாவதுகருத் தாகிய 'நிறை' என்னும் அர்த்தத்தில் வந்துவழங்குகின்றன. ஆனதால்,

சான்றவன் என்பதற்கு நிறைந்தவன் என்றும்,
சான்றான் என்பதற்கு நிறைந்தான் என்றும்,
சான்றோன் என்பதற்கு நிறைந்தோன் என்றும்

அர்த்தமாம்.

தமிழிங்கிலேய அகராதியாசிரியர்கள்,

(iv) சாலுதல் (=நிறைதல்) என்பதற்கு,

(a) To be full என்றும்,
(b) To be great என்றும்,
(c) To be noble, dignified, excellent என்றும்,

அர்த்தம் பண்ணியிருக்கிறார்கள்.

இந்த அர்த்தப்பிரகாரம்,

| | | |
|---|---|---|
| சான்றவன்<br>சான்றான்<br>சான்றோன் | என்பதற்கு | Great-man, பெரியோன் என்றும்,<br>Nobleman, மேன்மகன் என்றும் |

தாற்பரியமாம்.

'சால்பு' என்னும் பதத்துக்கு (a) மேன்மை என்றும்,
(b) பண்பு என்றும்,
(c) ஊக்கம் என்றும்,
(d) மாட்சிமை என்றும்,
(e) கல்வி என்றும்

தாற்பரியமாம்.

இந்த ஐந்து குணங்களும் ஏகமாகப் பொருந்திய குணத்துக்கு 'சால்பு' என்று பெயர்.

மேற்படி 63-வது கவியில், 'சால்புற்ற சான்றாண்மை' என்று சொல்லியிருக்கிறது. ஆனதால்,

'சால்புற்ற சான்றாண்மை' என்பதற்கு, 'மேன்மை, பண்பு, ஊக்கம், மாட்சிமை, கல்வி' இந்த ஐந்து இலக்ஷணங்களையும் ஒருங்கே பொருந்திய 'சான்றாண்மை' என்பது தாற்பரியம்.

'மேன்மை, பண்பு, ஊக்கம், மாட்சிமை, கல்வி' என்னும் இவ்வைந்து இலக்ஷணங்களில்,

(1) மேன்மை என்னுங் குணப்பண்படியிற் பிறந்துவருகின்றபெயர் மேன்மையுடையவன் என்பதாம். 'மேன்மையுடையவன்' என்பதற்கு 'மேலோன், மேன்மகன், அரசர்குலத்தவன், சத்திரியன், Great-man, Nobleman' என்பது கருத்தாம்.

சத்திரியகுலத்தவர்களுக்கு இது இன்றியமையாத இலக்ஷணமாம்.

(2) பண்பு என்னுங் குணப்பண்படியிற் பிறந்துவருகின்றபெயர் (சிறந்தநற்) குணங்களையுடையவன் என்பதாம். சத்திரியர்களுக்கு இதுவும் இன்றியமையாத குணமாகும்.

சோழனுக்குச் சமமான கீர்த்தியுடையவர்களானார்கள். ஆன தால் அவர்களுக்குச் 'சால்பு நிறைந்த சான்றாண்மை பொரு ந்தியவர்கள்' என இந்த மேன்மை சிறந்த பட்டப்பெயர் தரிப் பிக்கப்பட்டது.

'சால்பு, சான்றாண்மை' என்னும் இரண்டுபதங்களுக்குந் தாற்பரியம் இங்ஙனம் கூறுவோம்.

1. சால்பு. இது 'சால்' என்னும் வினைமுதலடியிற்பிற ந்த தொழிற்பெயர்.

பகுதி. சால், நிகழ். சாலுகிறேன்,
செல். சான்றேன்,
எதிர். சாலுவேன்.

இந்தவினைக்கு மூன்றுகருத்துண்டு:

(i) மிகு. மிகுகிறேன், மிகுந்தேன், மிகுவேன்.
(ii) அமை. அமைகிறேன், அமைந்தேன், அமைவேன்,
(iii) நிறை. நிறைகிறேன், நிறைந்தேன், நிறைவேன்.

'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் மூன்று கௌரவப்பட்டப்பெயர்களும் முக்கியமாக மூன்றாவதுகருத் தாகிய 'நிறை' என்னும் அர்த்தத்தில் வந்துவழங்குகின்றன. ஆனதால்,

சான்றவன் என்பதற்கு நிறைந்தவன் என்றும்,
சான்றான் என்பதற்கு நிறைந்தான் என்றும்,
சான்றோன் என்பதற்கு நிறைந்தோன் என்றும்

அர்த்தமாம்.

தமிழிங்கிலேய அகராதியாசிரியர்கள்,

(iv) சாலுதல் (=நிறைதல்) என்பதற்கு,

(a) To be full என்றும்,
(b) To be great என்றும்,
(c) To be noble, dignified, excellent என்றும்,

அர்த்தம் பண்ணியிருக்கிறார்கள்.

இந்த அர்த்தப்பிரகாரம்,

| சான்றவன் <br> சான்ருன் <br> சான்ரோன் | என்பதற்கு | Great-man, பெரியோன் என்றும், <br> Nobleman, மேன்மகன் என்றும் |
|---|---|---|

தாற்பரியமாம்.

'சால்பு' என்னும் பதத்துக்கு
(a) மேன்மை என்றும்,
(b) பண்பு என்றும்,
(c) ஊக்கம் என்றும்,
(d) மாட்சிமை என்றும்,
(e) கல்வி என்றும்

தாற்பரியமாம்.

இந்த ஐந்து குணங்களும் ஏகமாகப் பொருந்திய குணத்துக்கு 'சால்பு' என்று பெயர்.

மேற்படி 63-வது கவியில், 'சால்புற்ற சான்ருண்மை' என்று சொல்லியிருக்கிறது. ஆனதால்,

'சால்புற்ற சான்ருண்மை' என்பதற்கு, 'மேன்மை, பண்பு, ஊக்கம், மாட்சிமை, கல்வி' இந்த ஐந்து இலக்ஷணங்களேயும் ஒருங்கே பொருந்திய 'சான்ருண்மை' என்பது தாற்பரியம்.

'மேன்மை, பண்பு, ஊக்கம், மாட்சிமை, கல்வி' என்னும் இவ்வைந்து இலக்ஷணங்களில்,

(1) மேன்மை என்னுங் குணப்பண்படியிற் பிறந்துவருகின்றபெயர் மேன்மையுடையவன் என்பதாம். 'மேன்மையுடையவன்' என்பதற்கு 'மேலோன், மேன்மகன், அரசர்குலத்தவன், சத்திரியன், Great-man, Nobleman' என்பது கருத்தாம்.

சத்திரியகுலத்தவர்களுக்கு இது இன்றியமையாத இலக்ஷணமாம்.

(2) பண்பு என்னுங் குணப்பண்படியிற் பிறந்துவருகின்றபெயர் (சிறந்தநற்) குணங்களேயுடையவன் என்பதாம். சத்திரியர்களுக்கு இதுவும் இன்றியமையாத குணமாகும்.

ஊக்கம் என்னும் குணப்பண்படியிற் பிறந்துவருகிற பெயர் ஊக்கமுடையோன் என்பதாம் 'ஊக்கமுடையோன்' என்பதற்கு 'புஜபலபராக்கிரமங்களையுடையவன்' என்பது கருத்தாம்.

சத்திரியர்களுக்கு இதுவும் இன்றியமையாத குணமாகும்.

(4) மாட்சிமை என்னும் குணப்பண்படியிற் பிறந்துவருகின்ற பெயர் மாட்சிமையுடையோன் என்பதாம். 'மாட்சிமையுடையோன்' என்பதற்கு '(வாக்கு மாறுதளிக்குங்கொடை) மாட்சியுடையோன்' என்பது கருத்தாம்.

இதுவுஞ் சத்திரியருக்கு இன்றியமையாத குணமாம்.

(5) கல்வி என்னுந் தொழிற்பண்படியிற் பிறந்துவருகின்றபெயர் கல்வியுடையோன் என்பதாம். 'கல்வியுடையோன்' என்பதற்கு 'அறிவுடையோன்' என்பது கருத்தாம்.

இதுவுஞ் சத்திரியகுலத்தவர்களுக்கு இன்றியமையாத குணமாம்.

ஆனதால், 'சால்புற்ற சான்றாண்மை' என்பதற்கு, 'குலமேன்மைகள், நற்குணங்கள், புஜபலபராக்கிரமங்கள், வரையறையில்லாதளிக்கும் நன்கொடைகள், வேதசாஸ்திர இதிகாச அறிவுகள்' ஒருங்கேபொருந்திய 'சான்றாண்மை' என்பது தாற்பரியமாகும்.

இந்தக்குணங்கள் அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்கு இன்றியமையாதகுணங்களென்று பூர்வ தமிழ்நூல்கள் கூகூவெனக் கூவியுரைக்கின்றன. இங்ஙனம் இதற்கு மேற்கோளாக ஒருகவி பேர்த்தெழுதிக் காட்டுவோம்.

(vi) பெருந்தேவனார் பாரதவெண்பா, உத்தியோகப்பருவம், 4-வது கவி:

"வண்மையாற்கல்வியான் மாபலத்தாலாள்வினையால்
உண்மையாற்பாராளுரிமையால்-திண்மையால்
தேர்வேந்தர்வானேறத் தெள்ளாற்றில்வென்றானோ
டேர்வேந்தரேற்பாரெதிர்."

இந்தக்கவியில், வேந்தர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்கு இருக்கவேண்டிய குணங்கள் ஏழுஎன்று சொல்லியிருக்கின்றது. இவற்றுள்,

(1) வண்மை.—இதற்கு ஈகை என்றும்,

(2) கல்வி.—இதற்கு வேதசாஸ்திர கலைக்கியான அறிவு என்றும்,

(3) மாபலம்.—இதற்கு புஜபலபராக்கிரமங்கள் என்றும்,

(4) ஆள்வினை.—இதற்கு எடுத்தது முடிக்குந்திறம் என்றும்,

(5) உண்மை.—இதற்கு சத்தியவாக்கு என்றும்,

(6) பாராளுரிமை.—இதற்கு நாடாளும் பாத்தியம் என்றும்,

(7) திண்மை.—இதற்குத் திடத்தமனம் என்றும் அர்த்தமாம்.

சத்திரியகுலத்தவர்களுக்கு இருக்கவேண்டிய மேற்கூறிய ஐந்து இலக்ஷணங்களில் இந்த ஏழு இலக்ஷணங்களும் அமைந்திருக்கின்றன. அவைவருமாறு :

(*i*) மேன்மை என்பது பாராளுரிமையாம்.

(*ii*) பண்பு என்பது ஆள்வினை, உண்மை, திண்மையுமாம்.

(*iii*) ஊக்கம் என்பது மாபலமாம்.

(*iv*) மாட்சிமை என்பது வண்மையாம்.

(*v*) கல்வி என்பது கல்வியாம்.

சால்பு என்னும்பதத்துக்குத் தாற்பரியங்கூறினோம். இனிச் சான்றாண்மை என்னும் மொழிக்குத் தாற்பரியங் கூறுவோம்.

2. சான்றாண்மை என்னும் பதமும் சால் என்னும் வினை முதலடியினின்று பிறந்த பதமாம்.

'சான்றாண்மை' என்னும் இந்தப்பதத்துக்கு 'நிறைவு, ஊக்கம், மேன்மை' என்பது பொருளாகும். ஆனதால்,

'சால்புற்ற சான்றாண்மை' என்பதற்கு 'பாராளுரிமையாகிய மேன்மையும், ஆள்வினை உண்மை திண்மைகளாகிய நற்குணங்களும், புஜபலபராக்கிரமங்களாகிய ஊக்கமும், வண்மை என்னப்பட்ட ஈகையாகிய மாட்சிமையும், கல்வியாகிய அறிவும் பொருந்திய நிறைந்த மேன்மை' என்பது பொருளாம்.

ஆதலால், 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் பெயர்களுக்கு,

'சால்புற்ற சான்றாண்மையுடையோர்' என்பது பொருளாம். அப்படியாயின்,

சான்றவன்<br>
சான்றான்<br>
சான்றோன்
} என்னும் இந்த மூன்றுபெயர்களுக்குந் தனித்தனியே

பாராளுமேன்மையும், நற்குணங்களும், புஜபலபராக்கிரமங்களும், ஈகையாகிய மாட்சிமையும், வேதசாஸ்திர கலைக்கியான அறிவுகளும் நிறைந்த சத்திரியர்கள் என்பது பொருளாகும்.

இந்த மன்னர்குலத்தவர்கள் தங்கள் சுய அரசாட்சியின்காலத்தில் இத்தன்மையுடையவர்களாயிருந்தார்களென்பது நிசம்.

ஆனதால், 'சான்றவன், சான்றான், சான்றோன்' எனப் பெயர்பெற்றவன் 'குலத்தாலுங், குணத்தாலும், புஜபலத்தாலும், கொடையாலும், அறிவாலும் மேன்மைபெற்று விளங்கிய மன்னர்குலத்தவனாகிய சத்திரியன்' என்பது பொருளாம்.

(vii) நாலடியார், பொருட்பால், நல்லினஞ்சேர்தல், 9 - வது கவி :

"நிலநலத்தானந்திய நெல்லேபோற்றத்தங்<br>
குலநலத்தாலாகுவர் சான்றோர் - கலநலத்தைத்<br>
தீவளிசென்று சிதைத்தாங்கு சான்றாண்மை<br>
தீயினஞ்சேரக்கெடும்."

இந்தக்கவியில், தானியவகைகளுள் உயர்வான தானியமாகிய சாலியெனப் பெயர்கொண்ட நெல்லானது ஐவகை நிலங்களில் சிறந்தநிலமாகிய மருதநிலத்தால் சிறந்து விளங்குகின்றபிரகாரம், உயர்குலப்பிறப்பில் சான்ருண்மையுடையவர்களே சான்ருேர்களாவார்களெனக் கூறியிருக்கின்றது.

மேலே 'சால்புற்றசான்ருண்மை' இன்னதெனத் தெளிய உரைத்திருப்பதை இதிலமைத்துணர்ந்துகொள்க.

(viii) திருக்கழுக்குன்றப்புராணம், நாட்டுப்படலம், 18 - வது கவி :

"கொய்தளவுகுத்தமெல்லென்
கொழுமலர்க்குப்பைநாப்பண்
பெய்தனகவரிப்பாலும்
பிரசமுப்பழத்தின்சேறு
மொய்தரத்தொண்டைநாட்டு
முதுகுடிப்பிறந்தசான்ருே
ரெய்தியவிருந்தையூட்டு
மில்லெனப்பொலிந்தசோலை."

இக்கவியில், 'தொண்டைநாட்டு முதுகுடிப்பிறந்த சான்ருேர்' எனக்கூறியிருப்பது பூர்வகாலத்தில் தொண்டைவளநாட்டில்வந்து குடியேறிய பண்டைச்சான்ருேர்களாகிய கிராமணிகளைக்குறிக்கின்றது. அவர்கள் மேற்படி செய்யுளில் 'தொண்டைநாட்டு முதுகுடிப்பிறந்த சான்ருேர்' என்னப்பட்டிருக்கிருர்கள்.

உரையாசிரியர் 'முதுகுடிப்பிறந்தசான்ருேர்' என்பதற்குத் 'தொன்றுதொட்டுச் சால்புத்தன்மையுள்ளவர்கள்' எனத் தாற்பரியங் கூறியிருக்கிருர். ஆனதால், 'சான்ருேர்' என்பதற்கு 'சால்புத்தன்மை யுள்ளவர்கள்' என்பது பொருளாம்.

இதுவுமன்றி, 'சால்' என்னும் வினையை மூலமாகக்கொண்டு பிறந்து வழங்கிவருகிற பதங்களெல்லாங் குலமேன்மையை யுணர்த்திய பெயர்களாக வந்திருக்கின்றன. அதற்கு இங்ஙனம் விபரங்கூறுவோம்.

அவ்வாறு பிறந்து வழங்கிவருகிற பதங்களிற் பிரதானமானவைகள் சாலி, சாலிகை, சாலூகம், சாலூரம், சாலேகம், சாலேயம் முதலான பதங்களாம். இவற்றுள்,

1. சாலி.—இந்தப்பதத்திற்கு 'நெல்' என்பது கருத்தாம். நவசாதித்தானியங்களுள் மேலான சாதித்தானியம் நெல். ஐந்துசாதி நிலங்களுள் மேலான சாதிநிலம் மருதநிலம். ஆனதால், உயர்சாதி நிலத்தில் விளைகின்ற உயர்சாதி நெல்லுக்குச் சாதித்தானியம் என்றும், உயர்குலத்தானியம் என்றும் பெயராம். குலத்திலுயர்குலம் மன்னர்குலமானதால், அந்தக்குலத்தினருக்கு 'சான்றவர், சான்றார், சான்றோர்' எனப் பெயர்வந்திருக்கின்ற பிரகாரம், தானியங்களுள் உயர்குலத்தானியம் நெல்லானதால், நெல்லுக்கும் 'சாலி' எனப் பெயர்வந்துவழங்குகின்றது. ஆனதால், சாலி என்னும் பதத்தில் சால் என்னும் வினையின்கருத்து அமைந்திருக்கிறது.

2. சாலிகை.—இந்தப்பதத்திற்குக் 'கவசம்' என்பது கருத்தாம். குலத்திலுயர்குலம் மன்னர்குலமானதால், அந்தக்குலத்தவர்களுக்குச் 'சான்றவர், சான்றார், சான்றோர்' எனப் பெயர்வந்திருக்கின்ற பிரகாரம், கவசமானது போர்வீரர்கள் தரிக்கும் உடலணிகளுக்கு மேலணியாகத் தரிக்கப்பட்டுச் சிறந்த அணியாகவிருக்கின்றமையால், கவசத்துக்கும் 'சாலிகை' எனப் பெயர்வந்து வழங்குகின்றது. ஆனதால், 'சாலிகை' என்னும் பதத்தில் 'சால்' என்னும் வினையின் கருத்து அமைந்திருக்கின்றது.

3. சாலூகம்.—இந்தப்பதத்திற்குச் 'சாதிக்காய்' என்பது கருத்தாம். குலத்திலுயர்குலம் மன்னர்குலமானதால், அந்தக்குலத்தவர்களுக்குச் 'சான்றவர், சான்றார், சான்றோர்' எனப் பெயர்வந்திருக்கின்ற பிரகாரம், காய்களுள் உயர்சாதியான காய் சாதிக்காயானதால், சாதிக்காய்க்குஞ் 'சாலூகம்' எனப் பெயர்வந்து வழங்குகிறது. ஆனதால், 'சாலூகம்' என்னும் பதத்தில் 'சால்' என்னும் வினையின் கருத்து அமைந்திருக்கின்றது.

4. சாலூரம்.—இந்தப்பதத்திற்கு 'மேன்மை' என்பது கருத்தாம். ஆனதால், இந்தச் 'சாலூரம்' என்னும் பதத்திலும், சால் என்னும் வினையின் பொருள் அமைந்திருக்கிறது.

5. சாலேகம்.—இந்தப்பதத்திற்குச் 'சந்தனவிருக்ஷம்' என்பது கருத்தாம். குலத்திலுயர்குலம் அரசர் குலமானதால், அந்தக்குலத்தவர்களுக்குச் 'சான்றவர், சான்றார், சான்றோர்' எனப்பெயர்வந்திருக்கின்ற பிரகாரம், வாசனை விருக்ஷங்களுள் உயர்சாதியான வாசனை விருக்ஷம் சந்தன விருக்ஷமானதால், சந்தன விருக்ஷத்துக்கும் 'சாலேகம்' எனப் பெயர்வந்து வழங்குகின்றது. ஆனதால், சாலேகம் என்னும் பதத்தில், சால் என்னும் வினையின் கருத்து அமைந்திருக்கின்றது.

6. சாலேயம்.—இந்தப்பதத்திற்கு 'நெல்விளைநிலம்' என்பது கருத்தாம். குலத்திலுயர்குலம் வேந்தர்குலமானதால், அந்தக்குலத்தினருக்குச் 'சான்றவர், சான்றார், சான்றோர்' எனப் பெயர்வந்திருக்கின்றபிரகாரம், நெல்விளையும் பூமியாகிய மருதநிலப்பூமி மற்றநால்வகைப்பூமியிலும் மேலான பூமியானதால், நெல்விளைநிலத்துக்கும் 'சாலேயம்' எனப் பெயர்வந்து வழங்குகின்றது. ஆனதால், 'சாலேயம்' என்னும் பதத்தில், 'சால்' என்னும் வினையின் கருத்து அமைந்திருக்கிறது.

இவ்வனம் இந்த ஆறுபதங்களையும் ஒருமுகமாகத் திரட்டிப் பார்வையிடுவோமாக:

சாலி, என்பதற்கு, உயர் குலத்தானியம் என்றும்,
சாலிகை, என்பதற்கு, உயர்குல அணி என்றும்,
சாலூகம், என்பதற்கு, உயர்குலக்காய் என்றும்,
சாலூரம், என்பதற்கு, உயர்குலமேன்மை என்றும்,
சாலேகம், என்பதற்கு உயர்குல விருக்ஷம்என்றும்,
சாலேயம், என்பதற்கு, உயர்குல நிலம் என்றும் அருத்தங் கொண்டுவந்திருப்பதுபோலவே,

'சான்றவன், சானறான், சான்றோன்' என்னும் பெயர்களுக்கும் 'உயர்குல மானிடன்' என்பது பொருளாம்.

(ix) சான்றோர்புராணம், பொன்னியணைப்படலம், 64-வது கவி :

" அன்றுமுதற்சான்றாரெனும்பெயரறைந்தனரால்,
தின்றுகரிகாற் சோழன்பழிநீங்கி
யொன்றுமனமகிழ வோங்கிவளம்பெருக
மன்றுநிலங்களிப்ப மாரிவழங்கியதே."

இந்தக்கவியில், அந்தக் கௌரவப்பட்டப்பெயர் பெற்ற நாள்முதல், 'சால்புற்ற சான்றாண்மை யுடையோர்' என்னுஞ் சிறப்புப்பெயர்பெற்று, 'சான்றவர், சான்றார், சான்றோர்' எனப் பெயர்படைத்துவிளங்கிய சித்திரதரபாண்டியன் குலத்தவர்கள் பழிக்குப்பழிவாங்கிக்கொண்டகாரணத்தால், பழிநீங்கியபடியால், அடைபட்டவானந்திறபட, மிகுமழை பெய்ய, நாடு செழித்தது. அதுகண்டு கரிகாலசோழனென்ற வன் மனமகிழ்ந்து, மேற்படி சித்திரதர பாண்டியன்குலத்தவர்களுக்கு மிகுந்த மகிமைகள் செய்தனன் எனக் கூறியிருக்கின்றது.

ஆனபடியினாலே, 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் மூன்றுபெயர்களும் கரிகாலசோழன்நாள்தொடுத்து, சத்திரியர்களாகிய அரசர் குலத்தவர்களுக்குக் குலப்பெயர்களாய்ப் போயின. மேற்படி சான்றோர்புராணம் எழுதப்பட்டகாலத்திலும், மேற்படி குலத்தவர்களுக்கு 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் மூன்றுபெயர்களும் அப்பட்டமானபெயர்களாக வழங்கிவந்னவென்று நன்றாய்விளங்குகின்றது.

ஆனதால் இந்தப்பெயர்கள் அதற்குப் பிற்காலத்தில் மேற்படி குலத்திற்குச் சன்மப்பகைஞர்களாகிய எதிரிகளால், பூர்வ குலமரபு தோன்றாது மயங்குதற்குச் 'சாணர்' என மயக்கிக் கூறப்பட்டதென்றும், இது பிற்காலத்து வழக்கானதினால், முற்காலத்து நூல்களில் 'சாணர்' என்னும் பெயர் வந்து வழங்கவில்லையென்றும் நன்றாய்த் தெரியவருகின்றது.

(x) பெரியபுராணம், திருத்தொண்டர்புராணசாரம், 11-வது கவி :

"ஈழக்குலச்சான்றாரெயினனூர்வாழேனாதி
நாதனாரிறைவனீற்றைத்
தாழத்தொழுமரபார்படைகளாற்றுந் தன்மை
பெறாவதிசூரன் சமரிற்றோற்று
வாழத்திருசாத்தக்கண்டு மருண்டார் தெருண்
டார்கைவாள்விடார்நேர்
வீழக்களிப்பார்போ னின்றேயாக்கை விடுவித்துச்
சிவனருளே மேவினாரே."

இந்தக்கவிக்குச்சார்புரை.

சோழவளநாட்டில், எயினனூரில், ஈழக்குலச்சான்றோர் குலத்தில் ஏனாதிநாயனார் பிறந்து, சிவபக்தியில் முதிர்ந்தவரானார். அவர் தமது குலவித்தையாகிய பதினெண்ணாயுதவித்தைகளில் மிகவுஞ்சிறந்தவராய் சோழனுடைய சமஸ்தானத்தில் படைத்தொழில்படிப்பித்துச் சேனைத்தலைவனாக இருந்து வந்தவர். இவருக்கு எதிரி அதிசூரன். இந்த அதிசூரனென்பவன், புஜபலத்தால் ஏனாதிநாயனாரை வெல்லத் திறமற்றுப் போனதுகண்டு, உபாயதந்திரத்தால் அவரைக்கொன்றனன். இந்த ஏனாதிநாதநாயனார், சிவபக்தியில் முதிர்ந்து திருத்தொண்டர்களாகிய அறுபத்துமூவரிலொருவராயினர். இவர் சான்றோர்குலத்தவர். இந்தக்கவியில் இவருக்கு, 'ஈழக்குலச் சான்றார்'எனப் பெயர்வந்திருக்கின்றது.

இந்தத்தமிழ்நாடு ஆண்டுவந்த சேரசோழபாண்டியர்குலத்தவர்களாகிய அரசர்குலப்பிரிவார்களோடு ஈழக்குலத்தவர்களும் ஒருகிளைப்பிரிவாராம். ஆனதால், 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் இந்த அரசர்குலகௌரவப்பட்டப் பெயர்கள், இந்த நாலுகுலத்தவர்களுக்கும் பொதுப்பெயர்களாயின. அவை வருமாறு :

(i) ஈழன்குலத்தவர்களுக்கு
ஈழக்குலச்சான்றவர்,
ஈழக்குலச்சான்றார்,
ஈழக்குலச்சான்றோர், என்றும்,

(ii) சேரன்குலத்தவர்களுக்கு
சேரக்குலச்சான்றவர்,
சேரக்குலச்சான்ருர்,
சேரக்குலச்சான்ரேர், என்றும்,

(iii) சோழன்குலத்தவர்களுக்கு
சோழக்குலச்சான்றவர்,
சோழக்குலச்சான்ருர்,
சோழக்குலச்சான்ரேர், என்றும்,

(iv) பாண்டியன்குலத்தவர்களுக்கு
பாண்டிக்குலச்சான்றவர்,
பாண்டிக்குலச்சான்ருர்,
பாண்டிக்குலச்சான்ரேர், என்றும்,

மேற்படி நாலுகுலத்தவர்களுக்கும் பொதுப்பெயர்களாக வந்துவழங்கின.

(xi) பெரியபுராணம், ஏனுதிநாதநாயனுர்புராணம், 1-வது கவி :

"புண்டரிகம் பொன்வரைமேலேற்றிப் புவியளிக்குந்
தண்டரள வெண்கவிகைத்தார்வளவர் சோணுட்டில்
வண்டறைபூஞ்சோலைவயன்மருதத்தண் பணைசூழ்ந்
தெண்டிசையுமேறிய சீர்மூதூரெயினனூர்."

இந்தக்கவியில், இமயகிரிபரியந்தமிருக்கின்றநாடுகளைக்கட்டியாண்டுவந்த சோழமகாராஜன் செங்கோற்செலுத்திய சோணுட்டில் எயினனூர்எனப் பெயர்கொண்ட ஒரு நகரமிருந்தது எனக் கூறியிருக்கின்றது.

(xii) மேற்படி ஏனுதிநாதநாயனுர்புராணம், 2-வது கவி:

"வேழக்கரும்பினேடு மென்கரும்புதண்வயலிற்
ருழக்கதிர்ச்சாலிதானேங்குந் தன்மையதாய்
வாழக்குடிதழைத்து மன்னியவப் பொற்பதியில்
ஈழக்குலச்சான்ருரேனுதிநாதனுர்."

இங்ஙனம், அந்த எயினனூரில் ஈழச்குலச்சான்றார் குலத் திலுதித்த ஏனாதிநாதனார் வாசஞ்செய்துவந்தார் என்று சொல்லியிருக்கிறது. அன்றியும், இந்தக்கவியில், சால் என்னும் வினைமுதலடியினின்று பிறந்துவந்திருக்கிற சாலி என்னும் பெயர் உயர்சாதித்தானியமாகிய நெல்லுக்குப்பெயராகவந்திருப்பதையுங் கண்டுகொள்க.

இச்செய்யுளிலும், ஏனாதிநாதருக்கு 'ஈழக்குலச்சான்றார்' எனப் பெயர்வந்திருக்கின்றது.

(xiii) மேற்படி ஏனாதிநாதநாயனார்புராணம், 3 - வது கவி :

"தொன்மைத்திருநீற்றுத் தொண்டின்வழிபாட்டி
னன்மைக்கணின்ற நலமென்றுங்குன்றாதார்
மன்னர்க்குவென்றி வடிவாட்படைபயிற்றுந்
தன்மைத்தொழில்விஞ்சையிற்றலைமைசார்ந்துள்ளார்."

இக்கவியில், ஏனாதிநாயனார் சோழராசனுக்கு வடிவாட்படைபயிற்றிவந்தாரென்றும், படைத்தொழிலில் தலைமைசார்ந்தவரென்றுங் கூறியிருக்கின்றது.

மேற்படி கவிகளைத் திரட்டிப்பார்வையிடும்போது, ஏனாதிநாதர் ஈழராசன்குலத்தையொட்டிய சத்திரியனென்றும், 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் அரசர்குலக் கௌரவப் பட்டப்பெயர்கள்பெற்றவரென்றும், பெரியபுராணம் எழுதப் பட்டகாலத்தில் 'சான்றார்' என்னும்பெயர் 'சாணார்' என மரூஉவாகி வழங்கவில்லையென்றுந் தெளிவாக விளங்குகின்றது.

(xiv) தமிழிங்கிலேய அகராதியெழுதிய இரட்டிலர் (Rottler) ஆசிரியர் தமதுநூலில் 'ஈழம்' என்னும் வார்த்தைக்குக்கீழாக ஏனாதிநாயனாருக்கு 'ஈழக்குலச்சான்றோன்' என கௌரவப்பட்டப்பெயர் சேர்த்து எழுதிவைத்திருக்கிறார். ஆனதால்,

'சான்றான், சான்றோன்' என்னும்பெயர்கள் ஒருபொருட்பெயர்கள் என்பதற்குச் சந்தேகமில்லை.

III. சுராபாண்டியன்குலத்தவர்களுக்குச் 'சான்றவர், சான்றார்' என்னும் பெயர்களையன்றி, 'சான்றோர்' என்னும் பெயரும் நூல்களில்வந்து வழங்கியிருப்பதற்கு ருசுவருமாறு:

(i) சான்றோர்புராணம், இளவரசுகாத்தபடலம், 53-வது கவி:

" மாலையுற்றெய்தியவருக்கெல்லாம்வேளாண்மை
வானிடத்தொளிர்கற்பகச்
சோலையொத்தாற்றலாற் சோலைவேளாள
னீயேயெனச்சொல்லி யுயர்செங்
கோலையச்சான்றோன் கொளத்தம்பி யிளவரசு
கொளநெறிவழாது நல்க
வேலைமுற்றியவவனி மானபஞ்சரனெனும்
வீரனினிதாண்டனனரோ."

இந்தக்கவியில், சோழராசனானவன், தன் மனைவிசெய்த சூது தெரிந்துகொண்டவனாய், தன்னுடன்பிறந்த தம்பியைக் கண்டு களிப்புற்றுச் சான்றோர்குலத்திலகனான மானபஞ்சர பாண்டியனைப் * பார்த்துச்சொல்லுகிறான்: "நீ இவ்வாறு என்தம்பியை உயிர்காத்துவைத்திருந்தமையால், இந்தத் தமிழ்நாடெங்கணுங் கற்பகங்களாகிய தாலம், தெங்கு, ஈந்து விருக்ஷங்கள் பரிபாலித்து, அமுதவிருக்ஷச்சோலைகளால், இந்தத் தமிழ்நாட்டைக் கற்பகவிருக்ஷச்சோலைகள் நிறைந்த சுரர் நாட்டிற்குச்சமானமாக்கிய காரணத்தால், உனக்கும் உன்பிதிர் வழியாருக்கும் கற்பகவிருக்ஷச்சோலைகள் விருத்திசெய்து 'ஈகை' ஆகிய தொழில்நடத்தும் 'சோலைவேளாளர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயரும் இன்று அளிக்கின்றேன். இதுமுதல் நீயே இந்தச்சோழநாடுமுழுமையும் அரசுபுரியும்படி இன்று உனக்கே மகுடமுந் தரிப்பிக்கின்றேன். என்தம்பி உனக்குள் இளவரசாக இருப்பான்" என்றுசொல்லித்திட்டஞ் செய்தானெனக் கூறியிருக்கின்றது.

---

* 'அளகேசபாண்டியன்' என்பது சிலநூல்களது வழக்கு.

இச்செய்யுளில், மானபஞ்சரபாண்டியனுக்குச் 'சான்றோன்' எனக் கௌரவப்பட்டப்பெயர் வந்திருக்கிறது.

மேலே சுராபாண்டியன்குலத்தவர்களுக்குச் 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர்கள் ஒரு விசேஷகாரணத்தையிட்டு கரிகாலசோழன்நாளையில் தரிப்பிக்கப்பட்டதற்கு விபரம் மேலேகூறியிருக்கிறோம். மேற்படி சுராபாண்டியன்குலத்திலுதித்த மானபஞ்சரபாண்டியன்வமிசத்தவர்களுக்கு மேலேகூறிய காரணத்தினிமித்தம் சோழராசனானவன் 'சோலைவேளாளர்' என்கிற கௌரவப் பட்டங்கொடுத்ததற்கு விபரம் இதிற்கூறப்பட்டிருக்கின்றது.

மேற்படி 53 - வது கவியில், "மாலையுற்றெய்தியவருக்கெல்லாம் வேளாண்மை வானிடத்தொளிர் கற்பகச் சோலையொத்தாற்றலாற் சோலைவேளாள னீயேயெனச் சொல்லியுயர் செங்கோலையச்சான்றோன்கொள நல்கினன்" எனக்கூறியிருக்கிறது. இந்தக்கவியில் வருகின்ற 'வேளாண்மை, சோலைவேளாளன்' என்னும் இரண்டுபெயர்களில்,

1. வேளாண்மை.—இதற்கு (*a*) ஈகை என்றும்,
(*b*) உழவுத்தொழில் என்றும்
அருத்தமாம்.

2. வேளாளன்.—இதற்கு (*a*) ஈகையாளன் என்றும்,
(*b*) உழவன் என்றும்,
அருத்தமாம்.

3. சோலைவேளாளன்.—இதற்கு 'கற்பகச்சோலைகளாகிய தாலவிருக்ஷச்சோலைகளும், தெங்குவிருக்ஷச்சோலைகளும், ஈந்துவிருக்ஷச்சோலைகளும் பரிபாலனஞ்செய்து, பசித்தோர்கள் விடாய்த்தோர்களுக்குப் பசிதாகமாற்றும் ஈகையாளன்' என்பது கருத்தாம்.* ஆனதால்,

---

* 'ஈகை' அரசர் அறுதொழிலிலொன்று; யாகங்கள் நிறைவேறுதற்கும் கற்பகமதுவை ஈயவேண்டிய நிமித்தமிருந்தது.
*c. f.* Ait. Br. viii. 8, 20; Teit. Br, ii. 6, 1; R. V. S.

கற்பகச்சோலைகளைப்பரிபாலனஞ்செய்து 'ஈகை'யாகிய தொழில்புரிகிறவர்களுக்குச் 'சோலைவேளாளர்' என்றும், பூமியை உழுதுபயிர்செய்கிறவர்களுக்குப் 'பூவேளாளர், மண்மக்கள், மண்மகள்புதல்வர்' என்றும் பெயர்கள் வந்துவழங்குகின்றன.

இந்தப்பிரகாரம், சான்றோர்குலத்தவர்களுக்குச் 'சோலைவேளாளர்' எனவுங் கௌரவப்பட்டப்பெயர் வந்திருப்பதால், சான்றோர்புராணத்துக்குச் சோலைவேளாளர்புராணமெனவும் பெயர்வந்து வழங்குகின்றது. ஆனபடியினாலே,

"மாலைபுற்றெய்தியவருக்கெல்லாம் வேளாண்மை வானிடத்தொளிர் கற்பகச்சோலையொத்தாற்றலாற் சோலைவேளாளனீயேயெனச் சொல்லி யுயர்செங்கோலை யச்சான்றோன் கொளநல்கினான்" என்பதற்கு,

"காலைமாலைகளிற் பசிதாகத்துடன் வருகின்றபெயர்களுக்கெல்லாம் அமுதாகிய நன்கொடையளித்துச் சுரர்நாட்டில் மிகுசிறப்புடன் விளங்குகின்ற கற்பகச்சோலைகளில் வருகிறவர்களுக்கு அந்தநாட்டவர்கள் பசிதாகம் ஆற்றிவருகின்றபிரகாரம், நீயும் உன்குலத்தவர்களும் இந்தத்தமிழ்நாடுகளில் கற்பகச்சோலைகள்வைத்து அந்தச்சோலைகளில் வருகிறவர்களுக்குப் பசிதாகம் ஆற்றிவருகின்றபடியால், உங்களுக்குச் 'சோலைவேளாளர்' என்கின்ற கௌரவப்பட்டம் இன்றுகொடுக்கின்றேன் என்றும், நீயே என்தம்பியுடன் இந்தத் தொண்டைவளநாட்டை ஆண்டுவரும்படி உன்னை அரசனாக ஏற்படுத்துகிறேன் என்றுஞ் சொல்லிச் செங்கோலை அவன்கையிற்கொடுத்தான்" என்பது கருத்தாம்.

(ii) சான்றோர்புராணம், பொன்னியணைப்படலம், 60-வது கவி:

"சென்னிதிருமுன்னர் சென்னிபிடித்திழுத்து
பொன்னியினில் வெட்டக்கொடுபோம் பொழுதுதனிற்
பன்னுசான்றோன் சந்திரபாலகனுங்கையமைத்தே
யின்னவனைக்கொல்வதியல்பல்லவென்றுரைத்தான்."

இந்தக்கவியில், சித்திரதரபாண்டியன் வமிசத்தவர்களுக்குப் பழிக்குப்பழிகொடுத்தவுடனே, அவர்களைச் சோழன் சமுகத்தில் தலைமுடிபிடித்திழுத்து, காவிரிநதித்தீரத்தில் வெட்டுதற்குக் கொண்டுபோகிற தருணத்தில் சந்திரபாலகபாண்டியனென்கிறவன் அவர்களைக்கொல்லாமல் நிறுத்துதல்செய்தான் என்று சொல்லியிருக்கிறது.

இங்ஙனம், சந்திரபாலகபாண்டியனுக்குச் 'சான்றோன்' எனப் பெயர்வந்திருக்கின்றது.

(iii) சான்றோர்புராணம், வணிகர்மானங்காத்தபடலம், 14-வது கவி :

"ஒருநாயகனெடாதெனத் தட்டியுன்னோடெதிர்த்து
வருவாணிபர்காளியையேத்து வலங்கைச்சான்றோன்
பொருவாட்சயதுங்கனவன்றனைப்போர்தலைத்தாற்
றருவேனினக்குள்ள வெடுப்பெனச்சாற்றிவிட்டான்."

இந்தக்கவியிலும் சித்திரதரபாண்டியன் வமிசத்தவனுக்குச் 'சான்றோன்' எனப் பெயர்வந்திருக்கிறது.

மேலும், காஞ்சிபுரத்திலே பூர்வகாலத்தில் ஆரம்பித்த பிரகாரம் தமிழ்நாட்டார்கள் வலங்கை இடங்கை என இரண்டு பெரும்பிரிவுகளாகப்பிரிந்து காலாகாலங்களில் பெரும்போர்செய்துவந்தனர். இந்த இரண்டு பிரிவுகளில் வலங்கையார்களுக்கு இந்தச்சான்றோர்குலத்தவர்கள் பூர்வத்தில் தலைமையாகநின்று அவர்களுடையகாரியஞ் செயமாய் முடியச்செய்து வந்ததினாலே, அவர்கள் 'வலங்கைச்சான்றோர், வலங்கைமன்னர்' எனவும் பட்டப்பெயர்கள்பெற்றிருந்தனர்.

அன்றியும், இக்கவியில், 'காளியை யேத்து வலங்கைச் சான்றோன்' எனவுங் கூறியிருக்கின்றது. இதுபோல மேலே நாம் எடுத்துக்காட்டியிருக்கிற பத்திரகாளிபஞ்சரத்தினம் 2-வது கவியில், 'சான்றோரின்குலதெய்வ சுகுணிபிட்டாபுரத்தி' எனக்கூறியிருக்கிறது. ஆனதால் சுராபாண்டியன் குலத்தவர்களாகிய சான்றோர்களுக்குக் குலதெய்வங் காளியாகிய 'உமாதேவி' என விளங்குகின்றது.

IV. இனிப் பிறநூல்களில், 'சான்றவன், சான்ருன், சான்றேன்' என்னும்பெயர்கள் அரசர்குலத்தவர்களாகிய சத்திரியகுலத்தவர்களுக்கு வந்துவழங்கியிருப்பதற்கு உதாரணங்கள் வருமாறு :

(i) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், வருணனைவழிவேண்டுபடலம், 25-வது கவி :

"மொய்த்தமீன்குலமுதலறமுருங்கினமொழியிற்
பொய்த்தசான்றவன் குலமெனப்பொருகணையெரிய
வுய்த்தகூம்புடை நெடுங்கலமோடுவகடுப்பத்
தைத்தவம்பொடுந்திரிந்தன சாலமீன்சாலம்."

இந்தக்கவியில் முதலிரு அடிகளிலும்,

'மொழியிற்பொய்த்த சான்றவன்குலமென
மொய்த்தமீன்குல முதலறமுருங்கின'

என்று சொல்லியிருக்கிறது.

இதன்தாற்பரியம்.

சமுத்திரராஜனுகிய வருணன்மீது கொண்டகோபத்தை அவனரசுக்குட்பட்ட சமுத்திரத்தின்மேற்செலுத்தும்பொருட்டு, ஸ்ரீராமரானவர் தமது விஜயகோதண்டத்தைவளைத்து, நாணேறிட்டு, குணத்தொனிசெய்து, மேற்படிசமுத்திரத்திற்குள்ளாக பாணப்பிரயோகஞ்செய்யவே, "மிகுவிஸ்தாரமாகத் தமிழ்நாடெங்ஙனும்பெருகித் தழைத்திருந்த அரசர் குலத்தவர்களாகிய சான்றவர்குலத்தவர்களுக்கொப்பந்தம், மகாவிசாலம்பொருந்திய சமுத்திரமெங்கும் மிகுதிரளாகப்பெருகித் தழைத்திருந்த மீன்குலங்களெல்லாம், சொல்வாக்குமாறிய சான்றவர்குலமாகிய சத்திரியகுலமானது எவ்வாறு நிலைகுலைந்தழியுமோ அவ்வாறு மேற்படிசமுத்திரத்திலுள்ள மீன்சாலங்களனைத்தும் நிலைதடுமாறி அழிந்துபோயின" என்பதாம்.

இந்தச்செய்யுளில், சான்றவர்குலமானது சொல்வாக்குத்தவருத சத்திரியர்குலம் எனவும், சான்றவர் என்னும்பெயர்

குலப்பெயர் எனவும், இந்நூலாசிரியராகிய கம்பநாடனுடையகாலத்தில் சத்திரியகுலத்தவர்களாகிய சான்றவர்குலத்தவர்கள் தமிழ்நாடுகளில் மிகவும் விஸ்தாரமாகப் பெருகியிருந்தார்கள் எனவும் மிகவுந்தெளிவாய்க் கூறியிருக்கின்றது.

(ii) சான்றோர்புராணம், பாயிரப்படலம், 6-வது கவி:

"ஒருகாலங்கற்றோருக்குதவிசெய்யும்
புகழாளருலகம்போற்ற
வருநதியின்குலமரபோர் வரிசையாய்ப்
பதினெட்டாயுதமும் பெற்றோர்,
பொருபடையிலெதிரேறி மதியாமல்வெற்றிகொண்ட
பொய்யில்லாதோ
ரிருவகையாய்வருசனங்களடிவணங்கக்
கயிலாயத்தேகினனே."

இந்தக்கவியில், காளிபுத்திரர்களாகிய சான்றோர்குலத்தவர்களுக்கு (1) 'கற்றோருக்குதவிசெய்யும் புகழாளர்' என்றும், (2) 'உலகம்போற்றவருகின்ற கங்காநதியின்குலமரபோர்களாகிய கங்காகுலத்தவர்கள்'* என்றும், (3) 'பதினெட்டுவகைப்போராயுதவித்தைகள் கற்றவர்கள்' என்றும், (4) 'இரணக்களங்களில் எதிரிகள் படைகளை அதஞ்செய்து வெற்றிசிறந்த புஜபலபராக்கிரமர்கள்' என்றும், (5) 'சொல்வாக்குத்தவறாத பொய்யில்லாதோர்' என்றும் பட்டப்பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன.

இங்ஙனம், சான்றோர்குலத்தவர்களுக்குப் 'பொய்யில்லாதோர்' எனப் பெயர்வந்திருக்கிறது. மேலே இராமாயணச்செய்யுளிலுஞ் சான்றவர்குலத்தவர்கள் 'பொய்யில்லாதோர்' என்னப்பட்டிருக்கிறார்கள். ஆனதால், சான்றவர்குலமே சத்திரியகுலம்எனத் தானாகத் தெளிவுற விளங்குகின்றது.

---

* *c. f.* 'The Shila Shasana at Begūr, Mysore Province.'

(iii) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், பிரமாஸ்திரப்படலம், 211-வது கவி :

" சான்றோர்மாதைத்தக்க வரக்கன்சிறைதட்ட,
வான்றோர் சொல்லுநல்லறமன்னன் வசமானல்
மூன்றாய்நின்ற பேருலகொன்றாய் முடியாவேற்
றோன்றாவோவென் வல்லிலின் வீரத்தொழிலம்மா."

இதற்குத்தாற்பரியச் சார்புரை.

அசுரகுலச்சத்திரியனை இராவணன்புதல்வன் மேகநாதன், இந்திரமகாராஜனைச்செயித்தகாரணத்தால் இந்திரசித்து எனப்பெயர்படைத்தோன் ஏவிய பிரமாஸ்திரத்தால் ஸ்ரீராகவன் தம்பி இலக்ஷ்மணனும் வானரசேனைகள் என்னப்பட்ட கிஷ்கிந்தாநாட்டுச் சத்திரியர்களும் ஒருங்கே மூர்ச்சித்து, இரணக்களத்திற்பிரேதங்களென விழுந்துகிடப்பதை ஸ்ரீராமர் கண்ணுற்றுப்பிரலாபித்து அழுதுபுலம்புகையில் மேற்படிகவியையுரைத்தார்.

இக்கவியில், சீதாதேவிக்குச் 'சான்றோர்மாது' எனப் பெயர் வந்திருக்கின்றது. 'சான்றோர்மாது' என்பதற்குச் சான்றோர் குலப்பெண், மேன்மக்கள்குலப்பெண், அரசர்குலப்பெண், சத்திரியகுலப்பெண், அல்லது மரூஉவாகச் 'சானார்குலப்பெண்' எனத்தாற்பரியமாம்.

ஆகையினாலே, கம்பர்காலத்தில 'சான்றோர்' என்னும் பெயர் சத்திரியர்களுக்கு அரசர்குலப்பட்டப்பெயராக வழங்கி வந்தது பிரத்தியட்சமாய் விளங்குகிறது.

இங்ஙனம், விசயகோதண்டபாணியாகிய ஸ்ரீராகவர் தமது புஜத்துடன் சேர்த்தணைக்கப்பட்டு மகிமைபெறத்துலங்கிய மகாவீரம்பொருந்திய தனுவைப்பார்த்துச் சொல்லுகிறார்: "சான்றோர்என்று சொல்லப்படுஞ் சத்திரியவமிசத்திலுதித்த பெண்ணாகிய எனதுநாயகி சீதாபிராட்டியாரை அசுரகுலத்தரசனை இராவணன் சிறையெடுத்துக்கொண்டுபோயிருப்பதால், அந்த இராவணனைச்செயித்து, எனது நாயகியை அவ

னுடைய அருஞ்சிறையினின்று மீட்பதற்கு என்னிருபுஜங் களுஞ் சுமக்கின்ற கோதண்டப் பிரயோகத்தால் அசுரசங் காரமுடியுமேயாயின், அந்தக்கோதண்டமானது சுரர்நாடு, நரர்நாடு, அசுரர்நாடு என மூன்று பெரும்பிரிவுப்பட்டுவந்த பரதகண்டமுழுமையையும் ஒருகுடைக்குள்ளாக்குந் திறமு முடைத்தானதாம்."

ஆனதால், சான்றவர்குலம் என்பதைப்போல சான்றோர் குலம் என்பதும், சத்திரியகுலமாம்.

(iv) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், திருவபிஷே கப்படலம், அச்சுப்பிரதியில் விடப்பட்டும், ஓலை யேட்டுப்பிரதியில் தீட்டப்பட்டுமிருக்கின்ற கவி:

"அந்தணர்வணிகர் வேளாண்மரபினராவிநாட்டுச்
சந்தணிபுயத்துவள்ளற் சடையனேயனையசான்றோ
ருய்ந்தனமடியேமென்னு மூவகையருவரிநாண
வந்தனரிராமன்கோயில் மங்கலத்துரிமைமாக்கள்."

இதற்குத் தாற்பரியச்சார்புரை.

ஸ்ரீராமருக்கு மகுடாபிஷேகஞ்செய்யுதற்குத் தகுந்தவொரு நாளைக்குறித்து, ஓலைகளெழுதி தூதர்கள்கைகளிற் கொடுத்து நாலாதிசைக்கும் அனுப்பி மகுடாபிஷேகத்திருக்கோலங்கா ணுதற்கு நாலாகுலத்துக்குடிசனங்களும் அயோத்தியாபுரிக்கு வரும்படியாக அழைக்கப்பட்டார்கள் என்பதாக,மேற்படி திரு வபிஷேகப்படலம், 24-வது, 25-வது 26-வது கவிகளிற் கூறியிருக்கின்றது. மேற்படிசெய்தி நாடெங்கும் பிரசித்தமா னபோது நடந்ததை மேலேபோர்த்தெழுதியிருக்கிறகவி கூறு கின்றது. அதற்குத் தாற்பரியம்: 'ஸ்ரீராமருடைய பட்டாபிஷே கத்திருக்கோலங்காணுதற்கு அந்தணர், வணிகர், வேளாண் மரபினர், ஆவிநாட்டுச்சந்தணிபுயத்து வள்ளற்சடையனே யனைய சான்றோர், என்னப்படுகின்ற நான்குகுலத்தவர்களும் வெகுதிரளாகவந்து கூடினார்கள்' என்பதாம். இந்த நான்கு குலத்தவர்களில்,

1. அந்தணர்குலத்தவர்கள் வந்தார்கள். இவர்கள் பார்ப்பனக்குலத்தவர்களாகிய புரோகிதக்குலத்தவர்கள்.

2. வணிகர்குலத்தவர்கள் வந்தார்கள். இவர்கள் மூன்றாவதுகுலமாகிய செட்டிக்குலத்தவர்கள்.

3. வேளாண்மரபினர் வந்தார்கள். இவர்கள் நான்காவது குலமாகிய சூத்திரக்குலத்தவர்கள்.

4. 'ஆலிநாட்டுச்சந்தணிபுயத்து வள்ளற்சடையனேயனைய சான்றோர்' வந்தார்கள்.

'ஆலிநாடு' என்பதற்குக் 'கள்நாடு, அமுதநாடு' எனக்கருத்தாம். இந்தநாடு கீழ்கடலைச்சார்ந்து, காவிரிநதிமுதல் பெண்ணைநதிபரியந்தமிருந்த ஒருபெரியநாடாம். அது சோழநாட்டுக் கீழைப்பிரிவாகும். சுரர்குலத்தவர்களாகிய தமிழரசர்கள் இந்தத்தமிழ்நாடுகளிற்குடியேறிய ஆதிகாலங்களிற் கற்பகச் சோலைகள்வைத்து உண்டுபண்ணினார்கள். இனிப்புப்பண்டங்கள் கிடையாத அந்த ஆதிகால்ங்களில், அதின் அப்பட்டமானதெள்ளமுதம் மிகுந்த அருமைபெருமையாக எண்ணப் பட்டுவந்தது. கற்பகவிருக்ஷங்களில் அந்தத் தெள்ளமுதத்தை உற்பத்திசெய்யும்வித்தை, அந்த ஆதிகாலங்களில், அறுபோகவித்தைகளிலெல்லாம் அரியவித்தையாக மதிக்கப்பட்டு வந்தது.

நூறடி உன்னதத்தில் திரண்டுருண்டு செங்குத்தாக நிற்கின்ற அமுதக்கலைபொருந்திய கற்பகவிருக்ஷத்தின் உச்சியில் கமகமவெனத்திகட்டாதுவாசங்கமழுகின்ற புஷ்பங்களிலங்க, அப்பட்டமான சுத்தவெண்ணிறம் பொருந்திய இனியருசியையுடைய குருத்துமடல்கள் உன்னதத்தை நோக்கிநிற்க, அந்தக் கற்பகவிருக்ஷத்தின்மீதுஏறி, அதின்மண்டையில் சிம்மாசனபதிபோல இருந்துகொண்டு, எவரும் அதிசயிக்கச் சிலநாள் பரியந்தம் அதின்சிரசைச் சிங்காரஞ்செய்து, அதின் இனிய பாளைகளைச் சிக்குநீக்கி வெளிப்படுத்தி, வித்தைப்பிரயோகங்கள்பண்ணி, புது அமுதக்கலசங்களில் வடிகின்ற தெள்ளமிர்தத்தைக் கும்பத்தில்வடித்துக்கொண்டு, அவ்விருக்ஷத்துச் சிர

சின்நடுவில் துளிர்க்கின்ற செங்குருத்தில் இரண்டுமூன்று மடல்களைச் சேர்த்துக்கொய்து, சிறுதொன்னைசெய்து, அத்தொன்னையில் அந்தப்புத்தாம்புது அமுதத்தைவார்த்து, சிம்மாசனபதியென வீற்றிருந்துகொண்டு, விருக்ஷத்தடியில் நிற்கின்றபெயர்களெல்லாரும் அண்ணாந்துபார்த்து வாயூறிநிற்க, அந்தத் தொன்னையில்வார்த்த அமுதத்தை முதன்முதல் உண்டவன் எவ்வளவுபெருந்தன்மையுடையவனென மதிக்கப்பட்டிருந்திருக்கவேண்டும்? கடல்கடைந்தமுதமெடுக்கும் வித்தையிலும், கற்பகங்கடைந்தமுதமெடுக்கும்வித்தை அரியவித்தையல்லவா?

ஆனதால், அமுதத்தை அதின் ஆதிகாலத்தையொட்டி நினைத்து, அதன் அருமையைக் கொண்டாடவேண்டும். இந்த அமுதத்தை ஆதிகாலத்தில் உண்டுமகிழ்ந்த வடமொழியார்களாகிய சமஸ்கிருதர்கள் தங்கள்பாஷையில், 'தாலவிலாசம்' எனப் பெயர்கொண்ட ஒருநாடகநூல்செய்து, அமுதமுண்டு நாவில் இனிமையுணர்ந்து மகிழ்ந்தபிரகாரம், தாலவிலாச நாடகமாடிக் கண்ணாரப்பார்த்துக் காதாரக்கேட்டு இன்பமடைந்து மகிழ்ந்துவந்தனர். இதுகாரணத்தையிட்டே இந்திரமகாராஜன் தனது நாட்டில், தாலம், தெங்கு, ஈந்து என்னப்பட்ட அமுதவிருக்ஷங்களாகிய கற்பகவிருக்ஷச்சோலைகள் ஏராளமாகவைத்து வளர்த்ததையும், அதில் அமுதவுற்பத்திசெய்து சுரர்குலத்தவர்கள் உண்டுமகிழ்ந்துவந்ததையும் நூல்களெல்லாம் பேசுகின்றன.

திருப்பாற்கடலில் அமுதங்கடைந்தெடுத்தகதை இந்தக்கற்பகவிருக்ஷ அமுதவுற்பத்தியைக் குறிப்பாலுணர்த்துகின்றதெனத்தோன்றுகின்றது. கற்பகவிருக்ஷம் ஏறி, அமுதவுற்பத்திசெய்து, அமுதளிக்கும் வித்தையானது கடல்கடைந்து அமுதம்பிறப்பிக்கும் வித்தையிலும் அரியவித்தையாம். அமுதத்துடன் நஞ்சுபிறந்தது கற்பகவிருக்ஷத்து அப்பட்டமானமதுவிலிருக்கின்ற மயக்குச்சத்தைக்* குறிப்பாலுணர்த்துகிறது.

* Alcoholic principle.

சிவபிரான் அந்தவிஷத்தையுண்ணத் தெள்ளமுதம் பிறந்தது, சுண்ணப்பிரயோகத்தால் கற்பகமதுவிலிருக்கின்ற மயக்குச்சத்தைப்போக்கிச் சுத்தத்தெள்ளமுதம் உண்டுபெண்ணுவதைக்குறிப்பாலுணர்த்துகின்றது.

பூர்வம் கற்பகவிருக்ஷவமுதமுண்ணுது வேள்விகளும் இல்லவாம். யாகங்களைநோக்கியே, பூர்வகாலத்துச் சிவாலயங்கள்தோறும் ஆலயத்துநாலட்டமும் தாலந் தெங்கு ஈந்து விருக்ஷங்கள்வைத்து ஆதிகாலத்தில் விருத்திசெய்துவந்தனர். நாளதும் இந்தமூவகைவிருக்ஷங்களையும் பூர்வ ஆலயங்களின் சுற்றுப்புறங்களிற்காணலாம். யாகங்களிலருந்தும் பானத்துக்குச் 'சுராபானம்' எனப் பெயராம்.*

திரிசிரபுரத்துக்கு வடபாரிசத்திலிருக்கின்ற திருவானைக்காவைச்சேர்ந்த சம்புகேசுரன்கோவிலைச்சூழநிற்கிற திரளான தெங்குவிருக்ஷங்களையும், அவைகளையடுத்துநிற்கின்ற தாலவிருக்ஷங்களையும் ஈந்துவிருக்ஷங்களையும் தற்காலத்தும் பார்க்கலாம். மேற்படி திருவானைக்காவில் வசிக்கின்ற குடிசனங்கள் அந்தத் தெங்குவிருக்ஷங்களை நாளதும் கற்பகவிருக்ஷங்களென்றே இயல்பாகச் சொல்லிவருகிறார்கள். அதுவுமன்றி மேற்படி திருவானைக்காவில் சிவபெருமான் ஆலயத்துப்பிரகாரத்துக்குள்ளிருக்கின்ற மேற்படி கற்பகவிருக்ஷச்சோலைக்குள்ளாகப் பழயவேள்விக்குண்டமொன்று மூடப்பட்டிருக்கிறதை இப்போதுங்காணலாம். பூர்வ தமிழரசர்காலத்தில், வேள்விசெய்தவர்கள் இந்தக்கற்பகவமுதமாகிய சுராபானமுண்டு, வேள்விக்கருமச்சடங்குகளனைத்தையும் நிறைவேற்றிவந்தனர். நாளதுந் தெங்குக்கற்பகவிருக்ஷக்காய்களின் இனிய நீராகிய அமுதத்தால் ஆலயங்களின் மூலஸ்தானங்களிலிருக்கின்ற சிவலிங்கம்முதலான சிலைகளுக்கு அபிஷேகஞ்செய்து

* *cf.* "சோமபானமே தேவர்கட்குச்சிறந்தஉணவும் சுராபானம் மனிதருக்குச் சிறந்தபோசனமுமாம்; சோமம் ஆண், சுரா பெண், இரண்டுஞ்சேர்ந்து ஒருசோடியாம்."—*Taitt. Br.* *i.* 3, 3; 2, 4.

வருகிறூர்கள். இந்த இளநீரபிஷேகமானது பாலபிஷேகம் நெய்யபிஷேகங்களுடன் விரவி இனியபானமாகின்றது அந்தப்பானத்திற்குத் தீர்த்தமென்றுபெயர். ஆலயதரிசனைக்குவருகின்ற பெரியோர்களுக்கு அருமைப்பண்டமென அந்தத் தித்திப்பானதீர்த்தத்திற்கொஞ்சம் உண்ணுதற்குக் கொடுத்துவருவது நாளதும் வழக்கம். அதை வாங்கியருந்துகின்றவர்களெல்லாரும் அது இனிப்பான அமுதமெனக் கண்டிருக்கின்றனர். இதனுல் இனிப்பான அமுதம் பூர்வகாலங்களில் அபிஷேகங்களுக்கு அவசியம் வேண்டுவதென்பது பிரத்தியட்சமாகிறது.

ஆதிகாலத்தில், தமிழரசர்கள் தங்கள் நாடுகளெங்ஙனும் மேற்படி கற்பகவிருக்ஷங்களை வெகுதிரளாகவைத்துக் குடிகள் வாழ்வுக்கென்று வளர்த்து விருத்திசெய்துவருகையில், தங்கள் நாடுகள், நகரங்கள், நதிகள் முதலானவைகளுக்கு இந்த அமுதத்தின் பெயரையொட்டியே பெயர்கள் கொடுத்துவந்திருக்கிறூர்கள். திருட்டாந்தமாக,

ஆவிநாடு, என்பதற்குக் கள்நாடு என்றும்,
கொங்குநாடு, என்பதற்குக் கள்நாடு என்றும்,
தொண்டியூர், என்பதற்குக் கள்ளூர் என்றும்,
பாடலிபுரம், என்பதற்குக் கள்நகரம் என்றும்,
மதுரைநாடு, என்பதற்குக் கள்நாடு என்றும்,
மதுராபுரி, என்பதற்குக் கள்நகரம் என்றும்,
கூடல், என்பதற்குத் தாலத்தோப்பு என்றும்,
ஈழநாடு, என்பதற்குக் கள்நாடு என்றும்,
சுராநாடு / சுரநாடு } என்பதற்குக் கள்நாடு என்றும்,
சுரர்நாடு, என்பதற்க்குக் கள்ளர்நாடு என்றும்,
சேரநாடு,* என்பதற்குக் கள்நாடுஎன்றும்,
காவிநாடு, என்பதற்குக் கள்நாடு என்றும்,
பாவிநதி, என்பதற்குக் கள்நதி என்றும்,

---

* சேரா, Palm-wine, கள்.

தமிழ்நாடு (=தம்+ஈழம்+நாடு) என்பதற்கு ஒப்பில்லாத கள்நாடு என்றும்,

பெண்ணைநதி, என்பதற்குத் தாலநதி என்றும்,

அர்த்தமாகும்.

அதுவுமன்றி, தருக்களுள் கற்பகவிருக்ஷம் உயர்சாதியான இராசவிருக்ஷமானதால், அரசர்குலத்தவர்களில் பூர்வத்தில் பெயரெடுப்பாயிருந்துவந்த பெரியோர்களுடைய பெயர்கள் இந்தக் கற்பகவிருக்ஷச்சார்பிலுரைக்கப்பட்டிருக்கின்றன. திருட்டாந்தமாக,

சிவபிரானுக்குத் 'தாலாங்கன், பனைமரநாதன்' எனவும்,
பீஷ்மனுக்குத் 'தாலத்துவசன்' எனவும்,
பலராமனுக்குத் 'தாலகேதனன்' எனவும்,
சேரனுக்குப் 'பனந்தாரான்' எனவும்,
சுரர்நாட்டுக்கற்பகத்துக்குச் 'சொர்க்கப்பனை' எனவும்,

பெயர்கள் வந்துவழங்குகின்றன.

அதுவுமல்லாமல், கற்பகமதுவுக்கு பாண்டவர்தாயினுடைய சிறந்தநாமப்படிக்குக் 'குந்தி' எனவும், அதின்காய்க்கு உமாதேவியின் நாமப்படிக்குக் 'காளி' எனவும் பெயர்கள் வந்துவழங்குகின்றன. சிவபிரான்சிரசிற் காளியைச் சுமக்கிறதாகக் கூறியபுராணச் சித்தாந்தப்படிக்கு, மேற்படி சிவபிரானுக்குக் குறிப்பாகிய தாலவிருக்ஷத்தின் சிரசில், காளிக்குக் குறிப்பாகிய காய் ஏற்றப்பட்டிருக்கின்றது.

ஆனதினாலே, ஆதிகாலத்தில் கற்பகவிருக்ஷங்களும், கற்பகவமுதமும், கற்பக்கட்டியாகியவிசயமும், தமிழ்நாட்டவர்களுக்கு மிகவும் அருமைபெருமையான பொருள்களாயிருந்து வந்தன என்பதற்குச் சந்தேகமில்லை. அதினாலேதான் பூர்வகாலத்தில் இந்தக்கற்பகவிருக்ஷங்களையும், கற்பகமதுவையும், கற்பக்கட்டியாகிய சர்க்கரையையும் இவ்வளவாகக்கொண்டாடிவந்திருக்கிறார்கள்.

அன்றியும், வடமொழியில் கல்பம் (=கற்பம்) என்பது நெடுங்காலத்தைக்குறிக்கின்ற பதமாம். தாலவிருக்ஷங்கள் ஆயிரம்வருடங்களுக்கு மேற்படவிருக்கின்றன என்று நூல்கள்பேசுகின்றன. இந்தவிருக்ஷத்து வேர்கள் பூமிக்குள் வெகுதூரமோடி, அதினகத்துள் என்றும் வற்றாதிருக்கின்ற கங்கையிலிறங்கி நீருண்டுவருகிறகாரணத்தால் நெடுங்காலமிருப்பது இயற்கையாம். ஆனதால் இந்த அமுதவிருக்ஷங்களுக்கும் 'கற்பவிருக்ஷம் (=நெடுநாள்விருக்ஷம்)' எனப் பெயர்வந்திருக்கிறது. பின்பு இடையில், ககரமாகிய எழுத்துப்பேறுபெற்றுக் 'கற்பகம்' எனவும் வழங்கிவருகின்றது. ஆனதால், அமுதவிருக்ஷசாதிகளில் நெடுநாளிருக்கும் விருக்ஷம் தாலவிருக்ஷமானமையால, அதற்குக் கற்பவிருக்ஷம் எனப் பெயராயிற்று.

இவைகளையெல்லாந்திரட்டிப் பார்வையிடும்போது, மேலே திருவபிஷேகப்படலத்திலிருந்து பேர்த்தெழுதிய கவியில் வருகின்ற ஆலிநாட்டுக்கு 'மதுநாடு' என்பது கருத்தாம் எனத் தெளிவாக விளங்குகின்றது. இதுநிற்க,

'ஆலிநாட்டுச்சந்தணிபுயத்துவள்ளற்சடையனேயனைய சான்றோர்' என்பதற்கு, 'ஆலிநாட்டுத்திருவெண்ணெய்நல்லூர்ச் சடையன் வரையின்றிக் கொடைகொடுக்கும்வண்ணம், வரையின்றிக் கொடைகொடுக்கும் அரசர்குலத்து மேன்மக்கள்' என்பதுபொருளாகும்.

இங்ஙனம் புத்திமான்கள் கூர்ந்து கவனிக்கவேண்டிய ஒரு காரியமுண்டு: மேற்படிகவியில், 'அந்தணர், வணிகர், வேளாண்மரபினர்' என்னும் மூன்றுபெயர்களும் குலப்பெயர்களாய்வந்திருக்க, அந்த மூன்றுபெயர்களோடும் இலக்கணவிதிபிறழாது ஒற்றுமைப்பட்டு எழுவாயாய், 'வந்தனர்' என்னும் பயனிலையுடன் முடிகின்ற 'சான்றோர்' என்னும் பெயரும் குலப்பெயர்தான் என்பதற்கு யாதொரு சமுசயமுமில்லை. ஆனதால்,

'சான்றோர்' என்னும்பெயர் அரசர்குலத்தவர்களாகிய சத்திரியகுலத்தவர்களுக்கு வருகின்ற பெயரெனத் தெளிவாய் விளங்குகின்றது.

இந்தச் 'சான்றோர்' என்னும் பெயரை முறைப்படிக்கு, மேற்படிகவியில், இரண்டாந்தானத்தில் வைக்காமல் நான்காந் தானத்தில் வைத்திருப்பதற்குச் 'சான்றோர்' என்னும் பெயருடன் பலமொழிகள்சேர்ந்த நீண்ட அடைவாசகம் வந்திருப்பதும், 'சான்றோர்' என்னும்பெயர் கவியின் எந்தவிடத்தில் வைக்கப்பட்டாலுந் தெளிவுறத்துலங்குவதுமே காரணமாம்.

(v) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், கிளை கண்டுநீங்குபடலம், 137-வது கவி :

"ஈன்றவர்முதலிய வெண்ணில்சுற்றமுஞ்
சான்றவர்குழுவொடு தவத்துளோர்களும்
வான்றருசேனையு மற்றுஞ்சுற்றுற
மூன்றுநூல்கிடந்ததோண் முனியும்போயினன்."

இந்தக்கவியில், ஸ்ரீராகவனும், சீதாபிராட்டியாரும், இலக்ஷ்மணனும் வனத்துக்குப்போனபின்னர், கைகேயன் புத்திரி கைகேசியாகிறவள் தன் புத்திரன் பரதனுக்குப் பட்டாபிஷேகம் வரக்கருதி வஞ்சனைசெய்ததையறிந்த பரதனனவன் அதற்கு உடன்படாமல் சேனைதளங்களோடு வனத்திற்கு இராமரிடத்திற்குப்போய்த் திரும்புகையில் நடந்ததைக்கூறியிருக்கின்றது. அதில் தாய்மார்முதலான எண்ணிறந்த சுற்றத்தாரோடும், அரசர்கள்கூட்டத்தோடும், அந்தணர்முதலான முனிவர்களோடும், சேனைதளங்களோடும், மற்றுமுண்டாகிய குடிசனங்களோடும், வசிட்டனோடும் பரதன் புறப்பட்டுப்போனன் எனக் கூறியிருக்கிறது.

இங்ஙனம் வந்திருக்கின்ற 'சான்றவர்குழு, தவத்துளோர்' என்னும் பெயர்களுக்கு 'அரசர்குலத்தவர்கள், அந்தணர்கள்' என்பதுகருத்தாம். 'தவத்துளோர்' அந்தணரானமையால், 'சான்றவர்' அரசர்குலத்தவர்களென்பது தானகவிளங்குகின்றது.

(vi) கம்பராமாயணம், உத்தரகாண்டம், சீதைவனம் புகுபடலம், 27-வது கவி :

"விழிபெருப்பசலை பூத்ததுமேனி வெளுத்தது மெல்லியன் முன்கை
தழுவியசரிகள் சரிந்தனகெற்பந் தரித்தது சான்றவர்க்கெல்லா
மொழிவனகபோல முலைகள்பால்பாய வலைமுகங் கறுத்தனவாக
வெழுதருஞ்சீதைக் கிவ்வகையாய விலக்கணம்பலவுமுண்டாக."

இக்கவியில், சீதாதேவி கர்ப்பவதியானபோது காணப்பட்ட குறியடையாளங்கள் கூறியிருக்கின்றன. இதில் 'சான்றவர்க்கெல்லாம்' என்பதற்கு அரசர்களுக்கெல்லாம் என்பது பொருளாம்.

மேலே இராமாயணத்திலிருந்து எடுத்துக்காட்டியிருக்கிற மேற்கோள்களில், 'சான்றவர், சான்றோர்' என்னும் பெயர்கள் அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்குப் பெயர்களாக வந்துவழங்கியிருக்கின்றன. ஆனதால், கம்பநாடனுடைய காலத்தில் அரசர்குலத்தவர்களுக்குச் 'சான்றவர், சான்றோர்' என்னும் பெயர்கள் உலகவழக்கிலும் நூல்வழக்கிலும் சாதாரணமாக வந்துவழங்கியதாகத்தெரியவருகின்றது.

(vii) தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், 20-வது சூத்திரம் :

"அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்
ஐவகைமரபின் அரசர்பக்கமும்
இருமூன்றுமரபின் ஏனோர்பக்கமும்."

இந்தச்சூத்திரத்தில் 'பார்ப்பார், அரசர், ஏனோர்' எனக் குலவிபரங்கூறியிருக்கிறது.

(viii) மேற்படி புறத்திணையியல், 21-வது சூத்திரம்:

"தகட்டபுசிறப்பிற் சான்றோர்பக்கமும்
கட்டினீத்தகாலினானும்."

இங்ஙனம்,

20-வது சூத்திரத்தில், 'அரசர்பக்கம்' எனக் கூறியிருப்பதும்,

21-வது சூத்திரத்தில், 'சான்றோர்பக்கம்' எனக் கூறியிருப்பதும்,

ஒருகுலத்தையே சுட்டிவந்திருக்கின்றது. ஆனதால், 'சான்றோர்குலம்' என்பது அரசர்குலமேயாம்.

(ix) தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், 5-வது சூத்திரம்:

"அந்தணர்திறத்துஞ் சான்றோர்தேஎத்தும்
அந்தமில்சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும்."

இந்தச்சூத்திரத்தில், அந்தணர்குலம் எனவும், சான்றோர்குலம் எனவும், பிறகுலங்கள் எனவுங் குலப்பிரிவுகள் வந்திருக்கின்றன. ஆகவே, இதிற்கூறியிருக்கின்ற 'சான்றோர்குலம்' அரசர்குலமாகிய சத்திரியர்குலமேயாம்.

ஆனபடியினாலே, தொல்காப்பியர்நாளையிலே, அரசர்குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' எனப்பெயர்வந்து வழங்கியிருப்பது தெளிவாகத் துலங்குகின்றது.

(x) வெற்றிவேற்கை, 60-வது சூத்திரம்:

"சான்றோரில்லாத்தொல்பதியிருத்தலின்
தேன்றேர்குறவர்தேய நன்றே."

இதன்தாற்பரியம்.

"அரசர்களில்லாத பூர்வநகரங்களிற் குடியிருப்பதிலும், குறிஞ்சிநிலநாடாகிய மலைநாட்டில், காட்டுத்தேன் உண்டு சுகிக்கும்வேடர்களோடு குடியிருப்பது நலம்" என்பதாம்.

இந்த 60-வது சூத்திரம் அங்கிலேயபாஷையில் தேலர் (Taylor) ஆசிரியரால் இதனடியிற்கண்டிருக்கிறபிரகாரம் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது:

"Rather than dwell in an ancient country without *rulers*, it is better to live in the woods, among wild people who feed on honey."—*W. Taylor's Oriental Manuscripts, Vol. II., Appendix.*

இதில் 'சான்றோர்' என்னும்பதம் Rulers (=அரசர்) என மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றது. ஆனதால், 'சான்றோர் குலமே' அரசர்குலமாம். இந்தப்பிரகாரம் அதிவீரராமபாண்டியன் நாளையிலும் அரசர்குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' எனப் பெயர்வந்து வழங்கியிருப்பது தீர்க்கமுறத்தெரியவருகின்றது.

இன்னமும் இரண்டுதிருட்டாந்தங்கள் இங்ஙனம் எடுத்துரைப்போம்.

(xi) சேரசோழபாண்டியர்கள் தமிழ்நாடுகளிற்செங்கோற்செலுத்திவருகின்றகாலத்திலே, சான்றோர்குலத்தவர்களில் ஒருகிளைப்பிரிவார் பூர்வ துறைமுகப்பட்டணங்களிலொன்றாகிய காவிரிப்பூம்பட்டணத்தினின்று படவேறி இலங்கைக்கு வடபாரிசத்திலிருக்கிற யாழ்ப்பாணநாட்டிற்குப்போய்க் குடியேறினார்கள். அவர்களுடைய சந்ததியார் நாளதுவரையும் அவ்விடத்திலே குடியிருந்துவருகிறார்கள். அவர்கள் தமிழ்நாடுவிட்டுப்புறப்பட்டுப்போகிறகாலத்தில் 'சாணார்' என்கிறபெயரல்ல, 'சான்றார்' என்கிறபெயர் வழக்கமாயிருந்ததினாலே, அவர்களுக்கு நாளதுவரையிலும் 'சான்றார்' என்கிற பெயரே வழக்கமாகியிருந்துவருகிறது. ஆனதால், 'சான்றார்' என்கிறபெயர் 'சாணார்' என மரூஉவாக வழங்கத்தலைப்பட்டது அதற்கு வெகுகாலத்திற்குப்பிறகுஎன்று தோன்றுகின்றது.

(xii) தமிழரசர்கள் அரசாட்சிமுடிவாகி, வடுகர் அரசாட்சி ஆரம்பிக்கிறகாலத்திலும், சான்றோர்குலத்தவர்களுக்குச் 'சாணார்' என்கிறபெயரல்ல, 'சான்றார்' என்கிறபெ

யரே வழக்கமாயிருந்ததினாலே, வடுகில், அவர்களுக்குச் 'சான்றிரவாடு' எனப் பெயர்வந்திருக்கிறது. ஆனதால், வடுகர் அரசாட்சியின் ஆரம்பகாலத்தில் 'சான்றார்' என்னும்பெயர் 'சாணார்' என மரூஉவாய்வழங்கவில்லையென்று நன்றாய்த் தெரியவருகின்றது.

இப்படியிருக்கிறபடியினாலே, 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும்மூன்றுபெயர்களும் ஒருபொருள்கொண்டு அரசர்குலத்தவர்களாகிய சத்திரியகுலத்தவர்களைச் சுட்டும்பெயர்களாம். இதுகளையெல்லாந்திரட்டிப் பார்வையிடும்போது, சௌண்டிக்கருக்குஞ் சான்றோர்குலத்தவர்களுக்கும் ஒருவிதத்திலும் ஒட்டுமில்லை பற்றுமில்லையென்று தெளிவாகவிளங்குகின்றது.

8. பிழியர். இந்தப்பதத்துக்கும் பழநறையாகிய கள்விற்போர் என்பது தாற்பரியமாம். இந்தப்பெயர் 'பிழி' என்னும் மூலபதத்தினின்று பிறந்தபெயராம். பிழி என்பதற்கு 'கள்' (=fermented liquor) என்பது கருத்தாம்.

இது நிற்க, திவாகரநிகண்டுச் சூத்திரங்கள் இரண்டிலும் வருகிறபிரகாரம், பழயர், துவசர், படுவர், சௌண்டிகர், பிழியர் இவ்வைந்துபெயர்களுங் 'கள்விலைஞர்'களுக்கு வரும்பெயர்களாம். ஆனதால்,

இனிக் 'கள்விலைஞர்கள்' இன்னகுலத்தவர்கள் எனக் காண்பிப்போம் :

---

## ரு. பிரகரணம்.

### கள்விலைஞர்கள் இன்னாரென ருசுக் கூறுகின்றது.

'கள்விலைஞர்' என்னும்பெயர் 'கள், விலைஞர்' என்னும் இருபதங்களாலான தொடர்பதமாம். 'கள்' என்பது மேலே விபரித்துக்காட்டியிருக்கிறபிரகாரம், இவ்விடத்தில் 'பழநறையாகிய புளித்துச்சளித்த ஓர்வகைப்பானமாம்.' 'விலைஞர்' என்பதற்கு அகராதியாசிரியர்கள் கூறுகிறபிரகாரம் 'வணிகர்,

செட்டிகள்' என்பதுதாற்பரியமாம். ஆனதால், 'கள்விலைஞர்' என்பதற்குக் 'கற்பகவிருக்ஷசாதிகளின் அப்பட்டமான மதுவைவாங்கிப் பழநறையாகிய புளித்தசளித்தகள்ளாக்கி விற்பனைசெய்யும் கிழ்த்தரமான ஓர்வகை வணிகர்' என்பது கருத்தாம். இதற்கு நூற் சாட்சிவருமாறு :

(i) அதிவீரராமபாண்டியன் எழுதிய காசிகாண்டம், சிவசன்மாவையமன் எதிர்கொண்ட அத்தியாயம், 43-வது கவி :

" மருள்கொடுக்குநறைவிற்கும் வணிகக்கபடனை
விரிவரத்தசைகளென்பு பொடியாகவிரவின்
உரவிவிட்டுயருலக்கையினிடித்தொழிகலா
நரகிடைப் பதைபதைக்க நனிநண்ணிவிடுவாய்."

இதற்குத்தாற்பரியச்சார்புரை.

மூன்னம்ஒருகாலத்தில் வடமதுரையில் சிவசன்மா என்றொருவேதியனிருந்ததாகவும், அவன் முத்திநிலைபெறக்கருதிச் சத்தபுரிகளாகிய அயோத்தி, பிரயாகை, காசி, அவந்தி, காஞ்சி, துவாரகை, மாயாபுரி (= அரித்துவாரம்) எனப் பெயர்கொண்ட இந்த ஏழுஸ்தலங்களுக்கும் முறையே தீர்த்தயாத்திரை செய்யப்போனதாகவும், கடைசியில் இமையோர்பருவதத்தின்மீது உன்னதத்திலிருக்கின்ற மாயாபுரிக்குப்போனதாகவும், அவ்விடத்தில் அரியதபஞ்செய்து சிவலோகபதவிசேர வரம்பெற்றதாகவும், அவ்விடத்தில் மரித்துச் சிவபுரியிலிருந்துவந்த திவ்வியவிமானத்திலேறி ஆகாயமார்க்கமாய்ச்செல்லுகையில் யமலோகத்தைக்கண்டதாகவும், அப்போது யமன் சிவசன்மாவுக்கு எதிர்கொண்டுபோனதாகவும், அப்படிப் போனவிடத்தில் சிவசன்மா யமனைப்பார்த்துப் பூலோகத்தில் என்னென்னபாவங்கள்செய்கிறவர்களுக்கு நரகலோகத்தில் என்னென்னதண்டனைகள் விதிக்கப்படுகிறதென்று வினவ, யமன் அதற்குவிடைகூறிக்கொண்டுவருகிறபோது, 'கள்விற்பனைசெய்கின்ற கள்விலைஞர்களாகிய கள்வாணிகர்களுக்கு' இன்னதண்டனைவருமென்றுகூறுதற்கு இந்தக்கவியைச்சொல்லுகிறான்.

இந்தக்கவிக்குத்தாற்பரியம்.

'மயக்கத்தைத்தருகின்ற பழநறையாகிய கள்ளை விற்பனை செய்யும் வணிகனாகிய வஞ்சகனைச் சதையும் எலும்பும்நொறுங்கும்படி உரலிலேபோட்டுப் பெரும் உலக்கைகொண்டு குத்தியிடித்து, ஒருகாலத்திலும் ஒழியாத எரிநரகத்திலிருந்து நித்தியகாலமும் பதைபதைத்து வேகும்படியாக அந்நரகத்தில் தள்ளிவிடுங்கள்' என்பதாம்.

இங்ஙனம் கள்விலைஞர்களுக்கு 'மருள்கொடுக்குநறைவிற்கும் வணிகர்' எனப் பெயர்வந்திருக்கின்றது. 'வணிகர், வாணிகர், வாணிபர், வாணியர்' இந்நான்குபெயர்களும் ஒருபொருட்பெயர்களாம். ஆனதால், 'கள்விலைஞர்களே கள் வாணிபர்களாம்.'

சூத்திரருக்குள்ளே உழவுத்தொழிலாகிய சிறந்ததொழில் செய்பவர்களுக்குப்பெயர் 'வேளாண்மாந்தர்.'

(ii) தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், 81-வது சூத்திரம் :

"வேளாண்மாந்தர்க்குழுதூணல்ல
தில்லெனமொழிபபிறவகைநிகழ்ச்சி."

இதன்தாற்பரியம்

'வேளாண்மாந்தர்களுக்கு உழுது சீவனஞ்செய்கிறதொழிலேயல்லாது, பிறதொழில்கள் அவர்களுக்கு அரசர்களால் விதிக்கப்படவில்லை' என்பதாம்.

நாம் மேலே சான்றோர்குலக்கிளைப்பிரிவொன்றுக்குச் 'சோழவேளாளர்' என்ற பட்டப்பெயர் கொடுக்கப்பட்டதற்கு விபரங்கூறியிருக்கிறோம்.

இந்த வேளாண்மாந்தர்களாகிய வெள்ளாளர்களோ 'பூவேளாளர்' என்னப்படுகின்றனர்.

'சோலைவேளாளர்' என்பதற்குக் கற்பகவிருக்ஷச்சோலைகள், கனிவிருக்ஷச்சோலைகள், நிழற்சோலைகள், பூஞ்சோலைகள் முதலியன விருத்திசெய்து ஈகையாகியதொழில் நடத்துகிறவர்கள் என்றும், 'பூவேளாளர்' என்பதற்குப் பூமியையுழுது பயிர்செய்கிறவர்கள் என்றும், அருத்தமாகும்.

மேலும் 'வேளாளர்' என்னும் மொழிக்கு 'ஈகையாளர்' என்றும், 'உழவுத்தொழிலாளர்' என்றும் இரண்டுகருத்து உண்டு. ஆனபடியினாலே,

'ஈகையாளர்' என்பது சோலைவேளாளருக்கும்,
'உழவுத்தொழிலாளர்' என்பது பூவேளாளருக்கும் வரும் பெயர்களாம்.

ஈகையானது சத்திரியருக்குரிய அறுதொழில்களில் ஒன்றானபடியால், சோலைவேளாளர்கள்* சத்திரியர்களாம்.

ஆனதால், சோலைவேளாளர்கள்வேறு, பூவேளாளர்கள் வேறு என்று அறிக. பூவேளாளர்களுக்கு 'மண்மக்கள், மண்மகள் புதல்வர்' எனவும் பெயர்கள்வந்திருக்கின்றன.

இந்த உயர்வானசூத்திரர்களையன்றி, பிறதொழில்களைச் செய்யுஞ் சூத்திரர்கள் பலவகைப்பட்டிருக்கிறபிரகாரம், வணிகர்களாகிய செட்டிகளும் பலவகைப்படுவர். உயர்வான செட்டிகளுக்கு 'வைசியர், வாணிகர், வணிகர்' எனப் பெயர்கள் வந்துவழங்குகின்றன.

(iii) தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், 78-வது சூத்திரம் :

"வைசிகன்பெறுமே வாணிகவாழ்க்கை."

இந்தச்சூத்திரத்தில் வைசியர்தொழிலுக்கு 'வாணிகம்' என்று பெயர்வந்திருக்கிறது. ஆனதால், வைசியரே வாணிகரும், வணிகருமாவர். இந்த வாணிகர்களுக்குள்ளே, தனத்தைக்கொண்டு வர்த்தகங்கள்செய்துவருபவர்களே உயர்வான

* 'பாண்டிவங்கிஷவேளாளர்' என்று ஓர் சாசனத்தில் கண்டிருக்கிறது.—*Vide Taylor's Works, Vol. II, p.* 179.

வைசியர்கள், அல்லது செட்டிகளாம். இவர்களையன்றிக் கீழ்த்தரமான வாணிகர்களுமுண்டு; திருட்டாந்தமாக,

1. வெற்றிலைமுதலான இலைவகைகள்கொண்டு வியாபாரஞ்செய்கிற குழுவினர்களுக்கு 'இலைவாணிகர், இலைவாணிபர், இலைவாணியர், இலைவிலைஞர்' என்று பெயராம்.

2. எண்ணெய் வியாபாரஞ்செய்கிற குழுவினர்களுக்கு 'எண்ணெய் வாணிகர், எண்ணெய்வாணிபர், எண்ணெய்வாணியர், எண்ணெய்விலைஞர்' என்று பெயராம்.

3. உப்புவியாபாரஞ்செய்கிற குழுவினர்களுக்கு 'உப்புவாணிகர், உப்புவாணிபர், உப்புவாணியர், உப்புவிலைஞர்' என்றுபெயராம்.

4. தோல்வியாபாரஞ்செய்கிற குழுவினர்களுக்குத் 'தோல்வாணிகர், தோல்வாணிபர், தோல்வாணியர், தோல்விலைஞர்' என்று பெயராம்.

இதுபோலவே,

5. கள்வியாபாரஞ்செய்கிற குழுவினர்களுக்கும் 'கள்வாணிகர், கள்வாணிபர், கள்வாணியர், கள்விலைஞர்' எனவும், "மருள்கொடுக்கும் நறைவிற்கும் வணிகர்" எனவும் பெயராம்.

இவ்வாறு கள்விற்கிற தொழிலுக்கு 'வாணிகம்' என்று நூல்களிற் பெயர்வந்திருக்கிறது. ஆனதால்,

"மருள்கொடுக்கும் நறைவிற்கும்வணிகர்" என்பதற்குக் 'கள்விலைஞர், கள்விற்போர், கள்வாணிகர், கள்வாணிபர், கள்வாணியர்' என்பது தாற்பரியமாம். ஆகையால், மருள்கொடுக்கும் நறைவிற்கும் வணிகர்களே கள்விலைஞர்களாகிய சௌண்டிகர்களாம்.

'மருள்கொடுக்கும் நறைவிற்கிறவர்கள்' சான்றோரெயாயின், அதிவீரராமபாண்டியன் 'வணிகர்' என்றெழுதாமல், 'மருள்கொடுக்கும் நறைவிற்குஞ் சான்றவன் என்றாவது, சான்றான் என்றாவது, சான்றோன் என்றாவது, மரூஉவாகச் சாணுன் என்றாவது' எழுதியிருக்கலாமே. அவ்வாறு அவர் எழுதாததால், கள்விற்பனைசெய்கிறவர்கள் 'வணிகர்' எனத் தெரியவருகின்றது.

பின்னும் யமனுனவன் சிவசன்மாவைப்பார்த்து 'மருள்கொடுக்கும் நறைவிற்கும் வணிகர்கள்' மாத்திரமல்ல, 'மருள்செய்கின்ற நறவாகிய பழநறையென்னுங் கள்ளை யுண்பவர்களும்' எரிநரகஞ்சேர்வார்கள் என்று கூறியிருக்கிறான். அந்தக்கவிவருமாறு :

(iv) காசிகாண்டம், மேற்படி அத்தியாயம், 33-வது கவி :

"மருள்செய்கின்றநறவுண்டவரை மண்டுகடல்போல்
குருதிவாய்நரகினுய்த்திடுதிகோதினெறிசேர்
அருமைக்கிழவராருயிர் செகுத்தவிவரை
இருள்செறிந்தநரகத்திடை யெடுத்தெறிதியால்."

இந்தக்கவிக்கு முன்கூறியகவியில், பழநறையாகிய கள்வியாபாரஞ்செய்கின்ற பாவிகளாகிய 'வணிகர்கள்' எரிநரகத்தில் தன்னுண்டு சதாகாலமும் வெந்துகொண்டே கிடப்பார்கள் என்று சொல்லியிருக்கிறது. இந்த 33-வது கவியில், மேற்படி 'வணிகர்கள்' விற்கின்ற பழநறையாகிய கள்ளை வாங்கி உண்ணுகின்ற பாவிகளை உதிரமயமாகவிளங்கும் அக்கினிக் கடலாகிய நரகத்தில் தள்ளிவிடுங்கள் என்றும், சன்மார்க்கத்தில் நடக்கின்ற அந்தணர்களை உயிர்வதைசெய்கின்ற பாவிகளை இருள்மூடிய நரகத்தில் எறிந்துவிடுங்கள் என்றுஞ் சொல்லியிருக்கிறது.

ஆனதால், இந்துசாஸ்திர நூல்களின்பிரகாரம், கள்விற்கும் 'வணிகர்களும்,' கள்ளுண்ணும் 'பாவிகளும்,' எரிநரகஞ் சேர்வார்கள் என்பது பிரத்தியட்சம்.

(v) காசிகாண்டம், மேற்படி அத்தியாயம், 44-வது கவி:

"நெடியகந்தர மறைக்கிழவர் நேமியரசர்
படியில்வாழ்வணிகர் முன்னம் வெருவாது பழிகூர்ந்
தடிகணீட்டிய சதுர்த்தனையதோமுகமெனுங்
கொடியபாழ்நரகினிட்டுடல் குறைத்திடுதியால்."

இதன்தாற்பரியம்.

அந்தணர், அரசர், வணிகர் என்னப்பட்ட மேற்பால்குலத்தவர்கள்சமுகத்தில், சதுர்த்தனெனப் பெயர்கொண்ட நாலாவது குலத்தவனான சூத்திரன் அச்சமற்றவனாய் நீட்டிய காலை முடக்காதிருப்பானேயாயின், அப்படியாப்பட்ட பாவியைப்பிடித்து அதோகதியாகிய கொடியபாழ்நரகத்தில் தள்ளி அவனுடைய உடலைத்துண்டுதுண்டாகநறுக்கிக் குறுக்குங்கள் என்பதாம். இந்தக்கவியில், மறைக்கிழவர், நேமியரசர், படியில்வாழ்வணிகர், அடிகள்நீட்டிய சதுர்த்தனெனக்குலப்பெயர்கள் நான்கும் முறைவழுவாது வந்தமைகாண்க.

மேலே இராமாயணத்திலிருந்தெடுத்துக்கூறிய கவியில், அந்தணர், வணிகர், வேளாண்மரபினர், சான்றோர் எனக் குலப்பெயர்கள் நான்கும் வந்திருக்கின்றன. ஆனதால்,

அதில் 'அந்தணர்,' இதில் 'மறைக்கிழவர்' எனவும்,
அதில் 'சான்றோர்,' இதில் 'நேமியரசர்' எனவும்,
அதில் 'வணிகர்,' இதிலும் 'வணிகர்' எனவும்,
அதில் 'வேளாண்மரபினர்,' இதில் 'சதுர்த்தர்' எனவும்,
பெயர்பெற்றிருக்கிறார்கள். ஆகையினாலே,

இங்ஙனம், மேன்மக்களாகிய சான்றோர்குலத்தவர்களுக்கு 'நேமியரசர்' எனப் பெயர்வந்திருப்பதால், 'சான்றோர்குலம்' அரசர்குலமென்பது நிச்சயமெனக் கண்டுகொள்க. அதுவுமன்றி, வாணிகர்களுக்கு 'வணிகர்' எனப் பெயர்வந்திருப்பதும் விளங்குகிறது.

(vi) திருவாதவூரர்புராணம், குதிரையிட்டசருக்கம், 2-வது கவி:

"தேசிலாநரி வந்துவந்து திரண்டு வெம்பரியானபின்
ஞசிலாவிமையோர்கடா முமமைந்தசேவகராகினர்,
மாசிலாமணிமன்றராரிய வாசிவாணிபர்போலவே,
யேசிலாவுருமாறினர்மறை யிவுளியின் புறமேவினர்."

இந்தக்கவியில், சிவபிரானவர் தமது தொண்டனாகிய மாணிக்கவாசகருக்காக நரிகளைக் குதிரைகளாக்கினரென்றும், சுரர்கள் வாசிவாணிபர்களாகிய குதிரைவர்த்தகர்களானர்களென்றும், பரமசிவன் உருமாறி வேதக்குதிரையின் மேலேறிக்கொண்டாரென்றுங் கூறியிருக்கின்றது. இச்செய்யுளில் குதிரைகள்வாங்கி விற்பனைசெய்கிறவர்களுக்கு 'வாசிவாணிபர்' எனப் பெயர்வந்திருக்கிறது. வாசிவாணிபர் என்பதற்குக் 'குதிரைவர்த்தகர்' என உரையாசிரியர் தாற்பரியம் எழுதியிருக்கிறார். ஆனதால், வாசிவாணிபர்களே வாசிவிலைஞர்களாம்.

இதுகளையெல்லாந் திரட்டிப்பார்வையிடும்போது, மேற்கூறிய கள்விலைஞர்களாகிய சௌண்டிகர்களே கள்வாணிகர்களென்று தெளிவுறவிளங்குகின்றது. இதுநிற்க,

1. ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் தமதுநூலில், 388-வது பக்கத்தில், சைவபுராணம், 71-வது அத்தியாயம்: 9-வது சுலோகப்பிரகாரம் சமஸ்கிருதராகிய வடமொழியாருக்குள்ளே 'குசலர்' எனப் பெயர்கொண்ட குழுவினர்கள் சத்திரிய ஸ்திரீக்கும் சூத்திரனுக்குங் களவிற்பிறந்த சங்கரசாதியாகிய பஞ்சமர்கள் என்றும், இந்தக்குசலர்களும் சுரா (= ஸுரா) வாகிய கள்ளுஞ் சாராயமும் விற்பவர்கள் என்றுங் கூறியிருக்கின்றனர். இதுபோலவே,

2. ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் தமதுநூலில், 389-வது பக்கத்தில், காந்தம், 2-வது கீதைச் சுலோகப்பிரகாரம், சமஸ்கிருதராகிய வடமொழியாருக்குள்ளே சௌண்டிகர்எனப் பெயர்கொண்ட குழுவினர்கள், இரதக்காரனுக்கும் மாகிஷ

யஸ்திரீக்குங் களவிற்பிறந்தவர்களென்றும், இரதக்காரனை கணக்கனுக்கும் மாகிஷ்யஸ்திரீக்கும் களவிற்பிறந்தவன் என்றும், மாகிஷ்யஸ்திரீயோ சத்திரியனுக்கும் வைசியஸ்திரீக்கும் களவிற்பிறந்த மாகிஷ்யனுக்குப்பிறந்தவளென்றும் கூறியிருப்பதையும்,

மேலே 1-வது பிரிவிற்கூறிய 'குசலர்கள்' சத்திரியஸ்திரீக்குஞ் சூத்திரனுக்கும் களவிற்பிறந்த சங்கரசாதியார்களென்று கூறியிருப்பதையும் ஒத்துப்பார்க்குமிடத்து, சங்கரசாதிகளாகிய பஞ்சமரைச்சேர்ந்திருக்கின்ற 'சௌண்டிகர், குசலர்' என்னும் இந்த இரண்டு சங்கரசாதிகளுள், குசலர்கள் சௌண்டிகர்களுக்குமேற்பட்ட சங்கரகுலத்தவர்கள் என்று நன்றாய்த்தெரியவருகிறது. குசலனனவன் மேற்பால்குலம் நான்கினுள் கலப்புவகையிற்பிறந்த சங்கரசாதியான்.

சௌண்டிகனோ சங்கரகுலங்களுள் கலப்புவகையிற்பிறந்த சங்கரசாதிக்குப்பிறந்த சங்கரசாதியான். ஆனதால், குசலர்கள் சௌண்டிகர்களுக்கு மேற்பட்ட சங்கரசாதியார் என்று ஐயமின்றிக்கூறலாம்.

ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரோ, சங்கரசாதிக்குச் சங்கரசாதியான கள்விலைஞர்களாகிய சௌண்டிகர்களைச் சான்றோர்குலத்தவர்களுக்கு ஒப்புமை கூறியிருக்கின்றனர். அவ்வாறு ஒப்புமை கூறியவர் சுத்தச்சங்கரசாதியான கள்விலைஞர்களாகிய குசலர்களைச் சான்றோர்குலத்தவர்களுக்கு ஒப்புமை கூறத்துணியாதது யாதுகாரணமோ, அதை ஞானவான்கள் உய்த்துணரக்கடவர்.

சௌண்டிகர்கள் = கள்விற்பவர்கள்.
குசலர்கள் = கள்விற்பவர்கள்.

ஆனதால், சௌண்டிகர்களைச்சானூராக்கியவர், குசலர்களைச்சானூராக்காதுவிட்டது யாதுகாரணமோ? மேற்படி நூலாசிரியரேசொல்லட்டும்.

ஆதிமுதல் உலகவழக்கில் மரூஉமொழிகளாக வழங்கிவந்திருப்பவைகளை மரூஉவாக வழங்கிவரவிதியிருப்பதேயல்லாது, தற்காலத்தில் நினைத்தபிரகாரமெல்லாஞ்சொற்களை இழுத்து வலித்து மெலித்து மடக்கிக் குறுக்கித் திரித்து நூதன மரூஉமொழிகள் உண்டுபண்ணுதற்கு இலக்கணநூல்களில் விதியில்லை. பண்டைச்சான்றோர்களாகிய தமிழ்நாட்டரசர் காலத்தில் மரூஉவென நூல்களில் வழங்கும்மொழிகளைமாத்த்திரம் மரூஉமொழிகளாக இலக்கணவித்துவான்கள் கூறுகின்றனர். இந்தமரூஉமொழிகள் மூவகை இயல்புவழக்குகளிலொன்றாம். 'மரூஉமொழி is a contracted word authorized by learned men.' திருட்டாந்தமாக,

அருமருந்தன்ன பிள்ளை என்பது அருமந்தபிள்ளைஎனவும்,
சோழநாடு என்பது சோணாடு எனவும்,
ஈழநாடு என்பது ஈணாடு எனவும்,
மலையமாநாடு என்பது மலாடு எனவும்,
கன்று என்பது கண்ணு எனவும்,
குன்று என்பது குண்ணு எனவும்,
நின்றான் என்பது நிண்ணான் எனவும்,
வென்றான் என்பது வெண்ணான் எனவும்,
என்றும் என்பது எண்ணும் எனவும்,

மரூஉமொழிகளாக உலகவழக்கிலும் நூல்வழக்கிலும் வந்திருப்பதால் இவைகள் இலக்கணவிதிப்பிரகாரம் வந்த மரூஉமொழிகளாம். இப்படியிருக்க,

'சௌண்டிகர்' என்னுஞ் சமஸ்கிருதப்பதமானது, 'சாணார்' எனத்திரிந்து ஆதிமுதல் மரூஉமொழியாக வழங்கிவந்திருப்பதற்கு உலகவழக்கிலும் நூல்வழக்கிலும் மேற்கோள்களிருக்குமேயாயின் மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் அவற்றைஎழுதி ருசுப்படுத்தவேண்டும். அந்தருசுவையறிய ஆவலோடு எதிர்ப்பார்த்துக்கொண்டிருக்கிறோம். இதுநிற்க,

உலகவழக்கும் நூல்வழக்குமின்றித் தமது மனோரதப்பிரகாரம் சும்மா இஷ்டப்படிக்கு நூதனமாகச் 'சௌண்டிகர்'

என்னும் பதத்துக்குச் 'சாணார்' என்னும்பதம் மரூஉமொழி எனக் கூறத்துணிந்தவர், 'குசலர்கள்' சௌண்டிகர்களுக்கொப்பந்தம் கள்விற்குங்குலமானமையால், 'குசலர்' என்னும் பதம் 'சாணார்' என மரூஉவாகவந்து வழங்குகின்றதெனவுஞ் சொல்லத்துணியலாமே. நினைத்தபதமெல்லாம் நினைத்த நினைத்தபிரகாரம் மரூஉவாமேயாயின், 'குசலர்' என்னும்பதமும் கள்விற்பனையினிமித்தம் 'சாணார்' என மரூஉவாகலாமே. அவர் அவ்வாறு சொல்லாதுபோனது ஆச்சரியம். அவர் அப்படிக்கூறத்துணிந்தபோதிலும் 'குசலர்' என்னும்பதம் 'குசலா' (Sans. Kusala) என்னுஞ் சமஸ்கிருதப்பதத்தினின்று உற்பத்தியானமையால், 'குசலர்' என்னுஞ் சமஸ்கிருதப்பதத்தினின்று 'சாணார்' என்னுந்தமிழ்ப்பதம் மரூஉவாகிவரவுமாட்டாதே. இதுநிற்க,

'சௌண்டிகர்' என்னும்பதத்துக்குச் சமஸ்கிருதநிகண்டாகிய அமரத்தில் 'மண்டியர்' என்று கண்டிருக்கிறபதம் ஒன்றே ஒருபொருள்கொண்ட பதமாகக்கூறப்பட்டிருக்கின்றது. ஆனதால், அமரநிகண்டுப்பிரகாரம், 'சௌண்டிகர், மண்டியர்' என்னும்பதங்கள் ஒருபொருட்பதங்களாம். 'மண்டியர்' என்னும்பதத்துக்குக் 'கள்மண்டிகொண்டு விற்பனைசெய்கிறவர்கள்' என அமரநிகண்டில் தாற்பரியங்கூறியிருக்கின்றது.

'கள்மண்டி' என்பது சளித்தபுளித்தபழநறையாகிய பழயகள்ளாம். ஆனதால், 'மண்டியர்' எனப் பெயர்கொண்ட சௌண்டிகர்களை ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் சான்றோர்குலத்தவர்களுக்கு உவமைகூறத்துணிந்தது ஆச்சரியமாயிருக்கிறது. இதுவுமன்றி இன்னமுங்கவனித்துப்பார்க்கவேண்டிய ஒருகாரியமிருக்கின்றது, அதை இங்ஙனங்கூறுதல்செய்வோம்.

'சாணார்' என்னும்மொழி மரூஉமொழியென மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் கூறியிருக்கிறபடியால், 'சாணார்' என்னும்பெயர் மேற்படி குலத்தவர்களுக்குப் பூர்வத்தில் இடப்பட்டநிறைபெயரல்லவென்று அவர் தாமேசொல்வதுபோலிருக்கின்றது. ஆனதால் 'சாணார்' எனக் குறுகியபெயரு

க்கு நிறைபெயர்தேடிய மேற்படி நூலாசிரியர் தமிழ்மொழிக ளில் அதற்கு ஏற்குஞ்சரியான நிறைபெயர் தெரியாதவர்போல பாசாங்குகாட்டி, ஒருவிதத்திலும் மேற்படி பெயருடன் ஒட்டுத லில்லாத சமஸ்கிருதப்பெயராகிய 'சௌண்டிகர்' என்னும் பெயர்ப்பகுபதத்தைப் பகாப்பதமாக்கிப் பொருந்தாதவற் றைப் பொருந்தியதுபோல உரைத்திருக்கின்றனர். ஆயினும் 'சாணர்' எனக் குறுகிய பெயருக்குச் 'சான்றார்' என்பது நிறைபதம் என்று அவருக்கு நன்றாய்த்தெரிந்தகாரணத்தை யிட்டே, 'சாணர்' என்பது நிறைபெயர்போலவும், அந்த நிறை பெயரினின்று 'சான்றார்' என்னுங் குறுகியபெயர் மரூஉமொழியாக வந்திருப்பதுபோலவும் தமது நூலிற்கூறி யிருக்கிறார். இப்படிக்கூறியிருப்பதால், 'சான்றார்' என்பது நிறைபெயரென்றும், 'சாணர்' என்பது அதினின்று மரூஉ வாய குறும்பெயரெனவும் அவருக்குத் தெளிவாக விளங்கி யிருப்பது ருசுவாகின்றது. இதுநிற்க,

'சான்றார்' என்னும் நிறைபெயருடன் இலக்கணவிதிப் பிரகாரம் ஒருபொருள் கொண்டபெயர்கள் 'சான்றவர், சான் றோர்' என்னும் இருபெயர்களுமாம். ஆனதால், சத்திரியகு லக் கௌரவப்பட்டப்பெயர்களாகிய 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் பெயர்களுக்கும், 'சௌண்டிகர்' என் னும் சமஸ்கிருதர்குலத்துக் கள்விற்பனைக்குலத்துக்கும் யா தொரு ஒட்டும்பற்றுமில்லையென்பது நிசம்.

இதுகளையெல்லாந்திரட்டிப் பார்வையிடும்போது, மேற் கூறிய கள்விலைஞர்களே, 'கள்வாணிகர்கள்' என்று தெளிவுற விளங்குகின்றது. இப்படியிருப்பதால், மேலே ருசுப்படுத்தி யிருக்கிறபிரகாரம் 'சௌண்டிகர்களே' வடமொழிநாட்டில் கள்வியாபாரஞ் செய்துவந்த 'கள்வாணிகர்கள்' என்பதற்கு யாதொருசமுசயமுமின்று.

சான்றோர்குலத்தவர்களுடைய பூர்வ உற்பத்தியைக்குறித்து மேற்படி ஜாதிசங்கிரகசார நூலிற் சொல்லியிருப்பது சுத்த அபத்தமென்று இனிவரும் பிரகரணத்தில் விபரித்துக்காட்டு வோம்.

~~~~~~~~~~~~
~~~~~~~~~~~~

## ச. பிரகரணம்.

சான்றோர்குலத்தவர்களுடைய பூர்வஉற்பத்தியைக் குறித்து ஜாதிசங்கிரகசாரநூலிற் சொல்லியிருப்பது சுத்த அபத்தமெனக் கூறுகின்றது.

ஜாதிசங்கிரகசாரநூல், 389-வது பக்கத்தில், மேற்படி நூலாசிரியர் காந்தத்திலிருந்தும், பாரதத்திலிருந்தும் எடுக்கப்பட்ட இரண்டு சுலோகங்களைத் திருஷ்டாந்தரூபமாக்கி அவைகளில் 'சௌண்டிகர்' குலத்தவர்களைச்சுட்டிக் கூறியிருக்கிற சில ஈனமானமொழிகளை வாயிலிட்டுக்கொண்டு, இந்தச் 'சௌண்டிகர்' குலத்துடன் ஒருவிதத்திலும் சம்பந்தப்படாத 'சான்றோர்' குலத்தவர்கள்மீது முன்ஏதோவொருகாரணத்தால் பகைகொண்டவர் போல நின்றுகொண்டு, சண்டப்பிரசண்டமாக ஒருவன் 'பள்ளர்' குலத்தவர்கள்மீது நூல்கள்கூறுகிற ஈனங்களைப் 'பள்ளி'க்குலத்தவர்கள் மேலேற்றி நிந்தை கூறும்பிரகாரம், 'சௌண்டிகர்' குலத்துமீது நூல்கள்பேசுகிற ஈனங்களைச் 'சான்றோர்' குலத்தவர்கள்மேலேற்றி, அக்குலத்தவர்களை யாதொருகாரணமுமின்றி அகமகிழ்ச்சியுடன் வேண்டுமென்றே மனதாரத்தூஷித்தெழுதியிருக்கிறார். அவ்வாறு அவர் தூஷித்தெழுதுகிறதற்குக் காரணமுண்டோவெனப்பார்ப்போம்.

காந்தத்திலிருந்து மேற்படிநூலாசிரியர் பேர்த்தெழுதிய சுலோகத்தில் நாலுவிஷயங்கள் அடங்கியிருக்கின்றன. அவற்றுள்,

1. கணக்கன்.—இவன் சூத்திரஸ்திரீக்கும் வைசியனுக்குங்களவிற்பிறந்தவன். வடமொழிநிகண்டாகிய அமரத்திலும் இவ்வாறுகூறியிருக்கின்றது.

2. மாகிஷ்யன்.—இவன் வைசியஸ்திரீக்கும் சத்திரியனுக்கும் களவிற்பிறந்தவன். அமரமும் அப்படியேசொல்லுது.

3. இரதக்காரன்.—இவன் மாகிஷ்யஸ்திரீக்கும் கணக்கனுக்கும் களவிற்பிறந்தவன். அமரத்

திலோ, இவன் கணக்கஸ்திரீக்கும் மா
கிஷ்யனுக்கும் களவிற்பிறந்தவன் எ
ன்றுகண்டிருக்கின்றது.

4. சௌண்டிகன்.—இவன் இரதக்காரனுக்கும் மாகிஷ்ய
ஸ்திரீக்கும் களவிற்பிறந்தவன்.

மேலேகூறிய நான்குகுலத்தவர்களுஞ் சங்கரகரத்திற்பிற
ந்த கீழ்க்குலத்தவர்கள். ஆயினும், அவர்களில் கணக்கன்,
மாகிஷ்யன், இரதக்காரன் என்னப்பட்ட மூன்றுவகைச்சங்கர
சாதிகளையிட்டு நாம் இங்ஙனம் பேசவேண்டியகாரணமில்லை.

மேலேகூறிய நான்காவது சங்கரகுலத்தவர்களுக்கோ 'சௌ
ண்டிகர்' எனப்பெயர்வந்திருக்கிறது. இந்தச் 'சௌண்டிகர்
கள்' வேறே, சான்றோர்குலத்தவர்கள் வேறே என்று மேலே
போதுமான நியாயங்கள் எடுத்துக்கூறியிருக்கிறோம். ஆயி
னும், அதற்குச்சார்பாக இங்ஙனம் பின்னும் இரண்டொரு
விஷயங்களை எடுத்துக்காட்டுவோம்.

மேலே மூன்றாவது பிரகரணத்திற் கூறியிருக்கிறபடி, காசி
காண்டந் தமிழிற்செய்தவன் அதிவீரராமபாண்டியன், தமிழ்
நாட்டிற் குலவரம்பேற்படுத்திய அரசர்குலத்திலுதித்தவன்,
தமிழ்சமஸ்கிருதநூல்கள் நன்குணர்ந்தவன், குலவரம்புக
ழியாதபடி பாதுகாத்துவந்தவன். இப்படியாப்பட்ட மேன்
மைகள்பொருந்திய அதிவீரராமபாண்டியன் மேலேகூறிய
அத்தியாயம், 43-வது கவியில், 'கள்வியாபாரஞ்செய்யும்
வணிகர்கள்' நிச்சயமாய் எரிநரகத்தில் தள்ளுண்டு என்றென்
றும் வேவார்களென்று கூறியிருக்கிறார். இப்படியிருக்க, தரு
மசாஸ்திரவிதிப்பிரகாரம் வழுவாதுசெங்கோற்செலுத்திய த
மிழரசர்கள், பூர்வகாலங்களில் கள்விற்பனையாகிய இந்தப்
பாவத்தொழிலைச் செய்யுதற்கு மேற்குலத்தவர்களாகிய நான்
குவருணத்தார்களில், மேற்குலவணிகர்களைக் கள்விற்பனையா
கிய இந்தப்பாவத்தொழிற் செய்யுதற்கு மனதார ஏற்படுத்
துவார்களா? ஏற்படுத்தமாட்டார்களே. ஆனதால், தமிழரச
ர்கள் சாராயவிற்பனைக்குச் சமானமான இந்தக்கள்விற்பனை

த்தொழிலை நடத்துதற்குச் சங்கரசாதிகளிலொன்றாகிய, சௌண்டிகர்களை அல்லது கள்விலைஞர்களை ஏற்படுத்திவைத்தார்கள். இந்தச் சௌண்டிகர்களுக்கு வியாபாரத்தொழிலையிட்டுக் 'கள்விலைஞர்கள்' எனப்பெயரிட்டு, அதற்கு அறிகுறியாகக் கொடியொன்று ஏற்படுத்தி, கடைகளுக்குமுன் பாகத் தூக்கிவைத்து, மேற்படி வியாபாரத்தை நடப்பிக்கச்சொல்லித் திட்டஞ்செய்துவைத்தார்கள். இவர்கள் தனவைசியர்களாகிய செட்டிகளல்ல. கள்வியாபாராத்துக்கென்றுமாத்திரம் சங்கரசாதிகளிலிருந்து ஏற்படுத்தப்பட்ட ஓர் குழுவினராம். ஆனதால் இந்தக்கீழ்க்குலவணிகர்களைச் 'செட்டிகள்' எனவும், 'மருள்கொடுக்கு நறைவிற்கும் வணிகர்' எனவும், 'கள்விலைஞர்' எனவும் நூல்கள் பேசுகின்றன.

சான்றோர்குலப் பூர்வஉற்பத்தியானது, பிரமியபுராணத்திலடங்கிய பிரமோத்திரகாண்டமாகிய சுராபாண்டியபுராணத்திலும், சான்றோர்புராணத்திலும், சான்றோர்மரபிலும், சான்றோர்கும்மியிலும், பிறநூல்களிலுந் தெளிவாகச்சொல்லப்பட்டிருக்கிறது. ஆனபடியினாலே, சான்றோர்குலவுற்பத்திப் பூர்வோத்திரம் நன்குணரநாட்டமுடையவர்கள் மேற்படி நூல்களை வாசித்தறியக்கடவர்கள்.

மேலே இரண்டாவது பிரகரணத்தில் சான்றோர்குலத்தைச்சுட்டிய உண்மைதுலங்குதற்குக் கூறியிருக்கிற மேற்கோள்களுக்குச் சார்பான இரண்டொரு மேற்கோள்கள் இங்ஙனம் பேர்த்தெழுதிக்காட்டுவோம்.

(i) திருக்கழுக்குன்றப்புராணம், நாட்டுப்படலம்,
18-வது கவி :

"கொய்தளவுகுத்தமெல்லென் கொழுமலர்க்
குப்பைநாப்பண்
பெய்தனகவரிப்பாலும் பிரசமுப்பழத்தின்சேறு
மொய்தரத்தொண்டைநாட்டு
முதகுடிப்பிறந்தசான்றோ
ரெய்தியவிருந்தையூட்டு
மிஃதெனப்பொலிந்தசோலை."

இந்தக்கவியில், புராணிகர் தொண்டைவளநாட்டுச்சோலை களைச்சிறப்பித்துப்பேசியிருக்கிறார். அப்படிப்பேசும்போது, அந்தச்சோலைகளைத் 'தொண்டைநாட்டுமுதுகுடிப்பிறந்த சான்றோரெய்தியவிருந்தையூட்டுமில்' லுக்கு ஒப்பிட்டுப்பேசியிருக்கிறார். இதற்குத்தாற்பரியம். 'பண்டைச்சான்றோர்' எனப் பெயர்பெற்றுப் பூர்வநற்குடியிற்பிறந்த, சான்றோர்குலத்தினர்கள் தங்களைநோக்கிவருகின்ற பெரியோர்களாகியவிருந்தினர்களுக்கு அமுதளிப்பதற்கு ஏற்படுத்தியிருக்கின்ற தருமசாலைகளையொத்திருந்தது, அந்த நாட்டிலுள்ள கற்பகவிருக்ஷச் சோலைகளும்,கனிவிருக்ஷச்சோலைகளும்,நிழற்சோலைகளும், பூஞ்சோலைகளும் என்பது கருத்தாம். இச்செய்யுளில், சான்றோர்குலத்தவர்கள் தொண்டைவளநாட்டில் பூர்வத்தில்வந்து குடியேறிய குலத்தவர்கள்எனக் கூறியிருக்கின்றது.

(ii) பாரதம், உயுத்தகாண்டம், மவுலிசூட்டுசருக்கம், 10-வது கவி :

" ஆதலாலரவுயர்த்தோனொடுமோதுமநு
 மரணமானபோது.
சாதலாகியதலைவர் சான்றோர்முத்தமைய
 னிருசமரிற்சாய்ந்தோ
ரீதெலாநலமிழத்திமிருகருமமீராறுநா
 ளியற்றிச்செய்த
தீதெலாமகன்றதெனவகமலர்ந்துமுகுந்தனொடுந்
 தீமைதீர்ந்தார்."

இதற்குத்தாற்பரியச்சார்புரை.

பதினெட்டாவதுநாள்நடந்தபாரதப்போரில், துரியோதனன்முதலான வீரர்களெல்லாரும் இரணக்களத்தில் மடிந்துபோனார்கள். திரிதராட்டிதமகாராஜன் சொற்படிக்கு, தருமரும் தம்பிமார்களும் ஸ்ரீகிருஷ்ணதேவருடன் போர்க்களத்திற்குப்போய் முதலாவது துரியோதனன் உடலைஎடுத்து சத்திரியகுலத்தவர்களுக்குரிய கருமங்களெல்லாஞ்செய்து அந்த உடலை மயானஸ்தலத்திற்குக்கொண்டுபோய்த் தகனஞ்செய்த

ணர். மேற்படி துரியோதனன் தேவி பெருந்திருவானையாகிற வள் தன்நாயகனுடலோடு அநுமரணமாயினள். அதற்குப் பிறகு தமையனாகிய தருமராசனாகிறவன், 'சாதலாகியதலைவர் சான்றோர்' என்றுசொல்லப்பட்டவர்களுடைய உடல்களை யெடுத்து விதிப்பிரகாரந் தகனஞ்செய்ததுமன்றி, இந்தப் பெரியபோரில் மடிந்துபோன மற்றவர்களுடைய உடல்களுக்கும் முறைப்படி மயானக்கிரியைசெய்தனன் எனக்கூறியிருக்கின்றது. இந்தக்கவியில், 'சாதலாகியதலைவர் சான்றோர்' என்பதற்கு மேற்படி போர்க்களத்தில் மடிந்துபோன தலைவர்களாகிய மகுடதாரிகளான அரசர்களும், அரசர்குலப்பெரியோர்களும் என்பது கருத்தாம். இங்ஙனம் மன்னர்குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' எனப் பெயர் வந்திருக்கிறது.

சான்றோர்குலங்குலுக்கமடைந்தும், நிலைகுலையாதிருந்து வருகிற தென்பாண்டிநாட்டுக்கரைச்சுற்றுப் பட்டணங்களிலும், மலைநாட்டுப்பூமிகளிலும், சான்றோர்குலப்பெரியோர்களுடைய ஸ்திரீகள் வெளியேறுமல் அடக்கமாயிருந்துவருவதுமன்றி, அயலிடங்களுக்குப்போகவேண்டுவதாயிருக்குங்காலங்களில் மூடுபல்லக்குகளிற்போவதும், சிவிகைதண்டிகைகள் பூர்வகாலமுதல்வைத்து உபயோகப்படுத்திவருவதும் வழக்கம். இத்தன்மைபொருந்திய பூர்வகுலமேன்மைகளையுடைய சான்றோர்குலஸ்திரீகளை மேற்படி நூலாசிரியர் கன்வாணிபர்களாகிய சங்கரகுலத்துச் சௌண்டிகர்களுடைய ஸ்திரீகளுக்கு ஒப்பிட்டுப்பேசத்துணிந்தது அவர்மீது பெருங்குற்றமாம்.

இவைகளைப்பார்க்கும்போது, மேற்படி ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் மேற்படி சான்றோர்குலத்தவர்களுடைய பூர்வ உற்பத்தியை இலவலேசமுமறியாதவராய், தாம் அறியாததை கூறத்துணிந்தமையால், நினைவிலேவந்தபிரகாரம், வாயிலேவந்தபடி உளறியிருக்கிறுர். இவ்வாறு அவர் செய்திருப்பது யோக்கியமன்று. தாம் அறியாதவற்றை எழுதியிருப்பதால் அவர் மேற்படி சான்றோர்குலத்தைச்சுட்டி எழுதியிருக்கிறவைகள் சுத்த அபத்தமென்பதற்குச் சந்தேகமில்லை.

இனி இதனடுத்தபிரகரணத்தில் 'கிராமணிகள்' என்னும் இயற்கைப்பெயரை, மேற்படி நூலாசிரியர் 'கிராமன்னியாள்' என்றொரு சிரிப்புப்பெயராகமாற்றி எழுதியகுற்றத்தை விபரப்பட எண்பிப்போம்.

---

## ரு. பிரகரணம்.

'கிராமணிகள்' என்னும் இயற்கைப்பெயரை 'கிராமன்னியாள்' என்றொரு நகைப்புப்பெயராக மாற்றியது பெருங்குற்றமெனக்கூறுகின்றது.

ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் சரசமொழிபேசுவதில் தம்மை மிகுவல்லபரெனக்காட்டியிருக்கிறார். இவ்வகைச்சமர்த்து இவரொருவருக்கு வருமேயல்லாது மற்றொருவருக்கும் வராதெனநினைத்தவர்போல எழுதியிருக்கிறார். இது சமர்த்தில் லெல்லாம் அரியசமர்த்து. அதைச்சற்றுவிபரப்பட இங்ஙனங் காண்பிப்போம்.

ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் தமது நூலில், 389-வது பக்கத்தில் 'கிராமங்களுக்குப்புறம்பானவர்களானபடியால் கிராமன்னியான் என்றும், மேலோர்வசிக்குமிடங்களில் நாடாதவரைப்பற்றி நாடார் என்றும், அவர்களுக்குரிய பட்டப்பெயராய் வந்திருக்கிறது' எனவும், 'கிராமன்னியாள் என்கிறபெயர் தற்காலத்தில் கிராமணிகள் என்று மருவிவருகின்றது' எனவுங்கூறியிருக்கிறார். அவர் இந்த இரண்டுசுலோகங்களையுந் தொண்டைமண்டலத்துச் சான்றோர்குலத்தவர்களைச்சுட்டி மிகுந்தபிரயாசத்தோடுநினைத்து, உழைப்புடன் உண்டுபண்ணித் தமதுநூலில் அமைத்துவைத்திருக்கிறார். இந்தத்தொண்டைமண்டலத்துச் சான்றோர்குலத்தவர்களுக்கு 'அகமுடையார்' என்பது பொதுப்பெயர். 'அகமுடையார்' என்பதற்கு நிலத்துக்குடையவர்கள்' எனவும், 'நிலைமைக்காரர்' எனவும், 'பூமிக்குடைய ் சத்திரியர்' எனவும் அர்த்தமாகும். ஆனதால் நூல்களில் அவர்களுக்கு 'அகமுடையச் சான்றோர்,' எனவும், 'தொண்டைவளநாட்டு முதுகுடிச்சான்

ரோர்' எனவும், 'பண்டைச்சான்ரோர்' எனவும் பெயர்கள் வருகின்றன. மேலும் 'உடையார்' என்னும்பட்டப்பெயர் 'அரசன்' என்னும் பட்டப்பெயரோடு ஒருபொருளில்வந்து வழங்குகின்றது. கன்னடநாட்டரசர்களுக்கு நெடுகிலும் 'உடையார்' என்பது பட்டப்பெயராகவந்து வழங்குகின்றது. உதாரணமாக, இராமச்சந்திரவுடையார்; இதற்கு 'இராமச்சந்திர அரசன்' என்பது பொருளாம்.

மேற்படி தொண்டைமண்டலத்துப் பண்டைச்சான்ரோர் குலத்தவர்களுக்குள் தலைமைபெற்ற பிரபுக்களுக்குக் 'கிராமணிகள்' என்கிற சிறந்தபட்டப்பெயர் வழங்கிவருகின்றது. ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரோ 'கிராமணிகள்' என்கிற இந்தச் சிறந்தபூர்வீகப்பட்டப்பெயரை ஏதொருமுகாந்திரமுமின்றி, 'கிராமன்னியாள்' என நிந்தைமொழியாகத் திரித்துமுறுக்கிப் பேசியிருப்பது அவருக்கு யோக்கியமன்று. மேலே சான்ரோர்குலத்தவர்களை அவர் 'சௌண்டிகர்' எனக் கூறித் தூஷித்திருக்கிறபிரகாரம், கிராமணிகளையும் 'கிராமன்னியாள்' எனக்கூறித்தூஷித்திருக்கிரூர். இவ்விரண்டும் அவர் பேரில் குற்றமாக நிற்கின்றன.

மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் இவ்வாறு எழுதியிருப்பதில் மூன்றுவிஷயங்கள் அடங்கியிருக்கின்றன. அந்த மூன்று விஷயங்களையும் இங்ஙனம் முறையே எடுத்துக்கூறுவோம். அவைவருமாறு:

I. 'கிராமணிகள்' என்னும் பெயரை 'கிராமன்னியாள்' எனத் திரித்துமுறுக்கி எழுதியிருக்கிரூர். இது சுத்தஅபத்தம்.

II. தாம் நூதனமாக அதிசூட்சுமயுத்தியுடன் சிருட்டித்த பதமாகிய 'கிராமன்னியாள்' என்கிறபெயருக்குக் 'கிராமணிகள்' என்கிறபெயர் மரூஉவாகவந்துவழங்குகிறது என்கிரூர். அவர் மண்டையிலுதித்த விதிப்பிரகாரம் 'சௌண்டிகர்' என்னும் பெயருக்குச் 'சாணூர்' என்னும்பெயர் எவ்வாறு மரூஉமொழியாயிற்ரோ, அவ்வாறே 'கிராமன்னியாள்' என அவர்

நூதனமாகச் சிருட்டித்தபதத்துக்குக் 'கிராமணிகள்' என்னும் அப்பட்டமான பூர்வப்பட்டப்பெயர் நூதனமாக மரூஉமொழியாகி வந்திருக்கின்றது. இது அவருடைய நூதன கற்பனைப்பதமாம்.

III. 'நாடான்' என்கிற அரசர்குலப்பட்டப்பெயருக்குச் சரசத்தனமாய் 'நாடாதவன்' எனத்தப்புத்தாற்பரியங்கூறி, வேணுமென்றே எவரும் எளிதில் உணரத்தக்கபிரகாரம் பெருநிந்தைசெய்திருக்கிறார்.

இந்த மூன்றுவிஷயங்களில் மூன்றாவது விஷயமாகிய 'நாடான்' என்னும் பெயருக்குத்தாற்பரியமும், விரிவுரையும், அதற்குமேற்கோள்களும் இனி ஆறாவது பிரகரணத்தில் விபரப்படக்கூறப்போகின்றமையால், இங்ஙனம் அந்த மூன்றுவது விஷயத்தை நிறுத்தி, முதலாவது இரண்டாவது விஷயங்களை முறையேஎடுத்து இவ்விடத்தில் விரித்துரைப்போம். அவற்றுள்,

I. 'கிராமணிகள்' என்னும்பெயரைக் 'கிராமன்னியாள்' என ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் சும்மா தமது மனோபிஷ்டப்பிரகாரம் இழுத்து நீட்டி மெலித்துவைத்திருப்பது சுத்தஅபத்தம். அதற்குச் சிலருசுக்கள் இங்ஙனம் எடுத்துக்காட்டுவோம்.

(i) 'கிராமணிகள்' என்னும்பெயர் தொண்டைமண்டலத்துச்சான்றோர்களுக்குச் சிறந்த பூர்வகுலப்பட்டப்பெயராம்.

இது நாடோடிய இயற்கைப்பெயர். சென்னைநகரவாசிகளுக்குள்ளும், தொண்டைமண்டலத்துக்குடிசனங்களுக்குள்ளும், 'கிராமணிகள்' என்னும்பெயர் பூர்வகாலமுதல் இடையறாமல் வழங்கிவருகின்ற குலப்பட்டப்பெயர். தெருவில் விளையாடுகிற சிறுபாலகர்கள்வாயிலுங்கூட 'கிராமணிகள்' என்னும்பெயர் மணிபோல தொனிக்கின்றது. நாடெங்கும், நகரெங்கும், ஊரெங்கும், தெருவெங்கும் சிறியோர்கள்வாயிலும், பெரியோர்கள்வாயிலும் 'கிராமணிகள்' என்னும்பெயர் இணக்கமுற இன்பம்பெறத்தொனித்து

உலகத்தில் நிலைநின்றுவர, ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் வாயிலோ 'கிராமணிகள்' என இடையறாது கனங்கொண்டு சப்திக்கின்ற அழகிய இந்தப்பெயர்ப்பதம் 'கிராமன்னியாள்' என விதிமுறையின்றித் திருக்கி முறுக்கி நீட்டி மெலித்துத் தொனிக்கப்பெற்றது யாதுகாரணமோ? அறிவுடையோர் உய்த்துணரக்கடவர். மேற்படி நூலாசிரியர் நாவானது 'கிராமணிகள்' என்னும் பதத்தைச் சப்திக்கக்கூடாது போனமையால், அவர் சிறுவர்களுக்கொப்பந்தம் மழலைச்சொற்பேசியிருக்கிறுப்போல தோன்றுது. ஆகவே, உலகவழக்கில் 'கிராமணிகள்' எனவருகின்ற பெயர்ப்பதமே சரியான பெயர்ப்பதம் என்றும், 'கிராமன்னியாள்' என்பது சரசத்தனத்திற் பாணித்த நூதனநகைப்புப்பதமென்றும் ருசுவாகின்றது.

(ii) அங்கிலேய மகாவித்துவானுகிய உவின்சிலோ ஆசிரியர்* எழுதிய அகராதியில், 'கிராமம்' என்கிற பெயருக்கு அடியில், 'கிராமணி' என்னும் பெயர்வருகின்றது. 'கிராமணி' என்னும் பெயர்ப்பதம் (=கிராமம்+மணியம்) என்னும் இரண்டுபதங்களினின்று பிறந்து, 'கிராமமணியம்' என அருத்தங்கொள்ளுகின்றது. 'கிராமமணியகாரன்' என்பது பொருளாம்.

இந்தக் 'கிராமணி' என்னும் பெயர்ப்பதத்துக்கு, மேற்படி அகராதி நூற்பிரகாரம்,

1. Owner of a village, அகமுடையான், கிராமத்துக்குடையவன், எனவும்,
2. Headman of a village, கிராமத்தலைவன் எனவும்,
3. A title among the Shanar, சான்றோர்குலத்தவர்களுக்குள்ளே வழங்குகிற ஒருபட்டப்பெயர் எனவும், தாற்பரியமாம்.

ஆனதால், நூல்வழக்கால் 'கிராமணிகள்' என்னும் பெயர்ப்பதமே சரியானபெயர்ப்பதம் என்றும், 'கிராமன்னியாள்' என்பது நூதனப்பாணிப்புப்பதம் என்றும் ருசுவாகின்றது.

---

* Dr. Winslow.

(iii) அங்கிலேய வித்துவானன இரட்டிலர் ஆசிரியர்* எழுதிய அகராதியில் 'கிராமம்' என்கிற பெயருக்கு அடியில் 'கிராமணி' என்கிற பெயர்ப்பதம் வருகிறது. இந்தநூற் பிரகாரம் 'கிராமணி' என்னும் பெயர்ப்பதத்துக்கு

1. Headman of a village, கிராமத்தலைவன் எனவும்,
2. Chief or headman among the Shanar, சான்றோர்குலப்பிரபு, சான்றோர்குலத்தலைவன் எனவுந்தாற்பரியமாம்.

ஆனதால் நூல்வழக்கில் 'கிராமணிகள்' என்னும் பெயர்ப்பதமேசரியானபெயர்ப்பதம் எனவும், 'கிராமன்னியாள்' என்பது நூதனப்பாணிப்புப்பதம் எனவும் ருசுவாகின்றது.

(iv) கொரைஞ்சூர் கந்தசுவாமி உபாத்தியாயரால் இயற்றப்பட்டு, சென்னைக்களாநிதி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்ட ஒருசிறுநூலிருக்கிறது. அந்தநூலுக்குப் 'பவளபுரி வெங்கடசாமி கிராமணியார்பேரில் அறுபத்துநாலடிச்சிந்து' எனப் பெயர்வந்திருக்கின்றது: இதில் மேற்படி சான்றோர் குலப்பிரபுவுக்குக் 'கிராமணி' எனப் பட்டப்பெயர் வந்திருப்பது பிரகாசமாக விளங்குகின்றது.

ஆனதால் நூல்வழக்கில் 'கிராமணிகள்' என்னும்பெயர்ப்பதமே சரியானபெயர்ப்பதம் எனவும், 'கிராமன்னியாள்' என்பது நூதனப்பாணிப்புப்பதம் எனவுந் தீர்க்கமுற ருசுவாகின்றது.

(v) சாலிவாகனசகாப்தம், 1255லும், 1514லும் உருக்கிவார்க்கப்பட்ட சித்திரவெழுத்துத் தாமிரசாதனங்கள் இரண்டிலுந் தொண்டைமண்டலத்துச் சான்றோர்குலத்தவர்களைச் சுட்டிப்பேசும்போது அவர்களுக்குப்பட்டப்பெயர் 'கிராமணிகள்' என்றேகண்டிருக்கிறது. இதினுல் இதற்கு 541 வருடங்களுக்குமுன்னும், 282 வருடங்களுக்குமுன்னும் 'கிராமணிகள்' என்கிற பட்டப்பெயர் இயல்புப்பெயராக வந்திருப்பது தெரியவருகின்றது. மேற்படி தாமிரசாதனப்பட்டயங்களால், கிராமணிகள்' என்னும் பெயர்ப்பதமே சரியான பெயர்ப்

* Dr. Rottler.

பதம் எனவும், 'கிராமன்னியாள்' என்பது சுத்தமனோரதப் பாணிப்புப்பெயர் எனவுந் தெளிவாக ருசுவாகிறது.

(vi) 'கிராமணி' என்னும் பூர்வசுரர்குலப்பட்டப்பெயர் 'சுரர்குலப்பிரபுக்களுக்கும், சிறப்புவகையால் இந்திரமகாராஜனுக்கும் இடப்பட்டுப் பூர்வமுதல் வழங்கிவந்திருக்கின்ற பட்டப்பெயர்களிலொன்றும். எவ்வாறெனில்,

(1) 'கிராமணி' என்னும் பெயர்ப்பதஞ் சமஸ்கிருதப்பதம். கிரந்தத்தில் இந்தப்பட்டப்பெயர் '𑌗𑍍𑌰𑌾𑌮𑌣𑍀𑌃' என வந்து வழங்குகின்றது. அமரகோஷம் என்னுஞ் சமஸ்கிருதநிகண்டில்,

"𑌗𑍍𑌰𑌾𑌮𑌣𑍀𑌃" என்னும் பெயருக்கு (*a*) சிரேஷ்டன்,

(*b*) கிராமாதிபதி எனத் தாற்பரியங் கூறியிருக்கின்றது. ஆனதால், சான்றோர்குலத்தவர்களுக்குக் 'கிராமணி' என்னும் பட்டப்பெயர் 'கிராமாதிபதி' என்னுங் கருத்தில்வந்துவழங்குகிறது. அன்றியும், 'சுரகிராமணி' என்னும்பெயர் சமஸ்கிருதநூல்களில் இந்திரமகாராஜனுக்கு ஒருசிறந்தபட்டப்பெயராக வந்துவழங்கியிருக்கின்றது. 'சுரகிராமணி' என்பதற்குச் 'சுரர்குலத்தவர்களாகிய தேவர்களுக்கு அதிபதி' என்பதுகருத்தாம். அது 'தேவேந்திரன்' என்னும்பொருள்கொண்டு வந்திருக்கிறது. இந்திரன் என்பதற்கு அரசன் என்பதுபொருளாம். ஆனதால்,

சுரகிராமணி = சுரபதி

= தேவேந்திரன் என்றுபொருளாம்.

(2) சாதகாலங்காரம், உச்சபலன், 5-வது கவி:

"உள்ளதொரு கிரகமுச்சமேவிற் கிராமணியாம்,
உபயமுச்சம்பெறில் பலவூர்க்கிராமணியுமாவன்,
தெள்ளியதோரொருமூன்றுகிரகமுச்சமானால்
செங்கோன் மன்னவனுகிச்சிறிதவனிபுரப்பன்,
நள்ளியதோரீரிரண்டு கிரகமுச்சமானால்
நவிலொருமண்டலந்தனக்கு நாயகனேயாவான்,
புள்ளிசெறியோரைந்து கிரகமுச்சமானால்
பூலோக நாயகனுமெனப் பலன்கள் புகல்வர்."

## தாற்பரியவுரை.

சாதகங்கள் கணிக்குஞ்சோதிடர்கள் பன்னிரண்டு இராசிகளையும்வைத்து, ஜெனனலக்கினராசிமுதற்கிரகங்களை அடைக்கையில், கிரகநிலைகள் நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நீசம் என ஐந்து நிலைகள்பெற்று நிற்கும். இந்தக்கவியில், உச்சராசியில் ஒருகிரகம்நிற்கில் ஒருகிராமத்துக்குக் கிராமணியாவான் என்றும், இரண்டு கிரகங்கள்நிற்கில், பலவூர்க்கிராமணியாவான் என்றும், மூன்றுகிரகங்கள்நிற்கில், சிற்றரசனாவான் என்றும், நான்குகிரகங்கள்நிற்கில் மண்டலமென்னப்பட்ட ஒரு பெருநாட்டுக்கு நாயகனாவான் என்றும், ஐந்துகிரகங்கள்நிற்கில், உலகத்தை ஒருகுடைக்குள் அடக்கியாளும் பூலோகநாயகனாகிய சக்கரவர்த்தியாவான் என்றுங் கூறியிருக்கின்றது. இதில் பூர்வ அரசர்குலப்பட்டப்பெயர்கள் கிரமமாக உரைக்கப்பட்டிருக்கின்றன. அவைவருமாறு :

- *a.* ஒருவூர்க்கிராமணி,
- *b.* பலவூர்க்கிராமணி,
- *c.* சிறுநாடாள்வோன்,
- *d.* மண்டலநாயகன்,
- *e.* பூலோகநாயகன்.

ஆனதால்,

ஒருகிராமம் ஆள்பவனுக்கு ஒருவூர்க்கிராமணி என்றும், பலகிராமம் ஆள்பவனுக்கு பலவூர்க்கிராமணி என்றும், சிறுநாடு ஆள்பவனுக்குச் சிற்றரசன் என்றும், சோழமண்டலம் பாண்டிமண்டலம் சேரமண்டலம் ஈழமண்டலம் முதலான மண்டலங்களைத் தனித்தனியேயாளுஞ் செங்கோல்மன்னராகிய சோழநாயகன் பாண்டிநாயகன் முதலானவர்களுக்கு மண்டலநாயகர் என்றும், உலகத்தையொருகுடைக்குள் அடக்கியாளும் மன்னனுக்குப் பூலோகநாயகன் என்றும் பெயர்கள்வந்து வழங்கியிருக்கின்றன.

ஆதிகாலத்தில் சுரர்குலப்பிரிவார்களாய்த் தொண்டைமண்டலத்தில்வந்து குடியேறி அதிற்செங்கோற்செலுத்திய சான்ரோர்குலப் பிரபுக்கள், செங்கோல்மன்னர்கள் முதலான பெரியோர்கள் சுரர்குலத்தவர்களுக்குள்ளே வழங்கியபிரகாரம் 'கிராமணிகள், நாயகர்' என்கிற பட்டப்பெயர்கள் பெற்று வந்தனர். சுரர்நாட்டில், ஒருகிராமம் ஆள்பவன் ஒருவூர்க்கிராமணி எனவும், பலகிராமங்கள் ஆள்பவன் பலவூர்க்கிராமணி எனவும், சுரர்நாடுமுழுவதும் ஆள்பவன் சுரகிராமணி சுரபதி சுரேந்திரன் சுரநாயகன் எனவும் பெயர்பெற்றிருந்தனர். அதுபோலவே, தொண்டைவளநாட்டில், ஒருகிராமம் ஆள்பவன் ஒருவூர்க்கிராமணி எனவும், பலகிராமங்கள் ஆள்பவன் பலவூர்க்கிராமணி எனவும், நாடடங்கலும் ஆள்பவன் தொண்டைமண்டலாதிபதி தொண்டைமண்டலநாயகன்தொண்டைமண்டலேந்திரன் எனவும் பெயர்பெற்றனர்.

ஆனதால், கிராமணி என்கிறபட்டப்பெயர் சான்ரோர்குலத்தவர்களுக்கிருப்பதால், இந்தக்கிராமணி என்கிறபட்டப்பெயரையுடைய சான்ரோர்குலத்தவர்கள் சுரர்குலச்சத்திரியக்கிளைப்பிரிவார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை.

(3) கம்பராமாயணம், உத்தரகாண்டம், இலங்கையழித்தபடலம், 76-வது கவி :

"பாடுகந்தருவக்குலப்பாவையைக்
கேடில்கீர்த்திக்கிராமணிபெற்றிடுந்
தேடுமாமணித்தெய்வவதியினை
நாடிமற்றவனன்மணஞ்செய்தனன்."

இந்தக்கவியில், ஏதிஎனப் பெயர்கொண்ட அசுரராசன் பேரனும், வித்துகேசன்புத்திரனுமாகிய சுகேசனென்கிறவன் சுரர்குலக்கிளைப்பிரிவாருள் ஓர் கிளைப்பிரிவினராகிய கந்தருவர்குலத்தில் 'கிராமணி' எனப் பட்டப்பெயர்பெற்ற ஓரதிபதியினுடைய புத்திரியாகிய 'தெய்வவதி' என்பவளை மணம்புரிந்தனனெனக் கூறியிருக்கின்றது. இங்ஙனம் கூறியிருக்கிற

பிரகாரஞ் சுரர்குலத்துப்பிரபுக்களுக்குக் 'கிராமணி' என்னும் பட்டப் பெயருண்டு என்பது தெளிவாக விளங்குகின்றது. ஆனதால், 'கிராமணி' என்னும் பட்டப்பெயரை நாளது வரையினும் இடையறாது பெற்றுவந்திருக்கிற சான்றோர்குலக்கிளைப்பிரிவார்கள் சுரர்குலச்சத்திரியக்கிளைப்பிரிவார்கள் என்பதற்குச்சந்தேகமே யில்லை. ஆகவே, 'கிராமண்ணியாள்' என்பதல்ல, 'கிராமணிகள்' என்னும்பெயரே சரியான சான்றோர் குலப்பூர்வப்பட்டப்பெய ரென்பது ஐயமறத்தெளிவாகின்றது.

(vii) சான்றோர்மரபுஎன்னும்நூலில், 55-வது பக்கத்திற்கண்டிருக்கிற கவிவருமாறு:

"அறுபத்துமூவர்தனிலொருவரானோர் கயிலை
யாதிசிவன்மைந்தனானோர்,
அம்பிகைபராசத்தியாராதனைக்காக
அவனிதனில்வருவதானோர்,
மறுவைத்தமெய்த்தவக்காந்தமாரிஷிமனது
மகிழவருசிஷரானோர்,
மாதுபத்திரகாளி மணிமந்திரவுபதேசம்
வளருதற்கிடமதானோர்
குறையற்றசங்கிராசாரியார் தன்மனக்
குறைதீர்த்தகுருவுமானோர்,
கொங்கையமுதுண்ணுமுன் எவருக்குமமுதுதவு
கோதில்மாதாவுமானோர்,
நறையுற்றஇஞ்சிலெழுநூற்றலைவரானோர்சொல்
நற்றொண்டைநாட்டில்மேவும்,
நதிபதிகிராமணிகள் அதிகுலசிரோமணிகள்
நதிகுலகிராமணிகளானோர்."

இந்தக்கவியில், மேற்படி தொண்டைவளநாட்டுச்சான்றோர் குலத்தவர்களுக்குக் "கிராமணிகள்" எனப் பட்டப்பெயர்வந்திருப்பதுகண்டுகொள்க.

இந்தப்பிரகாரம், உலகவழக்கிலும், நூல்வழக்கிலும், தாமிரசாசனங்களிலும் வருகின்றபடி, 'கிராமணிகள்' என்னும்

பெயரே மேற்படி குலத்தவர்களுக்குரிய சரியானபட்டப்பெயரென ருசுவாகின்றது.

II. 'கிராமன்னியாள்' என்னும்பெயர்ப்பதம், ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் வேண்டுமென்றே பகைத்திறத்தால் நூதனமாய்ச்சிருட்டித்த மனோரதப்பாணிப்புப்பெயர்ப்பதமாம். இந்தப்பெயர்ப்பதமும், அதன் தாற்பரியமும் மேற்படி நூலாசிரியருக்குத்தான் தெரியவேண்டியது. அவர் 'கிராமன்னியாள்' என்பதற்குக் 'கிராமங்களுக்குப் புறம்பானவர்கள்' எனத்தாற்பரியங்கூறித் தூஷித்திருக்கிறார். இதுவும் மேற்படி நூலாசிரியர்மீது குற்றமாகின்றது. அவர்கூறியிருக்கிற தாற்பரியவுரையின்படிக்கு,

கிராமணிகள்=கிராமன்னியாள்

=கிராமங்களுக்குப்புறம்பானவர்கள்

என்றாகும்.

இது எவருடையயுத்திக்கும் எட்டாதகருத்து; அவர் ஒருவருடைய யுத்திக்கே எட்டியது. இது அவருடைய மண்டையிலுதித்தகருத்தானதினாலே, புத்திமான்கள் யாவரும் மிகு பிரமிப்புடன் அதிசயித்து அவரைப்பார்த்து வியப்படையக்கடவர்கள்.

இதுநிற்க, 'கிராமன்னியாள்' என்னும்பெயருக்கு ஒருமைப்பெயர் 'கிராமன்னி' என்பதாகவேண்டும். 'கிராமன்னி' ஒருமைப்பெயராயின், பன்மைப்பெயர் 'கிராமன்னிகள்' எனவரவேண்டியது. அப்படியாயின், 'கிராமன்னி' என்னும்பதம் (=கிராமம்+அன்னி) என இரண்டு மூலபதங்களாகப்பிரிகின்றது. இவைகளில் 'அன்னி' என்பதற்குப் பொருளொன்னோ புத்திமான்களே சொல்லட்டும். ஆகவே, 'கிராமன்னியாள்' என்னும் பெயர்ப்பதம் யாதொரு இயற்கையான அர்த்தசார மில்லாத வெட்டிப்பதமாம். வெட்டிப்பதங்கள் உண்டுபண்ணுவதில், மேற்படி ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் வெகுவல்லவர், மிகுசமர்த்தர். ஆகையினாலே, 'கிராமன்னியாள்' என்னும் பெயர்ப்பதம் மேற்படி நூலாசிரியர் மண்டையில் முளைத்த சுத்தவம்பான வெட்டிப்பதமாகும். அது சுத்தசூனியத்திற்குச் சமமாம்.

III. 'கிராமணிகள்' என்னும்பதம், 'கிராமன்னியாள்' என்னும்பதத்துக்கு மரூஉவாகவந்து வழங்குகிறதென்று மேற்படிநூலாசிரியர் எழுதியிருக்கிறார். இவருடைய இலக்கண விதிகளெல்லாந் தலைகீழாகப்பாய்கின்றன. அவருடைய மண்டையிலூறியதெல்லாம் அவருக்கு இலக்கணவிதிகள்போல் விளங்குகிறது.

மேலைப்பிரகரணங்களிற் கூறியிருக்கிறபிரகாரம், ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் 'சாணார்' என்னும்பெயரினின்று 'சான்றார்' என்னும்பெயரும், 'கண்ணு' என்னும்பெயரினின்று 'கன்று' என்னும்பெயரும், 'குண்ணு' என்னும் பெயரினின்று 'குன்று' என்னும்பெயரும், மரூஉமொழிகளாகவந்து வழங்குகிறதென்று கூறியிருக்கிறதுபோலவே, இந்தக் 'கிராமன்னியாள்' என்னும் பெயரினின்று 'கிராமணிகள்' என்னும்பெயரும் மரூஉமொழியாக வந்திருக்கிறதென்று இவ்விடத்திலுங் கூறியிருக்கிறார். இலக்கணவித்துவான்கள் இவருடைய இலக்கண அறிவுத்திறமையைப்பார்த்து வியப்புறக்கடவர்கள்.

இலக்கணவிதிப்பிரகாரஞ்சொல்லவேண்டுமேயாயின், 'சான்றார்' என்னும் பதத்தினின்று 'சாணார்' என்னும் பதமும், 'கன்று' என்னும்பதத்தினின்று 'கண்ணு' என்னும் பதமும், 'குன்று' என்னும்பதத்தினின்று 'குண்ணு' என்னும்பதமும், மரூஉமொழிகளாகவந்து வழங்குகிறதென்று சொல்லலாம்.

ஆயினும், 'கிராமணிகள்' என்னும்பதத்தினின்று 'கிராமன்னியாள்' என்னும்பதம் மரூஉமொழியாக வந்திருக்கிறதென்றாவது, 'கிராமன்னியாள்' என்னும்பதத்தினின்று 'கிராமணிகள்' என்னும்பதம் மரூஉமொழியாக வந்திருக்கிறதெனறாவது, ஒருபோதுஞ் சொல்லுதற்கிடமில்லையே. இடமிருக்குமேயாயின், மேற்படிநூலாசிரியர் தாமே விதிகூறிக்காண்பிக்கக்கடவர்.

இது மேலைப்பிரகரணங்களில் எடுத்துரைத்திருக்கிற பிரகாரம் 'சௌண்டிகர்' என்னும்பதத்துக்குச் 'சாணார்' என்

பது மரூஉமொழியாயிற்றென்று அவர் கூறியிருப்பதுபோ லிருக்கின்றது.

இவைகளையெல்லாம் ஒருங்கேதிரட்டிப் பார்வையிடும்போது, 'கிராமணிகள்' என்னும்பெயர் தொண்டைவளநாட்டுப் பூர்வ தமிழ்ச்சத்திரியகுலத்தவர்களாகிய சான்றோர்குலத்து மேன்மக்களுக்குக் கொடுக்கப்பட்ட சிறந்தபட்டப்பெயர் என்றும், இது சுரர்குலத்துப்பிரபுக்களுக்குரிய பட்டப்பெயரானமையால் மேற்படி சான்றோர்குலத்தவர்கள் சுரர்குலத்துச் சத்திரியக்கிளைப்பிரிவார்கள் என்றும், 'கிராமன்னியாள்' என்பது மேற்படிநூலாசிரியர் மனோபாவனையிலுற்பத்தியான நூதனப்பாணிப்புப்பதமென்றும் நிச்சயமாய்த் தெரியவருகின்றது.

இனி ஆருவது பிரகரணத்தில் அரசர்குலத்தவர்களுக்குரிய சிறந்தபட்டப்பெயராகிய 'நாடான்' என்னும்பெயரும், அந்தப்பெயருடன் ஒருபொருளில்வந்து வழங்குகின்ற மற்றப் பெயர்களும், தமிழ்நாட்டுச் சத்திரியகுலத்தவர்களுக்குரிய பூர்வப்பட்டப்பெயர்கள் என விபரப்படக்கூறுவோம்.

~~~~~~~~~~

## சா. பிரகரணம்.

தமிழ்ச்சத்திரியகுலப்பட்டப்பெயராகிய 'நாடான்' என்னும்பெயரும், அந்தப்பெயருடன் ஒருபொருள் கொண்ட மற்றப்பெயர்களும், தமிழ்நாட்டரசர்குலத்தவர்களுக்குரிய பூர்வப்பட்டப்பெயர்கள் எனக்கூறுகின்றது.

ஜாதிசங்கிரகசாரநூலில், சான்றோர்குலத்தவர்களுக்குப் பூர்வகாலமுதல் வந்திருக்கின்ற சிறந்தபட்டப்பெயராகிய 'நாடான்' என்னும் பெயருக்குத் தப்புத்தாற்பரியங்கூறியிருக்கிற காரணத்தையிட்டு, 'நாடான்' என்னும் பட்டப்பெயரையன்றி இந்தப்பெயருடன் ஒருபொருள்கொண்ட பட்டப்பெயர்களாக வழங்கிவருகின்ற, 'நாட்டான், நாடன்' என்
~~~~~~~~~~

னும் பெயர்களையும், 'நாட்டாள்வான், நாடாள்வான்' என்னும் பெயர்களையும், ஒருசேரத்திரட்டி இங்ஙனந் தாற்பரியங் கூறி, தப்பையொழித்து, நிசத்தைநிறுத்தும் நியாயங்கள் கூறுதல்செய்வோம்.

ஜாதிசங்கிரகசாரநூலில், 389-வது பக்கத்தில் பலர்பால் விகுதியிற் கூறியிருக்கின்ற 'நாடார்' என்னும் பதத்தை இங்ஙனம் ஆண்பால்விகுதியில் 'நாடான்' என வைத்துவிபரிப்போம்.

மேற்படி நூலாசிரியர், 'நாடான்' என்னும் பெயர்ப்பதத்திற்கு 'மேலோர்வசிக்கும் நாடுகளில் நாடாதவன்' எனத் தாற்பரியம் கல்பித்து தமது மனோரதப்பிரகாரம், 'நாடான்' என்னும் பெயருக்கு 'நாடாதவன்' எனத்தாற்பரியங் கூறியிருக்கிறார். ஆயினும் முன்அடை பின்அடையின்றி, 'நாடான்' என்னும்பதம் தனிநிலைப்பதமாய்நிற்க, அதற்குப் பொருளிலொத்ததாகக்கூறிய 'நாடாதவன்' என்னும்பதத்திற்கு ஒருமுழநீளத்தில் முன்அடைசேர்த்து 'மேலோர்வசிக்கும் நாடுகளில் நாடாதவன்' எனத்தாற்பரியம் எழுதியிருக்கிறார். 'மேலோர்வசிக்கும் நாடுகளில்' என்கிற அடைவாசகம் தாற்பரியப்பதத்துடன் சம்பந்தப்பட்டு நிற்கின்றது. இந்த நீண்டதொடரடை இவருக்கு எங்ஙனம் அகப்பட்டதோ யாம் அறிகிலம்.

'நாடான்' என்னும்பதம் மேற்படி நூலாசிரியர் கருத்தின் படிக்கு, நாடு (=விரும்பு) என்னும் வினைமுதலடியிற்பிறந்த எதிர்மறை ஆண்பால்வினைமுற்றாகும்; அல்லது எதிர்மறைவினையாலணையும் ஆண்பாற்பெயராகும். மேற்படி நூலாசிரியரோ 'நாடான்' என்னும்பதத்தை வினையாலணையும் ஆண்பாற்பெயராகக்கொண்டு 'நாடாதவன்' எனத்தாற்பரியம் பண்ணியிருக்கிறார். அப்போது 'நாடாதவன்' என்பதற்கு 'விரும்பாதவன்' என்று அருத்தமாகும். 'விரும்பாதவன்' என அருத்தங்கொண்டுவருகிற 'நாடாதவன்' என்னும் பதத்தின் அர்த்தசாரத்தை விரித்துத்தெளிவுபடக்கூறுதற்கு

நாடி அடைமொழிதேடியவர் அதின் கருத்தைத்தெளிவிப் பதற்கு இயற்கையாய் வேண்டாத அடைகூறியிருக்கிறார்.

'நாடான்' என்னும்பதத்தின்கருத்து மாணுக்கருக்கு விள ங்குதோ அல்லவோ என நிச்சயித்தறியவிரும்பிய ஆசிரிய னொருவன் மேற்படி மாணுக்கரைப்பார்த்து, என்னத்தை நா டான் (=நாடாதவன்)? என வினவி அடைசேர்த்துரைத்துக் கருத்தைத்தெளிவிப்பது ஆசிரியனுக்கு இயற்கை. இவ்வாறு வினவினால், அதற்குவிடையாக,

பூலோகவின்பத்தை
வீட்டை
இனசனத்தை
} நாடான் (=நாடாதவன்)

என்பதுபோலொத்த ஒரு அடைசேர்த்துக்கருத்தைத்தெளிவி ப்பது இயல்பாகும். இவ்வாறு இணங்கிய அடைகூருமல், கருத்திற்கு இசையாததும், கருத்தைநிறைவாக்காததுமான அடைசேர்த்து "மேலோர்வசிக்கும்நாடுகளில் நாடாதவன்" எனக் கூறியிருக்கிறார் நூலாசிரியர்.

இதன்கருத்தை நிறைவாக்குதற்கு இரண்டுவினுக்கள் வினு வி இயற்கைப்பதங்களை வருவித்துச்சேர்க்கவேண்டும். அந் தப்படிக்கு 'மேலோர்வசிக்கும் நாடுகளில்' என்னத்தைநா டான் (=நாடாதவன்)? எனவினவின், 'மேலோர்வசிக்கும் நாடுகளில் மேன்மையை நாடான்' என்பதுபோலொத்த வி டை ஏற்கும். பின்னும் மேலோர்வசிக்கும் நாடுகளில் என்னசெய்யநாடான் (=நாடாதவன்).? என வினவின், 'மேலோர்வசிக்கும் நாடுகளில் சண்டைசெய்யநாடான்' என் பதுபோலொத்த விடைஏற்கும்.

இது மேற்படிநூலாசிரியர் கருத்தேயாயின், 'மேலோர் வசிக்கும்நாடுகளில் மேன்மையைநாடாதவன்' என்ருவது, 'மேலோர்வசிக்கும்நாடுகளிற் சண்டைசெய்யநாடாதவன்' என்ருவது தாற்பரியம் எழுதவேண்டும். இவ்வகைத்தாற்பரி யம் அதில் அமையவில்லை.

இப்படியிருக்க, 'மேலோர்வசிக்கும்நாடுகளில் நாடாத வன்' என்று மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் எழுதி

யிருக்கிற தாற்பரியத்தைக்கூர்ந்து யோசித்துப்பார்க்கும்போது, இதனுள் அவருடைய இயற்கையான மனக்கருத்து வெளியாகின்றது. எவ்வாறெனில், மேற்படிநூலாசிரியருக்கு, 'நாடான்' என்னும்பதம் 'நாடு (=விரும்பு)' என்னும் வினைமுதலடியினின்று பிறந்து 'நாடாதவன் (=விரும்பாதவன்)' எனத்தாற்பரியம் பெற்றுவரும் எனவும், மேற்படி 'நாடான்' என்னும்பதம் 'நாடு (=தேசம்)' என்னும்பெயரடியிற்பிறந்து 'நாடான் (=அரசன்)' எனத்தாற்பரியம்பெற்றுவரும் எனவும், நன்குணர்ந்தவரானதினாலும், 'நாடான்' என்ற சான்றோர்குலத்துச் சிறந்தபட்டப்பெயரானது 'நாடு ( = தேசம்)' என்கிற மூலபதத்தினின்று பிறந்தபெயரென்றே தெரிந்தவரானதினாலும், அவர் 'நாடான்' என்னும்பதத்துக்குத் தாற்பரியங் கூறப்புகுந்தபோது, முன்பின்யோசியாமல் 'மேலோர்வசிக்கும் நாடுகளில் நாடாதவன்' எனக்கூறிவிட்டார். ஆனதினாலே, 'மேலோர்வசிக்கும்நாடு' என்னுந்தொடர்மொழியிலமைந்திருக்கின்ற 'நாடு (=தேசம்)' என்னும் மூலபதத்தினின்று 'நாடான்' என்னும் பெயர்ப்பதம் பிறந்திருப்பது அவருக்கு உள்ளுக்குள்ளாகத் தெளிவுறத்தெளிந்த உண்மை என்பதற்குச் சந்தேகமில்லை.

இந்தப்பிரகாரம், மேற்படி நூலாசிரியர் நினையாதவண்ணம், தமதுமனோரதப்படிக்கு எழுதியிருக்கிற அடைவாசகத்தில், 'நாடு (=தேசம்)' என்றொருபதத்தை அதனுள் திணித்துவைத்திருக்கிறார். ஆகவே 'நாடான்' என்னும் பதம் நாட்டுடன் சம்பந்தப்பட்டிருப்பது அவர் மனதுக்கே தீர்க்கமுறத்தெரிந்த சத்தியம் என்பதற்கு ஐயமேயில்லை. அவ்வாறு அவருக்குத்தெரியாதிருக்குமேயாயின், 'நாடான் (=நாடாதவன்)' என்னும் பெயர்ப்பதத்துக்கு அடைதேடியவர் மேற்படிவினைக்கு இயல்பாக இணங்கத்தக்க சொற்களைச் சேர்த்து,

'இரையைநாடாதவன்,'

'புண்ணாக்கைநாடாதவன்,'

நாடி அடைமொழிதேடியவர் அதின் கருத்தைத்தெளிவிப் பதற்கு இயற்கையாய் வேண்டாத அடைகூறியிருக்கிறார்.

'நாடான்' என்னும்பதத்தின்கருத்து மாணக்கருக்கு விள ங்குதோ அல்லவோ என நிச்சயித்தறியவிரும்பிய ஆசிரிய னொருவன் மேற்படி மாணக்கரைப்பார்த்து, என்னத்தை நா டான் (=நாடாதவன்)? என வினவி அடைசேர்த்துரைத்துக் கருத்தைத்தெளிவிப்பது ஆசிரியனுக்கு இயற்கை. இவ்வாறு வினவினால், அதற்குவிடையாக,

பூலோகவின்பத்தை ⎫
வீட்டை ⎬ நாடான் (=நாடாதவன்)
இனசனத்தை ⎭

என்பதுபோலொத்த ஒரு அடைசேர்த்துக்கருத்தைத்தெளிவி ப்பது இயல்பாகும். இவ்வாறு இணங்கிய அடைகூறாமல், கருத்திற்கு இசையாததும், கருத்தைநிறைவாக்காததுமான அடைசேர்த்து "மேலோர்வசிக்கும்நாடுகளில் நாடாதவன்" எனக் கூறியிருக்கிறார் நூலாசிரியர்.

இதன்கருத்தை நிறைவாக்குதற்கு இரண்டுவினைக்கள் வின வி இயற்கைப்பதங்களை வருவித்துச்சேர்க்கவேண்டும். அந் தப்படிக்கு 'மேலோர்வசிக்கும் நாடுகளில்' என்னத்தைநா டான் (=நாடாதவன்)? எனவினவின், 'மேலோர்வசிக்கும் நாடுகளில் மேன்மையை நாடான்' என்பதுபோலொத்த வி டை ஏற்கும். பின்னும் மேலோர்வசிக்கும் நாடுகளில் என்னசெய்யநாடான் (=நாடாதவன்).? என வினவின், 'மேலோர்வசிக்கும் நாடுகளில் சண்டைசெய்யநாடான்' என் பதுபோலொத்த விடைஏற்கும்.

இது மேற்படிநூலாசிரியர் கருத்தேயாயின், 'மேலோர் வசிக்கும்நாடுகளில் மேன்மையைநாடாதவன்' என்றாவது, 'மேலோர்வசிக்கும்நாடுகளிற் சண்டைசெய்யநாடாதவன்' என்றாவது தாற்பரியம் எழுதவேண்டும். இவ்வகைத்தாற்பரி யம் அதில் அமையவில்லை.

இப்படியிருக்க, 'மேலோர்வசிக்கும்நாடுகளில் நாடாத வன்' என்று மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் எழுதி

யிருக்கிற தாற்பரியத்தைக்கூர்ந்து யோசித்துப்பார்க்கும்போது, இதனுள் அவருடைய இயற்கையான மனக்கருத்து வெளியாகின்றது. எவ்வாறெனில், மேற்படி நூலாசிரியருக்கு, 'நாடான்' என்னும்பதம் 'நாடு (=விரும்பு)' என்னும் வினைமுதலடியினின்று பிறந்து 'நாடாதவன் (=விரும்பாதவன்)' எனத்தாற்பரியம் பெற்றுவரும் எனவும், மேற்படி 'நாடான்' என்னும்பதம் 'நாடு (=தேசம்)' என்னும்பெயரடியிற்பிறந்து 'நாடான் (=அரசன்)' எனத்தாற்பரியம்பெற்றுவரும் எனவும், நன்குணர்ந்தவரானதினலும், 'நாடான்' என்ற சான்றோர்குலத்துச் சிறந்தபட்டப்பெயரானது 'நாடு (= தேசம்)' என்கிற மூலபதத்தினின்று பிறந்தபெயரென்றே தெரிந்தவரானதினலும், அவர் 'நாடான்' என்னும்பதத்துக்குத் தாற்பரியங் கூறப்புகுந்தபோது, முன்பின்யோசியாமல் 'மேலோர்வசிக்கும் நாடுகளில் நாடாதவன்' எனக்கூறிவிட்டார். ஆனதினலே, 'மேலோர்வசிக்குந்நாடு' என்னுந்தொடர்மொழியிலமைந்திருக்கின்ற 'நாடு (=தேசம்)' என்னும் மூலபதத்தினின்று 'நாடான்' என்னும் பெயர்ப்பதம் பிறந்திருப்பது அவருக்கு உள்ளுக்குள்ளாகத் தெளிவுறத்தெளிந்த உண்மை என்பதற்குச் சந்தேகமில்லை.

இந்தப்பிரகாரம், மேற்படி நூலாசிரியர் நினையாதவண்ணம், தமதுமனேரதப்படிக்கு எழுதியிருக்கிற அடைவாசகத்தில், 'நாடு (=தேசம்)' என்றொருபதத்தை அதனுள் திணித்துவைத்திருக்கிருர். ஆகவே 'நாடான்' என்னும் பதம் நாட்டுடன் சம்பந்தப்பட்டிருப்பது அவர் மனதுக்கே தீர்க்கமுறத்தெரிந்த சத்தியம் என்பதற்கு ஐயமேயில்லை. அவ்வாறு அவருக்குத்தெரியாதிருக்குமேயாயின், 'நாடான் (=நாடாதவன்)' என்னும் பெயர்ப்பதத்துக்கு அடைதேடியவர் மேற்படிவினைக்கு இயல்பாக இணங்கத்தக்க சொற்களைச் சேர்த்து,

'இரையைநாடாதவன்,'
'புண்ணுக்கைநாடாதவன்,'

'கத்தரிக்காயைநாடாதவன்,'
'பாவஞ்செய்யநாடாதவன்,'
'சண்டைபண்ணநாடாதவன்,'

என அடைசேர்த்து மேற்படிவினையின் கருத்தைத்தெளிவிக்கலாமே. இவ்வாறுதெளிவுகூருமல், 'மேலோர்வசிக்கும்நாடுகளில்' என அடைசேர்த்திருப்பதினுலே, 'நாடான்' என்னும் பெயர்ப்பதத்துக்கு அவர்தாமே நமக்கு மூலபதமும் தாற்பரியவுரையுங் கூறிக்காட்டியதுபோலிருக்கின்றது. ஆனதால், 'நாடான்' என்னும்பெயர்ப்பதத்துக்கு 'நாடு (=தேசம்)' என்பது மூலபதம் எனவும், 'நாடான்' என்னும் பெயர்ப்பதத்துக்கு 'மேலோர்வசிக்கும் நாடாள்பவன்' என்பது தாற்பரியம் எனவும் நமக்கு அவர்தாமே சொல்லித்தந்திருப்பதுபோலிருக்கிறது.

இந்தக்கருத்தின்படிக்கு, 'நாடான்' என்னும்பெயருக்கு,

'நாட்டுடன் சம்பந்தப்பட்டவன்,'
'நாட்டுக்குரிமையுடையவன்,'
'நாடாள்பவன்' என்பதுகருத்தாகும்.

ஆனதால், 'நாடான்' என்னுந்தமிழ்ச்சத்திரியகுலப்பட்டப்பெயருக்குத் 'தேசம்' என அருத்தங்கொள்ளுகின்ற 'நாடு' என்னும்பதம் மூலபதமாகும். இப்படி யிருப்பதினுல், நாம் இங்ஙனம்,

I. நாடு (=தேசம்) என்னும்பெயர்ப்பதத்தினின்று பிறந்துவந்து வழங்குகின்ற 'நாடான்' என்னும்பெயர்ப்பதத்திற்குச் சரியானதாற்பரியம் இன்னதென்றும்,

II. 'நாடான்' என்னும் பெயர்ப்பதத்தோடு இயல்பாகக் கூடிவருகின்ற அடைமொழிகளால் அதின்கருத்து இன்னதென்பது தெளிவுற விளங்குகின்றதென்றும்,

III. 'நாடான்' என்னும்பெயர் இன்னகுலத்தவர்களுக்குப் பட்டப்பெயராக நூல்வழக்கிலும், உலகவழக்கிலும் வந்து வழங்குகின்றதென்றும், இங்ஙனம் விபரப்படப்பார்க்க வேண்டியது.

ஆயினும் இந்த மூன்றுவிஷயங்களையும் முறையே எடுத்து விரித்துரைப்பதற்கு முன்னதாக, மேற்படி ஜாதிசங்கிரக சாரநூலாசிரியர் இதிற்காண்பித்திருக்கிற யுத்திக்குறைவை இங்ஙனஞ் சற்றுவிபரப்படக் கவனித்துப்பார்ப்போம்.

(i) நாடு (=தேசம்) பெயர். இந்த மூலப்பெயர்ப்பதத்தி னின்று 'நாடான்' என்னும் பெயர்ப்பதம் பிறந்துவந்திருக் கின்றது. ஆனதால், 'நாடான்' என்பதற்கு, 'நாட்டை யுடையவன்' என்று கருத்தாம்.

(ii) நாடு (=விரும்பு) வினை. இந்த மூலவினைப்பதத்தி னின்று 'நாடான்' என்னும் எதிர்மறைவினையாலணையும் பெ யர்ப்பதம் பிறந்திருக்கின்றது. ஆனதால், 'நாடான்' என்னும் வினைப்பெயர்ப் பகுபதத்திற்கு, 'நாடாதவன் (=விரும்பாத வன்)' என்பது பொருளாகும்.

மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரோ, மேலேகாட்டி யிருக்கிறபடிக்கு, வேண்டுமென்றே, பெயர்ப்பதமாகிய நாடு (=தேசம்) என்பதை மூலபதமாக எடுக்காமல், சரசம்பேசு கிறவர்களுக்கொப்பந்தம், நாடு (=விரும்பு) என்னும் வினைப் பதத்தை மூலபதமாகக்கொண்டு மேற்படி பெயர்ப்பகுபதத் தைப் பிறப்பித்து, 'நாடாதவன்' எனத் தாற்பரியம்பண்ணி யிருக்கிறார்.

'நாடு' என்னும்பதம் உபயார்த்தமானபதம். இதுபோ லான உபயார்த்தப்பதங்களிற் சிலவற்றைத் திருட்டாந்தங்க ளாக இங்ஙனம் எடுத்துக்கூறுவோம்.

சரசக்காரர்களாகிய வாலிபர்கள் கூட்டமிட்டுக்கொண்டு, சக்கந்தவார்த்தைகள்பேசிச் சிரித்து மகிழுமிடங்களில், ஒரு வருடனொருவர் பேசும் பேச்சுகளில் உபயார்த்தப்படத் தக்க மொழிகள் அகப்பட்டால் சும்மாவிடார்கள். அந்த மொழியை யுரைப்பவன் நினைத்தகருத்து இன்னதென்று தெ ரிந்திருந்தும், அதையொழித்துப்பேசியவன் நினையாத மற் றொருகருத்தை நகைப்புடன் வெளிப்படக்கூறிச் சிரித்து மகிழ்வதுண்டு. இவ்வாறு உபயார்த்தப்படத்தக்கமொழிகளிற்

சிலவற்றை இங்ஙனந்திருட்டாந்தங்களாக எடுத்துக்காண்பிப்போம். அவைவருமாறு :

(*i*) தேரான்.—இது 'தேர்' என்னும் மூலபதத்தினின்று பிறந்த உபயார்த்தப்பதம் :

(*a*) தேர் (=இரதம்) பெயர். ஆனதால், 'தேரான்' என்பதற்குத் 'தேரையுடையவன்' என்பதுகருத்தாம்.

(*b*) தேர் (=ஆராய்) வினை. ஆகவே, 'தேரான்' என்பதற்கு 'ஆராயாதவன்' என்பது பொருள்.

(*ii*) பாரான்.—இது 'பார்' என்னும் மூலபதத்தினின்று பிறந்த உபயார்த்தப்பதம் :

(*a*) பார் (=பூமி) பெயர். ஆனதால், 'பாரான்' என்பதற்கு, 'பாரையுடையவன் (=பூமிக்குடையவன்)' என்பது கருத்தாம்.

(*b*) பார் (=காண்) வினை. ஆகவே, 'பாரான்' என்பதற்குப் 'பாராதவன் (=காணுதவன்)' என்பது பொருள்.

இதுபோலவே, அடையான், உறியான், உடையான், தறியான் முதலான உபயார்த்தமொழிகளையும் எடுத்துப்பிரித்து உபயார்த்தப்படுத்திக் கண்டுகொள்க. உபயார்த்தங்கொள்ளுகின்ற பதங்கள் இருவகைக்கருத்துக்கொள்ளும். பேசுகிறவன் ஒருகருத்தை யமைத்துச்சொல்ல, மற்றவன் வேண்டுமென்றே மற்றொருகருத்தை எடுத்துக்கூறிச்சிரித்து மகிழவே, அங்ஙன மிருப்பவர்களெல்லோரும் கெக்கட்டமிட்டு நகைப்பார்கள். நகைத்துப்பழித்தலே அதின்பயன். உண்மை தோன்றப்பேசி யகமகிழ்தலே நிசவின்பம். விகடப்பேச்சுப்பேசிச் சிரித்தல் பேய்த்தனமாகும். பேசும்பொருள் கனங்கொண்ட பொருளேயாயின், அவ்வகைப்பேச்சினுள்ளே விகடப்பேச்சுப்பேசுதல் நகைப்புக்கல்ல வெறுப்புக்கேதுவாம்.

மேற்படி நூலாசிரியர் எடுத்துப்பேசுகின்றபொருள் விளையாட்டுப்பொருளல்லவே. இது விளையாட்டுப்பொருளல்லாத

தால் இதுவும் அவர்மீது குற்றமாகின்றது. அவர் 'நாடான்' என்னும் பட்டப்பெயருக்கு 'நாடாதவன்' எனப்பொருள் கூறுகிருர். இது மோட்டனத்தாற்பரியம் என்பதற்கு இங்ஙனம் ஒரு உதாரணம் எடுத்துரைப்போம்.

அருணுசலப்புராணம்,* வச்சிராங்கதபாண்டியன் சருக்கம், 40-வது கவி:

"வேழமும்பரியுந்தேரும் வீரருஞ்சுவடுநாடிச்
சூழுமந்திரிகளோடுஞ் சூழ்ந்தனர் துயரந்தீர்ந்தான்,
தாழையின்கமுகின்காடுந் தவளவான்கதிரைத்தீண்டும்
வாழையுங்கரும்பின் சாற்றின்வளர்ந்திடும்வையைநாடான்."

இந்தக்கவியில், வச்சிராங்கதபாண்டியனுக்கு 'வையைநாடான்' எனப் பட்டப்பெயர்வந்திருக்கின்றது. 'வையைநாடான்' என்பதற்கு 'வையைநதிபாய்நாடாள்வான்' என்பது கருத்தாம். உரையாசிரியர் 'நாடான்' என்பதற்கு 'நாட்டரசன்' எனத்தாற்பரியம் எழுதியிருக்கிருர்.

மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரோ 'நாடான்' என்னும் பட்டப்பெயருக்கு 'நாடாதவன்' எனத்தாற்பரியங்கூறியிருக்கின்ருர். அவ்வாறு தாற்பரியங்கூறினுல், 'வையைநாடான்' என்பதற்கு 'வையைநதியைநாடாதவன்' என்றுதாற்பரியமாகும். பாண்டியன் வையைநதியை நாடாதவனு? மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரே சொல்லட்டும் புத்திமான்கள் நடுச்சொல்லக்கடவர். ஆகவே, 'நாடான்' என்னும் பட்டப்பெயருக்கு 'நாடாதவன்' எனப் பொருள் கூறியிருப்பது மோட்டனத்தாற்பரியமல்லவா?

நாம் மேலேசொல்லியிருக்கிறபிரகாரம் 'நாடான்' என்னும் தமிழரசர்குலப்பட்டப்பெயரைக்குறித்து இங்ஙன மூன்றுவிஷயங்களை எடுத்துக்காட்டுவோம். அவைவருமாறு:

I. 'நாடான்' என்னும் பட்டப்பெயருக்குச் சரியானதாற்பரியம் இன்னதென்றும்,

---

* Published in A. D. 1842.

II. 'நாடான்' என்னும்பட்டப்பெயரோடு இயல்பாகச்சேர்ந்துவருகின்ற அடைகளால் அதன்தாற்பரியம் இன்னதென்பது தெளிவுறவிளங்குகிறதென்றும்,

III. 'நாடான்' என்னும்பட்டப்பெயர் இன்னகுலத்தவர்களுக்கு நூல்வழக்கிலும், உலகவழக்கிலும் வந்துவழங்குகிறதென்றும், இங்ஙனம் முறையே எடுத்துக்கூறுவோம். அந்த மூன்றுவிஷயங்களுள்,

I. 'நாடான்' என்னும்பட்டப்பெயருக்குச் சரியானதாற்பரியம் என்னை ?

ஒருபதம் உபயார்த்தப்பட்டு வழங்குமேயாயின், உத்தமஆசிரியர்கள் அவ்விருகருத்தையும் விதந்துகூறி, இந்தவிடத்தில் இவ்விரண்டுகருத்தில் இன்னகருத்து ஏற்குமென்று காட்டவேண்டுவது அவர்களுக்கு இயற்கையாம். அப்பதம் அடையின்றித் தனிப்பதமாக நிற்குமேயாயின், உபயார்த்தங்களிரண்டையும் விபரப்படக்கூறி, சும்மா விட்டுவிடவேண்டியது. ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரோ மேற்படி 'நாடான்' என்னும்பதத்தை நூற்சார்பிற்சொல்லாது, தனிமொழியாக எடுத்துக்கூறியிருப்பதால், அவர் 'நாடு' என்னும் மூலபதத்தை வினையாகக்கொண்டு, 'நாடாதவன்' என்பதாக அப்பதத்தின் ஒருகருத்தைத் தெரிவித்தபின்பு, 'நாடு' என்னும் மூலபதத்தைப் பெயராகக்கொண்டு, 'நாடான்' என்பதற்கு 'நாட்டையுடையவன்' என அதின் மறுகருத்தையும் விளங்கக்கூறாதது யாதுகாரணமோ அறிவுடையோர் சொல்லக்கடவர். 'நாடு' என்னும்பதம் உபயார்த்தப்படத்தக்கமொழியென்று தமக்குத்தெரியாததினாலே இரண்டாவதுகருத்தை மேற்படி நூலாசிரியார் விட்டிருப்பாரேயாயின், அது அவருடைய குற்றமன்று. அப்போது தெரியாமையினால் அதை விட்டுவிட்டாரென்க.

அந்த இரண்டாவது கருத்துத்தெரிந்திருக்க, அதை மறைக்கவேண்டுமென்கிற நோக்கத்தோடு சொல்லாதுவிட்டிருப்பாரேயாயின், அது என்னசெய்கையாகுமோ, இதை வாசிப்போர்தாமே நிதானித்துச் சொல்லட்டும்.

மேற்படிநூலில், 389-வதுபக்கத்திற் கண்டிருக்கிறவைக ளைக் கூர்ந்துபார்க்குமிடத்து, 'நாடான்' என்னும் பதந் தனிப் பதமாகநிற்க, அதன்தாற்பரியம் முன்பின் வருகின்ற அடை வாசகங்களோடு பிணிபட்டுச் சம்பந்தித்து நிற்கின்றது. அந் த அடைவாசகங்களைப்பார்க்குமிடத்து, 'நாடான்' என்னும் பெயர் கிராமணிகளாகிய சான்றோர்குலத்தவர்களுக்குரிய பட்டப்பெயர்என்று கண்டிருக்கின்றது. ஆனதால், மேற்படி நூலாசிரியர் 'நாடான்' என்னும்பெயர் கிராமணிகளாகிய சான்றோர்குலத்தவர்களுக்குரிய பட்டப்பெயர்என்று தெரிந்த வராய், அந்தப்பதத்துக்கு அர்த்தஞ்சொல்லப்புகுந்திருக்கிறார். அவ்வாறு அர்த்தஞ்சொல்லப்போனவர், மேற்படி 'நாடான்' என்னும்பதத்தின் உபயார்த்தங்களைத் தெரிவித்து, தாம் எடு த்ததுறைக்கு இன்னகருத்து ஏற்காதென்பதற்குத் தகுந்தநியா யங்கள் கூறி, அந்தக்கருத்தை ஒதுக்கிவிட்டு, மற்ற இரண்டா வதுகருத்து இந்த இடத்திற்கு ஏற்குமென்பதற்கேற்ற நியா யங்கள்காட்டி, அந்தக்கருத்தைத் தமது நூலில் அமைக்கவே ண்டுவது நியாயம். ஆயினும், அவர் அப்படிச்செய்யாதது பெரியோர்கள் கருத்திற்கிசையாது.

இனி 'நாடான்' என்னும் பட்டப்பெயர்ப்பதத்திற்கு இயற் கையான தாற்பரியம் இன்னதென்று இங்ஙனம் விரித்துரைப் போம்.

## 'நாடான்.'

'நாடு' என்னும் மூலபதத்தினின்று பிறந்துவழங்குகின் ற புகுபதப்பெயர்கள்,

> 'நாட்டான், நாடான், நாடன்
> நாட்டாள் (ம்) வான், நாடாள் (ம்) வான்'

என்னும் ஐந்துபெயர்களுமாம்.

இந்த ஐந்துபெயர்களுக்கும், 'நாட்டையுடையவன், பூமிக் குடையவன், அரசன்' என்பதுபொருளாகும்.

'நாடு' என்னும் மூலபதத்தினின்று இலக்கணவிதிப்பிர காரம் பிறந்த ஆண்பாற்பகுபதம், 'நாட்டான்' என்பது 'நாட் டான்' என்னும்பதம் இடைக்குறையால், 'நாடான்' என நின்

II. 'நாடான்' என்னும்பட்டப்பெயரோடு இயல்பாகச்சேர்ந்துவருகின்ற அடைகளால் அதன்தாற்பரியம் இன்னதென்பது தெளிவுறவிளங்குகிறதென்றும்,

III. 'நாடான்' என்னும்பட்டப்பெயர் இன்னகுலத்தவர்களுக்கு நூல்வழக்கிலும், உலகவழக்கிலும் வந்துவழங்குகிறதென்றும், இங்ஙனம் முறையே எடுத்துக்கூறுவோம். அந்த மூன்றுவிஷயங்களுள்,

I. 'நாடான்' என்னும்பட்டப்பெயருக்குச் சரியானதாற்பரியம் என்னை?

ஒருபதம் உபயார்த்தப்பட்டு வழங்குமேயாயின், உத்தமஆசிரியர்கள் அவ்விருகருத்தையும் விதந்துகூறி, இந்தவிடத்தில் இவ்விரண்டுகருத்தில் இன்னகருத்து ஏற்குமென்று காட்டவேண்டுவது அவர்களுக்கு இயற்கையாம். அப்பதம் அடையின்றித் தனிப்பதமாக நிற்குமேயாயின், உபயார்த்தங்களிரண்டையும் விபரப்படக்கூறி, சும்மா விட்டுவிடவேண்டியது. ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரோ மேற்படி 'நாடான்' என்னும்பதத்தை நூற்சார்பிற்சொல்லாது, தனிமொழியாக எடுத்துக்கூறியிருப்பதால், அவர் 'நாடு' என்னும் மூலபதத்தை வினையாகக்கொண்டு, 'நாடாதவன்' என்பதாக அப்பதத்தின் ஒருகருத்தைத் தெரிவித்தபின்பு, 'நாடு' என்னும் மூலபதத்தைப் பெயராகக்கொண்டு, 'நாடான்' என்பதற்கு 'நாட்டையுடையவன்' என அதின் மறுகருத்தையும் விளங்கக்கூறாதது யாது காரணமோ அறிவுடையோர் சொல்லக்கடவர். 'நாடு' என்னும்பதம் உபயார்த்தப்படத்தக்கமொழியென்று தமக்குத்தெரியாததினாலே இரண்டாவதுகருத்தை மேற்படி நூலாசிரியர் விட்டிருப்பாரேயாயின், அது அவருடைய குற்றமன்று. அப்போது தெரியாமையினால் அதை விட்டுவிட்டாரென்க.

அந்த இரண்டாவது கருத்துத்தெரிந்திருக்க, அதை மறைக்கவேண்டுமென்கிற நோக்கத்தோடு சொல்லாதுவிட்டிருப்பாரேயாயின், அது என்னசெய்கையாகுமோ, இதை வாசிப்போர்தாமே நிதானித்துச் சொல்லட்டும்.

மேற்படிநூலில், 389-வதுபக்கத்திற் கண்டிருக்கிறவைக ளைக் கூர்ந்துபார்க்குமிடத்து, 'நாடான்' என்னும் பதந் தனிப் பதமாகநிற்க, அதன்தாற்பரியம் முன்பின் வருகின்ற அடை வாசகங்களோடு பிணிபட்டுச் சம்பந்தித்து நிற்கின்றது. அந் த அடைவாசகங்களைப்பார்க்குமிடத்து, 'நாடான்' என்னும் பெயர் கிராமணிகளாகிய சான்றோர்குலத்தவர்களுக்குரிய பட்டப்பெயர்என்று கண்டிருக்கின்றது. ஆனதால், மேற்படி நூலாசிரியர் 'நாடான்' என்னும்பெயர் கிராமணிகளாகிய சான்றோர்குலத்தவர்களுக்குரிய பட்டப்பெயர்என்று தெரிந்த வராய், அந்தப்பதத்துக்கு அர்த்தஞ்சொல்லப்புகுந்திருக்கிறார். அவ்வாறு அர்த்தஞ்சொல்லப்போனவர், மேற்படி 'நாடான்' என்னும்பதத்தின் உபயார்த்தங்களைத் தெரிவித்து, தாம் எடு த்ததுறைக்கு இன்னகருத்து ஏற்காதென்பதற்குத் தகுந்தநியா யங்கள் கூறி, அந்தக்கருத்தை ஒதுக்கிவிட்டு, மற்ற இரண்டா வதுகருத்து இந்த இடத்திற்கு ஏற்குமென்பதற்கேற்ற நியா யங்கள்காட்டி, அந்தக்கருத்தைத் தமது நூலில் அமைக்கவே ண்டுவது நியாயம். ஆயினும், அவர் அப்படிச்செய்யாதது பெரியோர்கள் கருத்திற்கிசையாது.

இனி 'நாடான்' என்னும் பட்டப்பெயர்ப்பதத்திற்கு இயற் கையான தாற்பரியம் இன்னதென்று இங்ஙனம் விரித்துரைப் போம்.

## 'நாடான்.'

'நாடு' என்னும் மூலபதத்தினின்று பிறந்துவழங்குகின் ற புகுபதப்பெயர்கள்,

'நாட்டான், நாடான், நாடன்
நாட்டாள் (ம்) வான், நாடாள் (ம்) வான்'

என்னும் ஐந்துபெயர்களுமாம்.

இந்த ஐந்துபெயர்களுக்கும், 'நாட்டையுடையவன், பூமிக் குடையவன், அரசன்' என்பதுபொருளாகும்.

'நாடு' என்னும் மூலபதத்தினின்று இலக்கணவிதிப்பிர காரம் பிறந்த ஆண்பாற்பகுபதம், 'நாட்டான்' என்பது 'நாட் டான்' என்னும்பதம் இடைக்குறையால், 'நாடான்' என நின்

று, பின்பு குறுக்கல்விகாரத்தால் அன் விகுதிபெற்று, 'நாடன் எனவாயிற்று. ஆகவே, 'நாட்டான், நாடான், நாடன்' என்னும் இந்த மூன்றுபெயர்களும், ஒருபொருள்கொண்ட மொழிகளாம். இந்த் மூன்றுபெயர்களும் ஒருபொருட்பெயர்கள் என்பதற்குச் சில உதாரணங்கள் இங்ஙனங்கூறுவோம்.

(*i*) கூடு.—இந்த மூலபதத்தினின்று பிறந்து வழங்குகின்றபெயர்கள், 'கூட்டான், கூடான், கூடன்' என்பவைகளாம்.

அவை 'கூட்டையுடையவன் (=உடலன்)' என்னும், ஒரு பொருளில்வந்து வழங்குகின்றன. அப்படியாயின், 'நாட்டான், நாடான், நாடன்' என்னும் மூன்றுபெயர்களும் ஒருபொருளில் வரவில்லையென்று யார்சொல்லுவான்?

(*ii*) கோடு.—இந்த மூலபதத்தினின்று பிறந்துவழங்குகின்ற பெயர்கள், 'கோட்டான், கோடான், கோடன்' என்பவைகளாம்.

இந்த மூன்று பெயர்களும் 'கொம்பன்' என்னும் ஒரு பொருளில்வந்து வழங்குகின்றன. அப்படியாயின், 'நாட்டான், நாடான், நாடன்' என்னும் மூன்று பெயர்களும் ஒரு பொருளில் வரவில்லையென்று யார்சொல்லுவான்?

(*iii*) காடு.—இந்த மூலபதத்தினின்று பிறந்து வழங்குகின்றபெயர்கள். 'காட்டான், காடான், காடன்' என்பவைகளாம்.

இந்த மூன்றுபெயர்களும் 'வனத்தன்' என்னும் ஒரு பொருளில்வந்து வழங்குகின்றன. அப்படியாயின், 'நாட்டான், நாடான், நாடன்' என்னும் மூன்றுபெயர்களும் ஒரு பொருளில்வரவில்லையென்று யார்சொல்லுவான்?

நூல்வழக்கிலும், உலகவழக்கிலும் 'நாட்டான், நாடான், நாடன்' என்னும் மூன்றுபெயர்களுக்கும் பொருள் 'அரசன்,' என்பதாம். அதுவுமல்லாமல், 'நாடு' என்னும் மூலபதத்தினின்றே 'நாட்டாள் (=ழ்)வான்' 'நாடாள் (=ழ்)வான்' என்னும் பெயர்களும் பிறந்துவந்திருக்கின்றன. நாட்டாள்வன்' என்னும் பெயர் இடைக்குறையால் 'நாடாள்வான்' என வந்து

வழங்குகின்றது.'நாட்டாள்(=ழ்)வான்,நாடாள்(=ழ்)வான்'என்னும் இரண்டுபெயர்களுக்கும்பொருள் 'அரசன்'என்பதாம். இவைகளுக்கு நூல்வழக்கு இதனடியில் மூன்றாவது விஷயத்தை எடுத்துப்பேசும்போது விபரப்படக் கூறுவோம்.

II. 'நாட்டான், நாடான், நாடன், நாட்டாள் (=ழ்) வான், நாடாள் (=ழ்)வான்' என்னும் இவ்வைந்துபெயர்களும் அரசர்குலத்தினர்க்குரியபட்டப்பெயர்களாம். இந்தப்பட்டப் பெயர்களோடு இயல்பாகச் சேர்ந்துவருகின்ற அடைகளாலேயே அவற்றின்கருத்து இன்னதெனத் தெளிவுறவிளங்குகின்றதென்று காண்பிப்போம்.

இந்த அரசர்குலப்பட்டப்பெயர்களை நாட்டுப்பெயர்களோடும், நகரூர்ப்பெயர்களோடும், ஆற்றுப்பெயர்களோடும், ஆடவர்பெயர்களோடுஞ்சேர்த்துரைப்பது நூல்வழக்கும் உலகவழக்குமாம். அதற்கு இங்ஙனம் உதாரணங்கள் வருமாறு:

(i) நாட்டுப்பெயர்களோடு மேற்படி அரசர்குலப்பட்டப் பெயர்கள் முறையேசேர்ந்து வருமாறு:

(1) குருநாடு. இதினின்று,
குருநாட்டான்,
குருநாடான்,
குருநாடன்,
குருநாட்டாள் (=ழ்)வான்,
குருநாடாள் (=ழ்)வான், என்பவைகளும்,

(2) கானகநாடு. இதினின்று,
கானகநாட்டான்,
கானகநாடான்,
கானகநாடன்,
கானகநாட்டாள் (=ழ்)வான்,
கானகநாடாள்(=ழ்)வான், என்பவைகளும்,

(3) தமிழ்நாடு. இதினின்று,
தமிழ்நாட்டான்,
தமிழ்நாடான்,

தமிழ்நாடன்,
தமிழ்நாட்டாள் (=ழ்)வான்,
தமிழ்நாடாள் (=ழ்)வான், என்பவைகளும்,

(4) கம்பநாடு. இதினின்று,
கம்பநாட்டான்,
கம்பநாடான்,
கம்பநாடன்,
கம்பநாட்டாள் (=ழ்)வான்,
கம்பநாடாள் (=ழ்)வான், என்பவைகளும்,

(5) குட்டநாடு. இதினின்று,
குட்டநாட்டான்,
குட்டநாடான்,
குட்டநாடன்,
குட்டநாட்டாள் (=ழ்) வான்,
குட்டநாடாள் (=ழ்) வான், என்பவைகளும்,

நாட்டுப்பெயர்களோடு சேர்ந்து, 'அரசன்' என்னுங்கருத்தில் வந்து வழங்கியிருக்கின்றன.

இதுபோலவே மச்சநாடு, மலைநாடு, குடநாடு, கொற்கைநாடு, காயாம்புளிநாடு, நட்டாத்திநாடு, ஆலிநாடு, முதலான நாட்டுப்பெயர்களோடும் மேற்படி அரசர்குலப்பட்டப்பெயர்களையொட்டிக் கண்டுணர்க.

(*ii*) நகரூர்ப்பெயர்களோடு 'நாடான், நாடன்' முதலான பட்டப்பெயர்கள்கூடி வருமாறு:

திருக்குருகூர். —திருக்குருகூர்நாடான்,
திருக்குருகூர்நாடன், எனவும்,
சிவகாசி. —சிவகாசிநாடான்,
சிவகாசிநாடன், எனவும்,
ஆறுமுகனேரி. —ஆறுமுகனேரிநாடான்,
ஆறுமுகனேரிநாடன், எனவும்,
தென்றிருப்பதி. —தென்றிருப்பதிநாடான்,
தென்றிருப்பதிநாடன், எனவும்,

அறுப்புக்கோட்டை.—அறுப்புக்கோட்டை நாடான்,
அறுப்புக்கோட்டைநாடன், எனவும்,
நகரூர்ப்பெயர்களோடு சேர்ந்து, மேற்படி பட்டப்பெயர்கள் 'அரசன்' என்னுங் கருத்தில்வந்துவழங்கியிருக்கின்றன.

இதுபோலவே, தண்டப்பற்று, படுகைப்பற்று, காயல், தருவை, தென்காசி, முக்கூடல் முதலான நகரூர்ப்பெயர்களோடும் மேற்படி அரசர்குலப்பட்டப்பெயர்களையொட்டிக் கண்டுகொள்க.

(*iii*) நதிப்பெயர்களோடு 'நாடான், நாடன்' முதலான பட்டப்பெயர்கள்கூடி வருவதற்குத் திருட்டாந்தங்கள் :

வையை. —வையைநாடான்,
வையைநாடன், எனவும்,
பொன்னி. —பொன்னிநாடான்,
பொன்னிநாடன், எனவும்,
பொருநை.—பொருநைநாடான்,
பொருநைநாடன், எனவும்,
கங்கை. —கங்கைநாடான்,
கங்கைநாடன், எனவும்,
காளிந்தி. —காளிந்திநாடான்,
காளிந்திநாடன், எனவும்,

நதிப்பெயர்களோடுசேர்ந்து 'அரசன்' என்னுங்கருத்தில் வந்து வழங்கியிருக்கின்றன.

(*iv*) ஆடவர்பெயர்களோடு 'நாடான், நாடன்' முதலான பட்டப்பெயர்கள்சேர்ந்து வருமாறு :

சுப்பிரமணியன். —சுப்பிரமணியநாடான்,
—சுப்பிரமணியநாடன், எனவும்,
இராமன். —இராமநாடான்,
—இராமநாடன், எனவும்,
வீரவர்மமார்த்தாண்டன். —வீரவர்மமார்த்தாண்டநாடான்,
—வீரவர்மமார்த்தாண்ட நாடன், எனவும்,

தமிழ்நாடன்,
தமிழ்நாட்டாள் (=ழ்)வான்,
தமிழ்நாடாள் (=ழ்)வான், என்பவைகளும்,

(4) கம்பநாடு. இதினின்று,
கம்பநாட்டான்,
கம்பநாடான்,
கம்பநாடன்,
கம்பநாட்டாள் (=ழ்)வான்,
கம்பநாடாள் (=ழ்)வான், என்பவைகளும்,

(5) குட்டநாடு. இதினின்று,
குட்டநாட்டான்,
குட்டநாடான்,
குட்டநாடன்,
குட்டநாட்டாள் (=ழ்) வான்,
குட்டநாடாள் (=ழ்) வான், என்பவைகளும்,

நாட்டுப்பெயர்களோடு சேர்ந்து, 'அரசன்' என்னுங்கருத்தில் வந்து வழங்கியிருக்கின்றன.

இதுபோலவே மச்சநாடு, மலைநாடு, குடநாடு, கொற்கை நாடு, காயாம்புளிநாடு, நட்டாத்திநாடு, ஆலிநாடு, முதலான நாட்டுப்பெயர்களோடும் மேற்படி அரசர்குலப்பட்டப்பெயர் களையொட்டிக் கண்டுணர்க.

(*ii*) நகரூர்ப்பெயர்களோடு 'நாடான், நாடன்' முதலான பட்டப்பெயர்கள்கூடி வருமாறு:

திருக்குருகூர். —திருக்குருகூர்நாடான்,
திருக்குருகூர்நாடன், எனவும்,
சிவகாசி. —சிவகாசிநாடான்,
சிவகாசிநாடன், எனவும்,
ஆறுமுகனேரி. —ஆறுமுகனேரிநாடான்,
ஆறுமுகனேரிநாடன், எனவும்,
தென்றிருப்பதி. —தென்றிருப்பதிநாடான்,
தென்றிருப்பதிநாடன், எனவும்,

அறுப்புக்கோட்டை.—அறுப்புக்கோட்டை நாடான்,
அறுப்புக்கோட்டைநாடன், எனவும்,
நகரூர்ப்பெயர்களோடு சேர்ந்து, மேற்படி பட்டப்பெயர்கள் 'அரசன்' என்னும் கருத்தில்வந்துவழங்கியிருக்கின்றன.

இதுபோலவே, தண்டப்பற்று, படுகைப்பற்று, காயல், தருவை, தென்காசி, மூக்கூடல் முதலான நகரூர்ப்பெயர்களோடும் மேற்படி அரசர்குலப்பட்டப்பெயர்களையொட்டிக் கண்டுகொள்க.

(*iii*) நதிப்பெயர்களோடு 'நாடான், நாடன்' முதலான பட்டப்பெயர்கள்கூடி வருவதற்குத் திருட்டாந்தங்கள்:

வையை. —வையைநாடான்,
வையைநாடன், எனவும்,
பொன்னி.—பொன்னிநாடான்,
பொன்னிநாடன், எனவும்,
பொருநை.—பொருநைநாடான்,
பொருநைநாடன், எனவும்,
கங்கை. —கங்கைநாடான்,
கங்கைநாடன், எனவும்,
காளிந்தி. —காளிந்திநாடான்,
காளிந்திநாடன், எனவும்,

நதிப்பெயர்களோடுசேர்ந்து 'அரசன்' என்னுங்கருத்தில் வந்து வழங்கியிருக்கின்றன.

(*iv*) ஆடவர்பெயர்களோடு 'நாடான், நாடன்' முதலான பட்டப்பெயர்கள்சேர்ந்து வருமாறு:

சுப்பிரமணியன். —சுப்பிரமணியநாடான்,
—சுப்பிரமணியநாடன், எனவும்,
இராமன். —இராமநாடான்,
—இராமநாடன், எனவும்,
வீரவர்மமார்த்தாண்டன். —வீரவர்மமார்த்தாண்டநாடான்,
—வீரவர்மமார்த்தாண்ட நாடன், எனவும்,

நாகமணிமார்த்தாண்டன்.—நாகமணிமார்த்தாண்டநாடான்,
—நாகமணிமார்த்தாண்டநாடன்,
எனவும்,

ராமகிஷ்ணமுத்தாதித்தன்—ராமகிஷ்ணமுத்தாதித்தநாடான்,
—ராமகிஷ்ணமுத்தாதித்தநாடன்,
எனவும்,

நம்மையாள் (=ழ்)வார். —நம்மையாள்வார் நாடான்,
நம்மையாழ்வார்நாடன்,எனவும்,

ஆடவர்பெயர்களோடு சேர்ந்து 'அரசன்' என்னுங்கருத்தில் வந்துவழங்கியிருக்கின்றன.

இவ்வகை அடைமொழிச்சார்பில், 'நாடான், நாடன்' முதலானபட்டப்பெயர்கள் சேர்ந்து வருமிடங்களில், அப்பெயர்களின்கருத்து பட்டப்பகற்போல துலாம்பரமாக விளங்குகின்றது.

III. 'நாடான், நாடன்' என்னும் பட்டப்பெயர்கள் இன்னகுலத்தவர்களுக்கு உலகவழக்கிலும் நூல்வழக்கிலும்வந்து வழங்குகின்றதென்று இங்ஙனங் காண்பிப்போம். மேற்படி இரண்டுபெயர்களில் 'நாடான்' என்பது உலகவழக்கிலும், 'நாடன்' என்பது நூல்வழக்கிலும் மிகுந்துவரும். வடநாட்டுச்சத்திரியர்களுக்கு 'ராஜா' என்கிற பட்டப்பெயர்வந்துவழங்குகின்றபிரகாரம், தமிழ்நாட்டுச்சத்திரியர்களுக்கு 'நாடான், நாடன்' முதலான பட்டப்பெயர்கள் 'அரசன்' என்னுங்கருத்தில் நூல்களில் வந்துவழங்கியிருக்கின்றன. உதாரணம் வருமாறு:

(i) சேரனுக்குத் திவாகரத்தில், 'குடநாடன்' எனவும்,
,, சதுரகராதியில், 'குடக்கோன்' எனவும்,
,, நிகண்டில், 'குடக்கோ' எனவும், பெயர் கண்டிருக்கின்றது. இதில்,

நாடன், கோன், கோ } என்னும் அரசர்குலப்பட்டப்பெயர்கள் மூன்றும் ஒருபொருளில் வந்திருக்கின்றன. இவற்றுள்,

'கோன், கோ' என்னும் இரண்டுபட்டப்பெயர்களுக்கும் 'அரசன்' என்பது கருத்தானமையால், 'நாடன்' என்னும் பட்டப்பெயருக்கும் 'அரசன்' என்பதே கருத்தாம். ஆனதால்,

நாடன் = கோ
= கோன்
= அரசன்.

இப்படியிருக்க, 'நாடன்' என்னும்பட்டப்பெயருக்கு 'அரசன்' என்பது கருத்தல்லவென்று எவனுவது சொல்லத்துணிவானு?

மேலும், யாம் மேலே எண்பித்திருக்கிறபிரகாரம், 'நாடான், நாடன்' என்னும்பெயர்கள் ஒருபொருட்பெயர்களானபடியால், இவ்விருபெயர்களுக்கும் 'அரசன் என்பதேபொருளாம். ஆதலால்,

நாடன் = நாடான்.
= அரசன் என்பது தாற்பரியமாம்.

அன்றியும், குடநாடன் = குடக்குநாடான்.
= மேற்குநாடான்.
= மேல்நாடான்.
= மேனுடான்.
= மலேநாடான்.
= சேரராசன்.

இதுவுமன்றி, சோழநாட்டுக்குச் 'சோணுடு' என்னும்பெயர்வந்திருக்கின்றது. ஆகவே,

சோணுடன் = சோழநாடான்
= சோணுடான்
= புனனுடான்
= காவிரிநாடான்
= பொன்னிநாடான்
} = சோழராசன்.

(ii) ஔவையார்வாக்கு.

"காணுந்தேனுந்தேன் கடுகிவழிநடந்தேன்,
யான்வந்ததூரமெளிதன்று—கூனன்
கருந்தேனுக்கண்ணுந்த காவிரிசூழ்நாடா,
இருந்தேனுக்கெங்கேயிடம்."

இந்தச்செய்யுளில், 'நாடா' என்பது 'நாடான்' என்னும் பதத்தின் விளிவேற்றுமையாம். ஆனதால்,

நாடா = நாடானே
= அரசனே.

ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் உரையின்படிக்கோ, 'நாடா' என்பதற்கு 'நாடாதவனே' என்பதுபொருளாகும். அப்படியாயின், 'காவிரிசூழ்நாடா' என்பதற்குக் 'காவிரிசூழ்நாட்டைநாடாதவனே' என்பது தாற்பரியமாகுமே. சோழன் காவிரிசூழ்நாட்டை நாடாதவனு? இது எவ்வளவு நகைக்கப்படத்தக்கது? 'நாடான்' என்னும்பட்டப்பெயர் இந்தச்செய்யுட்சார்பில் 'நாடாதவன்' எனத்தாற்பரியங்கொள்ளுமா? மேற்படி நூலாசிரியர் தாமே இதற்கு விடைகூறட்டும்.

இந்தக்கவியில், சோழனுக்கும் 'நாடான்' எனப் பட்டப்பெயர்வந்திருக்கின்றது.

(iii) ஒளவையார்வாக்கு.

"புகார்மன்னன் பொன்னிப்புனனுடன்சோழன்
நகாதென்றுதானங்கிருந்து—நகாதே
கடிதின்வருகக்கடிக்கோவலூருக்கு
விடியப்பதினெட்டாநாள்."

இங்ஙனம், சோழனுக்கு

'புகார்மன்னன்' எனவும்,
'பொன்னிப்புனனுடன்' எனவும் பெயர்கள்வந்திருக்கின்றன.

'புகார்' என்பது காவிரிப்பூம்பட்டணம். பாண்டிநாட்டரசனுக்குக் கீழ்கடலருகில், திருச்சீரலைவாய் எனப் பெயர்கொண்ட திருச்செந்தூருக்குச் சமீபத்தில், தாமிரவன்னி நதியின் முகத்துவாரத்தில் கொற்கைநகர் பூர்வ இராசநகரமாயிருந்தபிரகாரம், சோழநாட்டரசனுக்கு, ஆதிச்சிதம்பரம் எனப் பெயர்கொண்ட திருவெண்காட்டிற்குச் சமீபத்தில், காவேரிநதி முகத்துவாரத்தில் கடற்கரையருகில் புகார் எனப்பெயர்பெற்ற காவிரிப்பூம்பட்டணம் பூர்வ இராசநகரமாயிருந்தது. ஆனதால், சோழனுக்கு 'புகார்மன்னன்' எனப்

பெயர்வந்திருக்கின்றது. பின்னும், சோழனுக்கு 'பொன்னிப்புனனுடன்' எனவும்பெயர் கொடுத்திருக்கிறது. 'பொன்னிப் புனனுடன்' என்பதற்குக் 'காவிரிநாடான்' என்பது கருத்தாம். ஆனதால்,

புகார் மன்னன்
பொன்னிப்புனனுடன் } =சோழராசன் என்றாகும். இதில்,

மன்னன்
நாடன் } என்னும் இரண்டு பட்டப்பெயர்களும் ஒருபொருளில் வந்திருக்கின்றன. ஆனபடியினாலே,

மன்னன் = நாடன்
= நாடான்
= அரசன்.

இதில், நாடன் என்பதற்கு 'மன்னன்' என இயல்பான தாற்பரியவுரை மேற்படி செய்யுளிலேயே வந்திருப்பதால், 'நாடான், நாடன்' என்னும் இரண்டு பட்டப்பெயர்களுக்கும் 'அரசன்' என்பதே கருத்து. அதற்கு எவ்வளவுஞ் சந்தேகமின்று.

(iv) பாண்டிவளநாடான் சமுகத்தில், கம்பர்வீட்டுப் பெண்களிலொருத்தி பாடியவெண்பா :

"தென்னவாமீனவா சீவிலிமாறாமதுரை
மன்னவாபாண்டிவளநாடா—முன்னஞ்
சுரும்புக்குத்தாரளித்த துய்யதமிழ்நாடா,
கரும்புக்குவேம்பிலேகண்."

இந்தச்செய்யுளில், பாண்டியனுக்கு,

தென்னவன்,
மீனவன்,
மாறன்,
மதுரைமன்னன்,
பாண்டிவளநாடான்,
தமிழ்நாடான், எனப்பெயர்கள் வந்திருக்கின்றன.

இதில், 'மன்னன், நாடான்' என்னும் இரண்டுபெயர்களும் ஒருபொருளில்வந்திருப்பதால்,

நாடான் = மன்னன்
= அரசன்.

ஆகையினலே, 'நாடான், நாடன்' என்னும் இருபெயர்களும் 'அரசன்' என்னும் ஒருபொருளில் வந்திருப்பது மிகவுந்தெளிவாய் விளங்குகின்றதே.

(v) அருணசலப்புராணம், வச்சிராங்கதபாண்டியன் சருக்கம், 40-வது கவி :

"வேழமும்பரியுந்தேரும் வீரருஞ்சுவடுநாடிச்
சூழமந்திரிகளோடுஞ் சூழ்ந்தனர் துயரந்தீர்ந்தான்
தாழையின்கமுகின்காடுந் தவளவான்கதிரைத்தீண்டும்
வாழையுங்கரும்பின்சாற்றின்வளர்ந்திடும்வையைநாடான்"

தாற்பரியம்.

பாண்டிவளநாடாண்ட மன்னர்குலத்திலுதித்த வச்சிராங்கதபாண்டியனுகிறவன், ஒருநாள் வனவேட்டையாடுதற்கு நாட்டமுற்றோனுய், இரதகஜதுரகபதாதிகளாகிய சதுரங்கசேனையுடன் பரிமாசாரியாய்ப்புறப்பட்டு, வனத்துட்புகுந்து வேட்டைகளாடுகையில், சேனைகளைவிட்டுப்பிரிந்து, எழும்பிய அழகான புனுகுப்பூனையொன்றை ஒன்றியாய்த்துரத்திக்கொண்டு போகையில், அது அருணசலமலையைச்சூழ்ந்தோடவே, அரசனும் அதைத்தொடர்ந்து சென்றனன். நாவியுமிறந்தது, அரசனுங்களைத்து மயங்கிவீழ்ந்தான். மந்திரி பிரதானிகள் சேனைகளுடன் பின்னுகச்சென்று, அரசனைக்கண்டபோது நடந்ததை இந்தக்கவிகூறுகின்றது. இவ்வாறு வந்து தன்னைச்சூழ்ந்துநின்றவர்களைப்பார்த்து, அரசன் ஆயாசந்தீர்ந்தான் எனச் சொல்லியிருக்கின்றது.

இங்ஙனம் பாண்டிவளநாடனை, 'வையைநாடான்' என நதிப்பெயருடன் அரசர்குலப்பட்டப்பெயர்சேர்த்துக் கூறியிருப்பதில், 'வையைநாடான்' என்பதற்கு 'வையைநதிசூழ்நாடாளும் அரசன்' என்பதுகருத்தாம்.

ஆனதால், 'நாடான், நாடன்' என்னும் இரண்டுபெயர்களும் 'அரசன்' என்னும் ஒருபெருள்கொண்டு வந்திருப்பது மிகவுந் தெளிவாய் விளங்குகின்றதல்லவா?

(vi) பெருந்தேவனார்செய்த பாரதவெண்பா, உத்தி யோகபருவம், 10-வது கவி :

" அச்சஞ்சூழ் சாபமர சழியவந்தவன்றன்
மச்சஞ்சூழ்நாடன் மகனோடும்—பிச்சஞ்சூழ்
மாச்சுற்றத்தேர்ச்சுற்ற மாயவன்றான் வந்தான்றன்
கோச்சுற்ற மத்தனையுங்கொண்டு."

இந்தக்கவியில் வருகின்ற 'மச்சநாடன்' என்னும்பெயருக்கு 'மச்சநாடாளும் மன்னன்' என்பது பொருளானமையால், 'நாடான், நாடன்' என்னும் பெயர்களிரண்டும் 'அரசன்' என்னும் ஒருபொருளில் வந்து வழங்கியிருக்கின்றன.

(vii) மேற்படி பாரதவெண்பா, உத்தியோகபருவம், 31-வது கவி :

" மூத்தானிருக்க விளையானரசாளல்
கோத்தருமமென்கின்றாய் கொற்றவனே—மாத்தன்
செறிகுன்றத்தெள்ளருவி செய்யலைக்குநாடா,
நெறிகுன்றச் சொல்லுவதோ நீ."

இங்ஙனம், சாத்தகி பலராமனைப்பார்த்து 'நாடா' என்கிறான். ஆனதால், 'நாடா' என்பதற்கு 'நாடானே' எனவும், 'அரசனே' எனவும் பொருளாம்.

(viii) மேற்படி பாரதவெண்பா, உத்தியோகபருவம், 44-வது கவி :

" அழித்தழித்தென்கண்முகப்பே யர்ச்சுனன்றன்னாண்மைக்
கிழித்தவரை நல்லாட்களென்றான்—சுழித்தரங்கஞ்
சிந்தியோடும்பழனச் சேணுடாபாண்டவர்க்காய்
வந்தியோகங்கைமகன்."

இந்தக்கவியில், கர்ணன் துரியோதனனை 'நாடா' என்கிறான். இதிலும் 'நாடா' என்பதற்கு 'நாடானே' என்பது பொருளாம். 'நாடானே' என்பதற்கு 'அரசனே' என்று உரையாசிரியர் தாற்பரியங்கூறுகிறார்.

(ix) மேற்படி பாரதவெண்பா, உத்தியோகபருவம், 46-வது கவி :

" மூதாதைதன்னைமுகநோக்கித் தான்முனிந்து,
போதாருஞ்சோலைப்புனனாட,—னீதானும்
வாயறியாய்மன்னர் வலியறியாய்வன்செருவிற்
போயறியாயென்னோ புகன்று."

இதில், அங்கதேசத்துக்கு அரசனாகிய கர்ணனைப் 'போதாருஞ்செல்வப்புனனாடன்' எனச் சொல்லியிருக்கின்றது. இங்ஙனம் 'நாடன்' என்பதற்கு 'அரசன்' என்பது உரையாசிரியர் தாற்பரியம்.

பாரதவெண்பாச்செய்த பெருந்தேவனார் சுத்தத்தமிழன். அரசர்குலத்திலுதித்த சத்திரியன். இவர்காலத்தில் அரசர்களுக்கும், அரசர்குலத்தவர்களுக்கும் 'நாடான், நாடன்' என்னும் பட்டப்பெயர்கள் சாதாரணமாய் வழங்கிவந்தன. 'தேவன்' என்பதும் பூர்வ அரசர்குலத்தவர்களுக்குரிய பட்டப்பெயராம். 'தேவன்' என்பதற்கு 'அரசன்' என்று பொருள்.

(x) திருவாதவூரர்புராணம், மந்திரிச்சருக்கம், 15-வது கவி :

" தென்னவன்பிரமராய னென்றருள்சிறந்தநாம
மன்னவர்மதிக்கநல்கி வையகமுய்ப்வதாக
மின்னவமணிட்பூணுடை வெண்மதிக்கவிகைதண்டு
பொன்னவிர்கவரிவேழ மளித்தனன்பொருனைநாடன்."

இந்தக்கவியில், திருவாதவூரிற்பிறந்த மாணிக்கவாசகர் பதினாறுபிராயத்திற்குள்ளாக வேதசாஸ்திரங்களிலும், கலைக்கியானங்களிலும், நீதிசாஸ்திரங்களிலும் வல்லவராகி நற்குண நற்செய்கைகளில் கீர்த்திப்பிரதாபரானபோது, அக்காலத்திற் பாண்டிவளநாடாண்ட மன்னனாகிய அரிமர்த்தனபாண்டியனாகிறவன் மேற்படி மாணிக்கவாசகரைத் தன்சபைக்கு வருத்தி மந்திரிப்பட்டங்கட்டினான். அப்போது அரிமர்த்தனபாண்டியன் மேற்படி மாணிக்கவாசகருக்கு "தென்னவன்

பிரமராயன்" எனப் பட்டப்பெயர்கொடுத்து பற்பல இராச விருதுகளுமளித்தவிபரம் இதிற்கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளில், அரிமர்த்தனபாண்டியனுக்கு 'பொருநைநாடன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. 'பொருநைநாடன்' என்பதற்கு தாமிரபன்னி எனப் பெயர்பெற்ற பொருநைநதிசூழ்நாடாளும் அரசன் என்பது கருத்தாம். நாடன் என்பதற்கு 'இராசன்' என்பது உரையாசிரியர் தாற்பரியம். ஆகவே,

நாடன் = அரசன்.

(xi) மேற்படிபுராணம், திருப்பெருந்துறைச்சருக்கம், 84-வது கவி:

"சென்றவர்வையைநாடன் றிகழ்சபைமுன்னரெய்தி
வன்றிறன்மன்னபோற்றி மாமதுரேசபோற்றி
யென்றுபின்வாதவூர ரெய்தியசெய்தியெல்லா
மொன்றியகவற்சிகூரு மூளத்துடனின்றுசொல்வார்."

இதில், தூதர்கள்போய் அரிமர்த்தனபாண்டியன் சமூகத்தில் மாணிக்கவாசகர் சைவதிருத்தொண்டராகிப் போனசெய்தியைத் தெரிவித்ததாகச் சொல்லியிருக்கிறது.

இங்ஙனம் பாண்டியனுக்கு 'வையைநாடன், வன்றிறன் மன்னன்' எனப்பெயர்கள் வந்திருக்கின்றன. மேலே (v)வது மேற்கோளில், அருணைசலப்புராணத்தில் வச்சிராங்கதபாண்டியனுக்கு 'வையைநாடான்' என பெயர்வந்திருக்கிறது. ஆனதால், 'நாடன், நாடான், மன்னன்' என்னும்பெயர்கள் ஒருபொருட்பெயர்களாம். ஆகவே,

நாடன் = நாடான்,
= மன்னன்,
= அரசன்.

(ix) மேற்படி பாரதவெண்பா, உத்தியோகபருவம், 46-வது கவி :

"மூதாதைதன்னைமுகநோக்கித் தான்முனிந்து,
போதாருஞ்சோலைப்புனனாட,—னீதானும்
வாயறியாய்மன்னர் வலியறியாய்வன்செருவிற்
போயறியாயென்றோ புகன்று."

இதில், அங்கதேசத்துக்கு அரசனாகிய கர்ணனைப் 'போதாருஞ்செல்வப்புனனாடன்' எனச் சொல்லியிருக்கின்றது. இங்ஙனம் 'நாடன்' என்பதற்கு 'அரசன்' என்பது உரையாசிரியர் தாற்பரியம்.

பாரதவெண்பாச்செய்த பெருந்தேவனார் சுத்தத்தமிழன். அரசர்குலத்திலுதித்த சத்திரியன். இவர்காலத்தில் அரசர்களுக்கும், அரசர்குலத்தவர்களுக்கும் 'நாடான், நாடன்' என்னும் பட்டப்பெயர்கள் சாதாரணமாய் வழங்கிவந்தன. 'தேவன்' என்பதும் பூர்வ அரசர்குலத்தவர்களுக்குரிய பட்டப்பெயராம். 'தேவன்' என்பதற்கு 'அரசன்' என்று பொருள்.

(x) திருவாதவூரர்புராணம், மந்திரிச்சருக்கம், 15-வது கவி :

"தென்னவன்பிரமராய னென்றருள்சிறந்தநாம
மன்னவர்மதிக்கநல்கி வையகமுப்பவதாக
மின்னவமணிப்பூணுடை வெண்மதிக்கவிகைதண்டு
பொன்னவிர்கவரிவேழ மளித்தனன்பொருனைநாடன்."

இந்தக்கவியில், திருவாதவூரிற்பிறந்த மாணிக்கவாசகர் பதினாறுபிராயத்திற்குள்ளாக வேதசாஸ்திரங்களிலும், கலைக்கியானங்களிலும், நீதிசாஸ்திரங்களிலும் வல்லவராகி நற்குண நற்செய்கைகளில் கீர்த்திப்பிரதாபரானபோது, அக்காலத்திற் பாண்டிவளநாடாண்ட மன்னனாகிய அரிமர்த்தனபாண்டியனாகிறவன் மேற்படி மாணிக்கவாசகரைத் தன்சபைக்கு வருத்தி மந்திரிப்பட்டங்கட்டினான். அப்போது அரிமர்த்தனபாண்டியன் மேற்படி மாணிக்கவாசகருக்கு "தென்னவன்

பிரமராயன்" எனப் பட்டப்பெயர்கொடுத்து பற்பல இராச விருதுகளுமளித்தவிபரம் இதிற்கூறியிருக்கின்றது.

இந்தச்செய்யுளில், அரிமர்த்தனபாண்டியனுக்கு 'பொருநைநாடன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. 'பொருநைநாடன்' என்பதற்கு தாமிரபன்னி எனப் பெயர்பெற்ற பொருநைநதிசூழ்நாடாளும் அரசன் என்பது கருத்தாம். நாடன் என்பதற்கு 'இராசன்' என்பது உரையாசிரியர் தாற்பரியம். ஆகவே,

நாடன் = அரசன்.

(xi) மேற்படிபுராணம், திருப்பெருந்துறைச்சருக்கம்; 84-வது கவி :

"சென்றவர்வையைநாடன் றிகழ்சபைமுன்னரெய்தி
வன்றிறன்மன்னபோற்றி மாமதுரேசபோற்றி
யென்றுபின்வாதவூ ரெய்தியசெய்தியெல்லா
மொன்றியகவற்சிகூரு மூளத்துடனின்றுசொல்வார்."

இதில், தூதர்கள்போய் அரிமர்த்தனபாண்டியன் சமூகத்தில் மாணிக்கவாசகர் சைவதிருத்தொண்டராகிப் போனசெய்தியைத் தெரிவித்ததாகச் சொல்லியிருக்கிறது.

இங்ஙனம் பாண்டியனுக்கு 'வையைநாடன், வன்றிறன் மன்னன்' எனப்பெயர்கள் வந்திருக்கின்றன. மேலே (v)வது மேற்கோளில், அருணசலப்புராணத்தில் வச்சிராங்கதபாண்டியனுக்கு 'வையைநாடான்' என பெயர்வந்திருக்கிறது. ஆனதால், 'நாடன், நாடான், மன்னன்' என்னும்பெயர்கள் ஒருபொருட்பெயர்களாம். ஆகவே,

நாடன் = நாடான்,
= மன்னன்,
= அரசன்.

(xii) மேற்படிபுராணம், மேற்படிசருக்கம்,
112-வது கவி:

"போற்றியெம்பொருனைநாட
போற்றியென்றிறைஞ்சிக்கூற
மாற்றமுண்டொன்றுநின்பேர்
புனைந்துளவரிசைபெற்ருேர்
சாற்றருந்துரகங்கொள்ள
நேரியன்றலத்திற்சார்ந்து
நீற்றினனடியார்கையி
னின்பொருள்யாவுமீந்தார்."

இந்தக்கவியிலும் பாண்டியனுக்கு முன்போல 'பொருனை நாடன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. இதிலும், 'நாடன்' என்பதற்கு அரசன் என்பது உரையாசிரியர் தாற்பரியம்.

(xiii) மேற்படிபுராணம், மேற்படிசருக்கம்,
114-வது கவி:

" மற்றவர்மொழிந்தவெல்லாம்
பொய்யுரைமன்னவென்னச்
சொற்றமிழ்வையைநாடன்
றூதரைவெருவநோக்கி
யற்றமில்சுருதிவல்லா
ரருட்பெருந்துறையிலெய்தி
யுற்றவெம்பரிகளுண்டே
லொல்லைவந்துரைமினென்ருன்."

இதிலும் பாண்டியனுக்கு 'மன்னன், வையைநாடன்' எனப் பெயர்கள் வந்திருக்கின்றன. ஆனதால் 'மன்னன், நாடன்' என்னும் பெயர்கள் ஒருபொருட்பெயர்களாகும்.

(xiv) மேற்படிபுராணம், குதிரையிட்டசருக்கம்,
30-வது கவி:

"வெளிப்படவரியமேனி விண்ணவன்கண்ணுநெஞ்சுங்
களிப்புறவருதல்கண்டுங் கண்டிலன்கன்னிநாட
னெளித்துலகெங்குதிற்போ னுறுபவமொழித்துஞான
மளித்திடினன்றியாவ ரவன்றிறந்தெரியவல்லார்."

இந்தக்கவியில் பாண்டியனுக்கு 'கன்னிநாடன்' எனப் பெயர்வந்திருக்கிறது. பாண்டிநாட்டுக்குக் 'கன்னிநாடு' என்றொருபெயர் வந்திருக்கின்றமையால், பாண்டிநாடானுக்குக் 'கன்னிநாடன்' எனப் பெயர்கூறியிருக்கிறது. இதற்கு மேற்கோள்:

திருநெல்வேலிப்புராணம், சிறப்புப்பாயிரம், 2-வது கவி:

"வேதனுநெடியமாலும் விளம்புதற்கரியதான
நாதனுமுலகமீன்ற நங்கையுநயந்துமேனாட்
டிதவமொழித்துமேலாஞ் சீர்கெழுமனுவிற்காக்க
மாதவமியற்றுநாடு வண்டமிழ்க்கன்னிநாடு."

இந்தக்கவியில்,பாண்டிவளநாட்டிற்குப் பூர்வத்தில் 'சிவனும் உமையவளும் விருப்புடன் தவஞ்செய்தநாடு' எனவும், 'வண்டமிழ்க்கன்னிநாடு' எனவும் பெயர்கள்வந்திருக்கின்றன. இதில், உமையவள், காளி, பார்வதிஎனப் பெயர்கொண்ட பகவதியம்மனவள் நித்தியகன்னி என்றெண்ணப்படுகின்றமையால், மேற்படி காளியம்மனுக்கு 'கன்னி' என்பதும் ஒருபெயராம். பூர்வதமிழ்நாட்டரசர்கள் தங்களைக் கயிலாசஆதிசிவன்மைந்தரெனவும், காளிபுத்திரரெனவும் பெயர்படைத்தவர்களானதால், தாங்கள் செங்கோற்செலுத்தியநாடுகளில் சிவாலயங்களையுங் காளியாலயங்களையும் திரளாகக்கட்டித் தங்கள்நாட்டிற்கு அவர்களைக் காவலர்களாக மதித்துவந்தனர். பாண்டியர்கள் தென்கடற்கரைப்பூமிமட்டுக்குஞ் செங்கோற் செலுத்திவந்தமையால், காளிகாதேவியாகிய பகவதியம்மனை அந்தஏறு கடைசியான தென்கடற்கரைப்பூமியில் ஸ்தாபகஞ் செய்யுதற்கு ஒரு ஆலயங்கட்டி அந்தவிடத்திற்குக் 'கன்னியாகுமரி' எனப்பெயரிட்டனர். ஆனதாற் பாண்டிநாட்டிற்குக் 'கன்னிநாடு' எனப்பெயராயிற்று.

அன்றியும், குலசேகரபாண்டியன்மகன் மலையத்துவசபாண்டியனுக்கு மீனாட்சி எனப் பெயர்கொண்ட *ஒருபுத்திரிமாத்திரமிருந்ததினாலே, ஆண்வழிச்சந்ததியில்லாத காரணத்தையி

* 'தடாதகைப்பிராட்டியார்.'—திருவிளையாடற்புராணம், 76-ம் பக்கம், காண்க.

ட்டு, சோமசுந்தரபாண்டியனுக்கு, மேற்படி மலையத்துவசபாண்டியன் தன்புத்திரி மீனாட்சியை மணம்புரிவித்து மருமகனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தனன். பரமசிவனவர் சோமசுந்தரபாண்டியனாக அவதாரஞ்செய்தாரெனவும், காளியாகிய உமையவள் மீனாட்சியாக அவதாரஞ்செய்தாளெனவும் புராணிகர்கள் கூறுகின்றமையால், மேற்படி புராணசித்தாந்தப்படிக்கு மீனாட்சியாகிய பகவதியம்மன் பாண்டியர்கள் நாட்டில் நித்தியகாவல்செய்பவளாக மதிக்கப்படுகிறபடியினாலும், மேற்படி பாண்டிநாட்டிற்குக் 'கன்னிநாடு' எனப்பெயருண்டாயிற்று. ஆனதால் பாண்டிநாடனுக்குக் 'கன்னிநாடன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. இதிலும் 'நாடன்' என்பதற்கு அரசன் என்று கருத்தாம்.

இதுபோலவே பாண்டியனுக்கு, மேற்படிபுராணம், குதிரையிட்டசருக்கம், 50-வது கவியில், 'முத்தமிழ்ப்பொருனைநாடன்' எனவும், மேற்படிபுராணம், மண்சுமந்தசருக்கம்,9-வது கவியில் 'கன்னிநன்னாடன்' எனவும் பெயர்கள்வந்திருக்கின்றன.

மேலும், காளியாகிய கன்னியே இந்தப்பாண்டிநாட்டிற்குக் காப்புஎன்பதற்கு இரண்டுமேற்கோள்கள் இங்ஙனங்கூறுவோம்.

திருநெல்வேலிப்புராணம், நகரச்சருக்கம், 81-வது கவி:

"அரனுயர்கயிலைதன்னி னமலையைநீவியென்னக்
கருதியேபரைதானீத்த காளிமங்காளியாகப்
புரிசடைப்பரமன்பிட்டா புரத்தியிந்நகர்காவென்னக்
கருணையோடவளேகாக்கக் கன்னிகாப்பென்றும்பேராம்."

இதில், பரமசிவனவர் பிட்டாபுரத்தி எனப்பெயர்பெற்ற காளியாகிய உமையவளைப்பார்த்து நீ இந்தநகரைக்காப்பாயாகவென்றுசொல்ல, அவளே அதைக்காத்தாள். அது கன்னிகாப்பாயிற்றென்று சொல்லியிருக்கின்றது. ஆனதால், 'கன்னிநாடு' என்பதற்குக் 'கன்னிகாவல்நாடு' என்பது தாற்பரியம். சான்றோர்புராணத்திலும் சுராபாண்டியராசவமிசத்தவர்களுக்குக் காளிகாதேவி புத்திரரென்றும், காளிகாதேவிக்

குப் பிட்டாபுரத்தியம்மன் என்றும் பெயர்கள்வந்திருக்கின் றன. அதுகாண்க. ஆனதால், சான்றோர்குலமூதாக்களாகிய பாண்டியர்கள் காளிகாதேவி தங்கள் குலநாயகியானதால், அவளைத் தங்கள் நாட்டிற்குக் காவலாகவைத்துத் தங்கள் நாட் டைக் 'கன்னிநாடு' என்றுசொல்லிவந்தார்கள்.

மேற்படிபுராணம், மேற்படிசருக்கம், 98-வது கவி:

"கூறுநான்கெல்லையவைதெரிந்துரைக்கிற்
குணதிசைக்குமரன்வாழ்செந்தூர்
மீறுதென்றிசைதான்குமரிவாழ்பதியா
மேற்றிசைசித்திராநதிப்பொன்
னூறுசேரருவியமுதெனப்பொழியு
மழகியதிரிகுடாலயமாந்
தேறுமுத்தரமாந்திசைவரராசை
சிறந்திடத்திகழுநெல்வேலி."

இக்கவியில் தென்பாண்டிநாட்டிற்கு கீழெல்லை 'குமரன் வாழ்செந்தூர்' என்வும், தென்னெல்கை 'குமரிவாழ்பதி' என வும், மேமெல்லைக 'திரிகூடமலே' எனவும், வடவெல்லை சா லிபுரம் எனப்பெயர்கொண்ட 'நெல்வேலி' எனவுங்கூறி யிருக்கின்றது. ஆனதால் தென்னெல்கைக்காவல் குமரிஎன ப்பெயர்பெற்ற காளிகாதேவியினதாம்.

(xv) சாதகசிந்தாமணி, 2,168-வது கவி:

"நறைகமழ்கமலப்பொகுட்டில்வீற்றிருக்கு
நான்முகக்கடவுடான்படைத்த
நிறைவுளமாந்தர்வினைப்பயனதனு
னிலைபெறுயோகமஞ்சரியாந்
துறையெனவழங்கும்வடமொழியதனைத்
தூயசெந்தமிழினுற்செய்தான்
றிறைகொடாவழுதிப்புகழ்தொண்டைநாடன்
றில்லைநாயகமகிபதியே."

இந்தச்சாதகசிந்தாமணி என்னும் நூலை வடமெழியினி ன்று தமிழில் மொழிபெயர்த்துக்காவியமாக்கியவன் தில்லை

நாயகபாண்டியராசன். அவனுக்கு இந்தக்கவியில் 'திறை கொடாவழுதி' எனவும், 'புகழ்தொண்டைநாடன்' எனவும் பட்டப்பெயர்கள்வந்திருக்கின்றன. இவற்றுள், 'திறைகொடாவழுதி' என்பதற்கு ஒருவருக்குந்திறைகட்டாது சுயாதீன பதியாய்ச் செங்கோற்செலுத்திய பாண்டியன் என்பது தாற்பரியம். 'புகழ்தொண்டைநாடன்' என்பதற்குக் கீர்த்திசிறந்த தொண்டைவளநாட்டிற் செங்கோற்செலுத்திய சான்றோர்குலத்தீபனை நாடான் என்பது கருத்தாம். ஆனதால்,

நாடன் = அரசன்.

தமிழ்நாட்டில் பூர்வத்தில்வந்து குடியேறிய சுராபாண்டியராச வமிசத்தவர்கள் மூன்றுபெருங்கிளைப்பிரிவார்களாய், விக்கிரபாண்டியன்வமிசத்துக்கிளைப்பிரிவார்கள் கொங்குவளநாட்டிலும், குலசேகரபாண்டியன் வமிசத்துக்கிளைப்பிரிவார் பாண்டிவளநாட்டிலும், சினம்பலபாண்டியன் வமிசத்துக் கிளைப்பிரிவார்கள் தொண்டைவளநாட்டிலுஞ் செங்கோற்செலுத்திவந்தார்கள்.

மேற்படி கவியிற் கூறியிருக்கின்ற தில்லைநாயகபாண்டியன் சினம்பலபாண்டியன் பரம்பரையிலுதித்தவன். இவன் அக்காலத்தில் குறுநிலமன்னனல்லன், திறை கொடாதவழுதி.

வழுதி = பாண்டியன்.

தொண்டைமண்டலத்துச் சான்றோர்குலத்திலகனை தில்லைநாயகபாண்டியனுக்கு நூல்வழக்கில் நாடன் என்கிற பட்டப்பெயர்வந்திருக்கின்றபடியால், தொண்டைமண்டலத்துச் சான்றோர்குலத்தவருக்கும் நூல்வழக்கில் 'நாடான்' என்கிறபெயர் வருமென்பது விளங்குகிறது.

(xvi) கம்பராமாயணம் தனியன்கள், 6-வது கவி:

"அம்பிலேசிலையைநாட்டி யமரர்க்கன் றமுதமீய்ந்த
தம்பிரானென்னத்தானுந் தமிழிலேதாலைநாட்டிக்
கம்பநாடுடையவள்ளற் கவிச்சக்ரவர்த்திபார்மேல்
நம்புபாமாலையாலே நாருக்கின்றமுதமீய்ந்தான்."

இந்தக்கவியில், கடல்கடையும்வண்ணம் மிகுபிரயாசத்தோடு பூர்வகாலத்தில் அமுதவுற்பத்திசெய்து சுரர்குலத்தவ

ர்களுக்கு அமுதபானம் அளித்தபிரகாரம், "கம்பநாடுடையவள்ளல்" எனவும், "கவிச்சக்கரவர்த்தி" எனவும் பெயர் பெற்ற கம்பநாடனுகிறவன் நரர்குலத்தவர்களுக்கு பாமாலையாகிய அமுதமீய்ந்தான் எனக் கூறியிருக்கின்றது. இதில் கம்பனுக்கு 'கம்பநாடுடைய வள்ளல்' எனப் பெயர்வந்தது காண்க.

(xvii) கம்பராமாயணம், தனியன்கள், 7-வது கவி:

"எண்ணியசகாத்தமெண்ணூற்றேழின்மேற்சடையன்வாழ்வு
நண்ணியவெண்ணெய்நல்லூர் தன்னிலேகம்பநாடன்
பண்ணியவிராமகாதை பங்குனியத்தநாளில்
கண்ணியவரங்கர்முன்னே கவியரங்கேற்றினனே."

இங்ஙனம், சாலிவாகன சகாப்தம் 807 ல் பங்குனிமாதத்து அத்தநட்சத்திரத்தில், கம்பன் தான்செய்து முடித்த இராமாயணக்காப்பியத்தை அரங்கேற்றினதாகக்கூறியிருக்கின்றது. ஆனதால் கம்பராமாயணம் அரங்கேற்றியது கி. பி. 884 ம் வருடமாம். இதில் கம்பனுக்குக் 'கம்பநாடன்' எனப் பெயர்வந்திருக்கிறது.

(xviii) கம்பராமாயணம், தனியன்கள், 4-வது கவி:

"கம்பநாடன்னுமை செவிசாற்றுபூங்
கொம்பநாடன் கொழுனனிராமப்பேர்
பம்பநாடழைக்குங் கதைபாச்செய்த
கம்பநாடன் கழல்தலையிற்கொள்வாம்."

இக்கவியிலும், கம்பனுக்குக் 'கம்பநாடன்' எனப் பெயர் கூறியிருக்கின்றது.

(xix) கம்பராமாயணம், தனியன்கள், 8-வது கவி:

"இம்பர்நாட்டிற்செல்வமெல்லா
மெய்தியரசாண்டிருந்தாலும்
உம்பர்நாட்டிற்கற்பகக்கா
வோங்குநீழலிருந்தாலுஞ்
செம்பொன்மேருவனையபுயத்
திறல்சேரிராமன்றிருக்கதையில்
கம்பநாடன்கவிதையிற்போற்
கற்றோர்க்கிதயங்களியாதே."

இதில், ஒருவன் இந்தப்பூலோகமுழுவதையும் ஒருகுடைக்குள் அடக்கியாண்டு சகலபாக்கியங்களும் பெற்றனுபவித்தாலும், சுரர்நாட்டில் கற்பகச்சோலைக்குள்ளே குடியிருந்து, அமிர்தபானம் நிருமிதஞ்செய்து, அந்த அமுதம் உண்டு மகிழ்ந்து வாழ்ந்திருந்தாலும், அவைகள் கம்பனியற்றிய இராமாயணக்காப்பியத்தைப்போல மனதுக்கு மதுரந்தரத்தக்கவையல்ல எனக் கூறியிருக்கின்றது. இங்ஙனம், கம்பனுக்குக் 'கம்பநாடன்' எனப் பெயர்வந்திருக்கிறது. இதிற்கூறியிருக்கிற சுரர்நாட்டுக் கற்பகச்சோலைகளுந் தமிழ்நாட்டுத் தாலந் தெங்கு ஈந்து விருக்ஷச்சோலைகளும் ஒன்றேயாம்.

'கற்பவிருக்ஷம் = கற்பகவிருக்ஷம்,
= தாலவிருக்ஷம்,
= பனைவிருக்ஷம்.

தாலந் தெங்கு ஈந்து என்னும் மூவகை அமுதவிருக்ஷங்களும் கற்பகவிருக்ஷங்களாயினும், தாலவிருக்ஷமே சிறப்பால் கற்பகவிருக்ஷமாகும். விபரம் வருமாறு:

*a.* விவேகசிந்தாமணி, 11-வது கவி:

"கற்பகத்தருவைச்சார்ந்த காகமுமமிர்தமுண்ணும்
விற்பனவிவேகமுள்ள வேந்தரைச்சேர்ந்தோர்வாழ்வர்
இப்புவிதன்னிலென்று மிலவுகாத்திடுங்கிளிப்போ
லற்பரைச்சேர்ந்தோர்வாழ்வ தரிதரிதாகுமம்மா."

இக்கவியில், உத்தமர்களாகிய அரசர்களைச்சார்ந்தவர்கள் வாழுகின்றபிரகாரம், அமுதவிருக்ஷங்களுள் இராசவிருக்ஷமாகிய தாலவிருக்ஷத்தைச்சார்ந்த காகங்கள் அதின் மண்டையில், உற்பத்தியாகின்ற மதுவைஉண்டு வாழ்கின்றன எனக் கூறியிருக்கின்றது. இதில்,

கற்பகத்தரு = தாலம்,
= பனை.

*b.* உலகவழக்கில் 'காளிதோட்டத்துக் கற்பகம்போல' என்றொருபழமொழி வந்துவழங்குகின்றது. இதில்,

கற்பகம் = தாலம்,
= பனை.

c. உலகவழக்கில் தாலவிருக்ஷமதுவிற்செய்கின்ற சர்க்கரைக்குக் 'கற்பக்கட்டி' எனப் பெயர்வந்துவழங்குகிறது. ஆனதால்,

கற்பம் = கற்பகம்,
= தாலம்,
= பனை.

d. உலகவழக்கில், சோழநாட்டில், தெங்குவிருக்ஷங்களுக்கு நாளதும் கற்பகவிருக்ஷங்கள் என்றே சாதாரணமாகப் பெயர்வழங்கிவருகின்றது.

e. மதுரைவீரன்கதை, 4-வது பக்கம், நாட்டுச்சிறப்பு.

" மாதரும்மாரி வழங்குந்திருநாடு
காதமணம்வீசும் கற்பகஞ்சேர் நன்னாடு."

இதில், காசிநாடு கற்பகச்சோலைகளுள்ள நாடெனச் சொல்லியிருக்கின்றது. ஆனதால் காசிநாட்டுக் கற்பகவிருக்ஷங்கள் தாலந் தெங்குமுதலான அமுதவிருக்ஷங்களே யல்லாது வேறன்று. ஆகவே,

கற்பகம் = தாலம்,
= பனை.

f. 'கல்பம்' என்பது நெடுங்காலமாம். தாலவிருக்ஷங்கள் ஆயிரம் வருடத்திற்கு மேற்படவிருக்கின்ற தன்மையுடையவைகளானபடியால், தாலவிருக்ஷத்திற்குக் கல்பவிருக்ஷம் (=கற்பவிருக்ஷம்) எனப் பெயர்வந்து வழங்குகின்றது. அன்றியும், 'கற்பம்' என்னும் மொழி ககரம் என்னும் எழுத்துப்பேறுபெற்று, 'கற்பகம்' எனவும் வழங்கும். ஆனதால்,

கல்பவிருக்ஷம் = கற்பவிருக்ஷம்,
= கற்பகவிருக்ஷம்,
= தாலவிருக்ஷம்,
= பனைவிருக்ஷம்;

ரு. கம்பராமாயணம், பாலகாண்டம், மிதிலைக்காட்சிப் படலம், 118-வது கவி :

"நறைத்தருவுடையகோனு நான்முகக்கடவுடானும்
கறைத்தருகளனுமற்றைக்கடவுளர் பிறருந்தொக்குப்
பொறுத்தருண் முனிவநின்னைப்புகல்புகுந்தவனைப்போற்றும்
அறத்திறனன்றுதாரா கணத்தொடுமேமைகவன்னன்."

இக்கவியில், இந்திரனுக்கு 'நறைத்தருவுடையகோன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. 'நறைத்தருவுடையகோன்' என்பதற்கு 'மதுவிருக்ஷத்தையுடைய அரசன்' என்பது கருத்தாம். இதில், கற்பகவிருக்ஷத்துக்கு 'நறைத்தரு' எனப் பெயர்வந்திருப்பதால், தாலதெங்காதியமுதவிருக்ஷங்களே கற்பகவிருக்ஷங்களாம்.

ஹ. சிதம்பரப்புராணம், சிதம்பரமான்மியச்சருக்கம், 16-வது கவி :

"விரிபசுந்தழை விளங்கியவெதிரியென்றுரைத்தற்
குரியசெங்கனி யிரந்தையங்கானநின்றொளிர
வரியிலங்கிய கற்பகமளவில்பன்மரங்க
டெரிவரும்பல பறவைமாத்திகழ்ந்திடாநிற்கும்."

இந்தக்கவியில், கங்காநதிபாய்நாட்டில் கற்பகவிருக்ஷங்கள் பெருந்தொகைகொண்டிருப்பதாகச் சொல்லியிருக்கின்றது. ஆனதால், காசிநாட்டுக் கற்பகங்கள், சுரர்நாட்டுக் கற்பகவிருக்ஷங்களேயாம். இதனால் தாலதெங்காதியமுதவிருக்ஷங்களே கற்பகவிருக்ஷங்கள் என்பது நன்றாய் விளங்குகின்றது. இது நிற்க,

மேலே கூறியிருக்கிறபிரகாரம், கம்பராமாயணம், தனியன்கள்,

6-வது கவியில், 'கம்பநாடுடையவள்ளல்' எனவும்,

7-வது கவியில், 'கம்பநாடன்' எனவும்,

4-வது கவியில், 'கம்பநாடன்' எனவும்,

8-வது கவியில், 'கம்பநாடன்' எனவும்,

கம்பனுக்குப்பெயர்கள் வந்திருக்கின்றன. இவைகள் ஒருபொருட்பெயர்களாம்.

கம்பன் குறுநிலமன்னர் வரிஸ்சையைச்சேர்ந்த சத்திரியகுலச் சான்றோனபடியினலே அவனுக்கு ' நாடன், நாடான்' என அரசர்குலப்பட்டப்பெயர்கள் இயற்கைப்பட்டப்பெயர்களாயின. இதுவுமன்றி, கம்பநாடனுக்கு ' கம்பநாட்டாழ்(=ள்) வான்' எனவும் சத்திரியகுலப்பட்டப்பெயர் நூல்வழக்கில் வந்திருக்கிறது.

(xx) கம்பராமாயணம், தனியன்கள், 1-வது கவி:

" தராதலத்தினுள்ள தமிழ்க்குற்றமெல்லாம்
அராவுமரமாயிற்றன்றே—இராவணன்மேல்
அம்புநாட்டாழ்வானடிப்பணியுமாதித்தன்
கம்பநாட்டாழ்வான் கவி."

இந்தக்கவியில், கம்பநாடனுக்குக் ' கம்பநாட்டாழ்(=ள்) வான்' எனப் பட்டப்பெயர் வந்திருக்கின்றது. மேலும் ' ஆதித்தன்' எனவும் பெயர்வந்திருப்பதால், கம்பன் சூரியகுலச்சத்திரியன் எனத் தெரியவருகிறது.

(xxi) கம்பராமாயணம், தனியன்கள், 2-வது கவி:

" வாழ்வார்திருவெண்ணெய் நல்லூர்ச்சடையப்பன்
வாழ்த்துபெறத்
தாழ்வாருயரப் புலவோரகவிருள்தானகலப்
போழ்வார்கதிரினுதித்த தெய்வப்புலமைக்கம்பநாட்
டாழ்வார்பதத்தைச் சிந்திப்பவர்க்கியாதுமரியதன்றே."

இக்கவியிலும் கம்பனுக்குக் 'கம்பநாட்டாழ்வான்' எனப் பட்டப்பெயர் வந்திருக்கின்றது. மேலும், ' கதிரினுதித்தகம்பன்' எனவும் வருவதால், கம்பன் சூரியகுலச்சத்திரியச் சான்றோனும்.

மேலே தெளிவுரை கூறியிருக்கிறபிரகாரம், ' நாட்டாழ் (=ள்) வான், நாடாழ் (=ள்) வான்' என்னும் பட்டப்பெயர்கள் இரண்டிற்கும் ' அரசன்' என்பது கருத்தாகும். ஆனதால் ' ஆள்வான்' என்பதும், ' ஆழ்வான்' என்பதும் ஒரு பொருட் சொற்கள். வடமொழிக்குந் தென்மொழிக்கும் பொதுவெ

ழுத்தாகிய ளகரத்திற்கு, தென்மொழிக்கேயுரிய சிறப்பெழுத்தாகிய ழகரம்வந்து வழங்குவது பூர்வதமிழ்வழக்காம்.*

இதுபோலவே, 'சோழநாடு' என்னும்பெயர் 'சோளநாடு' என மாறி, பின்பு 'சோள்நாடு' என நின்று, அப்பால் 'சோணாடு' என இலக்கணவிதிப்பிரகாரம் திரிந்து வந்திருக்கின்றது. 'கம்பநாட்டாழ்வான்' என்னும்பெயர், தமிழ்வழக்கில் 'கம்பநாட்டாள்வான்' எனமாறிப் பின்பு இடைக்குறையால் 'கம்பநாடாள்வான்' என நின்று, 'கம்பநாடுடையவள்ளல்' என்பதுடன் பொருளிலொத்துவந்து, 'நாட்டரசன்' என்னுங் கருத்தில் வந்து வழங்கியிருக்கின்றது. ஆனபடியினாலே, 'கம்பநாடன், கம்பநாடான், கம்பநாட்டாழ் (=ள்) வான், கம்பநாடாழ் (=ள்) வான், கம்பநாடுடையவள்ளல், கம்பநாட்டரசன்' என்பன ஒருபொருட்பெயர்களாம். ஆகவே,

---

* ழகரமும் ளகரமுந் தமிழில் ஒத்துநடந்து, ழகரத்திற்கு ளகரமும், ளகரத்திற்கு ழகரமும் வந்துவழங்குதற்கு விதி வீரசோழியத்தில் வருமாறு :

"முன்னருமுவைந் தொருபதினொன்றுமுற்பதும
வன்னமெனுநடைமாதேயோரேழுநிலாகுமைந்து
பன்னருமெட்டுறிலாறுகு மாதிப்பழமறைநூற்
சொன்னமயேச்சுர நூற்றுணிபாமெனச்சொல்லுவரே."

உதாரணமாக,

வாழ்நாள் = வாள்நாள்,
= வாணாள்.
திகழ் + தசம் + கரம் = திகள் + தசம் + கரம்,
= திகடசகரம்.
சோழநாடு = சோழ்நாடு,
= சோள்நாடு,
= சோணாடு.
ஈழநாடு = ஈழ்நாடு,
= ஈள்நாடு,
= ஈணாடு.
ஆழ்வான் = ஆள்வான்
நாடாழ்வான் = நாடாள்வான்.
நாட்டாழ்வான் = நாட்டாள்வான்,
பிறவுமன்ன.

நாடன் = நாடான்,
= நாட்டாழ் (=ஸ்) வான்,
= நாடாழ் (=ஸ்) வான்,
= நாடுடையவள்ளல்,
= நாட்டரசன்.

கம்பநாடன் சத்திரியகுலச்சான்றோன் என்பதற்கு இன்னமும் ஒருசாக்ஷி எடுத்துரைப்போம்.

(xxii) மகா அங்கிலேய வித்துவானாகிய உவின்சிலோ ஆசிரியர் எழுதிய அகராதிநூலின் பாயிரத்தில் கம்பநாடான் உற்பத்திப்பூர்வோத்திரத்தை உரைத்திருக்கின்றனர். அதுவருமாறு:

"The imitation, not translation, of the Ramayana, was composed about the eleventh century, A. D., by Kamban, *the son of a king*, and not of the priestly tribe. His production, consisting of 12,016 stanzas, in six books, is considered by learned Tamilians as superior to the original."

இதற்குத் தமிழில் தாற்பரியவுரை.

"இராமாயணம் எழுதினவன் கம்பநாடன். அவன் கிறிஸ்துவுக்குப்பின் பதினோராநூற்றாண்டிலிருந்தவன். வடமொழியில் வான்மீகி எழுதிய இராமாயணத்தை இவன் தமிழில் மொழிபெயர்ப்பாக்காமல் அதன்பொருளைத் தன் மனோரதப்படி விரித்தெழுதியிருக்கிறான். இவன் ஒரு அரசன்புத்திரன், இவன் புரோகிதர் குலத்தவனல்லன். இவன் எழுதிய தமிழ் இராமாயணம் ஆறுகாண்டம். இது 12,016 விருத்தங்களடங்கிய பெருங்காப்பியம்."

இதனால், கம்பநாடான் தமிழரசர்குலத்திலுதித்த சத்திரியகுலச்சான்றோன் என்பதற்குச் சந்தேகமில்லை யெனத் தெரியவருகின்றது. கம்பநாடான் தமிழ்நாட்டரசர்குலத்தவன் என்பதற்கு இன்னமும் ஒரு சாக்ஷிகூறுவோம்.

(xxiii) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், விடைகொ
டுத்தபடலம், 43-வது கவி :

இந்தவிருத்தம் அச்சுப்பிரதியில் விடப்பட்டும், ஏட்டுப்பிர
தியில் வரையப்பட்டுமிருக்கின்றது.

"இம்பருமும்பர்தாமு மேற்றிடுமிராமன்காதை
தம்பமாய்முத்திசேர்த்தல் சத்தியஞ்சத்தியமே
அம்பரமதனின்மேவு மாதித்தன்புதல்வன்ஞானக்
கம்பன்சொல்கமலபாதங் கருத்துறவிருத்துவாமே."

இக்கவியில், 'அம்பரமதனின்மேவு மாதித்தன் புதல்வன் ஞானக்கம்பன்சொல்' எனக்கூறியிருக்கின்றது. இந்தச்சுலோகத்திற்கு 'ஆகாயத்தின் கண்ணே விளங்காநின்ற சூரியன் புதல்வனுன திவ்வியஞானத்தில் முதிர்ந்த கம்பநாடன் கூறிய காப்பியம்' என்பது தாற்பரியமாம். இதில்வருகின்ற,

'ஆதித்தன் புதல்வன்கம்பன்' என்பதற்குச் 'சூரியவம்சச் சோணுட்டரசர்கிளையிலுதித்த கம்பநாடன் எனப்பெயர்கொண்ட சத்திரியன்' என்பது பொருளாம். மேலும் 'ஆதித்தன்' என்பதற்குச் 'சான்றேன்' எனவும் அருத்தமாம். ஆனதால் கம்பநாடன் சான்றோர் குலச்சத்திரியனும். நாளதும் 'ஆதித்தநாடன்' எனப் பட்டப்பெயர்பெற்றுவருகின்ற சான்றோர்குலப்பூர்வவம்சக்கிளைப்பிரிவாருள் ஒருபிரிவார், பூர்வகொற்கை நகரிக்குத்தெற்கில் ஒரு சிறுநாட்டிற்குரிமையுடையவர்களாயிருந்து வருகின்றனர். இதில், 'ஆதித்தநாடான்' என்பதற்குச் 'சூரியவம்சச்சத்திரியன்' என்பது பொருளாம்.

அன்றியும், நாளதும் 'நட்டாத்திநாடன்' எனப் பட்டப்பெயர் பெற்றுவருகின்ற சான்றோர்குலப் பூர்வவம்சக்கிளைப்பிரிவாருள் வேறொருபிரிவார், மேற்படி கொற்கைநகரிக்கு வடக்கில் ஒரு சிறுநாட்டிற்குரிமையுடையவர்களாயிருந்து வருகிறார்கள். இதில், 'ஆத்திநாடான்' என்பதற்கு 'ஆத்திமாலை தரித்த சூரியவம்சச்சத்திரியன்' என்பதுபொருளாகும்.

(xxiv) கம்பநாடனுடைய சிலாரூபம்.

ஸ்ரீரங்கம் பெரிய ஆலயத்திற்குள்ளே யிருக்கிற கம்பநாடானுடைய சிலையானது வடிகாதும், கொண்டையும் அரசர்குலத்தோற்றமுமுடையதாகச் சமைக்கப்பட்டிருக்கின்றது. ஆனதால், கம்பநாடான் அரசர்குலத்திலுதித்த சத்திரியச்சான்றோன் என நன்றாய்விளங்குகிறது.

(xxv) திருவானைக்காப்புராணம், திருநகரச்சிறப்பு, 80-வது கவி:

"வேள்விமுற்றியவேதியர் வேறுவேறாரும்
வாள்விமானமுமிரதமு மதவிளங்களிறும்
தாள்விசைத்தெழுபுரவியுந் தகைதலின்வீதி
யாள்வினைத்திறத் தரசர்வீதிகளொடமர்த்த."

இக்கவியில், அந்தணர்வீதிகூறியபின்னர், மன்னர்வீதி கூறப்புகுந்த புராணிகர், அவ்வீதியை 'ஆள்வினைத்திறத்தரசர் வீதி' என்கிறார். 'ஆள்வினைத்திறத்தரசர்' என்பதற்குப் பிறநூல்களில் 'ஆள் (=ம்) வார்' என்றும், 'நாடாள் (=ம்) வார்' என்றும் பட்டப்பெயர்கள் வந்திருக்கின்றன. ஆள்வினையானது அரசர்குலத்தவர்களுக்கிருக்கவேண்டிய முக்கியகுணங்களிலொன்றென்று நூல்கள் முறையிடுகின்றன. திருட்டாந்தமாக,

(xxvi) பெருந்தேவனார் பாரதவெண்பா, உத்தியோக பருவம், 4-வது கவி:

"வண்மையாற்கல்வியான் மாபலத்தாலாள்வினையால்
உண்மையாற்பாராளுரிமையால் திண்மையால்
தேர்வேந்தர்வானேறத் தெள்ளாற்றில்வென்றானோ
டேர்வேந்தரேற்பாரெதிர்."

இத்தக்கவி மன்னர்குலத்தவர்களுக்கிருக்கவேண்டிய

வண்மை, கல்வி, பலம்,
ஆள்வினை, உண்மை,
பாராளுரிமை, திண்மை,

என்னும் ஏழுகுணங்கள் கூறுகின்றது. இந்த ஏழுகுணங்களில், ஆள்வினையானது முக்கியகுணமாம். ஆனதால், ஆள்வினையுடையோருக்கு 'ஆள்வார்' என்றும், 'நாடாள்வார்' என்றும் பெயர்கள்வந்திருக்கின்றன. ஆகையினாலே, 'ஆள்வான், நாடாள்வான்' என்னும்பெயர்களுக்கு 'அரசன்' என்பது பொருளாம்.

(xxvii) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், தைலமாட்டுபடலம், 39-வது கவி :

" ஆள்வினையாண்மை யிற்றிறம்பலன்றெனுத்
தாள்முதல்வணங்கிய தனித்திண்டேர்வலான்
ஊழ்வினைவசத்துயிர் நிலையென்றுன்னுவான்
வாழ்வினைநோக்கியை வணங்கிநோக்கினான்."

சுமந்திரனானவன் ஸ்ரீராமரையும், சீதாதேவியையும், இலக்ஷ்மணனையும் தேரிலேற்றிக்கொண்டு ஒரு நாட்பிரயாணம் போய், அவர்கள் வனம்புகும்படியாக வழிவிட்டனுப்பிவிட்டு, ஸ்ரீராமர்சொல்லியவார்க்கைக் கேட்டபின்பு, சீதைமுகம் நோக்கலுற்றான். நோக்கியபோது நடந்ததை இக்கவிகூறுகின்றது. இதில், 'ஆள்வினையாண்மையிற் றிறம்பாதவன' என வருகின்ற தொடர்பதத்திற்கு 'நாடாளுந்திறத்திற்குப் பின்வாங்காதவன்' என்பது கருத்தாம். ஆனதால், நாடாளுமுரிமையுடையவனெவனே அவன் அரசன் என்பதற்குச் சந்தேகமில்லையே.

(xxviii) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், கிளைகண்டு நீங்குபடலம், 129-வது கவி :

" முனிவனுமுரைப்பதோர் முறைமை கண்டிலெம்
இனியெனவிருந்தன னிளையமைந்தனும்
அனையதேலாள்பவ ராள்கநாடுநான்
பனிபடர்காடுடன் படர்தன்மெய்யென்றான்."

இக்கவியில், பரதனானவன் தன் அண்ணன் இராமனை வழியனுப்பிக்கொண்டு அயோத்திநகரடைந்தபின்னர், அரசுபுரிய

மனமற்றேனாய் 'ஆள்பவர் ஆள்கநாடு' என்கிறான். இங்ஙனம் 'ஆள்பவர்' என்பது நாடாள்பவராகிய அரசராம்.

(xxix) திருவானைக்காப்புராணம், திருநாட்டுச் சிறப்பு, 90-வது கவி:

"போகமே துகராநிற்கும் புலவர்கண் முழுதுந்தாழ
மாகநாடாளும்வேந்தன் வாஞ்சையினுரிமைபூண்ட
வேகநீர் மருதவைப்பின் விழைதகுவளங்களெல்லா
நாகநாட்டரசற்கேனு நவிற்றலாந்தகைமைத்தேயோ."

இந்தக்கவியில், 'மாகநாடாளும் வேந்தன்' என்பதற்கு 'மாகநாடாள்வான்' என்பது பொருளாம். ஆனதால்,

நாடாளும் வேந்தன் = நாடாள்வான்,
= நாடாழ்வான்,
= நாட்டரசன்,
= மன்னன்.

அன்றியும், இக்கவியில், 'நாகநாட்டரசன்' எனவும் வந்திருக்கின்றது. 'நாட்டரசன்' என்பதற்கு மேலே 'நாடாளும் வேந்தன்' என வந்திருக்கிறது. ஆனபடியினாலே,

நாடாளும் வேந்தன் = நாட்டரசன்,
= நாடான்,
= நாடன்,
= அரசன்.

(xxx) கம்பராமாயணம், பாலகாண்டம், தாடகை வதைப்படலம், 68-வது கவி:

"கங்கைத்திம்புனலுடன் கருத்தையும்
மங்கைத்தீயனையாளு மனக்கொளா
செங்கைச்சூல வெந்தீயினைத்தீயதன்
வெங்கட்டீயொடு மேற்செலவீசினாள்."

இங்ஙனம், விசயகோதண்டபாணியாகிய ஸ்ரீராமரானவர் தாடகையை ஸ்திரீயென நினைந்து, பாணப்பிரயோகத்தால் உயிர்வதைசெய்ய அஞ்சிநின்ற குறிப்பறிந்து, விசுவாமித்திர

என்னும் ஏழுகுணங்கள் கூறுகின்றது. இந்த ஏழுகுணங்க ளில், ஆள்வினையானது முக்கியகுணமாம். ஆனதால், ஆள் வினையுடையோருக்கு 'ஆள்வார்' என்றும், 'நாடாள்வார்' என் றும் பெயர்கள்வந்திருக்கின்றன. ஆகையினாலே, 'ஆள்வான், நாடாள்வான்' என்னும்பெயர்களுக்கு 'அரசன்' என்பது பொ ருளாம்.

(xxvii) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், தை லமாட்டுபடலம், 39-வது கவி :

" ஆள்வினையாண்மை யிற்றிறம்பலன்றெனுத்
தாள்முதல்வணங்கிய தனித்திண்டேர்வலான்
ஊழ்வினைவசத்துயிர் நிலையென்றுன்னுவான்
வாழ்வினைநோக்கியை வணங்கிநோக்கினான்."

சுமந்திரனனவன் ஸ்ரீராமரையும், சீதாதேவியையும், இல க்ஷ்மணனையும் தேரிலேற்றிக்கொண்டு ஒரு நாட்பிரயாணம் போய், அவர்கள் வனம்புகும்படியாக வழிவிட்டனுப்பிவிட்டு, ஸ்ரீராமர்சொல்லியவார்க்கைக் கேட்டபின்பு, சீதைமுகம் நோக் கலுற்றான். நோக்கியபோது நடந்ததை இக்கவிகூறுகின்றது. இதில், 'ஆள்வினையாண்மையிற் றிறம்பாதவன' என வரு கின்ற தொடர்பதத்திற்கு 'நாடாளுந்திறத்திற்குப் பின்வாங் காதவன்' என்பது கருத்தாம். ஆனதால், நாடாளுமுரிமை யுடையவனெவனே அவன் அரசன் என்பதற்குச் சந்தேக மில்லையே.

(xxviii) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், கிளை கண்டு நீங்குபடலம், 129-வது கவி :

" முனிவனுமுரைப்பதோர் முறைமை கண்டிலெம்
இனியெனவிருந்தன னிளையமைந்தனும்
அனையதேலாள்பவ ராள்கநாடுநான்
பனிபடர்காடுடன் படர்தன்மெய்யென்றான்."

இக்கவியில், பரதனனவன் தன் அண்ணன் இராமனை வழிய னுப்பிக்கொண்டு அயோத்திநகரடைந்தபின்னர், அரசுபுரிய

மனமற்றோனாய் 'ஆன்பவர் ஆள்கநாடு' என்கிறான். இங்ஙனம் 'ஆள்பவர்' என்பது நாடாள்பவராகிய அரசராம்.

(xxix) திருவானைக்காப்புராணம், திருநாட்டுச் சிறப்பு, 90-வது கவி:

"போகமே துகராதிற்கும் புலவர்கண் முழுதுந்தாழ
மாகநாடாளும்வேந்தன் வாஞ்சையினுரிமைபூண்ட
வேகநீர் மருதவைப்பின் விழைதருவளங்களெல்லா
நாகநாட்டரசற்கேனு நவிற்றலாந்தகைமைத்தேயோ."

இந்தக்கவியில், 'மாகநாடாளும் வேந்தன்' என்பதற்கு 'மாகநாடாள்வான்' என்பது பொருளாம். ஆனதால்,

நாடாளும் வேந்தன் = நாடாள்வான்,
= நாடாழ்வான்,
= நாட்டரசன்,
= மன்னன்.

அன்றியும், இக்கவியில், 'நாகநாட்டரசன்' எனவும் வந்திருக்கின்றது. 'நாட்டரசன்' என்பதற்கு மேலே 'நாடாளும் வேந்தன்' என வந்திருக்கிறது. ஆனபடியினாலே,

நாடாளும் வேந்தன் = நாட்டரசன்,
= நாடான்,
= நாடன்,
= அரசன்.

(xxx) கம்பராமாயணம், பாலகாண்டம், தாடகை வதைப்படலம், 68-வது கவி:

"கங்கைத்திம்புனலுடன் கருத்தையும்
மங்கைத்தியனையாளு மனக்கொளா
செங்கைச்சூல வெந்தீயினைத்தியதன்
வெங்கட்டீயொடு மேற்செலவீசினாள்."

இங்ஙனம், விசயகோதண்டபாணியாகிய ஸ்ரீராமரானவர் தாடகையை ஸ்திரீயென நினைந்து, பாணப்பிரயோகத்தால் உயிர்வதைசெய்ய அஞ்சிநின்ற குறிப்பறிந்து, விசுவாமித்திர

ராசரிஷியானவர் மேற்படி இராமருக்குத் தமது மனக்கருத் துத் தெரியவுரைத்ததையறிந்த தாடகையாகிறவள் ஸ்ரீராமர் மீது தனது சூலாயுதத்தை ஏவினுள் என்று சொல்லியிருக் கின்றது.

இதில், ஸ்ரீராமருக்குக் 'கங்கைத்தீம்புனனுடன்' எனப் பெ யர்வந்திருக்கின்றது. 'கங்கைத்தீம்புனனுடன்' என்பதற்கு, 'கங்கைத்தீம்புனல் நதிபாய் நாடாள்வோன்' என்பது கருத் தாம். ஆனதால்,

நாடன் = நாடாள்வோன்
= அரசன்.

(xxxi) கம்பராமாயணம், பாலகாண்டம், எதிர்கோட் படலம், 5-வது கவி:

"கங்கைநீர்நாடன்சேனை மற்றுளகடல்களெல்லாஞ்
சங்கினமார்ப்பவந்து சார்வனபோலச்சாரப்
பங்கயத்தணங்கைத்தந்த பாற்கடலெதிர்வதேபோல்
மங்கையைப்பயந்தமன்னன் வளநகர்வந்ததன்றே."

இந்தக்கவியில், அயோத்திநாடாள்பவனை தசரதமகாரா சன் தன் புத்திரன் இராமனுக்குச் சீதையை மணமுடிப்பதற்கு இரதகஜதுரகபதாதிகளாகிய சதுரங்கசேனையோடு, மிதிலை நகர்நோக்கிச்சென்று அதற்குச் சமீபிக்கையில், சனகமகா ராசன் சேனைகள் புறப்பட்டுப்போய், அவர்களை எதிர்கொண் டழைத்த விபரங் கூறியிருக்கின்றது. இங்ஙனம், தசரதமகா ராசனுக்கு 'கங்கைநீர்நாடன்' எனப் பெயர்வந்திருக்கிறது. 'கங்கைநீர்நாடன்' என்பதற்கு, 'கங்கைநதிபாய்நாடாள்வான்' என்பது பொருளாகும். ஆகவே,

நாடன் = நாடாள்வோன்,
= ஆள்வோன்,
= அரசன்.

(xxxii) கம்பராமாயணம், பாலகாண்டம், கோலங் காண்படலம், 41-வது கவி:

"வாளையுகளக்கயல்கள் வாவுமதின்மேதி
மூளைமுதுகைக்கிழிய மூரியவரால்மீன்
பாளைவிரியக்குதிகொள் பண்ணைவளநாடா
நாளையெனவுற்றபக னற்றவனுரைத்தான்."

இக்கவியில், வசிட்டமகாமுனிவர் அரசனைப்பார்த்து, 'பாளைவிரியக்குதிகொள் பண்ணைவளநாடா,' நாளைத்தினம் விவாகத்துக்கு ஏற்றநாள் என்றான். 'நாடா' என்பதற்கு 'நாடானே' என்பது பொருளாம். ஆனதால்,

நாடான் = நாடன்,
= அரசன்.

(xxxiii) கம்பராமாயணம், ஆரணியகாண்டம், சூர்ப்பநகைப்படலம், 121-வது கவி:

"ஏற்றவளைவரிசிலையோ னியம்பர்முனிகலரக்கி
சேற்றவளைதன்கணவ னருகிருப்பசினந்திருகி
சூற்றவளைநீருழக்குந் துறைகெழுநீர்வளநாடா
மாற்றவளைக்கண்டாக்கா லழலாதோமனமென்றாள்."

இந்தச்செய்யுளில், இலக்ஷ்மணனால் குழைக்காதுங், கொடிமூக்கும் அரியுண்ட இராவணன் தங்கச்சி சூர்ப்பநகையாகிறவள் ஸ்ரீராமரைப்பார்த்து, "சூற்றவளை (=சூல்+தவளை) நீருழக்குந்துறைகெழு நீர்வளநாடா" என்கிறாள்.

'நாடா' = நாடானே,
= அரசனே.

(xxxiv) பாரதம், ஆதிபருவம், வாரணாவதச்சருக்கம், 64-வது கவி:

"மருவிநின்றருக்கன்மைந்தன் வானநாடன்மகனையாம்
இருவருந்தனுக்கொள்போ ரியற்றவம்மினென்னலும்
குருகுலந்தழைக்கவந்த குமரனன்புகூரவே
உருகிநன்றெனத்தழீஇ யுகந்துளந்தருக்கினான்."

ராசரிஷியானவர் மேற்படி இராமருக்குத் தமது மனக்கருத் துத் தெரியவுரைத்ததையறிந்த தாடகையாகிறவள் ஸ்ரீராமர் மீது தனது சூலாயுதத்தை ஏவினள் என்று சொல்லியிருக் கின்றது.

இதில், ஸ்ரீராமருக்குக் 'கங்கைத்தீம்புனனாடன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. 'கங்கைத்தீம்புனனாடன்' என்பதற்கு, 'கங்கைத்தீம்புனல் நதிபாய் நாடாள்வோன்' என்பது கருத் தாம். ஆனதால்,

நாடன் = நாடாள்வோன்

= அரசன்.

(xxxi) கம்பராமாயணம், பாலகாண்டம், எதிர்கோட் படலம், 5-வது கவி:

"கங்கைநீர்நாடன்சேனை மற்றுளகடல்களெல்லாஞ்
சங்கினமார்ப்பவந்து சார்வனபோலச்சாரப்
பங்கயத்தணங்கைத்தந்த பாற்கடலெதிர்வதேபோல்
மங்கையைப்பயந்தமன்னன் வளநகர்வந்ததன்றே."

இந்தக்கவியில், அயோத்திநாடாள்பவனை தசரதமகாரா சன் தன் புத்திரன் இராமனுக்குச் சீதையை மணமுடிப்பதற்கு இரதகஜதுரகபதாதிகளாகிய சதுரங்கசேனையோடு, மிதிலை நகர்நோக்கிச்சென்று அதற்குச் சமீபிக்கையில், சனகமகா ராசன் சேனைகள் புறப்பட்டுப்போய், அவர்களை எதிர்கொண் டழைத்த விபரங் கூறியிருக்கின்றது. இங்ஙனம், தசரதமகா ராசனுக்கு 'கங்கைநீர்நாடன்' எனப் பெயர்வந்திருக்கிறது. 'கங்கைநீர்நாடன்' என்பதற்கு, 'கங்கைநதிபாய்நாடாள்வான்' என்பது பொருளாகும். ஆகவே,

நாடன் = நாடாள்வோன்,

= ஆள்வோன்,

= அரசன்.

(xxxii) கம்பராமாயணம், பாலகாண்டம், கோலங் காண்படலம், 41-வது கவி:

"வாளையுகளக்கயல்கள் வாவுமதின்மேதி
மூளைமுதுகைக்கிழிய மூரியவரால்மீன்
பாளைவிரியக்குதிகொள் பண்ணைவளநாடா
நாளையெனவுற்றபக னற்றவனுரைத்தான்."

இக்கவியில், வசிட்டமகாமுனிவர் அரசனைப்பார்த்து, 'பாளைவிரியக்குதிகொள் பண்ணைவளநாடா,' நாளைத்தினம் விவாகத்துக்கு ஏற்றநாள் என்ருன். 'நாடா' என்பதற்கு 'நாடானே' என்பது பொருளாம். ஆனதால்,

நாடான் = நாடன்,
= அரசன்.

(xxxiii) கம்பராமாயணம், ஆரணியகாண்டம், சூர்ப்பநகைப்படலம், 121-வது கவி:

"ஏற்றவளைவரிசிலையோ னியம்பர்முனிகலரக்கி
சேற்றவளைதன்கணவ னருகிருப்பசினந்திருகி
சூற்றவளைநீருழக்குந் துறைகெழுநீர்வளநாடா
மாற்றவளைக்கண்டாக்கா லழலாதோமனமென்ருள்."

இந்தச்செய்யுளில், இலக்ஷ்மணனுல் குழைக்காதுங், கொடிமூக்கும் அரியுண்ட இராவணன் தங்கச்சி சூர்ப்பநகையாகிறவள் ஸ்ரீராமரைப்பார்த்து, "சூற்றவளை (=சூல்+தவளை) நீருழக்குந்துறைகெழு நீர்வளநாடா" என்கிருள்.

'நாடா' = நாடானே,
= அரசனே.

(xxxiv) பாரதம், ஆதிபருவம், வாரணுவதச்சருக்கம், 64-வது கவி:

"மருவிநின்றருக்கன்மைந்தன் வானநாடன்மகனையாம்
இருவருந்தனுக்கொள்போ ரியற்றவம்மினென்னலும்
குருகுலந்தழைக்கவந்த குமரனன்புகூரவே
உருகிநன்றெனத்தழீஇ யுகந்துளந்தருக்கினுன்."

இக்கவியில், பஞ்சபாண்டவர்களுக்குந், துரியோதனன் முத லான நூற்றுவர்களுக்கும் பதினெட்டுவகைப் போராயுத வித்தைகளும், குதிரையேற்றம் யானையேற்றம் தேரேற்றம் முதலான வாகனசாரிவித்தைகளும் பயிற்றிய துரோணுசாரி யானவன், அரசர்கள்கூடிய மகாசபையில், இராசகுமாரர்க ளுடைய வித்தைத்திறம் விளங்கப் பரீட்சித்து வருகிறகாலத் தில், சூரியபகவானுக்குக் குந்தமாதேவி வயிற்றிலுதித்த கன் னனும், இந்திரனுக்குப்பிறந்த அருச்சுனனும் இரண்டுபே ருந் தனுப்போர்செய்யச் சம்மதித்தார்கள் என்று சொல்லி யிருக்கிறது. அருச்சுனனுக்கு 'வானநாடன் மகன்' எனப் பெயர்வந்தது காண்க.

'வானநாடன்' என்பதற்கு 'இமயகிரிச்சார்பிலிருந்த சுரர் நாட்டிற்கு அதிபதியாகிய இந்திரமகாராஜன்' என்பது பொரு ளாம். இதில்,

நாடன் = நாடாள்வான்,
= அரசன்.

(xxxv) பாரதம், ஆதிபருவம், வாரணுவதச்சருக்கம், 84-வது கவி:

"மறுகிற்பணிலந்தவழ்பழன
வளநாடுடையானெதிர்வணங்கி
முறுகற்புரிவெங்கலைக்கோட்டு
முனியேபோலுமுனிவரரைத்
தறுகட்குருவின்றலைதுமிக்கத்
தகவோர்மகவுந்தனஞ்சயன்றே
ளுறுகைக்கொருபூங்கன்னியையும்
பெறுவான்வேண்டியுற்றிரந்தான்."

இந்தக்கவியில், பாஞ்சாலநாடாள்வானுன யாகசேனன் என்பவன் அருச்சுனன்கையால் இரணக்களத்திற் பிடிபட்டு அவமானப்பட்டபின்பு விடுதலைபெற்றுத் தன்னூடுபோய்ச் சேர்ந்தபிறகு, துரோணுசாரிதலையை யரியுதற்கு ஒரு புத்திர னும், அருச்சுனனை மணம்புரியுதற்கு ஒரு கன்னிகையும் பிறக்

கும்படியாகத் தவம்புரிந்தான் என்று சொல்லியிருக்கின்றது. இதில், யாகசேனராசனுக்குப் "பணிலந்தவழ்பழனவளநா டுடையான்" எனப் பெயர்வந்திருக்கிறது. 'நாடுடையான்' என்பதற்கு 'நாடாள்வான்' என்பது கருத்தாம். ஆனதால்,

நாடுடையான் = நாடாள்வான்,
= நாடான்,
= அரசன்.

இங்ஙனம் ஒரு முக்கியவிஷயத்தை யாவருந் தெளிந்தறிய வேண்டியது.

'தேசம்' என்னும் பதத்திலும், 'நாடு' என்னும்பதம் பூர்வ நூல்களிலெல்லாம் மிகுந்து வழங்கிவந்திருக்கின்றது. ஆன தால், நூல்களிலெல்லாம், 'அரசன்' என்னும் தமிழ்ச்சத் திரியகுலப்பட்டப்பெயர் வரவேண்டிய விடங்களிற் பெரும் பாலும்,

"நாடுடையான்,
நாட்டாள்வான்,
நாடாள்வான்,
ஆள்வான்,
நாடான்,
நாடன்" என்னும் பெயர்கள் 'அரசன்' என்னுங் கருத்தில் வந்துவழங்கியிருக்கின்றன.

'சான்றோன்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் பெரும் பான்மை சங்கச்செய்யுள்களில் வழங்கிவந்திருக்கிற பிரகா ரம், 'நாடன், நாடான், நாடாள்வான்' முதலான பட்டப் பெயர்களும் மேற்படி நூல்களில் வழங்கிவந்திருக்கின்றன.

அன்றியும், 'நாடன்' என்னும் பட்டப்பெயர் நூல்வழக்கி லும், 'நாடான்' என்னும் பட்டப்பெயர் உலகவழக்கிலும் மிகுந்துவரும்.

இக்கவியில், பஞ்சபாண்டவர்களுக்குந், துரியோதனன் முதலான நூற்றுவர்களுக்கும் பதினெட்டுவகைப் போராயுத வித்தைகளும், குதிரையேற்றம் யானையேற்றம் தேரேற்றம் முதலான வாகனசாரிவித்தைகளும் பயிற்றிய துரோணசாரியானவன், அரசர்கள்கூடிய மகாசபையில், இராசகுமாரர்களுடைய வித்தைத்திறம் விளங்கப் பரீட்சித்து வருகிறகாலத்தில், சூரியபகவானுக்குக் குந்தமாதேவி வயிற்றிலுதித்த கன்னனும், இந்திரனுக்குப்பிறந்த அருச்சுனனும் இரண்டுபேருந் தனுப்போர்செய்யச் சம்மதித்தார்கள் என்று சொல்லியிருக்கிறது. அருச்சுனனுக்கு 'வானநாடன் மகன்' எனப் பெயர்வந்தது காண்க.

'வானநாடன்' என்பதற்கு 'இமயகிரிச்சார்பிலிருந்த சுரர் நாட்டிற்கு அதிபதியாகிய இந்திரமகாராஜன்' என்பது பொருளாம். இதில்,

நாடன் = நாடாள்வான்,
= அரசன்.

(xxxv) பாரதம், ஆதிபருவம், வாரணவதச்சருக்கம்,
84-வது கவி :

"மறுகிற்பணிலந்தவழ்பழன
வளநாடுடையானெதிர்வணங்கி
முறுகற்புரிவெங்கலைக்கோட்டு
முனியேபோலுமுனிவரரைத்
தறுகட்குருவின்றலைதுமிக்கத்
தகவோர்மகவுந்தனஞ்சயன்றே
ளுறுகைக்கொருபூங்கன்னியையும்
பெறுவான்வேண்டியுற்றிரந்தான்."

இந்தக்கவியில், பாஞ்சாலநாடாள்வானான யாகசேனன் என்பவன் அருச்சுனன்கையால் இரணக்களத்திற் பிடிபட்டு அவமானப்பட்டபின்பு விடுதலைபெற்றுத் தன்னூர்போய்ச் சேர்ந்தபிறகு, துரோணசாரிதலையை யரியுதற்கு ஒரு புத்திரனும், அருச்சுனனை மணம்புரியுதற்கு ஒரு கன்னிகையும் பிறக்

கும்படியாகத் தவம்புரிந்தான் என்று சொல்லியிருக்கின்றது. இதில், யாகசேனராசனுக்குப் "பணிலந்தவழ்பழனவளநாடுடையான்" எனப் பெயர்வந்திருக்கிறது. 'நாடுடையான்' என்பதற்கு 'நாடாள்வான்' என்பது கருத்தாம். ஆனதால்,

நாடுடையான் = நாடாள்வான்,
= நாடான்,
= அரசன்.

இங்ஙனம் ஒரு முக்கியவிஷயத்தை யாவருந் தெளிந்தறிய வேண்டியது.

'தேசம்' என்னும் பதத்திலும், 'நாடு' என்னும்பதம் பூர்வநூல்களிலெல்லாம் மிகுந்து வழங்கிவந்திருக்கின்றது. ஆனதால், நூல்களிலெல்லாம், 'அரசன்' என்னும் தமிழ்ச்சத்திரியகுலப்பட்டப்பெயர் வரவேண்டிய விடங்களிற் பெரும்பாலும்,

"நாடுடையான்,
நாட்டாள்வான்,
நாடாள்வான்,
ஆள்வான்,
நாடான்,
நாடன்" என்னும் பெயர்கள் 'அரசன்' என்னுங் கருத்தில் வந்துவழங்கியிருக்கின்றன.

'சான்றோன்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் பெரும்பான்மை சங்கச்செய்யுள்களில் வழங்கிவந்திருக்கிற பிரகாரம், 'நாடன், நாடான், நாடாள்வான்' முதலான பட்டப்பெயர்களும் மேற்படி நூல்களில் வழங்கிவந்திருக்கின்றன.

அன்றியும், 'நாடன்' என்னும் பட்டப்பெயர் நூல்வழக்கிலும், 'நாடான்' என்னும் பட்டப்பெயர் உலகவழக்கிலும் மிகுந்துவரும்.

(xxxvi) திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி 21-வது சூத்திரம்:

கோச்சேரன் பெயர்.

"பூழியனுதியன் கொங்கன்பொறையன்,
வானவன்குட்டுவன் வானவரம்பன்,
வில்லவன்குடநாடன் வஞ்சிவேந்தன்,
கொல்லிச்சிலம்பன் கோதைகேரளன்,
போந்தின்கண்ணிக்கோன் பொருநைத்துறைவன்,
சேரலன்மலயமான் கோச்சேரன்பெயரே."

இந்தச்சூத்திரத்தில், சேரனுக்கு, குடநாடன், வஞ்சிவேந்தன், போந்தின்கண்ணிக்கோன், எனப் பெயர்கள்வந்திருக்கின்றன. இவைகளில், நாடன், வேந்தன், கோன், இம்மூன்றுபெயர்களும் ஒருபொருட்சொற்களாம். இந்த மூன்றுஞ் சேரனுக்குப் பட்டப்பெயரானதால், 'வேந்தன், கோன்' என்னும் இரண்டிற்கும் 'அரசன்' என்பது பொருளாயிருப்பது போல, 'நாடன்' என்னும் பெயருக்கும் 'அரசன்' என்பதே பொருள் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆனதால்,

நாடன் = வேந்தன்,
= கோன்,
= அரசன்.

(xxxvii) திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 22-வது சூத்திரம்:

கோச்சோழன் பெயர்.

"சென்னிவளவன் கிள்ளிசெம்பியன்,
பொன்னித்துறைவன் புலிக்கொடிப்புரவலன்,
ஆர்த்தார்க்கோனேரிறையபயன்,
நேரிவெற்பன் கோழிவேந்தன்,
சூரியன்புனனாடன் கோச்சோழன்பெயரே."

இந்தச்சூத்திரத்தில், சோழனுக்கு, புலிக்கொடிப்புரவலன், ஆர்த்தார்க்கோன், நேரிறை, கோழிவேந்தன், புனனாடன், எனப் பெயர்கள்வந்திருக்கின்றன. இங்ஙனம், புரவலன், கோன்,

இறை, வேந்தன், நாடன், இவ்வைந்துபட்டப்பெயர்களும் ஒரு பொருட்பதங்களாம். இந்த ஐந்துஞ் சோழனுக்குப் பட்டப் பெயர்களானதால், 'புரவலன், கோன், இறை, வேந்தன்' என்னும் இந்நான்கு பட்டப்பெயர்களுக்கும் 'அரசன்' என்பது பொருளாயிருப்பதுபோலவே, 'நாடன்' என்னும் பட்டப் பெயருக்கும் 'அரசன்' என்றேபொருளாகும் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆனதால்,

நாடன் = புரவலன்,<br>
= கோன்,<br>
= இறை,<br>
= வேந்தன்,<br>
= அரசன்.

மேற்படி சூத்திரத்தில், சோழனுக்குச் 'சூரியன்' எனவும் பெயர்வந்திருக்கின்றது. 'சூரியன்,' 'சான்றோன்' என்பன ஒருபொருளாம்.

சோழன் ஆதித்தகுலத்தானானதால், அவனுக்குச் 'சூரியன், சான்றோன்' எனப்பெயர்கள் வந்திருப்பது நியாயம். வான சோதிகளுள் சூரியன் நிறையொளியுடைய மேலான சோதியானதால் அதற்குச் சான்றோன் எனப் பெயர்வந்திருக்கின்றது. தமிழ்நாட்டுக்குலத்தவர்களுக்குள் நிறைமேன்மையுடைய மேன்மகன் சத்திரியகுலத்தவனானதால், தமிழ்ச்சத்திரியகுலத்தவர்களுக்குச் 'சான்றோர்' எனப் பெயரமைந்திருக்கின்றது. ஆகவே, சோழன் சத்திரியகுலச்சான்றோனும்.

(xxxviii) திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 23-வது சூத்திரம்.

கோப்பாண்டியன் பெயர்.

"செழியன்றமிழ்நாடன் கூடற்கோதென்னவன்,<br>
வழுதிமீனவன் பஞ்சவன்மாறன்,<br>
கௌரியன்வேம்பின் கண்ணிக்கோகைதவன்,<br>
பொதியபொருப்பன் புனல்வையைத்துறைவன்,<br>
குமரிச்சேர்ப்பன் கோப்பாண்டியனே."

இசசூத்திரத்தில் பாண்டியனுக்கு, தமிழ்நாடன், கூடற் கோ, வேம்பின்கண்ணிக்கோ, எனப் பெயர்கள்வந்திருக்கின் றன. இவைகளில், நாடன், கோ, கோ, என்பன ஒருபொருட் பெயர்களாம்.

இந்த மூன்றும் பாண்டியனுக்குப் பட்டப்பெயர்களானமை யால், 'கோ, கோ' என்னும் பதங்களுக்கு 'அரசன்' என்பது கருத்தாயிருப்பதுபோலவே, 'நாடன்' என்னும் பட்டப்பெய ருக்கும் 'அரசன்' என்றே பொருளாகுமென்பதற்குச் சந்தேக மில்லை.

மேற்படி சூத்திரத்தில், பாண்டியனுக்குக் 'கௌரியன்' எனவும் பெயர்வந்திருக்கிறது. 'கௌரியன்' என்னும் பெயர் ப்பகுபதத்திற்கு மூலபதம் 'கௌரி.' 'கௌரி' என்கிற இந் தச்சிறந்தநாமம் பூர்வத்தில் 'உமையவள், காளி, பகவதி' எனப் பெயர்பெற்றுச் சிவபிரானுள்ளம்விட்டகலாத அரு மைநாயகியாகிய பார்வதிக்கு இடப்பட்டபெயர். 'உமைய வள், காளி, பகவதி' என்கிற மூன்றுபெயர்களும் 'பார்வதி' என்னும் பெயருடன் பொருளிலொத்த ஒருபொருட்பெயர் களாம். இந்த மூன்றுபெயர்களுக்கும் திவாகரநூலில் வரு கின்ற ஒருபொருட்பெயர்கள் வருமாறு :

*a.* திவாகரம், தெய்வப்பெயர்த்தொகுதி, 15-வது சூத் திரம்.

உமையவள்பெயர்.

"காமக்கோட்டியம்பிகைகௌரி
ஆரியைசத்தியபிராணிபார்வதி
இமயவல்லியுமையவள்பேரே."

இங்ஙனம் உமையவளுக்குக் 'கௌரி' எனப் பெயர்வந்திருக் கிறது.

*b.* மேற்படிதொகுதி, 22-வது சூத்திரம்.

காளியின்பெயர்.

"சூலியெண்டோளி தாருகவிநாசனி,
மாதரிவீரி கௌரிமுக்கண்ணி,
பைரவிகுமாரி சாமுண்டிசண்டிகை,
யோகினிவேதாளி யாமளைமாகாளி."

இந்தச்சூத்திரத்தில், காளிக்குக் 'கௌரி' எனப் பெயர மைந்திருக்கின்றது.

c. மேற்படிதொகுதி, 23-வது சூத்திரம்..

பகவதியின்பெயர்.

"கொற்றவையையை கார்த்திகைகௌரி,
துர்க்கைசூலி மகிடற்காய்ந்தாள்,
நீலிவெண்டோளி விந்தைசயமகள்,
இருங்கலை யூர்தி யெழிலரியேறி,
மேதித்தலைமிசை விசையையந்தரி,
மாலுக்கிளையாள் சக்கராயுதியே,
பாலைக்கிழத்தி பண்ணம்பணத்தி,
நாராயணியே கன்னிகுமரி,
சீர்சால்பகவதி சிறந்ததொல்பெயரே."

இதில், பகவதிக்குக் 'கௌரி'எனப் பெயர்வந்திருக்கின்றது. பகவதிக்குக் 'கன்னி, குமரி' எனவும் பெயர்கள் வந்திருப்பதையுங் காண்க :

இந்தமூன்று சூத்திரங்களையுந் திரட்டிப்பார்வையிடும்போது, உமையவளுக்கும், காளிக்கும், பகவதிக்குந் தனித்தனியே 'கௌரி' எனப் பெயர்வந்திருக்கின்றமையால், உமையவள், காளி, பகவதி இம்மூன்று பெயர்களும் ஒருபொருட்பெயர்களாம்.

பூர்வதமிழரசர்குலத்தவர்கள் ஆதியிலே சிவபக்தர்களாய் சிவபிரானையும், மேற்படியார்நாயகி உமையவள் எனப்பெயர் கொண்ட காளியையும், விநாயகன், சுப்பிரமணியன், வீரபத்திரன் எனப் பெயர்கொண்ட மேற்படியார்புத்திரர்கள் மூவர்களையுங் குலதெய்வங்களாகவைத்து வணங்கிவந்தார்கள். தமிழரசர்குலத்து முன்னவர்கள் சிவனையும்,காளியையும் முக்கிய தெய்வங்களாக அநுசரித்துத் தாங்கள்போய்க்குடியேறிய நாடுநகரங்களில் சிவனுக்குங் காளிக்கும் ஆலயங்கள்கட்டி வெகுபிரஸ்தாபமாக வணங்கிவந்தார்கள். தங்கள் நகரங்களில் வடக்குவாசல்களில் காளியாலயங்கள்கட்டி, காளிகா

வல்என வைத்துவந்தார்கள். அவளுக்குக் 'கௌரி' என்று பெயர்வந்ததுமல்லாமல், 'போர்மாது' எனவும், 'போராயுத வித்தைக்கு நாயகி' எனவும் எண்ணப்பட்டபடியால் அரசர் குலத்தவர்களுக்குக் காளிகாதேவி முக்கியதெய்வமாகி விட்டனள். ஆனதால், அரசர்குலத்தவர்கள் காளிகாதேவிமக்களெனச் சிறந்தபட்டப்பெயர் பெற்றுவந்திருக்கின்றனர். சுரபாண்டியமகாராசனும் மற்றப் பாண்டியர்களும் காளிமக்கள் என்னப்பட்டிருக்கின்றனர். அவர்களுக்குக் 'கௌரியர்' எனவும் பெயர்வந்திருக்கின்றது. பாண்டியர்கள் குலசேகர பாண்டியன் வமிசத்தாரானதால் மேற்படி பாண்டிவளநாட்டுப் பாண்டியர்களுக்கும் 'கௌரியர்' எனப் பெயர்வந்திருக்கிறது. இதனால், மேற்படிசூத்திரத்தில் பாண்டியனுக்குக் 'கௌரியன்' எனப்பெயர்வந்திருப்பதற்குக் காரணந்துலங்குகின்றது. 'கௌரியன்' என்பதற்கு 'காளிகாதேவி வரபுத்திரன்' என்பதுகருத்தாம்.

காளியாகிய உமையவளுக்குக் 'கௌரி' எனப்பெயர்வந்திருப்பதால், உமையவளுடைய மூத்தமகன் விநாயகனுக்குக் 'கௌரிசேயன்' எனவும், மேற்படியம்மனுடைய இளையமகன் சுப்பிரமணியனுக்குக் 'கௌரிநந்தனன்' எனவும் பெயர்கள் வந்திருக்கின்றன. ஆனபடியினாலே, தமிழரசர்குலத்தவர்களெல்லாருக்கும் 'காளிமக்கள், சிவபக்தர்கள்' எனச் சாதாரணப்பெயராயிற்று. இந்த முகாந்திரத்தையிட்டே தமிழ்நாடெங்கும் பூர்வத்தில் காளிகோவில்களுஞ் சிவாலயங்களுமே விஸ்தாரமாகக்கட்டப்பட்டதுமன்றி, சான்றோர்குலத்தவர்களும் 'காளிமக்கள்' எனவும், 'சிவபக்தர்கள்' எனவும் பெயர்பெற்றிருக்கின்றனர். சிவனும், காளியும், அவர்களுடைய புத்திரர்களாகிய விநாயகனும், சுப்பிரமணியனும், வீரபத்திரனுமே அவர்களுக்குக் குலதெய்வங்கள்.

பின்னுஞ் சில உதாரணங்கள் எடுத்துரைப்போம் :

'நாலடியார்' என்னும்நூல் மதுரைக்கல்விச்சங்கத்தைச் சேர்ந்த மகாவித்துவான்களாகிய புலவர்களாற் பாண்டியர்சமுகத்தில் அரங்கேற்றியநூல். இந்த நூல் பாண்டிவளநா

டனை முன்னிலையாகவைத்துப்பேசுகின்றது. இந்த நூலிலும் 'நாடன்' எனும்பெயர் 'அரசன்' என்னுங்கருத்தில் வந்திருக்கின்றது. இதனாலே, அந்த நூல் எழுதப்பட்டகாலத்தில் தமிழ் நாட்டரசர்குலத்தவர்களுக்கு 'நாடான், நாடன்' என்னும் அரசர்குலப்பட்டப்பெயர்கள் வழங்கிவந்தனவென்றும், அரசர்கள் நற்குணநற்செய்கையுடையவர்களாய் நீதிவழுவாதுநடந்து செங்கோற்செலுத்துதற்கு அவர்கள் சிறுபிராயமுதற்கற்றறியவேண்டிய நீதிநெறியைப் போதிக்கின்றதென்றும் ருசுவாகின்றது.

இந்த நாலடியார் என்னும் நூலிலிருந்து சில உதாரணங்கள் இங்ஙனம் பேர்த்தெழுதுகின்றனம்.

(xxxix) நாலடியார், செல்வநிலையாமை, 10-வது கவி:

"உடாஅதுமுண்ணாதுந் தம்முடம்புசெற்றுங்
கெடாஅதநல்லறமுஞ்செய்யார்—கொடாஅது
வைத்தீட்டினாரிழப்பர் வான்றோய்மலைநாட,
வுய்த்தீட்டுந்தேனீக்கரி."

'செல்வநிலையாமை' என்னும் அத்தியாயமானது இந்த அரசர்கள் தாங்கள் நீதிமுறைவழுவாது திரட்டுந்திரவியங்களை எவ்வாறு செலவிடவேண்டுமென்று அவர்களுக்குப்போதிக்கின்றது.

எக்குலத்தவர்களுக்கும் இந்த நாலடியார் என்னும் நூலிற் கூறியிருக்கின்ற நீதிசாஸ்திரப்போதனைகள் ஏற்றிருந்தபோதிலும், தமிழ்நாட்டுச் சத்திரியகுலத்தவர்களுக்கென்றே மேற்படி நூலாசிரியர்கள் எழுதியிருக்கின்றபடியால், அரசர்களை முன்னிலையாகவைத்துப் பேசியிருக்கிறார்கள். இதை மனதில் வைத்துக்கொண்டு இந்தநூலுக்குத்தாற்பரியங்கூறுமிடத்தில், அதில்வருகின்ற அநேக முக்கியமான சொற்களுக்கு இயற்கைத்தாற்பரியந் தெளிவாகத்துலங்குகிறது. அந்தணர்களுக்கு ஏற்கும் போதனைகள் வருகின்றவிடங்களில் அதுவிதந்து கூறப்பட்டிருப்பதுபோலவே கீழ்க்குலத்தவர்களுக்கு ஏற்கும் போதனைகளும் ஏற்குமிடங்களில் விதந்துகூறப்பட்டிருக்கின்றது.

மேலேகூறியிருக்கிறவெண்பாவில், 'வான்றோய் மலைநாட' என வந்திருக்கின்ற தொடர்பதம் பாண்டிவளநாடானைக்குறிக்கும் 'வான்றோய்மலைநாட' என்பதற்கு, ஆகாயத்தை யளாவுகின்ற மலைகளையுடைய நாடாள்பவனே, என்பது தாற்பரியம். ஆகவே 'நாட' என்னும் பட்டப்பெயருக்கு 'நாடானே, அரசனே' என்பதுபொருளாம். உரையாசிரியர் 'நாட' என்பதற்குப் 'பாண்டியனே' என உரையிடுகின்றனர். நீதிமொழித்திரட்டை அங்கிலேயபாஷையில் மொழிபெயர்த்தவர், 'வான்றோய்மலைநாட' என்பதற்கு, O Lord (=ruler) of the mountains touching the sky, எனத்தாற்பரியம் எழுதியிருக்கிறார். இதினாலும் 'நாடன்' என்னும் பட்டப்பெயருக்கு 'அரசன்' என்பது பொருளாகுமென்று நன்றாய்த்தோன்றுகின்றது. ஆனதால்,

நாடன் = நாடான்,
= நாடாள்வான்,
= நாட்டரசன்,
= அரசன்,
= Lord or ruler.

(xl) நாலடியார், மெய்ம்மை, 3-வது கவி :

"காலாடுபோழ்திற் கழிகிளைஞர்வானத்து
மேலாடுமீனிற் பலராவரேலா
விடரொருவருற்றக் காலீர்ங்குன்றநாட,
தொடர்புடையேமென்பார் சிலர்."

இந்த அத்தியாயத்தில், மேற்படி நூலாசிரியர் இந்நூல் கேட்பவர் அரசரேயாயினும், அவர்களுக்குக் கேட்கப் பிரியமில்லாதிருந்தபோதிலும், சத்தியமான நீதிப்பிரமாணங்களையவர்களுக்கு உண்மையாய்ச் சொல்லவேண்டுமெனக் கூறியிருக்கின்றது.

இந்த 3-வது கவியில் நூலாசிரியர் பாண்டியனைநோக்கிச் சொல்லுகிறார் : 'ஓ பாண்டிவளநாடா! குளிர்ச்சிபொருந்திய வீழாறுகள் பாய்கின்ற மலைகளையுடைய அரசா, உன் திரவிய

சாலேநிறைய பொக்கிஷமிருக்குங்காலத்தில், ஆகாயத்தின் கண்ணே இலங்குகின்ற தாரகைத்தொகையிலும் மிகுதியான பெயர்கள் உன் சிநேகத்தைநாடி, உன்னிடத்திற்கு வருவார் கள். நீ அபசெயப்பட்டு நாடுநகர்கள் இழந்து திரவியக்குறைச் சலடையுங்காலத்தில், உன் சிநேகத்தை நாடிவருபவர்கள் அரிதெனக்காண்பாய்' என்கிறார். இங்ஙனம், பாண்டிவள நாடானுக்கு 'ஈர்ங்குன்றநாட' எனப் பெயர்வந்திருக்கிறது. 'ஈர்ங்குன்றநாட' என்பதற்கு, குளிர்ச்சிபொருந்திய மலைகளை யுடைய அரசா, என்பதுகருத்தாம். அங்கிலேய மொழிபெ யர்ப்பில், O Lord (=ruler) of the cool mountains, என வந்திருக்கின்றது. ஆனதால்,

நாடன் = நாடான்,
= அரசன்.

(xli) இதுபோல நாலடியாரில் வந்திருக்கின்ற வேறு உதாரணங்கள் வருமாறு:

நாலடியார், தீவினையச்சம், 8-வது கவியில்,

"புனற்செதும்பு நின்றலைக்கும்
பூங்குன்றநாட" எனவும்,

நாலடியார், பெரியாரைப்பிழையாமை, 1-வது கவியில்,
"ஆர்க்குமருவி யணிமலைநன்னாட" எனவும்,

நாலடியார், பெருமை, 6-வது கவியில்,
"பெருவரைநாட" எனவும்,

நாலடியார், நட்பாராய்தல், 2-வது கவியில்,

"பொற்கேழ்புனலொழுகப்
புள்ளிரியும்பூங்குன்றநாட" எனவும்,

இதற்கு அங்கிலேயமொழிபெயர்ப்பில்,

"O Lord (=ruler) of the fair hills from which the birds flee on the approach of the gold-coloured torrent!" எனவும்,

நாலடியார், நட்பிற்பிழைபொறுத்தல், 3-வது கவியில்,

"நிறக்கோங்குருவ வண்டார்க்கு
முயர்வரைநாட" எனவும்,

இதற்கு அங்கிலேய மொழிபெயர்ப்பில்,

"O Lord (=ruler) of the lofty hills where the beautiful winged insects hum over the coloured Congu!" எனவும்,

நாலடியார், நட்பிற்பிழைபொறுத்தல், 8-வது கவியில்,

"கறங்கருவிநாட" எனவும்,

இதற்கு அங்கிலேய மொழிபெயர்ப்பில்,

"O Lord (=ruler) of the land where the water-falls murmur!" எனவும்,

நாலடியார், கூடாநட்பு, 1-வது கவியில்,

"கறைக்குன்றம் பொங்கருவி
தாழும் புனல்வரைநன்னாட" எனவும்,

நாலடியார், கூடாநட்பு, 2-வது கவியில்,

"வாலருவிநாட" எனவும்,

இதற்கு அங்கிலேய மொழிபெயர்ப்பில்,

"O Lord (=ruler) of the country of clear waters!" எனவும்,

நாலடியார், கூடாநட்பு, 4-வது கவியில்,

"அருகெல்லாஞ் சந்தனநீள்சோலைச்
சாரன் மலைநாட" எனவும்,

இதற்கு அங்கிலேய மொழிபெயர்ப்பில்,

"O Prince (=king) of the hills, the sides of which are covered with groves of tall sandal trees" எனவும்,

நாலடியார், கூடாநட்பு, 7-வது கவியில்,

"மலைநாட" எனவும்,

இதற்கு அங்கிலேய மொழிபெயர்ப்பில்,

"Lord (=ruler) of the hills!" எனவும்,

நாலடியார், இன்மை, 3-வது கவியில்,

"கொல்லைக்கலாஅற்கிளி கடியுங்
கானகநாட" எனவும்,

நாலடியார், இன்மை, 5-வது கவியில்,

"கறங்கருவிகன்மேற்கழூஉங் கணமலை
நன்னாட" எனவும்,

நாலடியார், இரவச்சம், 7-வது கவியில்,

"குன்றின்பரப்பெலாம் பொன்னொழுகும்
பாயருவிநாட" எனவும்,

நாலடியார், அவையறிதல், 9-வது கவியில்,

"திரையாமா சேர்க்குநெடுங்குன்ற நாட"
எனவும்,

நாலடியார், கீழ்மை, 3-வது கவியில்,

"பிறங்கருவி நன்னாட" எனவும்,

நாலடியார், கீழ்மை, 4-வது கவியில்,

"இலங்கருவிநன்னாட" எனவும்,

இதற்கு அங்கிலேயமொழிபெயர்ப்பில்,

"O King of the country washed by the sparkling torrents!" எனவும்,

நாலடியார், கீழ்மை, 8-வது கவியில்,

"விறல்மலை நன்னாட" எனவும்,

நாலடியார், கயமை, 3-வது கவியில்,

"கணமலைநன்னாட" எனவும்,

இதற்கு அங்கிலேய மொழிபெயர்ப்பில்,

"O Lord (=ruler) of the country covered by mountains!" எனவும், வந்திருக்கின்றன.

நாலடியார்நூலில் மேற்கூறியிருக்கிறவிடங்களிலெல்லாம் வந்திருக்கிற 'நாடன்' என்னும் பட்டப்பெயரை, அந்தநூல் எழுதப்பட்டகாலத்தில், 'அரசன்' என்னுஞ்சொல்லுடன் ஒரு பொருளில்வருகின்ற 'மன்னன், வேந்தன், இராசா, கோ, இறை, இறைவன், குரிசில், நரபதி' முதலான பட்டப்பெயர்களைப்பார்க்கிலும் அதிகசிறப்பான பட்டப்பெயராக வழங்கிவந்த காரணத்தையிட்டே, மதுரைக்கல்விச்சங்கத் தலைமைப்புலவர்கள் இந்த நூலில் பாண்டியனுக்கு 'மன்னன், வேந்தன், அரசன்' முதலானபட்டப்பெயர்களைப்பார்க்கிலும், 'நாடன்' என்னும் பட்டப்பெயரையே மிகுமங்களத்துடன் முன்னிலையாகவைத்து நாடா (=நாட) என விளித்துப்பாடி நூலையரங்கேற்றியிருக்கிறார்கள். இதில் 'நாட' என்பது நூல்வழக்கு, 'நாடா' என்பது உலகவழக்கு. அங்கிலேய மொழிபெயர்ப்பினும்,

நாடன் = Lord of the mountains,
= Ruler of the country,
= Prince of the hills,
= King of the country,

என வந்திருக்கிறது.

ஆனதால், 'நாடன், நாடான்' என்னும் பட்டப்பெயர்களுக்கு 'அரசன்' என்பதே பொருளாம். இதுநிற்க,

(xlii) மேற்கூறிய நியாயங்களைத் திரட்டிக்கூறல்.

பாண்டியனுக்கு 'நாடான், நாடன்' எனப்பட்டப்பெயர்கள் வந்திருப்பதுபோலவே, சோழனுக்கும் 'நாடான், நாடன்' எனப் பட்டப்பெயர்கள் வந்திருக்கின்றன. மேலே யாம் காண்பித்திருக்கின்ற பிரகாரம், சோழனுக்குச் 'சோணாடன், புனனாடன், பொன்னிநாடன்' எனப் பெயர்கள் வந்திருக்கின்றன. அன்றியும், அங்கிலேய மகாவித்துவானாகிய உவின்சிலோ ஆசிரியர் எழுதிய அகராதிநூலில், 'நாடன்' என்னும்பெயர், சோழராசர்களுடைய பட்டப்பெயர்' எனவும், 'நாடான்' என்னும்பெயர் 'சான்றோர் (=சான்றார்) குலத்தவர்களுடைய பட்டப்பெயர்' எனவும் எழுதியிருக்கிறார்.

யாம் மேலேகாண்பித்திருக்கிறபடி, "நாடான், நாடன்" என்னும் இரண்டுபெயர்களும் 'அரசன்' என்னும் ஒருபொருளில் வந்திருப்பதினால், சான்றோர்குலத்தவர்களும் பாண்டியர்குலத்தவர்களும் ஏககுலத்தினர்களாக விளங்கியிருக்கின்றபிரகாரமே, சோழர்குலத்தவர்களும் சான்றோர்குலத்தினர்களுக்குக்கிளையாராக விளங்கியிருக்கின்றனர்.*

அதுவுமன்றி, மேலே கூறியிருக்கிறபிரகாரம், பாண்டிவளநாட்டரசர்களுக்கும், சோழவளநாட்டரசர்களுக்கும், சேரவளநாட்டரசர்களுக்கும், 'நாடான், நாடன்' என்கிற பட்டப்பெயர்கள் வந்திருப்பதுபோலவே, சான்றோர்குலத்தவர்களுக்கும் 'நாடான், நாடன்' என்கிற பட்டப்பெயர்கள் வந்திருக்கின்றமையால், சான்றோர்குலத்தவர்கள் 'சேர சோழ பாண்டியர் குலத்தவர்கள்' என்பது தீர்க்கமுறத் தெரியவருகின்றது.

மேலும், 'ஈழனும், சோழனும்' 'நாடன்' எனப் பட்டப்பெயர் பெற்றிருப்பதற்கு வேறு சில மேற்கோள்கள் இங்ஙனம் பேர்த்தெழுதிக் காண்பிப்போம்.

தமிழ்நாட்டரசர்களாகிய "ஈழன், சோழன், சேரன், பாண்டியன்" எனப் பெயர்பெற்ற நான்குஅரசர்களுடைய வம்சக்கிளைப்பிரிவார்களும் ஏககுலத்தினராய், விவாகசம்பந்தராய், 'நாடான், நாடன்' எனப் பட்டப்பெயர்கள்பெற்று, பூர்வத்தில் தமிழ்நாட்டில் அரசுபுரிந்தவர்கள். இவர்களில் ஈழக்குலச்சான்றோர் ஒருகாலத்தில் இலங்கையையுஞ் செயித்து ஆண்டுவந்தவர்கள். ஈழக்குலச்சான்றோர்கள், மற்றக்கிளைப்பிரிவார்களுக்கொப்பந்தம் ஆதிகாலத்தில் சிவபக்தர்களாயிருந்தார்கள். ஆயினும், அரிமர்த்தனபாண்டியராசன்காலத்தில், மாணிக்கவாசகர் அந்த அரசனுக்குப் பிரதான மந்திரியும் சிவபக்தியில் மிகு வைராக்கியனுமாயிருந்து வருகிற நாளையிலே, ஈழநாடனும் அவன் குலத்தவர்களும் புத்தமதவனுசாரிகளானதுமன்றி, ஈழநாடன் சோழநாடனுக்கு உட்

* கலிங்கன், சேரன், சோழன், பாண்டியன், ஆகிய நால்வரும் தாயாதிகளாவர்.—*Vide Tod's Rajastan, Vol. I, Genealogical Table.*

பட்டுத் திறைகட்டிவந்தான். அப்படியிருந்துவருகிறநாளை யிலே, புத்தர்களுக்கும், மாணிக்கவாசகர் தில்லைமூவாயிர வர் முதலான சிவபக்தர்களுக்கும் புலியூர் எனப் பெயர்கொ ண்ட சிதம்பரத்தில் மதவிஷயத்தர்க்கம் நேரிட்டது. அந்தத் தர்க்கவிஷயம் திருவாதவூரர்புராணத்தில் விபரமாய்க்கண் டிருக்கின்றது. அந்தப் புராணத்திலிருந்து சில மேற்கோள் களை இங்ஙனம் பேர்த்தெழுதுகின்றனம்.

(xliii) திருவாதவூரர்புராணம், புத்தரைவாதில்வென்ற சருக்கம், 2-வது கவி:

"நண்ணுமாதிமாதவ னலங்கொளீழநாடனு
மண்ணருனிருந்தவூ ரடைந்துசேரிடந்தொறு
மெண்ணிலாதகாலம்வாழி தில்லைமன்றமென்றுகூ
ருண்ணிலாவுமன்பினு லுரைக்கவேதொடங்கினன்."

இதற்குத்தாற்பரியம்.

சிவபக்தியில் முதிர்ந்த மகாதபோதனனொருவன் ஸ்தலயாத் திரைசெய்யப்புறப்பட்டு, சோழநாட்டிற்சென்று சிவஸ்தலத ரிசனைசெய்துகொண்டு வருகையில், சிதம்பரத்திற்குப்போய் சிவதரிசனைசெய்தானபிறகு, இலங்கை எனப் பெயர்கொண்ட ஈழநாட்டிற்குப்போனன். அவ்விடத்தில் நடந்ததை இந்தக் கவிகூறுகின்றது. இதில் ஈழநாட்டரசனுக்கு 'ஈழநாடன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. சேரசோழபாண்டியர்களுக்கு 'நாடன், நாடான்' எனப் பட்டப்பெயர் வந்திருக்கிற பிரகார மே, ஈழனுக்கும் பட்டப்பெயர்வந்ததுகாண்க.

(xliv) மேற்படி சருக்கம், 3-வது கவி:

"சென்றுசேரிடந்தொறுஞ் சிறந்தசெம்பொன்னம்பல
மென்றுகூறிவைகுநாளி லீழநாடன்முன்புபோய்
நன்றிலாதமூடர்தா நயந்திறைஞ்சிமன்னகே
ளொன்றியாமுரைத்துமென் றுவந்திவ்வாறுகூறினர்."

இதற்குத்தாற்பரியம்.

ஈழநாடுபோய்ச்சேர்ந்த அந்தச்சிவதொண்டனனவன் அந் தநாடெங்கும் சிவனுடைய நாமத்தைத்துதித்துப் போற்றிக்

கொண்டு திரிகையில், இதைத்தெரிவிக்கச் சிலபேர் ஈழநாடா னிடத்திற்குப்போனார்கள் என்பதாம். இக்கவியில், ஈழனுக் கு 'ஈழநாடன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. ஆனதால், ஈழநாடானே ஈழக்குலச்சான்றோனும். ஆகவே ஈழக்குலத் தவர்கள், 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயருள டங்குவர்.

(xlv) மேற்படி சருக்கம், 42-வது கவி :

" ஈழவளநாடனுமெழுந்தடிபணிந்துதிறை
யிட்டகுறைநல்கியிறைவா,
வாழிமிகவாழியெனநின்றபொழுதங்கவனை
மன்னர்பெருமானுமகிழா
வேழமிவைநல்லவிலை யில்லையிம்மணிக்கென
வியந்தருகிருத்தியெவருஞ்
சூழுமவைதங்குமுழி யங்கயவிருந்தனர்கள்
சூழ்ந்துகரிசொல்லுமயலோர்."

இதற்குத்தாற்பரியம்.

புத்தகுருக்கள் சிதம்பரத்துக்குப் புறப்பட்டுப்போனபிற் பாடு, ஈழநாட்டரசனும் அவ்விடத்திற்குத் தன்சேனைதளங்க ளோடு புறப்பட்டுப்போனான். தில்லைமூவாயிரவர் சமுகத் தில் புத்தருக்கும் மாணிக்கவாசகருக்கும் நேரிட்ட தர்க்கவா தத்தின் முடிவை யறியும்பொருட்டு சோழமகாராஜனும் தன் சேனைகளோடு புறப்பட்டு அவ்விடத்திற்குப் போயிருந்தான. அக்காலத்தில் ஈழநாடாள்வான் சோழநாடாள்வானுக்குக் கீழ்ப்பட்டிருந்ததினாலே, தான் சோழனுக்கு முன்கட்டியதிறை போக மீதியானதை இப்போதுகட்டி அவன் சமுகத்தில் நின் றான். அப்போது சோழநாடான் ஈழநாடானுக்குத் தன்பக்கத் தில் ஆசனமிட்டு உளுக்காரச்செய்தான் என்பதாம்.

இதில் ஈழனுக்கு 'ஈழவளநாடன்' எனப் பெயர்வந்திருக் கின்றது. ஆனதால்,

நாடன் = அரசன்.

(xlvi) மேற்படி சருக்கம், 83-வது கவி :

"அஞ்சிவஞ்சகர்நாவினின்று மகன்றபின்பவர்தாமெலாம்
நஞ்சருந்தினர்போலொடுங்கி நடுங்கியூமைகளாயினர்
நெஞ்சநொந்துபினீழநாட னிறைந்திடுஞ்சிவஞானநூ
லெஞ்சலின்றியசெல்வர்பாத மிறைஞ்சிநின்றிதுகூறினான்."

(xlvii) மேற்படி சருக்கம், 87-வது கவி :

"ஈழமன்னனுமஞ்செழுத்து மியம்பிநீறுபுனைந்தபின்
றாழநின்றடிமைத்திறந்தவ ரூததொண்டினனாயினன்
சோழனும்புலியூரின்மன்னிய தொன்மையாளருமம்பலம்
வாழ்கவென்றுதுதித்துநின்றெழில் வாதவூரரையேத்தினார்"

மேற்படி இரண்டுகவிகளுக்குந்தாற்பரியம்.

மாணிக்கவாசகர் புத்தர்கள் வினவியவினாக்களுக்கு ஏற்ற விடைகள்கூறி சிவமதத்தை நிறுத்தியபோது, மேற்படிபுத்தர்கள் எதிர்வசனங்கூற சக்தியற்றவர்களாய் ஊமையர்கள் போலிருந்தனர். அப்போது ஈழநாடான் எழுந்து சிவஞான போதனையில் முதிர்ந்த சிவதொண்டர்பதியாகிய மாணிக்க வாசகருடைய இருபாதங்களையும் வணங்கி, சிவமதத்தை அங்கிகரித்து, 'ஓம், சிவாயநம' என்கிற பஞ்சாட்சரத்தை பயபக்தியுடன் செபித்து, திருநீறணிந்து சிவதொண்டனாயினன். அது கண்டு, சோழநாடனும், தில்லை மூவாயிரவரும், மற்றும் சிவபக்தர்களும் மனமகிழ்ந்து 'திருச்சிற்றம்பலம் வாழ்க' எனத் துதித்து, மாணிக்கவாசகரைப் புகழ்ந்துகூறினர் என்பதாம்.

இந்த இரண்டு கவிகளில், 83-வது கவியில், ஈழனுக்கு, 'ஈழநாடன்' எனவும், 87-வது கவியில், ஈழனுக்கு 'ஈழமன்னன்' எனவும் பெயர்கள் வந்திருக்கின்றன. ஆனதால், 'ஈழநாடன், ஈழமன்னன்' என்னும் இரண்டுபெயர்களும் ஒருபொருட்பதங்களாம். ஆகவே, 'நாடன், மன்னன்' என்னும் இரண்டு சொற்களும் ஒரு பொருட்பதங்களென்பதற்குச் சந்தேகமேயில்லை. ஆனதால்,

நாடன் = மன்னன்,
= அரசன்.*

புத்தரைவாதில்வென்ற இந்தச்சருக்கத்தில், சோழனுக்கும் 'நாடன்' எனப் பட்டப்பெயர்வந்திருப்பதற்குச் சில திருட்டாந்தங்கள் இங்ஙனம் பேர்த்தெழுதுவோம்.

(xlviii) திருவாதவூரர்புராணம், புத்தரைவாதில்வென்ற சருக்கம், 51-வது கவி.

"வாதவூரண்ணலாரும் வண்புனற்பொன்னிநாடன்
நீதிலாமுகத்தினூடு சிறந்தருட்பார்வைநல்கிப்
பேதையாயறிவில்லாமல் பித்துரைபகரும்புத்தற்
கேதியாமின்றுசொல்வ தென்றுபினிதுபுகன்றார்."

இதற்குத்தாற்பரியம்.

திருவாதவூரராகிய மாணிக்கவாசகர் சோழநாடானைப்பார்த்து மூடனாய்ப் பித்துரை வசனிக்கின்ற இந்தப்புத்தனுக்கு என்ன சொல்லலாம் என்றார் என்பதாம்.

இந்தக்கவியில், சோழனுக்குப் 'பொன்னி நாடன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. ஆனதால், 'பொன்னிநாடன்' என்பதற்குப் 'பொன்னிமன்னன்' என்பதுபொருளாம். ஆகவே,

நாடன் = மன்னன்,
= அரசன்.

---

* இதற்கு இனமான மற்றொருபாடல் வருமாறு:
திருவாதவூரர்புராணம், புத்தரைவாதில்வென்ற சருக்கம் 88-வது கவி.

"தக்கசீர்பயிலீழமன்னுயர் சைவனூரெதிர்நின்றுநின்
றக்கமாலைபுனைந்துநீறு மணிந்துதொண்டனுமாகவே
துக்கமாகியசீவரத்துவ ராடைமூடுமுடம்பினூர்
மிக்ககாதரமூகைதீர்ந்திடல் வேண்டுமென்றுவணங்கினார்."

இந்தக்கவியில், ஈழநாடனுக்கு, 'ஈழமன்' எனப் பெயர் வந்திருக்கின்றது. 'நாடன், மன்னன், மன்' ஒரு பொருட்கிளவிகளாம். ஆனதால், நாடன் = மன்னன் = மன் = அரசன்.

(xlix) மேற்படிபுராணம், புத்தரைவாதில்வென்ற சருக்கம், 89-வது கவி:

"இன்னவாறருள்செய்குவா யினியெம்பிரானெனவன்புடன்,
பொன்னிசூழ்வளநாடனும் புலியூருளாருமிறைஞ்சினர்,
மன்னுசீர்புனைவாதவூரர் மகிழ்ந்துபார்வையைநல்கவே
மூன்னதாகவணங்கியேயவர் மூகைதீர்த்திதுகூறினர்."

இக்கவியில், சோழநாடனும் புலியூராகிய சிதம்பரத்திலுள்ளவர்களும், புத்தர்களுக்கு நேரிட்ட ஊமைத்தன்மை நீக்கி இரட்சிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தனர். அந்தப்படி மாணிக்கவாசகரும் பேச்சற்று ஊமையர்களாய்ப் போன புத்தர்களுடைய வாய்திறபடச் செய்தனர் எனக் கூறியிருக்கின்றது. இதில், சோழனுக்குப் 'பொன்னிசூழ்வள நாடன்' எனப் பெயர்வந்திருக்கிறது. ஆனதால்,

நாடன் = மன்னன்,
= மன்,
= அரசன்.

(l) மேற்படிபுராணம், புத்தரை வாதில்வென்ற சருக்கம், 92-வது கவி:

"பொய்யிலாவருளையரும்புலி யூருளார்களுமுன்புசேர்
மையலாகிய வேடமின்றிவயங்குநீறணிவார்களும்
துய்யகாவிரிநாடனுந்து கடீருமீழர்தமன்னனுஞ்
செய்யமாமணிமன்றுளார்திருமுன்புசென்றுவணங்கினர்."

இந்தக்கவியில், சோழனுக்குத் 'துய்யகாவிரிநாடன்' எனவும், ஈழனுக்கு 'ஈழர்தமன்னன்' எனவும் பெயர்கள்வந்திருக்கின்றன. இவ்விருபெயர்களிலும் 'நாடன், மன்னன்' என்னும் பட்டப்பெயர்கள் ஒருபொருளில் வந்தது காண்க. ஆகவே,

நாடன் = மன்னன்,
= அரசன்.

(li) மேற்படிபுராணம், புத்தரைவாதில்வென்ற சருக்கம், 95-வது கவி :

"பொன்னிநாடனுமீழநாடு புரந்தமன்னனுமுன்புசேர்
மன்னுதீவினைதீரமன்று வணங்கிநீறணிவார்களும்
முன்னதாகவிறைஞ்சிஞான முதிர்ந்தகோலவையகன்றுபோய்
மின்னுமாமணிமாடமாளிகை தன்னிலன்புடன்மேவினார்."

இங்ஙனம், சோழனுக்குப் 'பொன்னிநாடன்' எனவும், ஈழனுக்கு 'ஈழநாடுபுரந்தமன்னன்' எனவும், மற்றவரசர்களுக்கு 'முன்புசேர்மன்' எனவும் பட்டப்பெயர்கள் வந்திருக்கின்றன. இதில், 'நாடன், மன்னன், மன்' என்னும் பெயர்கள் 'அரசன்' என்னும் ஒருபொருளில் வந்திருப்பதற்குச் சந்தேகமேயில்லை. ஆனதால்,

நாடன் = மன்னன்,
= மன்,
= அரசன்.

இந்தப்புராணத்தில், பாண்டியனுக்கும் 'நாடன்' எனப் பட்டப்பெயர்வந்திருக்கின்றது. அதற்குத்திருட்டாந்தமாக மேலே கூறப்பட்டிருக்குஞ் செய்யுள்களிலொன்றைச் சம்பந்தச் சார்பினிமித்தம் இங்ஙனம் மறுபடியும் அதை எடுத்தெழுதுகின்றோம்.

(lii) மேற்படிபுராணம், மந்திரிச்சருக்கம், 15-வதுகவி :

"தென்னவன்பிரமராய னென்றருள்சிறந்தநாம
மன்னவர்மதிக்கநல்கி வையகமுய்வதாக
மின்னவமணிப்பூணுடை வெண்மதிக்கவிகைதண்டு
பொன்னவிர்கவரிவேழ மளித்தனன்பொருனைநாடன்."

மாணிக்கவாசகருக்குப் பாண்டியன் அநேகவித விருதுகள் கொடுத்தான் என்பது இங்ஙனம் விளங்குகின்றது.

(liii) மேற்படிபுராணம், மந்திரிச்சருக்கம், 28-வது கவி:

"மீனவர்கோன்மொழியின்படி வேணியனேசரிசைந்தபின்
ஞானசோதியுடன்புவி யாள்பவன்வாசிகொளும்படி
வானவிமானமெனுந்திரு வாழ்வுளகோயில்புகுந்துதன்
னீனமிலாநெறிவந்தபொன் னேழுகோடிவழங்கினன்."

இந்தக்கவியில், குதிரைகள்கொள்ளுதற்குப் பாண்டியராசன் மாணிக்கவாசகருக்கு மிகுந்த திரவியங்கள் கொடுத்து அவரைத் திருப்பெருந்துறைக்கு அனுப்பினான் என வருகின்றது.

இவ்விரண்டு கவிகளிலும் பாண்டியனுக்குப் 'பொருனை நாடன், மீனவர்கோன்' எனப் பெயர்கள் வந்திருக்கின்றன. இந்தப்பெயர்களில் வந்திருக்கின்ற 'நாடன், கோன்' என்னும் பட்டப்பெயர்கள் ஒரு பொருட்பெயர்களாய் 'அரசன்' என்னுங்கருத்தில் வந்துவழங்கியிருக்கின்றன. ஆகவே,

நாடன் = கோன்,
= அரசன்.

மேலும் இந்தக்கவியில் பாண்டியனுக்குப் 'புவியாள்பவன்' எனவும் பட்டப்பெயர் வந்தது காண்க. ஆனதால்,

புவியாள்பவன் = நாடாள்பவன் = அரசன்.

மேற்கூறியவைகளையெல்லாந் திரட்டிப்பார்க்கும்போது, ஈழ சேர சோழபாண்டியர்களுக்கு 'நாடன், நாடான்' எனப் பட்டப்பெயர்கள் வந்திருப்பது மிகவுந்தெளிவாக விளங்குகின்றது.

டாட் (Tod) ஆசிரியரது இராசபுத்தனச் சரித்திரத்திலுள்ள இராசபரம்பரை யட்டவணையில் கலிங்கன், சேரன், சோழன், பாண்டியன் என்றவர் 'குருசுனன்' என்னும் சந்திர வங்கிசத்து இராசனது பிள்ளைகளென்று சொல்லியிருப்பதும் இதற்கிசைந்திருக்கிறது.* ஆனதால், ஈழ சேர சோழபாண்டியர்குலத்தவர்கள் ஏககுலத்தினராய், நான்குகிளைப்பிரிவுளடங்கி, நூல்வழக்கில் 'நாடன்' எனவும், உலகவழக்கில் 'நாடான்' எனவும் வருகின்ற தமிழ்ச்சத்திரியகுலப் பட்டப்பெயரும், 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் அரசர்குலக் கௌரவப்பட்டப்பெயரும் பெற்றுவந்திருக்கின்றனர். ஆகையினால், இந்த நான்கு கிளைப்பிரிவார்களுக்குந் தனித்தனியே,

---

* விபரம், சான்றோர்மரபு, இராசவங்கிச அட்டவணைகாண்க.

ஈழக்குலச்சான்ஞேர்,
சேரகுலச்சான்ஞேர்,
சோழகுலச்சான்ஞேர்,
பாண்டியகுலச்சான்ஞேர், எனவும்,

இந்த நான்குகிளைப்பிரிவுகளிற் செங்கோற்செலுத்திய மன்னனுக்குத் தனித்தனியே,

நூல்வழக்கில், ஈழநாடன்,
சேரநாடன்,
சோழநாடன்,
பாண்டிநாடன் எனவும்,

உலகவழக்கில், ஈழநாடான்,
சேரநாடான்,
சோழநாடான்,
பாண்டிநாடான் எனவும்,

பட்டப்பெயர்கள்வந்து வழங்கியிருக்கின்றன. இதனுல் இந்த நாலு தமிழ்நாட்டரசர்குலக்கிளைப்பிரிவார்களுக்கும் அரிமர்த்தன பாண்டியன்நாளேயில் 'நாடன், நாடான்' என்கிற பட்டப்பெயர் வழக்கமாயிருந்தது ருசுவாகின்றது.

(liv) 'நாடன்' என்னும்பெயர் தமிழ்ரசர்குலத்தவர்களுக்குப் பட்டப்பெயரானதிஞலே, நட்சத்திரங்களில் கார்த்திகைமாதத்தில்வருங் கார்த்திகை நட்சத்திரத்தில் மாபலிக்குச் சொர்க்கவாசல்திறந்த வைபவத்தை நினைவுகூரும்பொருட்டு, கார்த்திகைத்தீபம் எனப் பெயர்பெற்ற கற்பகத்தீபங்கள் கொளுத்தி மகா உற்சவங்கொண்டாடிவருவதால், அது சிறந்தநாளாயிற்று. ஆனபடியிஞலே, அந்தநட்சத்திரம் 'இராசநட்சத்திரம்' எனப் பெயர்விளங்கும்பொருட்டு, அதற்கு 'நாடன்' என்கின்ற சோழராசர் பட்டப்பெயர் இடப்பட்டது. அதனுல், கார்த்திகை நட்சத்திரத்திற்கு 'நாடஞள்' எனப் பெயர்வந்திருக்கின்றது. ஆகவே, 'நாடஞள்' என்பதற்குச் 'சோழநாடஞள்' எனவும், 'அரசஞள்' எனவும் தாற்பரியமாம். இதிலும் நாடன்' என்பதற்கு 'அரசன்' என்பதே பொருளாம்.

(lv) பருத்திச்செடிவகைகளில் மூன்று நாலு வருஷ மட்டுமிருக்கும் உயர்சாதியான பருத்திச்செடிக்கு 'நாடன்பருத்தி' எனப் பெயர்வந்திருக்கின்றது. 'நாடன்பருத்தி' என்பதற்குச் 'சோழநாடன்பருத்தி' எனவும், 'அரசன்பருத்தி' எனவும் அருத்தமாம். இதிலும் 'நாடன்' என்பது 'அரசன்' என்னும் பொருளில் வந்தது காண்க.

(lvi) வாழைமரச்சாதிகளில் உயர்சாதியான வாழைக்குப் 'பச்சைநாடான்வாழை' எனப்பெயர்வந்திருக்கின்றது. 'பச்சைநாடான்வாழை' என்பதற்குப் 'பச்சைநாடான்' எனப் பெயர்கொண்ட சோழராசன்காலத்தில் கண்டறியப்பட்ட ஒரு உயர்சாதியான வாழைமரம் என்பது தாற்பரியமாம். இதிலும், நாடன்=அரசன்.

மேலும், பழமொழி என்னும் நூலிலிருந்து இரண்டொரு உதாரணங்கள் இங்ஙனம் பேர்த்தெழுதுவோம்.

(lvii) பழமொழி, 4-வது கவி:

"கல்வியானுய கழிநுட்பங்கல்லார்முற்
சொல்லியநல்லவுந்தீயவா—மெல்லா
மிவர்வரைநாட தமரையில்லார்க்கு
நகரமுங்காடு போன்றுங்கு."

இந்தக்கவியில், பாண்டியனுக்கு 'இவர்வரைநாட' எனப் பெயர்வந்திருக்கிறது. 'இவர்வரைநாட' என்பதற்கு 'உயர்ந்த மலைகளையுடைய நாடாள்வா, அல்லது அரசா' என்பதுபொருளாம்.

(lviii) பழமொழி, 20-வது கவி:

"கற்றறிவார் கண்டதடக்கமடங்காதார்
பொச்சாந்துந்தம்மைப் புகழ்ந்துரைப்பார்—தெற்ற
அறைகலருவியணிமலைநாட,
நிறைகுடநீர்தளும்பலில்."

இக்கவியில், பாண்டியனுக்குத் 'தெற்றவறைகலருவியணிமலைநாட' எனப்பெயர்வந்திருக்கின்றது. 'தெற்றவறைகலருவியணிமலைநாட' என்பதற்கு, அங்கிலேய மொழிபெயர்ப்

பில், O King of the country whose mountains are ornamented by clear water gushing from the rocks, எனத் தாற்பரியம் வந்திருக்கிறது. இதில், 'நாடன்' என்னும் பட்டப்பெயருக்கு 'King of the country' எனத் தாற்பரியம் வந்திருப்பதால், 'King of the country' என்பதற்கு, 'நாட்டரசன், நாடாள்வான், அரசன்' என்பது அருத்தமாம். ஆகவே,

நாடன் = King of the country,
= நாட்டரசன்,
= நாடாள்வான்,
= நாடான்,
= அரசன்.

(lix) வடநாட்டுச் சத்திரியகுலத்தவர்களுக்கு 'ராஜா' என்கிற அரசர்குலப்பட்டப்பெயர் வடமொழியில் வழங்கி வந்திருக்கின்றபிரகாரம், தென்னாட்டுத் தமிழரசர்குலத்தவர்களுக்குத் தென்மொழியில் 'அரசன்' எனவரவேண்டிய பட்டப்பெயருக்குப் பதிலாக, 'நாடன், நாடான், நாடாள்வான்' என்னும் பட்டப்பெயர்கள் வழங்கிவந்திருக்கின்றன. ஆனதால், 'ராஜா, அரசன், நாடன், நாடான்' என்னும் நான்குபெயர்களும் ஒருபொருட்பெயர்களாம்.

வடநாட்டுச் சத்திரியருக்குள் வழங்குகின்றபெயர்கள் வருமாறு:

நரசிங்கராஜா, இராமராஜா,
நாராயணராஜா, வாசுதேவராஜா,

பிறவுமன்ன.

தென்னாட்டுத் தமிழரசர்குலத்தவர்களுக்குள் வழங்கிவருகின்ற பெயர்கள்வருமாறு:

வீரவர்மமார்த்தாண்டநாடன்,
நாகமணிநாடான்,
சுப்பிரமணியநாடன்,
சோமசுந்தரநாடாள்வான்,
குலசேகரப்பெருமாள் நாடான்,

பிறவுமன்ன.

ஈழமன்னன், ஈழநாடன்,
சோழவேந்தன், சோழநாடன்,
குடக்கோன், குடநாடன்,
பொருநைநாடன், வையைநாடான்,
மாதைநாடாள்வான், மாதைமன்னன்,

பிறவுமன்ன.

இந்தத்திருட்டாந்தங்களினுலே 'ராஜா, நாடான், அரசன்' என்னும் பட்டப்பெயர்கள் ஒருபொருட்கிளவிகளென நன்றாய்த்துலங்குகின்றது.

(lx) தமிழ்நாட்டு நூல்வழக்கிலும் உலகவழக்கிலும் வருகின்ற உதாரணங்களிற் சிலவற்றை மேலே எடுத்துரைத்தோம். இனி அந்நியநாட்டார்கள் எழுதியிருக்கிற நூல்களிலிருந்து இரண்டொரு திருட்டாந்தங்கள் இங்ஙனம் பேர்த்தெழுதிக்காட்டுவோம். அவைவருமாறு :

(1) The South India Sketches.

By

Miss S. Tucker.

Part II., letter 4, p. 35.

"The villages in these palmyra groves are inhabited chiefly by Shanars (= Santôrs), an industrious hard-working race, reckoned among the lower sub-divisions of the Sudras.

"From all that I can find about them I am much inclined to agree with those who consider them to have been the original possessors of the country, and that when the conquering army of *Rama* took possession of the richer northern districts, the Shanars were suffered to retain their palmyras unmolested.

"One strong argument in favour of this conjecture, is that in the southern part of Tinnevelly, the highest class

of Shanars, called 'Nadans,' are the acknowledged proprietors of the soil; in even when a Nadan has sold a piece of land, he retains the right to a sort of *quit-rent.*

"Indeed the system is very like that of our lords of manor, with the addition of the remarkable privilege, that in any dispute that is brought into a court of law, with regard to landed property, though all other classes are obliged to establish their claims by written documents, it is only necessary for a Nadan to be indentified as the Nadan of such a particular spot; and the disputed property is adjusted to him, unless the opponent can prove his purchase of it."

*இதற்குத் தமிழில் தாற்பரியவுரை.*

*தென்னிந்தியாவின்சரித்திரசாரம், இரண்டாவது பாகம், நாலாவதுநிருபம், பக். 35.*

*" இத்திசையில் தாலவிருக்ஷச்சோலைகளுக்குள்ளே இருக்கின்ற கிராமங்களில் முக்கியமாய்ச் சான்றார்குலத்தவர்கள் குடியிருக்கிறார்கள். அவர்கள் மிகுந்தசாக்கிரதையோடு வருந்தி உழைக்கிற குலத்தவர்கள். இக்குலத்தவர்கள் சூத்திரகுலப்பிரிவுகளிற் கீழ்ப்பிரிவைச்சேர்ந்தவர்களாக மதிக்கப்படுகின்றனர். ஆயினும், இந்தக்குலத்தவர்கள் இந்த நாட்டிற்கு ஆதிபூர்வப்பாத்திய வுரிமையுடையவர்களென்றும், இராமனுடைய வெற்றிசிறந்தசேனைகள் மிகுசெழிப்புற்ற வடநாடுகளைக்கட்டிக்கொண்ட காலத்தில், 'சான்றார்' தங்கள் தாலவிருக்ஷச்சோலைகளைத் தடையின்றி அநுபோகஞ்செய்துவர இடம் பெற்றனரென்றும் எண்ணுகிறவர்களுக்கொப்பந்தம், அவர்களைக்குறித்து நானும் ஆராய்ந்தறிந்திருக்கிற விசேஷங்களால் எனக்கும் அவ்வாறே அபிப்பிராயமாகின்றது.*

*"இவ்வாறு அபிப்பிராயங்கொள்ளுதற்கு ஒருபலத்த நியாயமுண்டு. அந்த நியாயமென்னவென்றால், திருநெல்வேலிச் சீர்மையின் தென்நாட்டில்வசிக்கின்ற சான்றோர்குலப்பெரியோர்களுக்கு 'நாடான்' எனப்பட்டப்பெயர்வந்து வழங்கு*

கின்றது. இப்படிப்படடப்பெயர்பெற்றிருக்கின்ற நாடாக்கள் நிலத்துக்குரிமையுடைய காணியாட்சிக்காரரென எவரும் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். ஒருநாடான் தன் காணியாட்சி யான நிலத்தில் ஒருபாகத்தை அயலாளொருவனுக்கு விலைக் கிரயஞ்செய்து கொடுத்திருந்தபோதிலும், மேற்படி நிலத் தைக்கிரயத்திற்குவாங்கினவன், மேற்படிநிலத்திற்கு ஆதிபூர் வப்பாத்தியவுரிமையுடைய மேற்படி நாடானுக்கு மனைவரிப் பணம் (=மனைவப்பணம்) கொடுத்துவருவது நெடுகிலும் வழக்கம்.

"மெய்யாகவே இந்தவழக்கம் அங்கிலேயநாட்டு மேன்மக் களுக்குள்ளிருக்கின்ற வழக்கம்போலிருக்கிறது. இன்னமும் ஒரு வழக்கமுண்டு: நியாயஸ்தலங்களில் நிலவியாச்சியங் கள் நேரிடுங்காலத்தில் மற்றவர்களெல்லாரும் எழுத்துப் பட்டயங்களாகிய சாசனங்களால் தங்களுக்குரிய மேற்படி நிலப்பாத்தியத்தை ருசுப்படுத்தவேண்டுவதா யிருக்கின்றது. மேற்படி வியாச்சியக்காரன் மேற்படி நிலத்தைத் தான்கிர யத்துக்குவாங்கினதை தஸ்தவேசுகளால் ருசுப்படுத்தாது போகிறகாலத்தில், மேற்படி பூமிக்குரிய நாடான் எவனோ அவனுக்கே உரியதென்று தீர்ப்பாகின்றது."

மேற்படி சரித்திரக்குறிப்பில் நாம் கவனிக்கவேண்டிய இரண்டொரு முக்கியவிஷயங்களுண்டு. அவற்றை இங்ஙை னங் கூறுவோம்:

(a) 'சான்றோர் குலத்தவர்கள் குடியிருப்புக்கிராமங்கள் தாலவிருக்ஷச்சோலைகளுக்குள்ளிருக்கின்றன' எனச் சொல்லி யிருக்கிறது.

நாம் மேலே விபரப்படக்கூறியிருக்கிறபடி, சுரர்குலத்தவர் கள் கற்பகவிருக்ஷச்சோலைகளுக்குள்ளே குடியிருந்து வாழ் ந்து வந்தபிரகாரம், சுரர்குலப்பிரிவார்களாகிய தென்பாண்டி நாட்டுச் சான்றோர்குலத்தவர்களும் கற்பகவிருக்ஷச்சோலை களுக்குள்ளே நாளதுவரையிலுங் குடியிருந்துவருகின்றனர். சுரர்நாட்டுக்கொப்பந்தம், பனைவிருக்ஷமாகிய கற்பகவிருக்ஷக் காடாயிருப்பதால், இதற்குங் கற்பகநாடு எனவேபெயராம்.

சான்றோர்குலத்தவர்களுடைய கிராமங்களையும், அவர்களு டைய வீடுவாசல்களையுஞ்சூழ அகத்தும் புறத்தும் கற்பக விருக்ஷங்களே பிரகாசமாக விளங்கிநிற்கின்றன. வீட்டுமுற் றங்களிலும் வளவிலும் இந்தவிருக்ஷங்களைக் காணலாம். கற்பகவிருக்ஷங்கள் சுரர்நாட்டிற்கு அலங்காரமும் மகிமையு மாக விளங்கியபிரகாரம், இந்தத் தென்பாண்டிநாட்டுக்கும் அலங்காரமும் மகிமையுமாக விளங்கியிருக்கின்றன. சான் றோர்குலத்தவர்களுடைய பூர்வமகிமைகளில் அநேகங் குன் றிப்போயிருந்தபோதிலும், இந்தக் கற்பகவிருக்ஷமகிமை நா ளதுவரையினும் குன்றாது நிற்கின்றது. இந்தக்கற்பக விரு க்ஷப்பரிபாலனம் நாளதுவரையினும் அவர்களுடைய அநு போகத்திலிருப்பதால், அவர்கள் சுரர்குலப்பிரிவார்கள் என்ப தற்கு இது பலத்தருசுவாயிருக்கின்றது.

நாலடியார், ஈகை, 6-வது கவி :

"நடுவூருள்வேதிகைச்சுற்றுக் கோட்புக்க
படுபனையன்னர் பலர்நச்சவாழ்வார்
குடிகொழுத்தக்கண்ணும் கொடுத்துண்ணுமாக்க
ளிடுகாட்டுளேற்றுப்பனை."

இந்தக்கவியில், பலருமிச்சிக்கவாழ்பவர்கள் நடுவூருக்குள் ளே திண்ணைசூழ்ந்திருக்க நின்று, குலைகுலையாகக்காய்க்கின்ற கற்பகவிருக்ஷத்திற்கு ஒப்பாவர். கொடுத்துண்ணுதவர்கள் சுடுகாட்டில் நிற்கின்ற ஆண்கற்பகவிருக்ஷத்திற்கு ஒப்பாவர் எனச் சொல்லியிருக்கிறது. இந்த நாலடியார் என்னும் நூல் எழுதப்பட்டகாலத்திலும், தமிழ்நாடெங்கணும், முக்கியமா கத் தென்பாண்டிநாட்டிலும், இப்போதிருக்கிற பிரகாரம், நடுவூருக்குள்ளும் வீட்டு முற்றங்களிலுங் கற்பகவிருக்ஷங்க ளிருந்தன வென்பதும், அந்தவிருக்ஷங்கள் எவரும் இச்சிக்கத் தக்க விருக்ஷங்களாயிருந்தனவென்பதுந் தெளிவாகின்றது.

திருவள்ளுவமாலை, 6-வது கவி :

"என்றும்புலரா தயாணர்நாட்செல்லுகினும்
நின்றலர்ந்துதேன்பிலிற்று நீர்மையதாய்க்குன்றாத
செந்தளிர்க்கற்பகத்தின் றெய்வத்திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச்சொல்."

இங்ஙனம் தன் அழகு எக்காலத்திலுங் கெடாமல், நாட் சென்றபோதிலும் நிலைநின்று, பக்குவகாலத்தில் வெளிப்படு கின்ற பூங்கொம்பினின்று மதுரம்பொருந்திய அமுதத்தைச் சொரிகின்ற தன்மையையுடையதாய், செங்குத்தாக வளர் கின்ற அழகிய குருத்தோலைகளையுடையதாய் விளங்குகின்ற கற்பகவிருக்ஷத்தினது திவ்வியசிறந்த மலர்க்கொம்புபோல, இராசபுலவனுன வள்ளுவன்வாயிற் பிறந்துவந்திருக்கின்ற திருக்குறளானது விளங்குகின்றது எனக்கூறியிருக்கிறது,

தமிழ்ப்புலவர்களுக்குள்ளே இராசபுலவர் திருவள்ளுவர். அமுதவிருக்ஷங்களுக்குள்ளே இராசவிருக்ஷம் கற்பகவிரு க்ஷம். கற்பகவிருக்ஷமானது நெடுங்காலம்நின்று மானிட குலத்தவர்களுக்கு அமுதாகிய வுணவளித்து இன்பந்தருகின்ற பிரகாரம், திருக்குறளும் வித்துவான்களுக்கு இன்பந்தந்து வருகின்றது என்பதுபொருளாம். ஆனதால், பூர்வகாலத்திற் கற்பகச்சோலைகளுக்குள்ளிருந்து வாழும் வாழ்வு இன்பவாழ் வென மதிக்கப்பட்டது பிரத்தியட்சமாகிறது.

(b) சான்றோர்குலத்தவர்கள் சூத்திரகுலப்பிரிவுகளிற் கீழ்ப் பிரிவைச் சேர்ந்தவர்களாக மதிக்கப்படுகின்றனர் எனச்சொ ல்லியிருக்கின்றது.

"They are reckoned among the lower sub-divisions of the sudras."

'சான்றார்' எனப் பெயர்பெற்றிருக்கின்ற குலத்தவர்கள் தமிழ்நாட்டுக்குலப்பிரிவுகளில் இனகுலத்தைச் சேர்ந்தவர் கள் என்பது ஒருவருக்குந் தீர்க்கமுறவிளங்காத காரணத்தை யிட்டே அவர்களைப் பலவகையாக மதிப்பதற்கு ஏதுவாயிற்று. ஆனதால், இக்குலத்தவர்களைச்சுட்டிப் பெரியமயக்கமுண்டா யிருக்கின்றது. மேலே நாங்காண்பித்திருக்கிறபிரகாரம், 'சா ன்றார்' என்னும்பெயர் குலப்பெயரல்ல, கௌரவப்பட்டப் பெயர். கௌரவப்பட்டப்பெயரைக் குலப்பெயராகப் பாவித் துப் பேசுவதே அந்த மயக்கத்திற்குக் காரணம். பூர்வகுலப் பெயர்ச்சட்டங்களில் 'சாணார்' என்னும் மரூஉமொழி கூறப் படவில்லை. திவாகரம், சூடாமணிநிகண்டு என்னும் நூல்

கள் எழுதப்பட்டகாலத்தில், 'சாணார்' என்னும் மரூஉமொழி குலப்பெயராய் வழங்கியிருக்குமேயாயின், மேற்படி நூல்க ளில் குலப்பெயர்ச்சட்டத்தில் இந்தமொழி எழுதப்பட்டிருக் கும் என்பதற்குச் சந்தேகமில்லை. அப்படி எழுதப்படவில் லையே.

ஆயினும், மேற்படிநூல்கள் எழுதப்பட்டகாலத்தில் 'சான் ரோர், சான்றவர்' என்னும் பெயர்களும், தொல்காப்பியம், பெரியபுராணம் எழுதப்பட்டகாலங்களில் 'சான்றவர், சான் றார், சான்ரோர்' என்னும் பெயர்களும் சாதாரணமாக வழங் கிவந்ததாகத் தெரியவருகின்றது. ஆனதால், தமிழரசர்அரசு ரிமை யொழிந்தகாலத்திற்குப்பிற்பாடு 'சான்றார்' என்னும் பெயர் 'சாணார்' என மரூஉமொழியாயிற்றென்று தோன்று கின்றது. 'சான்றார்' என்னும்பெயர் 'சாணார்' என மரூஉவா கிய பிரகாரம், 'சான்றவர்' என்னும்பெயர் 'சாணவர்' என வும், 'சான்ரோர்' என்னும்பெயர் 'சாணோர்' எனவும் மரூஉ மொழியாகத் திரிந்துவரலாம்.

சான்ரோர்குலத்தவர்கள் இன்னகுலத்தைச் சேர்ந்தவர்க ளென்று தெரியாமையினாலேதான் சென்னைநகர் சென்சஸ் கம்மிட்டியாரும் (Census Committee) இக்குலத்தவர்களைச் சூத்திரகுலத்தவர்களுக்கெல்லாம் ஏறுங்கடைசியில் எழுத நினைத்தார்போலும்,

இந்தப் பெயர்மயக்காகிய மாறாட்டத்தையிட்டுச் சான்ரோர் குலத்தவர்கள் மேற்குலத்தவர்களையல்ல, கீழ்க்குலத்தவர்க ளைச் சேர்ந்தவர்களென்று சொல்லத்துணிபவர்களுஞ் சிலர் உளர்.

இவர்கள் 'சான்றவர், சான்றார், சான்ரோர்' எனக்கௌரவப் பட்டப்பெயர்பெற்றிருந்த தமிழரசர்குலத்தைச் சேர்ந்தவர்க ளானதால், திவாகரஆசிரியரும் சூடாமணிநிகண்டாசிரியரும் பார்ப்பனக்குலத்தவர்களுக்குரிய பெயர்களைக் கூறியபின்னர், அரசர்குலப்பெயர்களுக்குத் தலைப்பில் இந்தக் கௌரவப்பட் டப்பெயருடன் ஒரு பொருள்கொண்ட பெயர்களைச் சேர்த்

தெழுதிவைத்திருக்கிறார்கள். இதற்கு விபரம் இனி எட்டா வது பிரகரணத்திற் காண்க.

உத்தேசம் இரண்டாயிரத்து ஐந்நூறு வருடக்காலமாகத் தமிழ்நாடுகளில் இடையறுது நிலைபெற்றிருந்த அரசர்குலத் தவர்கள் கட்டோடே ஒழிந்து, தீர அருகிப்போய்விட்டார்கள் என்று சொல்லத்துணிவது புத்திக்கும், நியாயத்துக்கும், இயற்கைக்கும் ஒருவிதத்திலும் பொருந்தாத காரியமானமை யால், அது நம்பப்படத்தக்கதன்று. பின்வரும் பிரகரணங்க ளில் இதைக்குறித்து எழுதப்போகிறபடியால், இதை இங்ங னம் நிறுத்துதல்செய்கிறோம்.

(c) "One strong argument in favour of this conjecture is, that in the southern part of Tinnevelly, the highest class of Shanars, called 'Nadans,' are the acknowledged proprietors of the soil; in even when a Nadan has sold a piece of land, he retains the right to a sort of *quit-rent.*"

"இவ்வாறு அபிப்பிராயங்கொள்ளுதற்கு ஒரு பலத்த நியா யமுண்டு. அந்த நியாயம் என்னவென்றால், திருநெல்வேலிச் சீர்மையின் தென்நாட்டில் வசிக்கின்ற சான்றோர்குலப் பெ ரியோர்களுக்கு 'நாடான்' எனப் பட்டப்பெயர்வந்து வழங்கு கின்றது. இந்தப்பிரகாரம், பட்டப்பெயர்பெற்றிருக்கின்ற நாடாக்கள் (=நாடாள்வார்கள்) பூமிக்குரிமையுடைய கா ணியாட்சிக்காரரென எவரும் ஒப்புக்கொண்டிருக்கின்றனர். ஒரு நாடான் தன் காணியாட்சியான பூமியின் ஒருபாகத்தை அயலானொருவனுக்கு விலைக்கிரயஞ்செய்துகொடுத்திருந்த போதிலும், மேற்படிநிலத்தைக் கிரயத்திற்குவாங்கியவன் மே ற்படிபூமிக்கு ஆதிபூர்வப்பாத்திய வுரிமையுடைய மேற்படி நாடானுக்கு மனைவரிப்பணம் (=மனைவப்பணம்) கொடுத்து வருவது தெடுகிலும் வழக்கம்" என்று சொல்லியிருக்கின்றது. நாடாக்களுக்கு 'நிலமுதலிகள்' எனவும் பெயர்வரும்.

இது பலமான நியாயம் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆதிப்பாண்டியர்கள் கடற்கரையருகில், தாம்பிரவன்னிநதி முகத்துவாரத்தில், கொற்கைநகரைக்கட்டிக் குடியேறியகா

லத்தில், அத்திசை காட்டுப்பூமியாயிருந்தது. அவர்கள் காடுகள்வெட்டி நெரிஞ்சிதூத்துக்குடியேறினவர்கள்.* அவர்களுடைய வமிசத்தார் கொற்கைக்கு† வடதிசையிலுந் தென்திசையிலுமிருந்த பூமிகளிற்பரவிக் குடியேறிக் காட்டுப்பூமிகளைக் கைவசப்படுத்திக்கொண்டவர்கள். ஆனதால் அவர்களுக்குச் சாதனப்பத்திரங்களின்றி மேற்படி பூமிகள் கைவசமாயிற்று. அவர்களுடைய சந்ததியார் நாளதுவரையினும் அந்தப்பூமிகளை அனுபோகஞ் செய்துகொண்டுவந்திருக்கிறார்கள். இது இன்னநாடானுடைய பூமியென்று சொல்லும்போது, அதற்குச் சாசனப்பத்திரச்சாக்ஷியில்லை. அந்தப் பூமிகளை இவர்களுடைய முன்னவர்கள் கிரயத்திற்கு வாங்காததால், கிரயசாதனப்பத்திரங்கள் அவர்களுக்கில்லை. தொன்றுதொட்டு இடையறாது வந்திருக்கிற கையாட்சையனுபோகமே அவர்களுக்குச் சாதனப்பட்டயமாம். இவர்கள் விற்கும் நிலங்களுக்கு மனைவப்பணம் வாங்கிவருகின்றபடியால், இவர்களுக்குரிய பூர்வ நிலப்பாத்தியம் துலாம்பரமாக விளங்குகின்றது. இந்தவழக்கம் அங்கிலேயநாட்டு மேன்மக்களுக்குள்ளிருக்கின்ற வழக்கத்திற்கு ஒத்திருக்கிறது.

வடநாட்டுச் சத்திரியருக்கும் 'பூமியாஸ்' (=பூமிக்குடையவர்கள்)என்கிற பட்டப்பெயருண்டு.

மேலும், ஒருகுலத்துப் பூர்வோத்திரத்தை யாராய்பவர்கள்,

---

* "He (the proprietor of the soil in Mewar) has nature and Menu in support of his claim, and can quote the text, alike compulsory on prince and peasant, '*cultivated* land is the property of him who cut away the wood, or who *cleared and tilled it*:' an ordinance binding on the whole Hindu race, and which no international wars, or conquest, could overturn." *Vide* Tod's Annals and Antiquities of Rajast'han, Vol. I., p. 494

† "Tinnevelly had originally no name of its own, but was merely the southern portion of the Pandyan kingdom; but there the dynasty of the Pandyas originated, and there on the banks of the Tamraparni, you will find that Korkei, once a famous city, now an insignificant village, where the Pandyas reigned before they selected Madura as the chief seat of their power and from which they took the name of Korkeiali (கொற்கையாளி), ruler of Korkei." *Vide* Dr. R. Caldwell's Lecture on Tinnevelly and the Tinnevelly Mission, p. 2.

அந்தக்குலத்துப் பெரியோர்களுடைய ஸ்திதியைநோக்கிப் பூர்வோத்திரங் கூறவேண்டுமேயல்லாது அக்குலத்தில் தாழ்ந்த ஸ்திதியிலிருப்பவர்களைநோக்கிப் பூர்வோத்திரங் கூறுதல் இயற்கையன்று. 'நாடான்' என்கிற பட்டப்பெயர் தொன்றுதொட்டு இடையறாது இந்தக்குலத்தவர்களுக்கு வந்திருப்பதால், இக்குலத்தவர்கள் 'நாடான்' என்கிற பட்டப்பெயர் பெற்று பூர்வத்தில் நாடாண்டவர்கள் எவர்களோ அவர்களுடைய பரம்பரையிலுதித்தவர்களென்பதற்குச் சந்தேகமில்லை. அன்றியும், இந்தக் கொற்கைநகர்த்திசையில் பூர்வத்தில் ஐந்து சிற்றரசர்களிருந்து அரசுபுரிந்தனர். அவர்களுக்குப் 'பஞ்சதிருவழுதிநாடாக்கள்' என்றுபெயர். வழுதி என்பது பாண்டியனுக்கு ஒருபெயரானமையால், 'பஞ்சதிருவழுதி நாடாக்கள்' என்பதற்கு 'ஐந்து பாண்டியர்களாகிய நாடாக்கள் (=நாடாள்வார்கள்)என்பதுபொருளாம்.

இவைகளைத் திரட்டிப்பார்க்கும்போது, இந்தக் குலத்தவர்கள் பூர்வ தமிழரசர்குலத்தையொட்டினவர்கள் என்பதற்கு இது பலத்த ருசுவாகின்றது. இது நடுநிலையான சாக்ஷி. இது அந்நியமொழிக்காரர் சாக்ஷி. இது காரியத்தை இயல்பாய் ஆராய்கையில் தோன்றிய சாக்ஷி. ஆனதால், 'நாடான்' என்னும் பட்டப்பெயர்பெற்று, சிறு சிறு நாடுகளுக்குத் தொன்றுதொட்டு இடையறாது பாத்தியவுரிமைகொண்டிருப்பவர்களெவர்களோ அவர்கள் 'நாடான்' என்னும் பட்டப்பெயர்பெற்றிருந்த பூர்வ தமிழரசர்குலத்தவர்களுடைய சந்ததியார் என்பது தெளிவாக விளங்குகின்றது.

### (2) Mission of Edeyenkoody, in the District of Tinnevelly.

### Part Second.

### Report of the Rev. R. Caldwell, for the year ending 30th June, 1845, p. 6.

"Another of the new congregations has been formed in the vicinity of a village *Koottam*, situated to the east of

Edeyenkoody. This is a village inhabited chiefly by *Nadans;* the worst class of people in Tinnevelly.

"*The Nadans,** (a name signifying 'lords of the soil,') are Shanar land-owners, who claim rights of seignorage over most of the villages in the south, and keep themselves separate from the other Shanars, though also land-owners, as if they were a distinct caste. They are, as a class, the most turbulent, oppressive, proud and unprincipled to be met with, so far as I know, or have heard of in this province, or in the peninsula. They may be ranked amongst the worst of the human race. A few in various parts have become Christians, and some of the poorer of them have placed themselves under instruction in my own district; but they seem little, if at all, less obdurate than before. No kindness seems to melt them. No discipline seems to awe them. I often think they resemble tamed and trained wild beasts, which, so long as they are not provoked, look submissive, but whose innate ferocity may be aroused by the slightest accident.

"The *Nadans* of the village of *Koottam* are celebrated throughout Tinnevelly, like the Maravars of *Pudookaputt,* as the worst specimens of their caste, have for ages been scourges of the south."

இதற்குத் தமிழில் தாற்பரியவுரை.

திருநெல்வேலிநாட்டிலிருக்கிற இடையன்குடி மிஷன்,

இரண்டாவது பாகம்.

௲௮௱௪௰௫௵ ஜுன்மீ ௩௰௳ முடிகின்ற வருடத்திற்கு ஆர். கால்வெல் ஐயர் எழுதிய ரிப்போர்ட், பக். 6.

"இடையன்குடிக்குக் கீழ்பாரிசத்திலிருக்கின்ற குட்டம் எனப் பெயர்கொண்ட கிராமத்திற்குச் சமீபத்தில் நவமாக உண்

---

* "Chiefs of districts termed Nàdu."

டான சபைகளிலொன்று ஸ்தாபிக்கப்பட்டது. இது முக்கிய மாக நாடாக்கள் (=நாடாள்வார்கள்) குடியிருக்கிற கிராமம். இந்த நாடாக்கள் திருநெல்வேலி நாட்டிலுள்ள சனங்களெல்லாரிலும் மகாதுஷ்டர்.

'நாடான்' என்னும்பெயருக்கு 'நிலத்தரசுகாரன், பூமிக் குரிமையுடைய அதிபதி, ஒரு நாட்டிற்கு அதிபதி' என்பது பொருளாம். இந்த நாடாக்கள் சான்றூர்குலத்து நிலத்தரசு காரர்களாகிய காணியாட்சிக்காரர்களாம். அவர்கள் பெரும் பாலும் தென்திசையிலிருக்கின்ற கிராமங்களுக்கு அதிபதிப் பாத்திய வுரிமையுடையவர்கள். சான்றூர் குலத்திலுள்ள மற்றவர்கள் நிலப்பாத்தியமுடையவர்களாயிருந்தபோதிலும், அவர்கள் தங்களை இவர்களினின்று பிரத்தியேகமான குலத் தவர்களாயிருந்தாற்போல எண்ணிக்கொண்டு நடந்துவரு கிறவர்கள். எனக்குத் தெரிந்திருக்கிறபிரகாரம், அல்லது நான் கேள்விப்பட்டிருக்கிறபிரகாரம், இந்தநாட்டிலும் இந் தத் தென்இந்தியாதேசத்திலுமிருக்கின்றவர்களெல்லாரிலும் இந்த நாடாக்கள் ஏகத்திற்கு ஒன்றுபோல அதிக அடங் காக்குணமுடையவர்களும், (அயலாரை) அடக்கி ஒடுக்குகிற வர்களும், பெருமித நடையுடையவர்களும், மனோரதப்படி நடக்கிறவர்களுமாயிருக்கிறார்கள். இந்த நாடாக்களை மானிட குலத்தவர்களுக்குள்ளிருக்கிற மகா துஷ்டர்களோடு சமரசப்படுத்தலாம். இந்த நாடாக்களுக்குள் கிறிஸ்துமதத் தை யனுசரித்திருப்பவர்கள் அபூருவம். இவர்களுக்குள் அதி கத் தாழ்வடைந்திருக்கிறவர்களிற் சிலர் நானிருக்கிற திசை யில் கிறிஸ்தும்தத்தை யனுசரித்திருக்கிறார்கள். ஆயினும் அவர்களுடைய அடங்காக்குணம் முன்போலவே இருக்கின் றது. அவர்களுக்கு எவ்வளவுபட்சங் காண்பித்தபோதிலும், அவர்கள் மனம் இளக்கமடைகிறதுமில்லை; அவர்களுக்கு எவ்வளவு கண்டிப்புக்காண்பித்தபோதிலும், அவர்கள் அஞ் சுகிறதுமில்லை. இந்த நாடாக்கள் அடக்கி வளர்க்கப்படுகிற காட்டுமிருகங்களுக்கு ஒப்பானவர்கள் என்பதாக நான் அடிக் கடி நினைக்கிறேன். அடக்கி வளர்க்கப்படுகிற காட்டுமிருகங்

கள் கோபமூட்டப்படாதிருக்கிறபரியந்தம், அடங்கியிருப்ப வைகள்போல தோன்றினபோதிலும், அவைகளுடைய கோபத்தைத் தூண்டுதற்கேற்ற ஒரு அற்பக்காரியம் நேரிட்டமாத்திரத்தில் அவைகளின் உள்ளத்திற் பதுங்கிக்கொண்டிருக்கிற மூர்க்கம் வெளியாகின்றது. இவைகளைப்போலவே இந்த நாடாக்களுமிருக்கிறார்கள்.

"குட்டத்துநாடாக்கள் தங்கள் குலத்துக்குரிய துஷ்டத்தனத்திற்காக படுக்கப்பற்று மறவர்களைப்போல திருநெல்வேலி நாடெங்கனுங் கீர்த்திப்பிரதாபர்களாயிருக்கின்றனர். இவர்கள் தொன்றுதொட்டு நாளதுவரையிலும் இந்தத் தென்திசைக்கு ஒரு கொறடாப்போலிருந்துவருகிறார்கள்" என்று எழுதியிருக்கிறார்.

மேற்படி ரிப்போர்ட்டில் நாம்கவனிக்கவேண்டிய இரண்டொரு முக்கியவிஷயங்களுண்டு. அவைகளை இங்ஙனங்கூறுவோம் :

(a) மேற்படி ரிப்போர்ட்டை எழுதுகிறபோது, அதை எழுதியவருடைய உள்ளத்தில் சான்றோர்குலத்தவர்களைக் குறித்துண்டாயிருந்த தப்பான எண்ணம் விளங்குகின்றது.

சான்றோர்குலத்தவர்களுடைய பூர்வோத்திரந் தெரியாதவராய், பார்ப்பனக்குலத்தவர்கள் மேற்பால்குலங்களில் முதற்குலத்தவர்களென்றும், சூத்திரகுலத்தவர்கள் அதற்குக் கீழான மேற்குலத்தவர்களென்றும், பிறகுலத்தவர்கள் சூத்திரருக்குக் கீழானகுலத்தவர்களென்றும், சான்றோர்குலத்தவர்கள் சூத்திரருக்குக் கீழானகுலத்தவர்களுக்குள் கீழானகுலத்தவர்களென்றும், அரசர்குலத்தை யொட்டிய தமிழ்ச் சத்திரியகுலந் தமிழ்நாடெங்கனுமில்லையென்றும், செட்டிகுலத்தவர்கள் சிறு குழுவினராய் சூத்திரகுலத்தவர்களுக்கு அதிக மேற்பட்டவர்களல்லவென்றும் எண்ணங்கொண்டவராய் இந்த ரிப்போர்ட்டை எழுதியிருக்கிறார் என்று தோன்றுகிறது. இவர் சான்றோர்குலத்துமேன்மக்களாகிய நாடாக்கள் பூர்வ தமிழரசர்குலத்தையொட்டிய சத்திரியகுலத்தவர்களென்றும், அவர்கள் அரசிழந்தகாரணத்தையிட்டுத் தாழ்வடைந்திருக்கி

ரூர்களென்றும், உய்த்துணர்ந்திருப்பாரேயாயின், சாம்பல்மூடிய தழலுக்கொப்பந்தம் இந்த நாடாள்வார் குலத்தவர்களுக்குள் காணப்படுகின்ற சத்திரியகுலலக்ஷணங்களை நன்குமதித்துப்பேசியிருப்பார் என்பதற்குச் சந்தேகமில்லை.

பூர்வ ஜெர்மன்நாட்டுச்சாதியார்களில் ஒருகிளைப்பிரிவார்களாகிய அங்கிலோசக்சனர்கள் (Anglo-Saxons) பிரிட்டன் (Britain) நாட்டைக்கட்டிக்கொண்டு, அந்தநாட்டிற் பூர்வமுதல் புஜபலபராக்கிரமர்களாக விளங்கியிருந்த சாதியார்களாகிய பிரிட்டன்னியர்களை (Britons) அதஞ்செய்து, அவர்களில் மீதியானவர்களை உவேல்ஸ்முதலான மலைநாடுகளுக்கு ஓட்டிவிட்டபிறகு, அந்தப்பிரிட்டன்னியர்களுடைய நிலைமை என்னவாயிருந்தது? அந்தப்பிரிட்டன்னியர்களை அடிமைகளைப்போல ஒடுக்கிநடத்தவில்லையா? பிரிட்டன்னியருடைய குலமேன்மையொழிந்தும், குலலக்ஷணம் ஒழியாதிருக்கவில்லையா? அந்தப்பிரிட்டன்னியருடைய பூர்வமேன்மையை யறியாத ஒருவன் அவர்களைக்குறித்துப்பேசும் பிரகாரம், இந்தச் சான்றோர்குலத்தவர்களைக்குறித்தும் மேற்படி ரிப்போர்ட்டை எழுதியவர் பேசியிருக்கிறூர்.

(b) குட்டம் (Koottam) என்பது ஒருசிறுநாட்டிற்கும், அந்தநாட்டிலுள்ள பிரதானபட்டணத்திற்கும் பெயர்.

பூர்வத்தில், மதுராபுரியிலும் அதைச்சூழ்ந்த நாட்டிலும் பாண்டியர்களாலும் தமிழ்க்கல்விச்சங்கத்துப் புலவர்களாலும் தமிழ்ப்பாஷை நன்குவளர்க்கப்பட்டமையால், அதற்குச் செந்தமிழ்நாடெனவும், அதைச்சூழ்ந்த பன்னிரண்டு நாடுகளுக்கு இயற்றமிழ் (= கொடுந்தமிழ்) நாடுகளெனவும் பெயராயிற்று.

நன்னூல், சொல்லதிகாரம், பெயரியல், 16-வது சூத்திரச்சார்பு வெண்பா.

"தென்பாண்டிகுட்டங் குடங்கற்காவேண்பூழி
பன்றியருவாவதன்வடக்கு—நன்றாய
சீதமலாடுபுனனுடு செந்தமிழ்சேர்
ஏதமில்பன்னிருநாட்டெண்."

1. தென்பாண்டிநாடு, 2. குட்டநாடு, 3. குடநாடு, அல்லது குடகுநாடு, 4. கற்காநாடு, 5. வேண்நாடு, 6. பூழிநாடு, 7. பன்றிநாடு, 8. அருவாநாடு, 9. அருவாவடதலைநாடு, 10. சீதநாடு, 11. மலாடு, அல்லது மலையாளநாடு, 12. புனனாடு, அல்லது சோழநாடு.

இந்தப்பன்னிரண்டு நாடுகளிலும் இயற்றமிழ்வழங்கிற்று. இவற்றுள், குட்டநாடானது தென்பாண்டிநாட்டின் தென்பாகத்தில் தென்கடற்கரையருகிலுள்ளது. அந்தக் குட்டநாட்டிற்குப் பிரதானபட்டணம் குட்டமாம். அந்தக்குட்டநாடு பூர்வகாலமுதல் நாடாக்களுடைய பூமியாம். ஆனதால் அந்தச்சிறுநாடு நாளதும் மேற்படி நாடாக்களுடைய வமிசத்தவர்கள் அநுபோகத்திலிருந்து வருகின்றது. 'நாடான்' என்னும்பெயருக்குத் தாற்பரியம் 'Lord of the soil' என்பதாம். 'Lord of the soil' என்பதற்கு 'நிலத்தரசுகாரன், நிலமைக்காரன், பூமிக்குரிமையுடைய அதிபதி, காணியாட்சிக்காரன்' * என்பதுபொருளாம்.

மேலும், 'நாடான்' என்னும்பெயருக்குப் பதவுரைத் தாற்பரியம் 'Chief of district termed Nádu' என்பதாம். 'Chief of district termed Nádu' என்பதற்கு 'நாடு எனப்பெயர்கொண்ட ஒரு மாகாணத்திற்கு அதிபதி' என்பது கருத்தாம்.

ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் 'நாடான்' என்னும்பெயருக்கு 'மேலோர்வசிக்கும் நாடுகளில் நாடாதவன்' எனப்பொருள்கூறியிருக்கிறாரே அது மிகவும் மதியீனமான தாற்பரியவுரை என்பது இதிலுைந் தெரியவருகின்றதல்லவா? 'நாடு' என்னும் பெயரினின்று பிறந்துவந்திருக்கிற பதத்திற்கு 'நாடாதவன்' என்பது பொருளாகுமா? அவர் தாமேசொல்லட்டும்.

ஆனதால், நாளதும் 'நாடான்' எனப் பட்டப்பெயர் பெற்றிருக்கின்றவர்கள் எக்குலத்தவர்களோ அக்குலத்தவர்கள் பூர்வம்முதல் நாடாண்டுவந்திருக்கிற நாடாள்வார் வமிசத்தவர்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆகையால்,

---

* "The Caniatchi of Malabar is the Bhomia of Rajast'han." Vide Todd's Annals and Antiquities of Rajast'han, Vol. I., p. 496.

நாடான் = Lord of the soil,
= Chief of District termed Nàdu,
= நாட்டதிபதி,
= நாடாள்வான்,
= அரசன் என்பது பொருளாம்.

(c) மேற்படி ரிப்போர்ட்டில், "எனக்குத் தெரிந்திருக்கிறபிரகாரம், அல்லது நான் கேள்விப்பட்டிருக்கிறபிரகாரம், இந்தநாட்டிலும் இந்தத் தென் இந்தியாதேசத்திலும் இருக்கிறவர்களெல்லாரிலும் இந்த நாடாக்கள் ஏகத்திற்கு ஒன்றுபோல அதிக அடங்காக்குணமுடையவர்களும் (அயலாரை) அடக்கியொடுக்குகிறவர்களும் பெருமித நடையுடையவர்களும் மனோரதப்படி நடக்கிறவர்களுமாயிருக்கிறார்கள் என்றும், இந்த நாடாக்களை மானிடகுலத்தவர்களுக்குள்ளிருக்கின்ற மகாதுஷ்டர்களோடு சமரசப்படுத்தலாம் என்றும், அவர்களுக்குள் அதிகத் தாழ்வடைந்திருக்கிறவர்களிற் சிலர் கிறிஸ்துமதத்தை அனுசரித்திருந்தபோதிலும் அவர்களுடைய அடங்காக்குணம் முன்போலவே இருக்கின்றது என்றும், அவர்களுக்கு எவ்வளவுபட்சங் காண்பித்தபோதிலும், அவர்கள் மனம் இளகுகிறதுமில்லை. அவர்களுக்கு எவ்வளவு கண்டிப்புக் காண்பித்தபோதிலும், அவர்கள் அஞ்சுகிறதுமில்லை என்றும், இந்த நாடாக்கள் அடக்கி வளர்க்கப்படுகிற காட்டு மிருகங்களுக்கு ஒப்பானவர்கள் என்பதாக நான் அடிக்கடி நினைக்கிறேன் என்றும், அடக்கி வளர்க்கப்படுகிற காட்டுமிருகங்கள் கோபமூட்டப்படாதிருக்கிறபரியந்தம் அடங்கியிருப்பவைகள்போல தோன்றினபோதிலும், அவைகளுடைய கோபத்தைத் தூண்டுதற்கேற்ற ஒரு அற்பக்காரியம் நேரிட்டமாத்திரத்தில் அவைகளின் உள்ளத்திற் பதுங்கிக்கொண்டிருக்கிற மூர்க்கம் வெளியாகின்றது என்றும், இதுபோலவே இந்த நாடாக்களும் இருக்கிறார்கள் என்றும்" எழுதியிருக்கிறார்.

இதை எழுதியவர் இந்த நாடாக்களுடைய பூர்வ குலநிலையைத் தப்பானதானத்தில் வைத்திருப்பதால், இவர்களிடத்தில் தோன்றுகின்ற திடத்தமனம் இவருக்கு விபரீதமாகக் கா

ணப்படுகிறதாக விளங்குகிறது. இந்த நாடாக்கள் பூர்வ தமிழ்நாட்டுச் சத்திரியகுலத்தை யொட்டியவர்கள் என்று மன தில்வைத்து எழுதியிருப்பாரேயாயின், இவ்வாறு விபரீதமாக எழுதமாட்டார். இவ்வகைப் பெரும்படியான உவமைவாசகங் கூறவுமாட்டார். மேலும் அவர் சான்றோர்குலத்தவர்களாகிய இந்த நாடாக்கள் இன்னகுலத்தவர்களென்று தகுந்தபிரகாரம் உணர்ந்திருப்பாரேயாயின், அவர் அந்த நாடாக்களை "அடக்கிவளர்க்கப்படுகிற காட்டுமிருகங்களுக்கு ஒப்பானவர்கள் என்பதாக நான் அடிக்கடி நினைக்கிறேன்" என்று எழுதாமல், "இந்த நாடாக்களிடத்தில் எதற்குமஞ்சாத மனத்திடாரிக்க முதலான சிறந்த லக்ஷணங்கள் விளங்குகின்றமையால், இவர்கள் தமிழ்நாட்டுப் பூர்வ சத்திரியகுலத்தை யொட்டியவர்கள் என்பதாக நான் அடிக்கடி நினைக்கிறேன்" என்று எழுதியிருப்பார் என்பதற்குச் சந்தேகமில்லை.

இந்தப்பிரகாரம் அந்நிய மொழிக்காரர்களுடைய சாக்ஷிகளினாலும் 'நாடான்' என்னும்பெயருக்கு நாடாள்பவன் என்பது பொருளென ருசுவாகின்றது.

(lxi) அரசர்குலத்தவர்களாகிய பூர்வீகத் தமிழ்ச்சத்திரியர்களுக்கு ஆதியிலே சுராபாண்டிய மகாராசன்காலத்தில் 'நாடாள்வார்ப்பட்டங்' கட்டி மகுடாபிஷேகஞ்செய்ததற்கு இங்ஙனஞ் சுருக்கமான விபரங்கூறுவோம்.

பதினெண்புராணங்களில் முதற்புராணமாகிய பிரமபுராணத்தின் பிரமோத்திரகாண்டத்தில், சுராபாண்டியமகாராசன் சரித்திரம் வருகிறது. அதிலிருந்தெடுத்து இங்ஙனமெழுதுவோம்.

இக்காலத்தில் வடகன்னடம் எனப்பெயர்பெற்றிருக்கின்ற ஐவாநாட்டில் மேற்குக் கடற்கரையருகில் 'வட்டுக்கல், வட்டுநகர்' (Batuculla=round town) எனப் பெயர்கொண்ட சக்கரபுரிப் பட்டணமிருந்தது. அதில் சுராபாண்டிய மகாராசனும் அவனுடைய தம்பிமார் அறுபத்தாறு பாண்டியர்களும் வாசஞ்செய்து, ஓரிக்கலட்பட்டணத்திற் செங்கோற்செலுத்திய அசுரராசனை பிரதாபருத்திரன்மேற் படையெடுத்து,

அவனைச்செயித்து, அவன் நகரத்தையும் பிடித்துக்கொண்டு, அதற்குட்பிரவேசித்துச் சிங்கத்துவசங்கட்டினார்கள். பிற்பாடு, சுராபாண்டியனென்கிறவன் தன் தம்பிமார்களில் முதல்வனான மதுவீரபாண்டியனுக்கு 'நாடாள்வார்ப்பட்டங்கட்டி,' மகுடாபிஷேகஞ்செய்து, அவனை ஓரிக்கலப்பட்டணத்திற்கு இராசாவாக ஏற்படுத்தியபோது, அந்த நகரியடங்கலும் அறியும்படி விளம்பரங்கூறுவித்தான். அந்த விளம்பரம் வருமாறு :

(1) "சிம்மாலகோடமன்னியவர்த்தனபுரி சுராபாண்டிசுர ராசமன்னிய சத்திரியசூரியவசம் மதுகேசுரர் உக்கிரநேத்திரத்திற்பிறந்து, ரேணுகாபரஞ்சோதி புத்திரனாகிய சுராபாண்டிசுரர்தம்பியான மதுவீரபாண்டியருக்கு ஓரிக்கலநகரமும், பிரதாபருத்திரனுடைய நாடுநகர்கள் சமஸ்தமுமளித்திருப்பதால், மதுவீரபாண்டியரே நாடாள்வார்" எனப் பறைசாற்றி நகரமெங்ஙனும் விளம்பரஞ்செய்யப்பட்டது. இதனால், பாண்டியர்குலத்தவர்களுக்குப் பூர்வீககாலத்தில நாடாள்வார்ப்பட்டங் கட்டப்பட்ட விபரந் தெரியவருகின்றது. ஆனதால், 'நாடாள்வான்' என்னும் பட்டப்பெயர் பூர்வ அரசர்குலப்பட்டப்பெயராக வழங்கிவந்திருப்பது நன்றாய்த் துலங்குகிறது.

(2) மேற்படி பிரமோத்திரகாண்டத்திலிருந்து இன்னமும் ஒரு திருட்டாந்தமெடுத்து இங்ஙனங்கூறுவோம்.

சுராபாண்டியன்எனப் பெயர்பெற்ற அமுதபாண்டியமகாராஜனென்கிறவன் ரதபலாசூரனையும் அவனோடுசேர்ந்த அறுபத்தாறு கரைச்சுற்றுப்பட்டணங்களிலுள்ள அசுரர்களையுஞ் செயித்து, அவர்களையழித்து அவர்களுடைய நாடுநகரங்களையெல்லாங் கட்டிக்கொண்டு, அந்தப் பட்டணங்களுக்குத் தன் தம்பிமார்கள அறுபத்தாறு பாண்டியர்களையும் அரசராக்கி, நாடாள்வார்ப்பட்டங்கட்டி, அவர்களை அழைத்துக்கொண்டு அந்தப் பட்டணங்கள் நோக்கிப்போகிறபோது கூறிய கட்டியம் வருமாறு: "சிம்மாலகோடமன்னியவர்த்தன சக்கர

புரிக்கு அரசனாகிய அமிர்தபாண்டிய விக்காதிபாண்டிய மகா ராசா பராக்கு, எச்சரிக்கை. சூரியகுல*மன்னிய சத்திரிய சவுரிய பராக்கிரம கவுண்டலீக கோத்திர அசுரசம்மார தேவ சகாய ரேணுகாவரபுத்திரா பராக்கு, எச்சரிக்கை."

இன்னமும் ஒரு மேற்கோள் இங்ஙனம் எடுத்துக்கூறு வோம்.

(lxii) நைடதம், சுயம்வரப்படலத்தில், 136-வது கவிமுதல் 162-வது கவிவரையினும் வருகின்ற செய்யுள்களில் நாவலந்தீவு அரசர்களில் 25 ராசாக்கள் நளமகாராசனோடு தமயந்தி கலியாணத்திற்கு வந்திருந்தார்களெனக் கூறியிருக்கிறது. அந்த அரசர்களெல்லாரும் வதுவைமண்டபத்தில் அவரவருக்கிட்ட ஆசனங்களில் வீற்றிருக்கையில், தமயந்தியாகிறவள் ஆடையாபரணவலங்கிருதியாய் அந்த மணமண்டபத்தில் தோழிகள்சூழப் பிரவேசித்தாள். மேற்படி செய்யுள்களில் அங்கே கூடிவந்திருந்த அரசர்கள் இன்னார் இன்னாரென்று அவளுக்குச் சொல்லியவிபரங் கண்டிருக்கின்றது.

147-வது கவி :

" குடங்கையினெடியவாட்கட் கொம்பனையீங்குலைபம்பொன்
மடங்கலாசனத்தின்மேய மணியெழுவனையதோளான்
முடங்குவெண்டோட்டுக்கைதை முருகுயிர்த்திரங்குந்தெண்ணீர்த்
தடங்கடற்புலவுபோக்குந் தண்டுறைமகதநாடன்"

இக்கவியில் மகதநாடாளும் வேந்தனுக்கு 'நாடன்' எனப் பட்டப்பெயர்வந்திருக்கிறது. நைடதநூலாசிரியனாகிய அதிவீரராமபாண்டியன் தமிழ்நாட்டரசனானதினாலும், தமிழ் நாட்டரசர்குலத்தவர்களுக்குத் தன்காலத்தில் வழங்கிவந்த பட்டப்பெயர்களை நன்குணர்ந்தவனானதினாலும், அக்காலத்து

---

* சூரியமந்திரத்தால் உற்பத்தியானமையாலும், சூரிய வங்கிசத்தோடு கொள்வினையிற்கலந்தமையாலும் சந்திரகுலப்பாண்டியருக்குச் 'சூரியகுலம்' எனவும் பெயருண்டாயிற்று.

வழக்கப்படிக்கு இந்தப்படலத்தில் அரசர்குலப்பட்டப்பெயர் களை நாட்டுப்பெயர்களோடு சேர்த்தெழுதியிருக்கிறான். இந்த அரசர்குலப்பட்டப்பெயர்களோடு, மேலே 147-வது கவியிற் சொல்லியிருக்கிற பிரகாரம், 'நாடன்' என்னும் பட்டப்பெ யரும் வந்திருக்கிறது. இந்த நைடதநூலாசிரியர் மகதநாட் டரசனை 'மகதநாடன்' என்கிறார். இங்ஙனம் 'நாடன்' என் னும் அரசர்குலப் பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்டு வந்திருக்கின்ற பிற பட்டப்பெயர்களை ஒருங்கேதிரட்டிக்காண் பிப்போம். அவைவருமாறு :

"மகதநாடன்."

நாடன் = நாடாளும்வேந்தன் (அவந்தி), 137-வதுகவி.
= நாட்டரசன் (கௌட), 138-வதுகவி.
= மன்னன் (மதுரைமூதூர்), 139-வதுகவி.
= நாடாளும்வேந்தன் (கங்கை), 140-வதுகவி.
= காவல்வேந்தன் (காம்பிலி), 141-வதுகவி.
= நாடாளுமன்னன் (கலிங்க), 142-வதுகவி.
= மன்னன் (வாரணவாசி), வாரணவாசி = காசி 143-வதுகவி.
= வேந்து (சிந்து), 144-வதுகவி.
= ஏறு (குகுதர்), ஏறு = ஆண்சிங்கம் = ஆண் சிங்கத்தையொத்த மன்னன், 145-வதுகவி.
= கோ (மச்சர்), 146-வதுகவி.
= கோ (குருநாடர்), 148-வதுகவி.
= தேயவேந்து (பல்லவ), 149-வதுகவி.
= நாட்டுவேந்தன் (கேகய), 150-வதுகவி
= தேயவேந்தன் (மத்திர), 151-வதுகவி.
= நாடாளும் வேந்து (வங்க), 152-வதுகவி.
= நாடாளும் வேந்து (அங்க), 153-வதுகவி.
= வேந்து (பாஞ்சால), 154-வதுகவி.
= வேந்து (காந்தார), 155-வதுகவி.
= நாடாளும்வேந்து (மிதிலை), 156-வதுகவி.
= தேயவேந்து (மாளவ), 157-வதுகவி.

நாடன் = அரசரேறு (கோசலத்து), 158-வதுகவி.

= நாடாளும்வேந்து (குடக), 159-வதுகவி.

மேற்கூறியபிரகாரம்,

குடகநாடாளும்வேந்து = குடநாடன்,

= குடக்கோன்,

= குடக்கோ.

= நாடாளும்வேந்து (பொன்னி), 160-வதுகவி.

= வேந்து (கொற்கையம்பதிக்கு), 161-வதுகவி.

இந்த அரசர்குலப்பட்டப்பெயர்களை ஒன்றோடொன்று ஒப்பிட்டுக்கூர்ந்து சிந்திப்பவர்களுக்கு,

நாடாளும் வேந்தன், நாட்டரசன்,
மன்னன், காவல்வேந்தன்,
நாடாளுமன்னன், வேந்து,
கோ, தேயவேந்து,
நாட்டுவேந்தன், நாடாளும்வேந்து,

அரசரேறு, என்னும்பட்டப்பெயர்கள் நாடன் என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட அரசர்குலப்பட்டப் பெயர்களென்று மிகவும் தெளிவாகவிளங்கும். ஆனதால் ‘நாடன்’ என்பதற்கு ‘அரசன்’ என்பதுபொருளாம்.

அன்றியும், மேலேகாண்பித்திருக்கிறபிரகாரம், இவ்விடத்திலும் ‘நாடாள்வான்’ என்னும் பூர்வஅரசர்குலப்பட்டப் பெயரும், ‘நாடாளும்வேந்தன், நாடாளுமன்னன், நாட்டுவேந்தன்’ என்னும் பட்டப்பெயர்களுடன் ஒருபொருள்கொண்டு உலகவழக்கிலும் நூல்வழக்கிலும் வந்திருக்கின்றது. மேலும், ‘நாடான், நாடன்’ என்னும் பட்டப்பெயர்களும், ‘நாட்டரசன், நாடாளும்வேந்தன்’ முதலானபட்டப்பெயர்களுடன் ஒருபொருள்கொண்டு அரசர்குலத்தவர்களுக்குப பட்டப்பெயர்களாய்வந்திருப்பதும் பிரத்தியட்சமாகின்றது.

(lxiii) திவாகரம், தெய்வப்பெயர்த்தொகுதி, 4-வது சூத்திரம்.

இந்திரன்பெயர்.

“புரந்தரன்புனிதன் பொன்னகர்க்கிறைவன்
வாசவனமரர்கோன் மான்முகிலூர்தி
வேள்விநாயகன் விண்முழுதாளி
ஆயிரங்கண்ண னயிராணிகேள்வன்
மருத்துவன்மகவான் வலாரிவிருத்திராரி
வெள்ளைவாரண னிமையவர்வேந்தன்
பாகசாசன னாகண்டலனே
வச்சிரபாணி சதக்கிருதென்றிவை
எச்சமிலிந்திரற் கியன்றதொல்பெயரே.”

இந்தச்சூத்திரத்தில் இந்திரனுக்கு, பொன்னகர்க்கிறைவன் எனவும், அமரர்கோன் எனவும், விண்முழுதாளி எனவும், இமையவர்வேந்தன் எனவும், பெயர்கள்வந்திருக்கின்றன. இவைகளில், இறைவன், கோன், ஆளி, வேந்தன் என்னும் பட்டப்பெயர்கள் ஒருபொருட் கிளவிகளாம். ஆனதால்,

ஆளி = இறைவன்,
= கோன்,
= வேந்தன்,
= ஆள்வோன்,
= நாடாள்வோன்,
= அரசன்.

இதில் ‘ஆளி’ என்பது ‘ஆள்வோன், அரசன்’ எனப் பொருள்கொண்டுவந்திருக்கின்றது.

(lxiv) மேற்படி தெய்வப்பெயர்த்தொகுதி, 10-வது சூத்திரம்.

வைச்சிரவண்ணன்பெயர்.

“மந்திரிகுபேர னிதிக்கோனியக்கன்
பிங்கலனரற்குப் பிரியாத்தோழன்

வடதிசைத்தலைவ னியக்கர்வேந்தன்
அளகையாளி யாயமுற்கரவலன்
புட்பகவூர்தி தனதன்மரகத
னெனவைப்பநாமம் வைச்சிரவணற்கே."

இச்சூத்திரத்திற் குபேரனுக்கு, நிதிக்கோன் எனவும், வடதிசைத்தலைவன் எனவும், இயக்கர்வேந்தன் எனவும், அளகையாளி எனவும், பெயர்கள் வந்திருக்கின்றன. இவைகளில், கோன், தலைவன் வேந்தன், ஆளி என்னும்பெயர்கள் ஒருபொருட்பதங்களாம். ஆனதால்,

ஆளி = கோன்,
= தலைவன்,
= வேந்தன்,
= ஆள்வோன்,
= அரசன்.

இதில் ஆளி என்பதற்கு அரசன் எனப் பொருள்வந்திருக்கின்றது.

மேற்படி தொகுதி 1-வது சூத்திரத்திற் சிவனுக்கு 'கைலையாளி' எனப் பெயர்வந்திருக்கிறது.

கைலையாளி = கைலையாள்வோன்,
= கைலைநாடாள்வோன்,
= கைலைநாட்டரசன்.

(lxv) வடமொழியில் அரசர்குலத்தவர்களுக்குச் 'சத்திரியர்' என்றுபெயர். சத்திரியர் என்னும் இந்த வடமொழிப் பதத்திற்கு மூலபதம் சேத்திரம் (=க்ஷேத்திரம்) என்றும், கேத்திரம் (=க்ஷேத்திரம்) என்றும் வரும்.

சேத்திரம் (=கேத்திரம்) என்னும் வடமொழிப்பதத்திற்குப் 'பூமி, நிலம், நாடு' என்று கருத்தாம்; திருட்டாந்தமாக, 'குருக்ஷேத்திரம்' என்பதற்கு 'குருநாடு' எனவும், 'க்ஷேத்திரகணிதம்' என்பதற்குப் 'பூமிக்கணிதம்' எனவும் அருத்தமாகும். 'சத்திரியன்' என்னும் பெயர் 'சேத்திரம்' என்னும் மூலபதத்தினின்று உற்பத்தியான பதமானபடியால், 'சத்திரியன்'

என்பதற்குச் 'சேத்திரமுடையவன், பூமிக்குடையவன்' எனவும், 'நாட்டுக்குடையவன்' எனவுந் தாற்பரியமாம்.* ஆனதால்,

சத்திரியன் = சேத்திரமுடையவன்,
= பூமிக்குடையவன்,
= நாட்டுக்குடையவன்,
= நாட்டரசன்,
= நாடான்,
= நாடன்.

தென்மொழிநாட்டில் அரசர்குலத்தவர்களுக்கு 'நாடான், நாடன்' என்னும் பெயர்கள் பட்டப்பெயர்களாகவந்து வழங்கியபிரகாரம், வடமொழிநாட்டில் அரசர்குலத்தவர்களுக்கு 'சத்திரியன், கத்திரியன்' என்னும் பெயர்கள் பட்டப்பெயர்களாகவந்து வழங்கின. ஆனதால் 'நாடான், நாடன், சத்திரியன்' என்னும்பெயர்கள் ஒருபொருட்கிளவிகளாம்.

(lxvi) திருவானைக்காச்சிவாலயத்திற் கோமுகச்சோழனாற்கட்டப்பட்ட மூன்றாவது திருமதில் கீழைக்கோட்டைவாசல் தென்புறமதிலில் எழுதியிருப்பது: "திரிபுவன சக்கரவர்த்திகள் மதுரையுட பாண்டியர் தம்முட தலைகொண்டருளின ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு பத்தொன்பதாவது சீர் உடைய பிள்ளையானபின் அகரங்க நாடாழ்வாருக்குத் தொண்டன் &c. இந்தக் கல்வெட்டில், 'திரிபுவன சக்கரவர்த்திகள்' எனவும், 'மதுரையுட பாண்டியர் தம்முட தலைகொண்டருளின ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர்' எனவும், 'அகரங்க நாடாழ்வார்' எனவும் பெயர்கள்வந்திருக்கின்றன. இவற்றுள்,

(1) 'திரிபுவன சக்கரவர்த்திகள்' என்பது இமயகிரிமுதல் தென்குமரிபரியந்தமிருந்த சுரர்நாடு, நரர்நாடு, நாகர்

---

* க்ஷேத்திரசம்பந்தமுடையோன் 'சத்திரியன்' எனவரல் ஆதிவிருத்தி சந்தியாம். 'சத்திரியன்' என்பதற்குத் 'தண்டிக்கிறவன், பட்சிக்கிறவன்' என்று சப்தார்த்தங் கூறல் சில ஆசிரியரது வழக்கு.

நாடு எனப் பெயர்கொண்ட திரிபுவனங்களாகிய மூன்று நாடுகளையும் ஒருகாலத்தில் ஒருகுடைக்குள் அடக்கியாண்டு வந்த சோழநாட்டரசர்களாம். 'புவனம், உலகம்' என்னும் பெயர்கள் நாடுகளைக் குறிக்கின்றன.

கலிங்கத்துப்பரணி, கடவுள்வாழ்த்து, சத்தமாதர்கள் துதி, 17-வது கவி :

" மேதிபுள்ளலகை தோகையேறுவனம்
வேழமென்றகொடி யேழுடைச்
சோதிமென்கொடிக ளேழினேழிரு
துணைப்பதந்தொழ நினைத்துமே."

18-வது கவி :

" கேழன்மேழி கலை யாளிவீணைசிலை
கெண்டையென்றினைய பல்கொடித்
தாழமேருவி லுயர்த்த செம்பியர்
தனிப்புலிக்கொடி தழைக்கவே."

சத்தமாதர்கள் தமிழ்நாட்டரசர்களுக்கு இன்றியமையாத தேவதைகளாம். அவர்கள் தங்கள் நாடுநகரங்களெங்ஙனும் காளிகாதேவிக்கும் பிறமாதர்களுக்கும் ஆலயங்கள் கட்டி, அவர்களைக் கும்பிட்டு, யுத்தங்களில் அவர்கள் துணையைத் தேடிவந்தனர். மேற்படிகவிகள் இரண்டிலும், எருமை, கருடன், பேய், கலைமான், சிங்கம், வீணை, வில், மீன் இந்த ஏழும் சின்னங்களாக அமைந்த ஏழு கொடிகளையுடைய சத்தமாதர்கள் ஏழுபெயர்களினுடைய பதினலு பாதங்களையும் தொழுகின்றோம் எனவும், இமயகிரியின்மீது சோழனுனவன் பன்றி, கலப்பை, கலைமான், சீயம், வீணை, வில், மீன் என்னுஞ் சின்னங்களையுடைய ஏழுகொடிகளை சக்கரகாரமாகவும், தனது ஒப்பற்ற புலிக்கொடியை அலைகளின் நடுவில் உயர்வாகவும் நிறுத்தினன் எனவுங் கூறியிருக்கிறது. மேற்கூறிய திரிலோகங்களையும் ஒரு குடைக்குள் சோழர்கள் அடக்கியாண்டார்கள் என்பது தோன்ற இவ்வாறு வருகின்றது. ஆனதால், சோழர்கள் ஒருகாலத்தில் 'திரிபுவன சக்கரவர்த்திகள்' என்னப் பட்டது நிசம்.

(2) 'மதுரையுட பாண்டியர் தம்முட தலைகொண்டரு ளின ஸ்ரீகுலோத்துங்க சோழதேவர்' என்பதற்கு 'ஒருகாலத்தில் பாண்டியர்களையுஞ் செயித்தாண்டுவந்த குலோத்துங்க சோழராசன்' என்பது பொருளாம்.

இதில் 'தேவர்' என்பதற்கு அரசன் என்பது கருத்து; 'தேவி' என்பதற்கு 'அரசி' எனவும், 'தேவன்' என்பதற்கு 'அரசன்' எனவும் பொருளென்று நாம் மேலே ஓரிடத்தில் விரித்துரைத்திருப்பதால், இங்ஙனம் விபரியாது விடுகின்றனம்.

(3) 'அகரங்கநாடாழ்வார்' என்பதில் வருகின்ற 'நாடாழ்வார்' என்னும்பெயருக்கு 'அரசன்' என்பதுபொருளாம். ளகரமும் ழகரமும் பதங்களில் ஒத்துநடப்பது பூர்வ தமிழ்வழக்காம். ஆனதால்,

நாடாழ்வார் = நாடாள்வார்,
= அரசன்.

மேலே கூறியிருக்கிற நியாயங்களனைத்தையும் ஒருங்கே திரட்டிப் பார்வையிடும்போது,

'நாடான், நாடன்' என்னும்பெயர்களும்,
நாடாள் (=ழ்) வான் என்னும்பெயரும்,

தமிழ்நாட்டரசர்குலத்தவர்களுக்குரிய பூர்வப்பட்டப்பெயர்களென்பது தெளிவாகத் துலங்குகின்றது. ஆகையினலே, 'நாடான், நாடன்' என்னும் பட்டப்பெயர்கள் தொன்றுதொட்டு இடையருது நாளதுவரையினும் எந்தக்குலத்தவர்களுக்குப் பட்டப்பெயர்களாக வழங்கிவந்திருக்கின்றனவோ அந்தக் குலத்தவர்களே பூர்வ தமிழ்நாட்டரசர்குலத்தவர்கள் என்பது ஐயமற விளங்குகின்றது.

இனி ஏழாவது பிரகரணத்தில் ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் சான்றோர்குலத்தவர்களைச் சுட்டி எழுதியிருக்கிறவைகளில் அடங்கிய தப்புகளையும், அவர்மீது சுமத்திருக்கின்ற குற்றங்களையுந் திரட்டிக்கூறுவோம்.



# எ. பிரகரணம்.

ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் சான்றோர்குலத்தவர்களைச் சுட்டி எழுதியிருக்கிறவைகளில் அமைந்திருக்கின்ற தப்புகளையும், அவர்மீது சுமந்திருக்கின்ற குற்றங்களையுந் திரட்டிக்கூறுகின்றது.

1. திவாகரநூல் 50-வது சூத்திரத்தில், 'கள்விலேஞர்' எனக் கண்டிருக்கின்ற பெயரை 'கள்வினேஞர்' என மனதார வேண்டுமென்றே யாதொரு நியாயங் கூறாமல் சும்மா மாற்றி எழுதிவைத்திருக்கிறார்.

இது 'நூற்புரட்டாகிய குற்றம்.'

2. 'சாணார்' என்னும்பெயர் மேற்படி திவாகரநூலில் இல்லாதிருக்க, மேற்படி நூலாசிரியர் மனதாரவேண்டுமென்றே மேற்படிபெயரை அந்த 50-வது சூத்திரத்தில் சும்மா பூதிப்பிடியாகத் திணித்துவைக்கத் துணிந்திருக்கிறார்.

இது 'இல்லாததை இருப்பதாகக் கூறியகுற்றம்.'

திவாகரநூலிற்கூறிய கள்விலேஞர்களோ 'கள்வாணிபர்கள்' என்று மேலே மிகவுந் தெளிவாக ருசுப்படுத்தியிருக்கிறோம்.

3. திவாகரநூலாசிரியர் 'கள்விலேஞர்' என்னும் பெயருடன் ஒரு பொருள்கொண்டு, 'பழையர், துவசர், படுவர்' என வருகின்றபெயர்கள் மூன்று என்கிறார். ஜாதிசங்கிரகசாரநூலாசிரியரோ 'பழயர், துவசர், படுவர், கள்வினேஞர், இந்நான்குஞ் சாணார்பெயர்' என்கிறார். ஆனதால், அவர் 'கள்விலேஞர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்டபெயர்கள் 'பழயர், துவசர், படுவர், கள்வினேஞர், சாணார்' என ஐந்து என்று சொல்வதாகிறது. திவாகரநூல் 'மூன்றுபெயர்கள்' எனக்கூற, ஜாதிசங்கிரகசாரநூலோ 'ஐந்துபெயர்கள்' எனக் கூறுகின்றது.

இதுவும் 'நூற்புரட்டாகிய குற்றம்.'

4. ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் 'சௌண்டிகர்' என்னும் வட ஆரியமொழியினின்று, 'சாணூர்' என்னுந் தமிழ் மொழி மரூஉவாகவந்ததென்று கூறியிருப்பது சுத்தத்தப்பு. மேற்படி நூலாசிரியர் இந்தப்பெயர்களைச் சுட்டி மூன்றுவகையாய் உளறியிருக்கிறார். அவை வருமாறு :

(*i*) 'சௌண்டிகர்' என்னுஞ் சமஸ்கிருத மொழியினின்று 'சாணூர்' என்னுந் தமிழ்மொழி மரூஉவாக வந்த மொழி என்கிறார்.

(*ii*) 'சாணூர்' என்னும் பெயரினின்று 'சான்றார்' என்னும்பெயர் மரூஉவாக வந்தது என்கிறார்.

(*iii*) 'சான்றார்' என்னும் பெயரினின்று 'சாணூர்' என்னும்பெயர் மரூஉவாக வந்திருக்கிறது என்கிறார்.

இந்தப்படி அவர் மூன்றுவகையாக உளறியிருக்கின்றமையால் 'சௌண்டிகர்கள்' சான்றோர்குலத்தவர்களல்லவென்று அவர்தாமே சொல்வதுபோலாகின்றது. இந்த மூன்றுவகைகளில் ஒருவகையையாவது நிச்சயிக்க அறியாதவர், தாம் அறியாததைக் கூறத்துணிந்தது மேற்படி நூலாசிரியர் தமக்குண்டாகிய மிகுந்த அறியாமையைத் தெரிவிக்கவந்ததுபோலிருக்கின்றது. ஆகவே, மேற்படி நூலாசிரியர் சங்கரகுலத்துக் 'கள்வாணிபர்களாகிய சௌண்டிகர்களை' வேண்டுமென்றே 'சாணூர்' எனக்கூறியது பெருங்குற்றமாம்.

5. கள்வாணிபர்களுங் கட்குடியர்களுமாகிய சௌண்டிகர்களுடைய கற்புவரம்பழிந்த பெண்களது துர்நடத்தைகளைப் புராணிகர் இயற்கையாய்க் கூறியிருக்க, ஜாதிசங்கிரகசார நூலாசிரியரோ மேற்படி வடமொழிக்குலத்தாருடன் ஒரு விதத்திலுஞ் சம்பந்தப்படாதவர்களும், குலமேன்மையை யிழந்துங் குலமானத்தையோ நாளதுவரையினும் எதிரிகளுக்கு ஒதுங்கிஒதுங்கிப் பிழைத்துக்காப்பாற்றிக்கொண்டு வந்திருக்கிறவர்களுமாகிய மகா மானமுள்ள சான்றோர்குலஸ்திரீகளை முன்பின்யோசியாமல் வேண்டுமென்றே ஏதொருமுகாந்திரமுமின்றித் தூஷித்துப் பேசியிருக்கிறார்.

இதுவும் 'பெருங்குற்றம்.'

மேற்கூறிய பிரம புராணத்துப் பிரமோத்திரகாண்டத்திற் கூறியிருக்கிறபடிக்கும், நாளதுஞ் சான்றோர்குலத்தவர்களுக் குள்ளிருக்கிற ஒழுக்கப்படிக்கும், அந்தக்குலத்தவர்களுக்குரிய முக்கிய ஆசாரங்களிற் சிலவற்றை இங்ஙனங்கூறுவோம்:*

(*i*) ஒருதாரமிருக்க மறுதாரங்கட்டக்கூடாது. இதுசான் றோர்குலத்தவர்களுக்கு நாளதும் மாறாதசட்டம்.

(*ii*) பிரியர்களை யிழந்தபெண்கள் மறுவிவாகஞ்செய்யக் கூடாது. இது சான்றோர்குலத்தவர்களுக்கு நாளதும் பிரமா ணம்.

(*iii*) விதவைகள் வெண்வஸ்திர ந்தரிப்பதேயன்றி, சிவ ப்புமுதலிய பலவர்ணப்புடவைகள் கட்டவுங்கூடாது, ஆபர ணங்கள் பூணவுங்கூடாது. நாளதுஞ் சான்றோர்குலத்து விதைவகள் வெண்ணுடைபுனைந்து, நிராபரணதாரிகளாயிரு ந்துவருகிறார்கள்.

(*iv*) பெண்கள் மூக்குக்குத்தி போடக்கூடாது.

சான்றோர்குலத்தவர்கள் நாளதும் மூக்குக்குத்திபோடுகிற தில்லை.

(*v*) சான்றோர்குலத்தவர்களுடைய குலதெய்வமாகிய சி வபிரான் ரிஷபவாகனரானதால், ரிஷபாரூடராய்ச் செல்லக் கூடாது.

(*vi*) பழநறையாகிய கட்குடிக்கக்கூடாது.

(*vii*) இடுப்பில் மறுத்தாறுப்பாய்ச்சாமல் குறுக்காகவஸ்தி ரங்கட்டக்கூடாது.

(*viii*) சிவபிரானுடைய நெற்றிக்குறியானபடியால், நெற் றிகளில் திலகமாகிய சிந்தூரப்பொட்டிடக்கூடாது.

(*ix.*) சான்றோர்குலப்பெரியோர்களுடைய ஸ்திரீகள் வெ ளியேறாமல் அடக்கமாயிருந்துவருவதுமன்றி, அயலிடங்களுக் குப் போகவேண்டுவதாயிருக்குங்காலங்களில் மூடுபெல்லக்கு களிற் போவார்களாதலால், சிவிகை தண்டிகைகள் பூர்வகால முதல் வைத்து உபயோகப்படுத்திவருகிறார்கள்.

---

*Vide, *Madras Mail, March* 7, 1873. also, சான்றோர்மரபு, p. 73.

(x) தென்பாண்டிநாட்டில் பஞ்சதிருவழுதிநாடாள்வார்கள் பூர்வகாலத்தில் இருந்து அரசுபுரிந்துவந்த கொற்கைப்பதி, ஆள்வார் திருநகரிமுதலான ஐந்து நகரங்களிருந்த நாட்டிற்கு மகாநாடு என்றும், மாநாடு என்றும், பஞ்சமால் என்றும் பெயராம். பூர்வத்தில் தென்பாண்டிநாட்டுச் சான்றோர்குலத்து வழக்குகளுக்கு முடிவானதீர்ப்பு இந்த மகாநாட்டார் தீர்ப்பாம். நாளதுஞ் சான்றோர்குலத்துச் சிறுசிறு குடிவழக்குகள் அந்த மகாநாட்டு நாடாள்வார்களாகிய நாடார்கள் பஞ்சாயத்தில் முடிவாகிவருகின்றது.

இத்தகைய பூர்வகுலமேன்மைகளையுடைய சான்றோர் குலத்தவர்களை ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் கள்வாணிபர்களாகிய சௌண்டிகர்களுக்கு ஒப்பிட்டுப் பேசத்துணிந்தது அவர்மீது பெருங்குற்றமாம்.

மேலே மூன்றுவது விஷயத்திற் கூறியிருக்கிறபிரகாரம், சான்றோர்குலத்து விதவைகள் வெண்ணுடை புனைந்து நிராபரணதாரிகளாவது பூர்வ அரசர்குலத்தவர்களுக்குண்டாயிருந்த இன்றியமையாத பூர்வ ஆசாரமாம். இதற்கு ஒருதிருட்டாந்தம் இங்ஙனம் எடுத்துரைப்போம் :

பூர்வகாலத்தில் அயோத்திமாநகரிற் செங்கோற் செலுத்திய தசரதமகாராசன் தன் தேவிமார்களிலொருத்தியாகிய கைகேசியின் தந்திரத்திலகப்பட்டு ஸ்ரீராமரை வனத்திற்கோட்டிவிட்டபின்பு, தசரதராமர் தன்தேவி சீதையோடும் தன் தம்பி இலக்ஷ்மணனோடும் தென்னாட்டில் தவஞ்செய்துகொண்டுவருகையில், தந்திர உபாயத்தால் இராவணன் சீதையைச்சிறையெடுத்துக்கொண்டு இரதாரூடனாய்ச் செல்லுகையில், சீதையானவள் அலறியழுதுகொண்டு, கேசாதிபாதம் வரை தான்பூண்டிருந்த ஆபரணங்களையெல்லாங் கழற்றி, ஒரு பொட்டணமாகக்கட்டித் தாழப்போட்டுவிட, அந்த ஆபரணங்களை சுக்கிரீவன் கண்டெடுத்து, தசரதராமன் முன்வைத்து, நடந்தகாரியங்களைச் சொல்லவே, ஸ்ரீராமரானவர் மிகவுங் கிலேசித்துப் பிரலாபித்துப் புலம்பியபோது, இவ்வாறு சொல்லலுற்றார் :

கம்பராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், கலன்காண்படலம், 19-வதுகவி :

“ விலங்கெழிற்றோளினுய் வினையினேனுமிவ்
விலங்குவிற்கரத்தினு மிருக்கவேயவள்
கலன்கழித்தனளிது கற்புமேவிய
பொலன்குழைத்தெரிவையர் புரிந்துளோர்கள்யார்.”

இந்தக்கவியில் தசரதராமர் சொல்லுகிறார். “ஓ சுக்கிரீவா, எவற்றையுமுடிக்கவல்லவனுகிய நானிருக்க, என்கரத்தில் விசயகோதண்டமிருக்க, அவள் நிராபரணதாரியாயினள். கற்பு நிறைந்த ஆபரணதாரிகளாகிய மங்கலக்கழுத்தியர்களுள் யார் நாயகன் உயிரோடிருக்கையில் இவ்வாறு செய்யத்துணிவார்?” என்றான். இதினல் அரசர்குலப்பெண்கள் நாயகன் உயிரோடிருக்குந்தனையும் ஆபரணதாரிகளாயிருப்பதும், நாயகன் உயிர்நீங்கியபின் நிராபரணதாரிகளாவதும் பூர்வ அரசர்குல ஆசாரவொழுக்கமென நன்ருய்த்துலங்குகின்றது.

6. கிராமணிகள்என்று இந்திரனின் கீர்த்திப்பெயர்தரித்து, கிராமங்களுக்கும் நாடுகளுக்கும் அதிபதிகளாகிய தொண்டைமண்டலத்துப்பண்டைச்சான்றோர்குலத்தவர்களை மேற்படி ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் “ கிராமங்களுக்குப்புறம்பானவர்களானபடியால், கிராமன்னியர்களென அவர்களுக்குரியபெயராய்வருகிறது” என்று கூறித்தூஷித்திருக்கிறார்.

இதுவும் ‘ நிந்தைமொழியாகிய குற்றம்.’

7. ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் தமிழ்நாட்டு அரசர்குலத்தவர்களுக்குரிய மகாசிறந்தபட்டப்பெயராகிய ‘நாடான்’ என்னும் பெயருக்கு ‘மேலோர்வசிக்கும் நாடுகளில் நாடாதவன்’ என மோடனத்தாற்பரியம்பண்ணி, மிகுநிந்தைசெய்திருக்கிறார்.

இதுவும் ‘ நிந்தைபேசியகுற்றம்.’

இந்தப்பிரகாரமாக ஜாதிசங்கிரகசார நூலாசிரியர்மீது, மேற்கூறிய ஏழுகுற்றங்கள் சுமத்தப்பட்டிருக்கின்றன. மேற்படி

(x) தென்பாண்டிநாட்டில் பஞ்சதிருவழுதிநாடாள்வார்கள் பூர்வகாலத்தில் இருந்து அரசுபுரிந்துவந்த கொற்கைப்பதி, ஆள்வார் திருநகரிமுதலான ஐந்து நகரங்களிருந்த நாட்டிற்கு மகாநாடு என்றும், மாநாடு என்றும், பஞ்சமால் என்றும் பெயராம். பூர்வத்தில் தென்பாண்டிநாட்டுச் சான்றோர்குலத்து வழக்குகளுக்கு முடிவானதீர்ப்பு இந்த மகாநாட்டார் தீர்ப்பாம். நாளதுஞ் சான்றோர்குலத்துச் சிறுசிறு குடிவழக்குகள் அந்த மகாநாட்டு நாடாள்வார்களாகிய நாடார்கள் பஞ்சாயத்தில் முடிவாகிவருகின்றது.

இத்தகைய பூர்வகுலமேன்மைகளையுடைய சான்றோர் குலத்தவர்களை ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் கள்வாணிபர்களாகிய சௌண்டிகர்களுக்கு ஒப்பிட்டுப் பேசத்துணிந்தது அவர்மீது பெருங்குற்றமாம்.

மேலே மூன்றாவது விஷயத்திற் கூறியிருக்கிறபிரகாரம், சான்றோர்குலத்து விதவைகள் வெண்ணுடை புனைந்து நிராபரணதாரிகளாவது பூர்வ அரசர்குலத்தவர்களுக்குண்டாயிருந்த இன்றியமையாத பூர்வ ஆசாரமாம். இதற்கு ஒருதிருட்டாந்தம் இங்ஙனம் எடுத்துரைப்போம்:

பூர்வகாலத்தில் அயோத்திமாநகரிற் செங்கோற் செலுத்திய தசரதமகாராசன் தன் தேவிமார்களிலொருத்தியாகிய கைகேசியின் தந்திரத்திலகப்பட்டு ஸ்ரீராமரை வனத்திற்கோட்டிவிட்டபின்பு, தசரதராமர் தன்தேவி சீதையோடும் தன் தம்பி இலக்ஷுமணனோடும் தென்னாட்டில் தவஞ்செய்துகொண்டுவருகையில், தந்திர உபாயத்தால் இராவணன் சீதையைச்சிறையெடுத்துக்கொண்டு இரதாரூடனாய்ச் செல்லுகையில், சீதையானவள் அலறியழுதுகொண்டு, கேசாதிபாதம்வரை தான்பூண்டிருந்த ஆபரணங்களையெல்லாங் கழற்றி, ஒரு பொட்டணமாகக்கட்டித் தாழப்போட்டுவிட, அந்த ஆபரணங்களை சுக்கிரீவன் கண்டெடுத்து, தசரதராமன் முன்வைத்து, நடந்தகாரியங்களைச் சொல்லவே, ஸ்ரீராமரானவர் மிகவுங் கிலேசித்துப் பிரலாபித்துப் புலம்பியபோது, இவ்வாறு சொல்லலுற்றார்:

கம்பராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், கலன்காண்படலம், 19-வதுகவி :

"விலங்கெழிற்றோளிஞய் வினையினேனுமிவ்
விலங்குவிற்கரத்தினு மிருக்கவேயவள்
கலன்கழித்தனளிது கற்புமேவிய
பொலன்குழைத்தெரிவையர் புரிந்துளோர்கள்யார்."

இந்தக்கவியில் தசரதராமர் சொல்லுகிருர். "ஓ சுக்கிரீவா, எவற்றையுமுடிக்கவல்லவனுகிய நானிருக்க, என்கரத்தில் விசயகோதண்டமிருக்க, அவள் நிராபரணதாரியாயினள். கற்பு நிறைந்த ஆபரணதாரிகளாகிய மங்கலக்கழுத்தியர்களுள் யார் நாயகன் உயிரோடிருக்கையில் இவ்வாறு செய்யத்துணிவார்?" என்ருன். இதிஞல் அரசர்குலப்பெண்கள் நாயகன் உயிரோடிருக்குந்தனையும் ஆபரணதாரிகளாயிருப்பதும், நாயகன் உயிர்நீங்கியபின் நிராபரணதாரிகளாவதும் பூர்வ அரசர்குல ஆசாரவொழுக்கமென நன்ருய்த் துலங்குகின்றது.

6. கிராமணிகள்என்று இந்திரனின் கீர்த்திப்பெயர்தரித்து, கிராமங்களுக்கும் நாடுகளுக்கும் அதிபதிகளாகிய தொண்டைமண்டலத்துப்பண்டைச்சான்ரோர்குலத்தவர்களை மேற்படி ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் "கிராமங்களுக்குப்புறம்பானவர்களானபடியால், கிராமன்னியர்களென அவர்களுக்குரியபெயராய்வருகிறது" என்று கூறித்தூஷித்திருக்கிருர்.

இதுவும் 'நிந்தைமொழியாகிய குற்றம்.'

7. ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் தமிழ்நாட்டு அரசர்குலத்தவர்களுக்குரிய மகாசிறந்தபட்டப்பெயராகிய 'நாடான்' என்னும் பெயருக்கு 'மேலோர்வசிக்கும் நாடுகளில் நாடாதவன்' என மோடனத்தாற்பரியம்பண்ணி, மிகுநிந்தைசெய்திருக்கிருர்.

இதுவும் 'நிந்தைபேசியகுற்றம்.'

இந்தப்பிரகாரமாக ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் மீது, மேற்கூறிய ஏழுகுற்றங்கள் சுமத்தப்பட்டிருக்கின்றன. மேற்படி

நூலாசிரியர் இந்த ஏழுகுற்றங்களுக்குந் தகுந்தவிடைகூறி, தாங்கூறியிருப்பவற்றின் உண்மையைத் தெளிவுறத்துலக்கிக் காட்டக்கடவர். அவர் கூறும்விடையையறிய எதிர்ப்பார்த்திருக்கிறோம்.

இனி எட்டாவது பிரகரணத்தில், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரத்திற்கூறிய சான்றோர்குலக்கௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்ட பெயர்களுக்குத்தாற்பரியவுரைகூறுவோம்.

~~~~~~~~~~~~~~

## அ. பிரகரணம்.

பூர்வதமிழ்நாட்டரசர்குலத்தவர்களாகிய சத்திரியகுலத்தவர்களுக்குத் தமிழ்ப்பாஷையில் 'சான்றோர்' முதலான கௌரவப்பட்டப்பெயர்கள்வந்து வழங்கியதற்குத் திருட்டாந்தமாக, திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரத்தையெடுத்து அதற்குத் தாற்பரியவுரை கூறி, அதின் உண்மையைப் பிறநூல்களால் துலக்கிக்காட்டுகின்றது.

இந்தப்பிரகரணத்தில் தமிழ்நாட்டரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்குக் கரிக்காலசோழன் (கரிகாலசோழன்) நாளையில் ஒரு விசேஷமானகாரணத்தையிட்டு நூதனமாகப் பாணித்துக்கொடுக்கப்பட்ட கௌரவப்பட்டப்பெயராகிய 'சான்றோர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட பெயர்களைக் கூறுகின்ற திவாகரச் சூத்திரத்தை இங்ஙனம் பேர்த்தெழுதி, அதின் உண்மையை விளக்கிக்காட்டுவோம்.

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரம்.

அறிவுடையோர்பெயர்.

" சான்றோர்மிக்கோர் நல்லவர்மேலவ:
ராய்ந்தோருயர்ந்தோ ராரியருலகென
வாய்ந்தவான்றோ ரறிவுடையோரே."

இந்தச்சூத்திரத்தின் உட்பொருளை நன்காராய்ந்துணர்தற்கு,
~~~~~~~~~~~~~~

I. இந்தச்சூத்திரத்தை அதின் முன்சார்பு பின்சார்புகளில் வந்துநிற்கின்ற சூத்திரங்களோடு ஒப்பிட்டு, அந்தச் சூத்திரத்திற்கூறியிருக்கிற ஒருபொருட்பெயர்கள் ஆதி ஏற்பாட்டில் இன்னகுலத்தவர்களுக்கு இடப்பட்ட பெயர்கள் என்றும்,

II. இந்தச்சூத்திரத்தின் உட்பொருள்நோக்கி இந்த ஒருபொருட்பெயர்களின் இயற்கைத்தாற்பரிய மின்னதென்றும், இந்தச் சூத்திரத்தில் வந்திருக்கின்ற ஒருபொருட்பெயர்கள் பூர்வ அரசர்குலத்தவர்களுக்கிடப்பட்டு வழங்கிவந்திருப்பதற்கு நூற்சாட்சிகளின்னவைகள் என்றும் இங்ஙனம் விபரித்துக்காட்டித் தெளிவுரைகூறுவோம். இவற்றுள்,

I. இந்தச்சூத்திரத்தை அதின் முன்சார்பு பின்சார்புகளில் வந்துநிற்கின்ற சூத்திரங்களுடன் ஒப்பிட்டு, ஆதி ஏற்பாட்டில் இந்த ஒருபொருட்பெயர்கள் இன்னகுலத்தவர்களுக்கிடப்பட்டிருக்கின்ற பெயர்களென்று காண்பிப்போம்.

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 1-வது சூத்திரம் முதல், 33-வது சூத்திரம் வரையில் வந்து நிற்கின்ற இந்தமுப்பத்துமூன்று சூத்திரங்களும் நான்கு பெரும்பிரிவுகளாகப் பிரிந்து நிற்கின்றன. அவைவருமாறு:

(*i*) 1-வது சூத்திரமுதல், 8-வது சூத்திரம்வரையில் வரும் எட்டுச்சூத்திரங்களும் பார்ப்பனக்குலத்தவர்கள் பெயர்களுக்கும், அக்குலத்துச் சார்பிலுதித்த அருந்தவர்கள் தபோதனர்கள் முனிவர்கள் பெயர்களுக்கும், பிறமதப்பெரியோர்களுடைய பெயர்களுக்கும் வருகின்ற ஒருபொருட்சொற்களை உரைக்கின்றன.

(*ii*) 9-வது சூத்திரமுதல், 31-வது சூத்திரம்வரையிலும் வருகின்ற இருபத்துமூன்று சூத்திரங்களும் அரசர்குலத்தவர்கள் பெயர்களுக்கும், அக்குலத்துச்சார்பிலுதித்த கலைவல்லோர்கள், புலவர்கள் பெயர்களுக்கும், அந்தக்குலத்தவர்கள் பெற்றிருந்த கௌரவப்பட்டப்பெயர்களுக்கும், அரசர்குலப் பெரியோர்களுடைய பெயர்களுக்கும், குறுநிலவேந்தர்கள் பெயர்களுக்கும், மந்திரிக்கிழவர், நட்பாளர், போர்த்தலைவர்

முதலானவர்கள் பெயர்களுக்கும் வருகின்ற ஒருபொருட் சொற்களைக்கூறுகின்றன.

(*iii*) 32-வது சூத்திரம் செட்டிகுலத்தவர்கள் பெயருக்கு வருகின்ற ஒருபொருட்சொற்களைக்கூறுகிறது.

(*iv*) 33-வது சூத்திரங் காராளர் எனவுஞ், சூத்திரர் எனவும் பெயர்கொண்ட வேளாண்மாந்தர்குலத்தவர்களுக்கு வருகின்ற ஒருபொருட்பெயர்களைக்கூறுகின்றது. இவற்றுள்,

(I) பார்ப்பனக்குலத்தவர்களுக்கு முதல் எட்டுச்சூத்திரங்களில் வருகிறபெயர்களைக் கவனித்துப்பார்ப்போமாக.

1-வது சூத்திரம், பார்ப்பனக்குலத்தவர்களுக்குள் வேதசாஸ்திர அறிவுகளோடு தவநிலையில் வைராக்கியமுற்று மிகு சிறப்புற்றோங்கிய அந்தணர்களுக்கு வருகின்றபெயர்களைக் கூறும். அறிவில் மேன்மைபெற்றதால் அவர்களுக்கு 'அறிஞர், உயர்ந்தோர், பெரியோர்' எனவும், தபோமுயற்சியில் மேன்மைபெற்றதால் அவர்களுக்குத் 'துறவோர், ஐயர், மாதவர், முனிவர், அறவோர், நீத்தோர், தாபதர், மெய்யர், தவத்தர், தபோதனர், முனைவர், இருடிகள், படிவர், பண்ணவர், யோகிகள், கடிந்தோர், அந்தணர், அருந்தவர்' எனவும், பெயர்கள் வந்திருக்கின்றன.

2-வது சூத்திரம், சைவமதத்தவப்பாலோருக்கு வருகின்ற பெயர்களைக்கூறுகிறது.

3-வது சூத்திரம், நாராயணசமயத்தவத்தோருக்கு வரும் பெயர்களை உரைக்கின்றது.

4-வது சூத்திரம், சமணமதத்தவத்தோருக்கு வரும் பெயர்கள் அமைந்தது.

5-வது சூத்திரம், புத்தமதத்தவத்தோருக்கு வரும்பெயர்களைக்கூறுகின்றது.

6-வது சூத்திரம், சமணமுனிவர்களுக்கு வரும்பெயர்களைச் சொல்லுகிறது.

7-வது சூத்திரம், சடைமுடியோர்களுக்கு வருகின்றபெயர்கள் அமைந்தது.

8-வது சூத்திரம், பார்ப்பனக்குலத்தவர்களுக்கு வருகிற பெயர்களை உரைக்கிறது.

வேதசாஸ்திர அறிவில் மேன்மைபெற்றதால் அவர்களுக்கு 'வேதியர், மிக்கவர், மறையோர், நூலோர், உயர்ந்தோர், ஆய்ந்தோர், வேதபாரகர்' எனவும், குலத்தில் மேன்மைபெற்றதால், அவர்களுக்கு 'ஐயர், இருபிறப்பாளர், மெய்யர், பூசுரர், அந்தணர், அறுதொழிலாளர், செந்தீவளர்ப்போர், ஆதிவருணர், விப்பிரர், தொழுகுலத்தோர், வேள்வியாளர், முப்புரிநூலோர், முனிவர்' எனவும் பெயர்கள்வந்திருக்கின்றன.

இந்த எட்டுச்சூத்திரங்களில், 1-வது, 8-வது சூத்திரங்கள் முக்கியமானவைகள். அவைகளை இங்ஙனம் பேர்த்தெழுதுகிறோம்.

1-வது சூத்திரம்.

அருந்தவர்பெயர்.

" துறவோரையர் மாதவர்முனிவர்
அறவோர்நீத்தோ ரறிஞருயர்ந்தோர்
தாபதர்மெய்யர் தவத்தர்தபோதனர்
முனைவரிருடிகள் படிவர்பண்ணவர்
யோகிகள்கடிந்தோர் பெரியோருறுவரென்
றாகியவந்தண ரருந்தவர்பெயர்."

8-வது சூத்திரம்.

பார்ப்பார்பெயர்.

" ஐயர்வேதிய ரிருபிறப்பாளர்
மெய்யர்மிக்கவர் மறையோர்பூசுரர்
அந்தணர்நூலோ ரறுதொழிலாளர்
செந்தீவளர்ப்போ ருயர்ந்தோராய்ந்தோர்
ஆதிவருணர் வேதபாரகர்
விப்பிரர்தொழுகுலத்தோர் வேள்வியாளர்
முப்புரிநூலோர் முனிவரென்றிவை
தப்பில்பார்ப்பார் தம்பெயராகும்."

இந்த இரண்டுசூத்திரங்களிலும் பார்ப்பனக்குலத்தவர்களுக்கு வேதசாஸ்திர அறிவின்மேன்மையால் வந்திருக்கின்றபெயர்களை மேலேபிரித்துக்கூறியிருக்கிறோம். அவற்றை இங்ஙனம் ஒருங்கே திரட்டிவரைவோம். அவைவருமாறு:

"அறிஞர், மிக்கவர், அந்தணர், பெரியோர், ஆய்ந்தோர், உயர்ந்தோர், வேதபாரகர், நூலோர், வேதியர், மறையோர்" முதலியனவாம்.

சதுரகராதி, 2-வது பாகமாகிய பொருளகராதியில், பார்ப்பாருக்கு 'உம்பர்,* மேற்குலத்தோர்' எனவும் பெயர்கள் வந்திருக்கின்றன. மேற்படி இரண்டு சூத்திரங்களிலும் 'ஐயர்' என்றொருபெயர் பார்ப்பாருக்கு ஒருபெயராக வந்திருக்கிறது. இந்தப்பெயர் பார்ப்பனக்குலத்துப் பட்டப்பெயராம். உதாரணமாக,

சுப்பிரமணிய ஐயர்,<br>
சாம்பமூர்த்தி ஐயர்,<br>
கணபதி ஐயர்,<br>
இலட்சுமண ஐயர், பிறவுமன்ன. இதுநிற்க,

(II) அரசர்குலத்தவர்களுக்கு இடைச்சூத்திரங்கள் இருபத்துமூன்றிலும் வருகின்ற பெயர்களை இங்ஙனம் கவனித்துப்பார்ப்போம்.

9-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குள் நூலுரைப்போர்களுக்கு வரும்பெயர்களைக் கூறுகின்றது. மேலே பார்ப்பனக்குலத்தவர்களுக்குள் நூலுரைப்போர்களுக்கு 'நூலோர்' எனப்பெயர்வந்திருக்கின்றமையாலும், அந்த ஆதிகாலத்தில் செட்டிகள் நூல்முயற்சி மிகுந்துசெய்யாமையாலும், சூத்திரர் நூலுரைப்போராகுதற்கு அயோக்கியரானமையாலும், இங்ஙனம் 9-வது சூத்திரத்தில் 'நூலுரைப்போர்' எனக் கூறியிருப்பது அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களையே குறிக்கின்றது. பூர்வத்தில் பெருநூல்கள் பல எழுதியவர்கள் சத்திரியகுலச்சான்றோர்களென்பது எவருக்குந் தெரிந்தகாரிய

* உம்பர் = மேலோர்.

மல்லவா? திருட்டாந்தமாக. நைடதம், காசிகாண்டம், வெ ற்றிவேற்கை எழுதியவன் அதிவீரராமபாண்டிநாடன், சாதக சிந்தாமணி எழுதியவன் தில்லைநாயகபாண்டிநாடன், திவா கரநூல் எழுதியவன் அம்பற்நாட்டுக்கு அதிபதியாகிய சேந் தன், பிரபோதசந்திரோதயம் எழுதியவன் சோழநாட்டரச ஞன திருவேங்கடேந்திர சோழநாடன், தமிழ் இராமாயணக் காப்பியம் எழுதியவன் கம்பநாடன், பாரதவெண்பா எழுதிய வர் பெருந்தேவனர், ஆதியுலாச்செய்தவன் சேரமான்பெரு மான், தண்டியலங்காரஞ்செய்தவன் கம்பநாடன் பேரனும், அம்பிகாபதியின் புத்திரனுமான தண்டி என்பவன். பிறவு மன்ன.

10-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குள் கலைவல் லோர்களுக்கு வரும்பெயர்களை உரைக்கின்றது. பார்ப்பனக் குலத்தவர்களுக்கோ மேலே 'வேதபாரகர், வேதியர், மறை யோர்' முதலான பெயர்கள் வந்திருப்பதால், இந்த 10-வது சூத்திரம் அரசர்குலத்தவர்களுக்கே யுரித்தானதாம்.

11-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குக் குலத்தாலும், குணத்தாலும், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரி மையாலும், அறிவாலும், சிறப்புப்பெயர்களாக வந்துவழங் கிய கௌரவப்பட்டப்பெயர்களைக் கூறுகின்றது. அந்தப் பட் டப்பெயர்கள்: "சான்றோர், மிக்கோர், நல்லவர், மேலவர், ஆய்ந்தோர், உயர்ந்தோர், ஆரியர், உலகு, ஆன்றோர், அறிவுடை யோர்" என்பனவாம்.

மேலே கூறியிருக்கிறபிரகாரம் பார்ப்பனக்குலத்தவர்களுக் கு "அறிஞர், மிக்கவர், அந்தணர், பெரியோர், ஆய்ந்தோர், உயர்ந்தோர், வேதபாரகர், நூலோர், வேதியர், மறையோர், உம்பர், மேற்குலத்தோர்" முதலானபெயர்கள் வந்திருப்ப தால், இந்த 11-வது சூத்திரம் பார்ப்பனக்குலத்தவர்களைச் சுட் டியதன்றெனவறிக. 'சான்றோர்' என்னும்பெயர் பார்ப்பன க்குலத்தவர்களுக்கு வாராமையால், இந்தச் 'சான்றோர்' என் னும்பெயர் அரசர்குலமேன்மக்களுக்கும், அரசர்குலமுனி

வர்களுக்கும் ஏற்கும் பெயராம். இதற்குவிபரம் இனிமேற்கூறப்படும்.

12-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குள் புலவர்களுக்குவரும் பெயர்களைக்கூறுகிறது.

13-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குள் மிகவல்லோர்களுக்கு வரும்பெயர்களை உரைக்கின்றது.

14-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குள், கல்விசாஸ்திர அறிவுகளிலும், நற்குண நற்செய்கைகளிலும் முதிர்ந்த மூத்தோர்களுக்கு வரும்பெயர்களைக்கூறுகிறது.

15-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குள் பெருந்தன்மையிற் சிறந்தவர்களுக்கு வருகின்றபெயர்களைக் கூறுகின்றது.

16-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குள் எப்பொருளுக்கும் இறைவனானவனுக்கு வரும்பெயர்களைச் சொல்லுகிறது.

17-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குள் உயர்ந்தோர்களுக்கு வரும்பெயர்களைக்கூறுகின்றது.

18-வது சூத்திரம், அரசர்குலத்தவர்கள் கூடுஞ்சபைக்கு வரும்பெயர்களைக்கூறுகிறது.

19-வது சூத்திரம், அரசர்குலத்தவர்களுக்குள் சிம்மாசனபதியான வேந்தனுக்கு வரும்பெயர்களை உரைக்கின்றது.

20-வது சூத்திரம், தமிழ்நாட்டரசர்கள் குருகுலத்தரசர் வம்சபரம்பரைக்கிளைப்பிரிவார்களானமையால், தமிழ்நாட்டரசர் பெயர்கள் வருவதற்கு முன்னதாக மேற்படி குருகுலத்தரசர்களுக்கு வரும் பெயர்களைக்கூறுகிறது.

21-வது சூத்திரம், கோச்சேரனுக்கு வரும்பெயர்களைக் கூறுகின்றது.

22-வது சூத்திரம், கோச்சோழனுக்கு வரும்பெயர்களைச் சொல்லுகிறது.

23-வது சூத்திரம், கோப்பாண்டியனுக்கு வரும்பெயர் களை உரைக்கின்றது.

24-வது சூத்திரம், தமிழ்நாட்டரசர்களுக்குத் திறைகட்டி வந்த சாளுவநாட்டரசர்களுக்கு வரும்பெயர்களைக்கூறுகின் றது.

25-வது சூத்திரம், தமிழ்நாட்டரசர்களுக்குத் திறைகட்டித் தமிழ்நாடுகளில் உள்நாடுகளை ஆண்டுவந்த குறுநிலவேந்தர் களுக்கு வரும்பெயர்களைச் சொல்லுகின்றது.

26-வது சூத்திரம், தமிழ்நாட்டரசர்களுடைய இராசசபை யைச்சேர்ந்த மந்திரிக்கிழவர்களுக்கு வரும்பெயர்களை யுரைக் கிறது.

27-வது சூத்திரம், தமிழ்நாட்டரசர்களுடைய இராசசபை யைச்சேர்ந்த நட்பாளருக்கு வரும்பெயர்களைக் கூறுகின்றது.

28-வது சூத்திரம், மேற்படி இராசசபையைச்சேர்ந்த மந் திரித்தந்திரிக்கு வருகின்ற பெயர்களைக் கூறுகிறது.

29-வது சூத்திரம், மேற்படி இராசசபையைச்சேர்ந்த புரோ கிதர்களாகிய கருமத்தலைவர் பெயர்களைச் சொல்லுகின்றது.

30-வது சூத்திரம், மேற்படி அரசர்களுக்குள்ளாக படைச் சேவகஞ் செய்துவந்த போர்த்தலைவருக்கு வரும்பெயர்களைக் கூறுகிறது.

31-வது சூத்திரம், மேற்படி இராசசபையைச்சேர்ந்த பரி வாரத்தாருக்கு வரும்பெயர்களைச் சொல்லுகின்றது.

இந்தப்பிரகாரம், 9-வது சூத்திரமுதல், 31-வது சூத்திரம் வரையினும் வருகின்ற இந்த இருபத்துமூன்று இடைச்சூத் திரங்களில், அரசர்குலத்தவர்களுக்குரித்தான கௌரவப்பட் டப்பெயர்களை எடுத்துரைக்கிற 11-வது சூத்திரத்தை இங்ங னம் விபரித்துக்கூறுவோம்.

அந்த 11-வது சூத்திரம் வருமாறு :

அறிவுடையோர்பெயர்.

"சான்றோர்மிக்கோர் நல்லவர்மேலவ
ராய்ந்தோருயர்ந்தோ ராரியருலகென
வாய்ந்தவான்றோ ரறிவுடையோரே."

நாம் மேலே காண்பித்திருக்கிறபிரகாரம், அறிவு, குலம், நற்குண நற்செய்கைகளால் பார்ப்பனக்குலத்தவர்களுக்கும் இவ்வகைப்பெயர்கள் 1-வது, 8-வது சூத்திரங்களில் வந்திருப்பதால், இந்த 11-வது சூத்திரத்திற் கண்டிருக்கிற பெயர்கள் அரசர்குலத்தவர்களைச் சுட்டியபெயர்களென்று தெளிவாய் விளங்குகின்றது. 11-வது சூத்திரத்தில் அரசர்குலத்தவர்களுக்கு வந்திருக்கிற பெயர்களுக்குச் சமரசமாக, 1-வது, 8-வது சூத்திரங்களில் பார்ப்பனக்குலத்தவர்களுக்குரிய பெயர்கள் வருமாறு :

"அறிஞர், மிக்கவர், அந்தணர், ஆய்ந்தோர், உயர்ந்தோர், வேதபாரகர், நூலோர், வேதியர், மறையோர், உம்பர், மேற்குலத்தோர்." இந்தப்பெயர்களை மேற்படி 11-வது சூத்திரத்திற் கூறியிருக்கிற பெயர்களோடு சமரசப்படுத்திப் பார்ப்போமாக.

(a) பார்ப்பனக்குலத்தவர்களுக்கு 'அறிஞர்' என வந்திருப்பதற்கு, அரசர்குலத்தவர்களுக்கு 'அறிவுடையோர்' எனவும்,

(b) அவர்களுக்கு 'மிக்கவர்' என வந்திருப்பதற்கு, இவர்களுக்கு 'மிக்கோர்' எனவும்,

(c) அவர்களுக்கு 'உம்பர்' என வந்திருப்பதற்கு, இவர்களுக்கு 'மேலோர்' எனவும்,

(d) அவர்களுக்கு 'அந்தணர்' என வந்திருப்பதற்கு, இவர்களுக்கு 'நல்லவர்' எனவும்,

(e) அவர்களுக்குப் 'பெரியோர்' என வந்திருப்பதற்கு, இவர்களுக்குச் 'சான்றோர், ஆன்றோர், ஆரியர், உலகு' எனவும்,

(f) அவர்களுக்கு 'ஆய்ந்தோர்' என வந்திருப்பதற்கு, இவர்களுக்கும் 'ஆய்ந்தோர்' எனவும்,

(g) அவர்களுக்கு 'உயர்ந்தோர்' என வந்திருப்பதற்கு, இவர்களுக்கும் 'உயர்ந்தோர்' எனவும்,

(*h*) அவர்களுக்கு 'நூலோர்' என வந்திருப்பதற்கு, இவர்களுக்கு 9-வது சூத்திரத்தில் 'நூலுரைப்போர்' எனவும்,

(*k*) அவர்களுக்கு 'மறையோர், வேதியர், வேதபாரகர் என வந்திருப்பதற்கு, இவர்களுக்கு 10-வது சூத்திரத்தில், 'கலைவல்லோர்' எனவும், பெயர்கள் இவ்விருகுலத்தவர்களுக்குஞ் சமரசப்பட்டுவந்திருப்பதால், இந்த 9-வது 10-வது 11-வது சூத்திரங்கள் அரசர்குலத்தவர்களைச் சுட்டியும், அந்த 1-வது 8-வது சூத்திரங்கள் பார்ப்பனக்குலத்தவர்களைக்குறித்தும் வந்திருப்பது நன்றாய் விளங்குகின்றது. ஒருகுலத்தவர்களைச்சுட்டி ஒருவிசை சொன்னபெயர்களை மறுபடியும் இரட்டித்துக் கூறி, கூறியது கூறல் எனுங் குற்றத்துக்குள்ளாக வேண்டிய அவசியமில்லையல்லவா?

நாம் மேலே ஆறுவது பிரகரணத்தில் காண்பித்திருக்கிற பிரகாரம், அரசர்குலத்தவர்களுக்குள் வந்து வழங்கிய குலப் பட்டப்பெயர்கள் 'அரசன், நாடான், நாடன், ஆளி, ஆள்வோன், நாடாள்வோன், தேவன், நாயகன், கிராமணி' என்பனவாம். இந்தப் பட்டப்பெயர்களெல்லாம் 'அரசன்' என்னும் பெயருடன் ஒருபொருளில்வந்து வழங்குவனவாகும். உதாரணமாக—குலசேகரவரசன், குலசேகரநாடான், குலசேகரநாடன், குலசேகரநாடாள்வான், குலசேகரதேவன், குலசேகரநாயகன், பிறவுமன்ன. இதுநிற்க,

III. வைசியர்களாகிய செட்டிகுலத்தவர்களுக்கு வருகின்ற ஒருபொருட்பெயர்களை 32-வது சூத்திரங் கூறுகிறது.

இந்த வைசியர்குலத்தவர்களுக்குச் 'செட்டி' என்னும்பெயர் குலப்பட்டப்பெயராகவந்து வழங்குகின்றது: திருட்டாந்தமாக—சிதம்பரசெட்டி, நாராயணசெட்டி, சிவசங்கரசெட்டி, பிறவுமன்ன. இதுநிற்க,

IV. காராளர் எனப் பெயர்கொண்ட சூத்திரர்களாகிய வேளாண்மாந்தருக்கு வருகின்ற ஒருபொருட்பெயர்களை 3-வது சூத்திரம் உரைக்கின்றது.

33 - வது சூத்திரம்,

காராளர்பெயர்.

" வினைஞர்சூத்திரர் பின்னவர்சதுர்த்தர்
வளமையர்வேளாளர் மண்மகள்புதல்வர்
வார்த்தைத்தொழிலோர் வண்களமருழவர்
சீர்த்தவேரின் வாழ்நர்காராளர்."

இந்தச்சூத்திரத்தில், சூத்திரகுலத்தவர்களுக்கு 'மண்மகள் புதல்வர்' எனவும், பொருளகராதியில், சூத்திரர் என்னுஞ் சொல்லுக்கடியில் 'மண்மக்கள்' எனவும் பெயர்கள்வந்திருக்கின்றன. இந்தப்பெயர்களுக்குப் 'பூதேவிபிள்ளைகள்' என்றும், 'பூமிப்பிள்ளைகள்' என்றும் தாற்பரியமாம். ஆகவே சூத்திரகுலத்தவர்களுக்குப் 'பிள்ளை' என்பது குலப்பட்டப் பெயராம். உதாரணமாக—சுப்பிரமணியபிள்ளை, முருகேசபிள்ளை, சங்கரலிங்கபிள்ளை, பிறவுமன்ன.

பூர்வதமிழ்நாட்டரசர்கள் இந்தக்குலப்பிரிவுகளைத் தொழில் நோக்கிப்பிரித்து, குலம் ஒன்றிற்கு அவ்வாறு தொழில் ஏற்படுத்தி, தாங்கள் ஏற்படுத்திய தொழில்வரம்புகள் கடந்து நடவாதபடிக்குத் திட்டஞ்செய்திருந்தனர். திவாகரநூலாசிரியர்காலத்தில் குலத்தொழில்கள் குலவரம்பழியாதபடிக்கு நடந்துவந்திருப்பதால், அந்தக்காலத்தை நினைத்துத் தாற்பரியஞ் செய்யவேண்டும். ஆனதால், நாம் இங்ஙனம் இந்நான்கு குலத்தவர்களுக்கும் விதிக்கப்பட்டிருக்கின்ற தொழில்களைக் கூறிச் சமரசப்படுத்திக்காண்பிப்போம்.

1. அந்தணர் அறுதொழில். திவாகரம், 12-வது பலபொருட் கூட்டத்தொருபெயர்த்தொகுதி, 78-வது சூத்திரம்.

" ஓதலோதுவித்தல் வேட்டல்வேட்பித்த
லீதலேற்ற லென்றிருமூவகை
யாதிக்காலத் தந்தணரறுதொழில்."

| | | | |
|---|---|---|---|
| (i) | ஓதல், | (iv) | வேட்பித்தல், |
| (ii) | ஓதுவித்தல், | (v) | ஈதல், |
| (iii) | வேட்டல், | (vi) | ஏற்றல். |

2. அரசராறுதொழில். மேற்படிதொகுதி, 79-வது சூத்திரம்.

"அரசராறுதொழி லோதல்வேட்டல்
புரைதீரப்பெரும்பார்ப் புரத்தலீதல்
கரையறுபடைக்கலங்கற்றல்விசயம்."

(i) ஓதல், (iv) ஈதல்,
(ii) வேட்டல், (v) படைக்கலம்பயிற்றல்,
(iii) உலகோம்பல், (vi) விசயம்.

இந்த ஆறுதொழில்களில் ஆறுவதுதொழிலுக்குத் திவாகரச்சூத்திரத்தில் 'விசயம்' எனப் பெயர்வந்திருக்கின்றது, இந்த 'விசயம்' என்னும் மொழிக்கு 'வெற்றி' என்றும், 'சருக்கரை' என்றும் தாற்பரியமாம். இதினால் அரசர்குலத்தவர்களுக்குள் வெற்றிக்கும், தித்திப்புப்பண்டமாகிய சர்க்கரைக்கும் ஏதுவாகிய தொழில்களிருந்துவந்தது தெரியவருகிறது.

மேலும், சர்க்கரைக்குச் 'சயம்' என்றும், 'அழகு' என்றும் பெயர்கள்வந்திருக்கின்றன. ஆகவே, வெற்றிக்கேதுவாகிய தொழிலுக்கு வேண்டிய மனத்திடாரிக்கம், ஆதிகாலத்தில் அமுதவுற்பத்தி யாரம்பிக்கிறதற்கும் வேண்டியதாயிருந்த காரணத்தையிட்டு, திவாகரநூலாசிரியர் 'விசயம்' என்னுஞ் சொல்லை மேற்படி சூத்திரத்தில் சிலேடையாக அமைத்திருக்கின்றாரெனத் துலங்குகின்றது. அது சிறந்த தொழிலானதினால் அதற்கு 'அழகு' எனவும் பெயர்வந்திருக்கிறது. அன்றியும், அரசர்குலத்தவர்களுக்குரிய ஐந்தாவதுதொழில் 'படைக்கலம்பயிற்றல்' ஆனதால், அரசர்குலத்தவர்களுக்குக் 'கருக்குப்பட்டயச்சான்றோர்' என்றொரு சிறந்த பட்டப்பெயர் உலக வழக்கில் நாளதும் வழங்கிவருகின்றது.

3. வணிகர்அறுதொழில். மேற்படிதொகுதி, 80-வது சூத்திரம்.

"வணிகராறுதொழி லோதல்வேட்ட
லீதலுழவு பசுக்காவல்வாணிகம்."

| | |
|---|---|
| (i) ஓதல், | (iv) ஏருழல், |
| (ii) வேட்டல், | (v) பசுக்காத்தல், |
| (iii) ஈதல், | (vi) பொருளீட்டல். |

4. வேளாண்மாந்தர் அறுதொழில். மேற்படிதொகுதி, 81-வது சூத்திரம்.

"வேளாளரறுதொழி லுழவுபசுக்காவ
றெள்ளிதின்வாணிபங் குயிலுவங்காருகவினை
யொள்ளியவிருபிறப்பாளர்க்கேவல்செயல்."

| | |
|---|---|
| (i) ஏருழல், | (iv) குயிலுவத்தொழிற்செய்தல், |
| (ii) பசுக்காத்தல், | (v) காருகவினைகளாக்கல், |
| (iii) பொருளீட்டல், | (vi) முதல்மூவர்க்கேவல்செய்தல். |

இந்த நான்குகுலத்தவர்களுக்கும் இங்ஙனங் கூறப்பட்டிருக்கின்ற தொழில்களைச் சமரசப்படுத்திப் பார்க்கும்போது,

**A.** அந்தணர், அரசர், வணிகர் இம்மூன்றுகுலத்தவர்களுக்கும் பொதுவான தொழில்கள் மூன்றும்:

(i) ஓதல், (ii) வேட்டல், (iii) ஈதல்.

மேற்படி மூன்றுதொழில்களும் மேற்படி மூன்றுகுலத்தவர்களுக்கும் பொதுவான தொழில்களானபோதிலும், பூர்வகாலத்தில் வேதநீதிசாஸ்திரங்களைத் தீர்க்கமுறக் கற்று அறிவில் தேறினவர்கள் முதலிருகுலத்தவர்களாம். முதற்குலத்தவர்கள் புரோகிதரானதால், அந்த அறிவு அவசியம் அவர்களுக்கு வேண்டியது. இரண்டாவது குலத்தவர்கள் அரசரானதால், ஆள்வினைத்திறம்நோக்கி அவர்களுக்கு இன்றியமையாதது அறிவாம். வைசியர்களோ தங்கள் சுயபிரயோசனம்நோக்கி நூல்கள் வாசிக்க இடம்பெற்றவர்கள். ஆயினும், அவர்கள் தனவிருத்தியின்பேரில் நாட்டமுற்றிருந்த பிரகாரம், அறிவு விருத்தியின்மேல் அதிக யிருப்புற்றிருந்திலர்.

**B.** செட்டிகளுக்குஞ் சூத்திரர்களுக்கும் பொதுவானதொழில்கள் மூன்றும்.

(i) ஏருழல், (ii) பசுக்காத்தல், (iii) பொருளீட்டல்.

மேற்படி மூன்றுதொழில்களும் மேற்படி இரண்டு குலத்த வர்களுக்கும் பொதுவான தொழில்களாயிருந்தபோதிலும், இந்த மூன்று தொழில்களில் 'ஏருழல், பசுக்காத்தல்' என்னும் இரண்டுதொழில்களுஞ் சூத்திரர்களுக்கு இன்றியமையாத தொழில்களாம்; வைசியர்களுக்கோ இணக்கங்கண்டு செய்துவரத்தக்க தொழில்களாகும். 'பொருளீட்டலாகிய தொழில்' வைசியர்களுக்கு இன்றியமையாத தொழிலாம்; சூத்திரர்களுக்கோ இணக்கங்கண்டு செய்துவரத்தக்க தொழிலாகும்.

**C.** *அந்தணர்க்கேயுரியதொழில்கள் மூன்றும்:*

(*i*) ஓதிவித்தல் (*ii*) வேட்பித்தல், (*iii*) ஏற்றல்.

**D.** *அரசருக்கேயுரியதொழில்கள் மூன்றும்:*

(*i*) உலகோம்பல், (*ii*) படைக்கலம்பயிற்றல், (*iii*) விசயஞ்செய்தல்.

**E.** வைசியருக்கேயுரியதொழில்களில்லை. இவர்களுக்குரிய ஆறுதொழில்களில், முதல் மூன்றுதொழில்கள் முதலிரு குலத்தவர்களுடைய தொழில்களுக்குச் சமரசமாகவும், பின் மூன்றுதொழில்கள் சூத்திரர்களுடைய முதல்மூன்றுதொழில்களுக்குச் சமரசமாகவுமிருக்கின்றன.

**F.** சூத்திரருக்கேயுரியதொழில்கள் மூன்றும்:

(*i*) குயிலுவத்தொழில் செய்தல், (*ii*) காருகவினைகளாக்கல், (*iii*) முதல்மூவர்க்கேவல்செய்தல்.

**G.** இந்த நான்குகுலத்தவர்களில் ஒவ்வொருகுலத்தவருக்கும் நாட்டில் சிறப்பெனவிளங்கியதொழில் அந்தந்தக்குலத்தவருக்குரிய ஆறுவதுதொழிலாம்.

(*i*) பார்ப்பனக்குலத்தவர்களுக்கு தியாகம் வாங்குகின்ற ஏற்றற்றொழிலாகிய ஆறுவதுதொழில் சிறந்ததொழிலாம். பார்ப்பனக்குலத்தவர்களுக்கு அது இகழ்ச்சியல்ல புகழ்ச்சியாம். இதனால் அவர்களுடைய இல்லற அனுபோகங்கள் சிறக்கின்றன. 'ஏற்பதிகழ்ச்சி' என ஒளவையார் கூறியிருப்பது பிறகுலத்தவர்களைச் சுட்டி என்றறிக.

(ii) அரசர்குலத்தவர்களுக்குப் புஜபலபராக்கிரமங்களால் பதினெண்ணாயுதவித்தைகளால், அமுதஉற்பத்தியால் விசயம்பெறுதலாகிய ஆறுவதுதொழில் சிறந்ததொழிலாம். இதுவே இந்தக்குலத்தவர்களுக்குக் கிரீடம்போலாகும்.

(iii) வணிகர்குலத்தவர்களுக்குத் திரவியசம்பாத்தியஞ் செய்கின்ற பொருளீட்டலாகிய ஆறுவதுதொழில் சிறந்த தொழிலாம். வாணிபத்தொழிலால் விளைகின்ற திரவிய சம்பாத்தியமே வணிகர்குலமகிமையாகும்.

(iv) சூத்திரகுலத்தவர்களுக்கு முதல் மூன்றுகுலத்தவர்களையடுத்து நின்று அவர்களுக்குத் தொண்டுசெய்துவருகின்ற ஏவல்செய்தலாகிய ஆறுவதுதொழில் சிறந்ததொழிலாம். முதல் மூன்றுகுலத்தவர்களுக்கிணங்க நடந்து அவர்களுக்கு மகிழ்ச்சிவரச்செய்தல் சூத்திரகுலத்து மகிமையாகும்.

வெற்றிவேற்கை.

"வேதியர்க்கழகு வேதமுமொழுக்கமும்,
மன்னவர்க்கழகு செங்கோன்முறைமை,
வைசியர்க்கழகு வளர்பொருளீட்டல்,
உழவர்க்கழகிங் குழுதூண்விரும்பல்."

ஆதி ஏற்பாட்டில் சூத்திரகுலத்தவர்களுக்குக் கல்வி அறிவுக்கேற்றதொழில் ஏற்படுத்தப்படவில்லை.*

தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், 82-வது சூத்திரம். சூத்திரகுலத்தவர்களைச்சுட்டி வருமாறு:

"வேந்துவிடுதொழிற் படையுங்கண்ணியு
மாய்ந்தனரென்ப வவர்பெறும்பொருளே."

---

* தமிழரசாட்சியொழிந்தபிறகு, வடுகராசாங்கம் தழைத்து வருகின்றகாலத்தில், சூத்திரகுலத்தவர்கள் தமிழ்ச்சத்திரியர்களுடைய தானத்தையபகரித்துக்கொண்டு, அவர்களுக்குரிய கல்விசாஸ்திரவறிவுகளில் விற்பனர்களாகி, தமிழ்ச்சத்திரியர்களுக்கேயுரிய 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயரை 'அறிவுடையவர்கள்' என்கிற கருத்தில் தங்கள் குலத்துக்குரிய கௌரவப்பட்டப்பெயராக்கிக்கொள்ளத் தலைப்பட்டார்கள்.

இதில், வேளாண்மாந்தர்கள் அரசர்களுக்குப் படை ஆயுதங்களும் பூமாலைகளும் தெரிந்து தொண்டுசெய்பவர்களெனக் கூறியிருக்கின்றது. இது பூர்வ வழக்கு. மேலும், தமிழரசர்கள் தங்களரசாட்சியின் காலத்தில் அந்தந்தக்குலத்தவர்கள் தத்தங்குலத்துக்கு விதிக்கப்பட்ட தொழில்வரம்புகள் கடந்துநடவாதபடிக்குக் கண்பார்த்துவந்தனர்.

திவாகரம், 12-வது தொகுதி, 92-வது சூத்திரம்.

அறுவகையுலகநடையின்பெயர்.

"அறநிலையறமு மறநிலையறமும்
அறநிலைப்பொருளு மறநிலைப்பொருளும்
அறநிலையின்பமு மறநிலையின்பமுமென
அறுவகைத்தே யுலகினடையே."

பூர்வ ஏற்பாட்டின்படிக்கு உலகநடையாகிய இராசரிகமுறை ஆறும். அவைவருமாறு:

(i) அறநிலையறம், (ii) அறநிலைப்பொருள்,
(iii) மறநிலையறம், (iv) மறநிலைப்பொருள்,
(v) அறநிலையின்பம், (vi) மறநிலையின்பம்.

இவற்றுள், அறநிலையறம் வருமாறு:

மேற்படி 12-வது தொகுதி, 93-வது சூத்திரம்.

அறநிலையறத்தின்வகை.

"வருணக்காப்பிற் பிறழாநெறிநிலை
பெருவற்பொருளாற் பேணும்பேற்றி
அறநிலையறமென் றறைந்தனர்புலவர்."

இந்தச்சூத்திரத்தில் 'அறநிலையறமானது நாடாளும் வேந்தனானவன் தன் நாட்டில் வாழ்கின்ற குடிகள் விதிக்கப்பட்ட அந்தந்தக்குலத்துக்குரிய தொழில்வரம்புகள் கடந்து நடவாதபடிக்குப் பாதுகாத்துவருதல் எனக் கூறியிருக்கின்றது. அங்கிலேய வித்துவானாகிய உவின்சிலோ ஆசிரியர் (Dr. Winslow) தமது அகராதியில் 'அறநிலையறம்' என்னும் தொடர்பதத்துக்குத்தாற்பரியமாக, "அறநிலையறம் is one of the six அரசியல்—the duty of a king to preserve his subjects from breaking the rules of the respective castes" என்று எழுதுகிறார்.

(*ii*) அரசர்குலத்தவர்களுக்குப் புஜபலபராக்கிரமங்களால் பதினெண்ணாயுதவித்தைகளால், அமுதஉற்பத்தியால் விசயம்பெறுதலாகிய ஆருவதுதொழில் சிறந்ததொழிலாம். இதுவே இந்தக்குலத்தவர்களுக்குக் கிரீடம்போலாகும்.

(*iii*) வணிகர்குலத்தவர்களுக்குத் திரவியசம்பாத்தியஞ் செய்கின்ற பொருளீட்டலாகிய ஆருவதுதொழில் சிறந்த தொழிலாம். வாணிபத்தொழிலால் விளைகின்ற திரவிய சம்பாத்தியமே வணிகர்குலமகிமையாகும்.

(*iv*) சூத்திரகுலத்தவர்களுக்கு முதல் மூன்றுகுலத்தவர்களையடுத்து நின்று அவர்களுக்குத் தொண்டுசெய்துவருகின்ற ஏவல்செய்தலாகிய ஆருவதுதொழில் சிறந்ததொழிலாம். முதல் மூன்றுகுலத்தவர்களுக்கிணங்க நடந்து அவர்களுக்கு மகிழ்ச்சிவரச்செய்தல் சூத்திரகுலத்து மகிமையாகும்.

வெற்றிவேற்கை.

" வேதியர்க்கழகு வேதமுமொழுக்கமும்,
மன்னவர்க்கழகு செங்கோன்முறைமை,
வைசியர்க்கழகு வளர்பொருளீட்டல்,
உழவர்க்கழகிங் குழுதூண்விரும்பல்."

ஆதி ஏற்பாட்டில் சூத்திரகுலத்தவர்களுக்குக் கல்வி அறிவுக்கேற்றதொழில் ஏற்படுத்தப்படவில்லை.*

தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், 82-வது சூத்திரம். சூத்திரகுலத்தவர்களைச்சுட்டி வருமாறு :

" வேந்துவிடுதொழிற் படையுங்கண்ணியு
மாய்ந்தனரென்ப வவர்பெறும்பொருளே."

* தமிழரசாட்சியொழிந்தபிறகு, வடகராசாங்கம் தழைத்து வருகின்றகாலத்தில், சூத்திரகுலத்தவர்கள் தமிழ்ச்சத்திரியர்களுடைய தானத்தையபகரித்துக்கொண்டு, அவர்களுக்குரிய கல்விசாஸ்திரவறிவுகளில் விற்பனர்களாகி, தமிழ்ச்சத்திரியர்களுக்கேயுரிய 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயரை 'அறிவுடையவர்கள்' என்கிற கருத்தில் தங்கள் குலத்துக்குரிய கௌரவப்பட்டப்பெயராக்கிக்கொள்ளத் தலைப்பட்டார்கள்.

இதில், வேளாண்மாந்தர்கள் அரசர்களுக்குப் படை ஆயுதங்களும் பூமாலைகளும் தெரிந்து தொண்டுசெய்பவர்களெனக் கூறியிருக்கின்றது. இது பூர்வ வழக்கு. மேலும், தமிழரசர்கள் தங்களரசாட்சியின் காலத்தில் அந்தந்தக்குலத்தவர்கள் தத்தங்குலத்துக்கு விதிக்கப்பட்ட தொழில்வரம்புகள் கடந்துநடவாதபடிக்குக் கண்பார்த்துவந்தனர்.

திவாகரம், 12-வது தொகுதி, 92-வது சூத்திரம்.

அறுவகையுலகநடையின்பெயர்.

"அறநிலையறமு மறநிலையறமும்
அறநிலைப்பொருளு மறநிலைப்பொருளும்
அறநிலையின்பமு மறநிலையின்பமுமென
அறுவகைத்தே யுலகினடையே."

பூர்வ ஏற்பாட்டின்படிக்கு உலகநடையாகிய இராசரிகமுறை ஆறும். அவைவருமாறு:

(i) அறநிலையறம், (ii) அறநிலைப்பொருள்,
(iii) மறநிலையறம், (iv) மறநிலைப்பொருள்,
(v) அறநிலையின்பம், (vi) மறநிலையின்பம்.

இவற்றுள், அறநிலையறம் வருமாறு:

மேற்படி 12-வது தொகுதி, 93-வது சூத்திரம்.

அறநிலையறத்தின்வகை.

"வருணக்காப்பிற் பிறழாநெறிநிலை
பெருவற்பொருளாற் பேணும்பேற்றி
அறநிலையறமென் றறைந்தனர்புலவர்."

இந்தச்சூத்திரத்தில் 'அறநிலையறமானது நாடாளும் வேந்தனானவன் தன் நாட்டில் வாழ்கின்ற குடிகள் விதிக்கப்பட்ட அந்தந்தக்குலத்துக்குரிய தொழில்வரம்புகள் கடந்து நடவாதபடிக்குப் பாதுகாத்துவருதல் எனக் கூறியிருக்கின்றது. அங்கிலேய வித்துவானாகிய உவின்சிலோ ஆசிரியர் (Dr. Winslow) தமது அகராதியில் 'அறநிலையறம்' என்னும் தொடர்பதத்துக்குத்தாற்பரியமாக, "அறநிலையறம் is one of the six அரசியல்—the duty of a king to preserve his subjects from breaking the rules of the respective castes" என்று எழுதுகிறார்.

ஆதிகாலத்தில் சூத்திரகுலத்தவர்கள் தங்கள் குலத்துக்கு விதிக்கப்பட்ட அறுதொழில்வரம்பு கடந்துநடவாமல் அரசனாணைக்கு அமைந்து நடக்கவேண்டியதாயிருந்தமையால் கல்வியறிவுபெறுதற்கு அயோக்கியர்களாயினர். ஆகவே தங்கள் குலத்துக்குரித்தானதென்று இக்காலத்திற் கொண்டாடிவருகின்ற 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் அக்காலத்தில் அவர்கள் குலத்திற்கு ஏற்குமா? அக்காலத்தில் தங்களைச் 'சான்றோர்' என்று சொல்லத்துணிந்திருப்பார்களேயாயின், அவர்கள் நகைப்புப்பொருளாவதுமன்றி அரசனுக்கிணைக்கு முள்ளாவார்களல்லவா? இப்போது அங்கிலேயதுரைத்தனத்தில், அங்கிலேய அரசராணைப்பிரகாரம், B. A., M. A. முதலான கல்விக்கௌரவப்பட்டப்பெயர்கள் தரிப்பிக்கப்பட்டு வருகின்றன. இப்படியிருக்க, எவனுவனொருவன் அரசர்சாசனப்பட்டோலை (Diploma) இன்றித்தன்மனோரதப்படிக்கு B. A., M. A. முதலான கல்விக்கௌரவப்பட்டப்பெயர்களிலொன்றைப்பூண்டுகொண்டு திரியத்துணிவானேயாயின், அவன் எவ்விடத்தினும் நகைப்புப்பொருளாவதுமன்றி, அரசனுக்கிணைக்கு முள்ளாகமாட்டானோ? இப்படியிருப்பதால் ஆதித்தமிழ்நூல்களை ஆராய்பவர்கள் பிற்காலத்தில் அரசாட்சி மாறுதல்களில் நேரிட்டிருக்கிற குலவரம்புகடத்தல், அறிவுயர்ச்சி, அறிவுத்தாழ்ச்சிகளை நோக்கித் தாற்பரியங்கள்செய்யாமல், பூர்வ ஏற்பாடுகளையுங், குலவரம்புமுதலானவற்றையும் நினைத்து அவைகளுக்கு ஏற்கத்தாற்பரியஞ்செய்யவேண்டும். ஆனதால் 'சான்றோர்' என்னும் கௌரவப்பட்ட மொழியுடன் ஒருபொருள்கொண்ட பதங்கள் பூர்வதமிழரசர்குலத்தவர்களுக்குரிய கௌரவப்பட்டப்பெயகர்ளாம்.

இனி இந்தப்பிரகரணத்தின் இரண்டாவது விஷயத்தை எடுத்து விவரித்துரைப்போம்.

II. இந்த 11-வது சூத்திரத்தின் உட்பொருள்நோக்கி, இந்த ஒருபொருட்பெயர்களின் இயற்கைத்தாற்பரியமின்னதென்றும், இந்தச்சூத்திரத்தில் வந்திருக்கிற ஒருபொருட்பெயர்கள் பூர்வஅரசர்குலத்தவர்களுக்கிடப்பட்டு வழங்கிவந்திருப்பதற்கு நூற்சாட்சிகளின்னவைகளென்றும் இங்ஙனம் விபரித்துக்காட்டுவோம்.

## முதலாவது.

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரத்திற் கூறியிருக்கிறபிரகாரம், 'சான்றோர்' என்னுங் கௌரவப் பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்ட பெயர்முடிச்சுகளை அவிழ்த்து விரித்துக்காட்டுவோம்.

### 11-வது சூத்திரம்.

### அறிவுடையோர் பெயர்.

"சான்றோர்மிக்கோர் நல்லவர்மேலவ
ராய்ந்தோருயர்ந்தோ ராரியருலகென
வாய்ந்தவான்றோ ரறிவுடையோரே."

இதில் அரசர்குலக்கௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்டபெயர்கள்பத்தெனக் கூறியிருக்கின்றது. அவை வருமாறு:

1. அறிவுடையோர்,
2. சான்றோர்,
3. மிக்கோர்,
4. நல்லவர்,
5. மேலவர்,
6. ஆய்ந்தோர்,
7. உயர்ந்தோர்,
8. ஆரியர்,
9. உலகு,
10. ஆன்றோர்.

இந்தப்பத்துப்பெயர்களில் ஒவ்வொருபெயரும், ஒருபொருட்பலர்பால் விகுதிகளாகிய 'அர், ஆர், ஓர்' என்னும் விகுதிகள்பெற்று, மும்மூன்று ரூபபேதமாகி, ஒருபொருள்கொண்டு உலகவழக்கிலும், நூல்வழக்கிலும் வந்துவழங்குகின்றது. அதற்கு விபரம் வருமாறு:

### 1. அறிவுடையோர்.

இந்தப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால்விகுதிகள்கொடுக்க, 'அறிவுடையர், அறிவுடையார், அறிவுடையோர்' என மூன்றுபெயர்களாகவிரியும். இம்மூன்று பெயர்களும் விகுதிகளால் விகாரரூபம் பெற்றபோதினும், அந்த மூன்றுபெயருக்கும் பொருள் ஒன்றேயாம். 'அறிவுடையார்' என்னப்படுகின்றவர்கள்யாரோ அவர்களே 'அறிவுடையரும், அறிவுடையோரும்' ஆம். இதை எவரும் ஒப்புகின்றனர்.

## 2. சான்றோர்.

இந்தப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால் விகுதிகள்கொடுக்க, 'சான்றவர், சான்றார், சான்றோர்' என மூன்றுபெயர்களாக விரியும். இம்மூன்றுபெயர்களும் விகுதிகளால் விகாரரூபம் பெற்றபோதிலும், அந்த மூன்றுபெயருக்கும் பொருள் ஒன்றேயாம். 'சான்றார்' என்னப்படுகின்றவர்கள் யாரோ அவர்களே 'சான்றவரும், சான்றோரும்' ஆம். இதை ஒப்போம் எனக் கூறுபவர்கள் பலருளர். அதை உய்த்துணர்வோமாக.

(*i*) பார்ப்பனக்குலத்தவர்களைப்பார்த்து நீங்கள் 'சான்றாரா' என வினவினால், நாங்கள் சான்றாரல்ல என்பார்கள். அவர்கள் 'சான்றார்' அல்லவேயாயின், அவர்கள் சான்றவருமல்ல, சான்றோருமல்ல என்றறியக்கடவர்கள். அன்றியும், மேலேகூறிக் காட்டியிருக்கிறபிரகாரம், 1-வது, 8-வது சூத்திரங்களில் பார்ப்பனக்குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' என்னும் பெயர் வரவேயில்லை. ஆகவே, பார்ப்பனக்குலத்தவர்களுக்குச் 'சான்றவர், சான்றோர்' என்னும் பெயர்களும் ஏற்கவேமாட்டாது.

(*ii*) செட்டிகுலத்தவர்களைப்பார்த்து, நீங்கள் 'சான்றாரா' என வினவினால், நாங்கள் சான்றாரல்ல என்பார்கள். அவர்கள் 'சான்றார்' அல்லவேயாயின், அவர்கள் சான்றவருமல்ல, சான்றோருமல்ல என்றறியக்கடவர்கள். அன்றியும், மேலே உரைத்திருக்கிறபிரகாரம், 32-வது சூத்திரத்தில் செட்டிகுலத்தவர்களுக்குச் 'சான்றோர்' என்னும் பெயர் வரவேயில்லை. ஆனதால், செட்டிகுலத்தவர்களுக்குச் 'சான்றவர், சான்றோர்' என்னும்பெயர்களும் ஏற்கவேமாட்டாது.

(*iii*) சூத்திரகுலத்தவர்களைப்பார்த்து, நீங்கள் 'சான்றாரா' என வினவினால், நாங்கள் சான்றாரல்ல என்பார்கள். அவர்கள் 'சான்றார்' அல்லவேயாயின், அவர்கள் சான்றவருமல்ல, சான்றோருமல்ல என்றறியக்கடவர்கள். அன்றியும், மேலே சொல்லியிருக்கிற பிரகாரம், 33-வது சூத்திரத்தில்

சூத்திரகுலத்தவர்களுக்குச் ‘ சான்றோர்’ என்னும் பெயர் வர வேயில்லை. ஆகவே, சூத்திரகுலத்தவர்களுக்குச் ‘ சான்றவர், சான்றோர்’ என்னும் பெயர்களும் ஏற்கவேமாட்டாது. இதுநிற்க,

இக்காலத்தில், ‘ சான்றார்’ என்னும் பெயர் ‘ சாணார்’ என மரூஉமொழியாகி, வழங்கிவருகின்றமையால், மேலே ‘ சான்றார்’ என்னும் பெயர்நின்றதானத்தில், ‘சாணார்’ என்னும் மரூஉமொழியைவைத்து, மேற்படி மூப்பாற்குலத்தவர்களிடத்திலும் முன்போல வினவிப்பார்ப்போம்.

(*i*) பார்ப்பனக்குலத்தவர்களைப்பார்த்து, நீங்கள் ‘ சாணரா’ என வினவினால், நாங்கள் சாணாரல்ல என்பார்கள். அவர்கள் ‘ சாணார்’ அல்லவேயாயின், அவர்கள் ‘ சான்றாரும் அல்லவாம். அவர்கள் ‘ சான்றார்’ அல்லவேயாயின், அவர்கள் சான்றவருமல்ல, சான்றோருமல்ல என்றறியக்கடவர்கள். ஆனதால், பார்ப்பனக்குலத்தவர்களுக்குச் ‘ சான்றவர், சான்றோர்’ என்னும் பெயர்களும் ஏற்கவேமாட்டாது.

(*ii*) செட்டிகுலத்தவர்களைப்பார்த்து, நீங்கள் ‘ சாணரா’ எனவினவினால், நாங்கள் ‘சாணார்’ அல்ல என்பார்கள். அவர்கள் ‘ சாணார்’ அல்லவேயாயின், அவர்கள் ‘ சான்றாரும்’ அல்லவாம். அவர்கள் ‘ சான்றார்’ அல்லவேயாயின், அவர்கள் சான்றவருமல்ல, சான்றோருமல்ல என்றறியக்கடவர்கள். ஆகவே, செட்டிகுலத்தவர்களுக்குச் ‘ சான்றவர், சான்றோர்’ என்னும் பெயர்களும் ஏற்கவேமாட்டாது.

(*iii*) சூத்திரகுலத்தவர்களைப்பார்த்து, நீங்கள் ‘ சாணரா’ என வினவினால், நாங்கள் ‘ சாணார்’ அல்ல என்பார்கள். அவர்கள் ‘ சாணார்’ அல்லவேயாயின், அவர்கள் ‘ சான்றாரும்’ அல்லவாம். அவர்கள் ‘ சான்றார்’ அல்லவேயாயின், அவர்கள் சான்றவருமல்ல, சான்றோருமல்ல என்றறியக்கடவார்கள். ஆனதால், சூத்திரகுலத்தவர்களுக்குச் ‘ சான்றவர், சான்றோர்’ என்னும் பெயர்களும் ஏற்கவேமாட்டாது.

இந்தப்பிரகாரம், மேற்படி மூன்றுகுலத்தவர்களுக்கும்

'சான்றவர், சான்ருர், சான்ரேர்' என்னும் பெயர்கள் ஏற்கா விடின், வேறெந்தக்குலத்தவர்களுக்கு இந்த மூன்று பெயர்களும் ஏற்கும் என உசாவிப்பார்க்கவேண்டும். இம்மூன்று கௌரவப்பட்டப்பெயர்களும் எங்களுக்குத்தான் என்று நிற்குங்குலத்தவர்கள் எவர்களோ அவர்களே இந்தக்கௌரவப்பட்டப்பெயர்களுக்கு உரிமைப்பாத்தியமுடையவர்களாம். மேலே பார்ப்பனக்குலத்தவர்களிடத்திலும், செட்டிகுலத்தவர்களிடத்திலும், சூத்திரகுலத்தவர்களிடத்திலும் வினவியானபடியால், இன்னும் வினவிப்பார்ப்பதற்கு மீதியாயிருப்பது அரசர்குலமாகிய சத்திரியகுலம் ஒன்றேயாம். ஆனதால் அவர்களிடத்தில் இனிவினவி அறியவேண்டும்.

**A.** பூர்வகாலமுதல் தமிழ்நாடெங்ஙனும், முக்கியமாகத் தென்பாண்டிநாட்டினும், ஒருபட்சமாக யாழ்ப்பாணநாட்டினும் நிலத்தோடு நிலமாக ஒட்டியிருந்து வருகிற நாடாள்வார் குலத்தவர்களாகிய நாடாக்களைப்பார்த்து, நீங்கள் 'சான்ருரா' எனவினவினல், நாங்கள் 'சான்ருர்தான்' என்கிருர்கள். அவர்கள் சான்ருரேயாயின், சான்றவரும் அவர்கள்தான், சான்ரேரும் அவர்கள்தான் என்பதற்கு ஐயமில்லை. அன்றியும், மேலே கூறியபடியே 11-வது சூத்திரத்தில் பூர்வ தமிழரசர்குலத்தவர்களாகிய சத்திரியகுலத்தவர்களுக்குச் 'சான்ரேர்' எனவும் பெயர்வந்திருக்கிறது. ஆனதால், நாளதும் 'சான்ருர்' எனப் பெயர்பெற்றிருக்கின்ற குலத்தவர்களே பூர்வதமிழரசர்குலத்தவர்களாகிய சத்திரியகுலத்தவர்களாம். ஆகவே, அக்குலத்தவர்களுக்கே 'சான்றவர், சான்ருர், சான்ரேர்' என்னும் பெயர்கள் ஏற்கும்.

**B.** 'சான்ருர்' என்னும் பெயர்வந்ததானத்தில் 'சாணர்' என்னும் மரூஉமொழியைவைத்து மேற்படி காணியாட்சிக்காரர்களாகிய நாடாள்வார்குலத்து நாடாக்களைப்பார்த்து நீங்கள் 'சாணரா' என வினவினல், நாங்கள் 'சாணர்' தான் என்கிருர்கள். அவர்கள் சாணரேயாயின், சான்ருரும் அவர்கள்தான், அவர்கள் சான்ருரேயாயின், சான்றவரும் அவர்கள்தான், சான்ரேரும் அவர்கள்தான். ஆனதால், மேற்படி

சாணுர்குலத்தவர்களுக்கே 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் பெயர்கள் ஏற்கும். ஆனபடியினலே, மேற்படி சான்றவர், சான்றார்,* சான்றோர்' எனக் கௌரவப்பட்டப் பெயர்பெற்ற குலத்தவர்களே பூர்வதமிழரசர் பரம்பரையி லுதித்த தமிழ்ச்சத்திரியகுலத்தவர்களாம்.

அன்றியும், மேற்படி 'சான்றவர், சான்றார், சான்றோர்' என் னும்பெயர்கள் பூர்வத்தில் அரசர்குலத்தவர்களாகிய சத்திரிய குலத்தவர்களுக்குஞ், சத்திரியகுலரிஷிகளுக்கும் நூல்களில் வந்துவழங்கியிருப்பதற்கு இனிஇந்தப்பிரகரணத்தின் பின்பா கத்தில் மேற்கோள்கள் எடுத்துரைப்போம்.

இப்படியிருப்பதால், சூத்திரகுலத்தவர்கள் முதலான பிற குலத்தவர்கள் அரசர்குலக்கௌரவப்பட்டப்பெயர்களில் 'சா ன்றவர், சான்றோர்' என்னும் இரண்டுபெயர்களையும் உபா யதந்திரமாக அபகரித்துக்கொண்டிருக்கின்றனர். இவ்வாறு செய்யுதற்கு அந்நியமொழிக்காரர்களாகிய வடுகர் துலுக்கர் களுடைய அரசாட்சி அவர்களுக்கு ஒதுக்கிடமாயிற்று. வடுக ராசாங்கத்தார் தமிழை 'அத்துவானக்காடு' என்று சொல்லி யிகழ்ந்துவந்ததால் தமிழ்ப்பாஷை விருத்தியைக்குறித்துக் கவலையற்றவர்களாயினர்.

சூத்திரகுலத்தவர்களாகிய பிறகுலத்தவர்கள் 'சான்றவர், சான்றோர்' என்னும் பட்டப்பெயர்களைப் பூண்டுகொள்ள வேண்டுமென அபேட்சைகொள்வார்களேயாயின், அந்த இர ண்டு பெயருக்கும் ஊடேநின்று ஒருபொருளில் வருகின்ற 'சான்றார்' என்னும் பெயரையும், 'சாணுர்' என்னும் மரூஉ மொழிப்பெயரையும் பூண்டுகொள்ள அபேட்சையுடையவர் களாகவேண்டும். இந்த இரண்டுபெயரும் வேண்டாமென் றால், அந்த இரண்டுபேரும் அவர்களுக்கு ஏற்காவாம்.

அன்றியும், மேலே நாம் இரண்டாவது பிரகரணத்தில் விப ரப்படக் காண்பித்திருக்கிறபிரகாரம், 'சான்றவர், சான்றார்,*

---

* 'சாணுர்' மரூஉ.

சான்றோர்' எனக் கௌரவப்பட்டப்பெயர்கள்பெற்ற குலத்து முன்னவர்கள் அரசுரிமைபெற்று வாழ்ந்திருந்தகாலத்தில், குலத்தாலுங், குணத்தாலும், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், அறிவாலும், மிகுமேன்மைபெற்று விளங்கியதால், இந்தப்பெயர்கள் அவர்கள் குலத்துக்கேற்குங் கௌரவப்பட்டப்பெயர்களாயின. இக்காலத்திலோ அக்குலத்தவர்கள் அரசிழந்த காரணத்தையிட்டும், எதிரிகளின் ஒடுக்கத்தையிட்டும், அறிவுமுதலான சில இலக்ஷணங்களில் தாழ்ச்சிபெற்றிருந்தபோதிலும், அக்குலத்தவர்களுக்கு அவர்களுடைய முன்னவர்கள் பூண்டிருந்த சிறந்த கௌரவப்பட்டப்பெயர்கள் ஏற்காதென்று எவனுவது சொல்லத்துணிவானு? துணிவானேயாயின், பூர்வ இதிகாசநூல்களிலிருந்து இதுபோலொத்த பலதிருட்டாந்தங்கள் எடுத்துரைக்கலாம். ஆயினும், இங்ஙனம் அவசியமில்லாமையால் நிறுத்துதல் செய்கிறோம்.

பூர்வகாலத்தில் மேற்படி மேன்மைகளுக்கு உரிமையற்றவர்களாயிருந்த சூத்திரகுலத்தவர்கள் அந்நியமொழிக்காரரின் அரசாட்சிகாலத்தில் அவர்களைச் சார்ந்துநின்று, உத்தியோக மேன்மைகள்பெற்று, அறிவுப்பெட்டகத்தை அபகரித்துத் தங்கள் வசப்படுத்திக்கொண்டதினிமித்தம், மற்றொருகுலத்தவர்களுக்குரிய கௌரவப்பட்டப்பெயர்கள் இந்தச் சூத்திர குலத்தவர்களுக்கு ஏற்குமா? ஒருபோதும் ஏற்கவேமாட்டாது. இப்படியிருக்க, 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் மூன்றுபெயர்களுக்கும் பொருள் ஒன்றுனமையால், 'சான்றார்' எனப்படுகின்றவர்கள் யாரோ அவர்களே சான்றவருஞ் சான்றோருமாம். ஆனதால், இதை எவரும் ஒப்பவேண்டும்.

### 3. மிக்கோர்.

இந்தப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால் விகுதிகள் கொடுக்க, 'மிக்கர், மிக்கார், மிக்கோர்' என மூன்றுபெயர்களாக விரியும். இம்மூன்றுமொழிகளும் விகுதிகளால் விகாரரூபம் பெற்றபோதிலும், அந்த மூன்றுபெயருக்கும் பொருள் ஒன்றேயாம். 'மிக்கார்' என்னப்படுகின்றவர்கள்

யாரோ அவர்களே மிக்கவரும் மிக்கோருமாம். இதை எவரும் ஒப்புகின்றனர்.

4. நல்லவர்.

இப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால் விகுதிகள் கொடுக்க, 'நல்லர், நல்லார், நல்லோர்' என மூன்று மொழிகளாகவிரியும். இம்மூன்றுசொற்களும் விகுதிகளால் விகாரரூபம் பெற்றபோதிலும், அந்த மூன்றுபெயருக்கும் பொருள் ஒன்றேயாம். 'நல்லார்' என்னப்படுகின்றவர்கள் யாரோ அவர்களே நல்லவரும், நல்லோருமாம். இதை எவரும் ஒப்புகின்றனர்.

5. மேலவர்.

இந்தப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால்விகுதிகள் கொடுக்க, 'மேலர், மேலார், மேலோர்' என மூன்று சொற்களாக விரியும். இம்மூன்றுபெயர்களும் விகுதிகளால் விகாரரூபம்பெற்றபோதிலும், அந்த மூன்றுமொழிகளுக்கும் பொருள் ஒன்றேயாம். 'மேலார்' என்னப்படுகிறவர்கள் யாரோ அவர்களே மேலவரும், மேலோருமாம். இதை எவரும் ஒப்புகின்றனர்.

6. ஆய்ந்தோர்.

இப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால்விகுதிகள் கொடுக்க, 'ஆய்ந்தவர், ஆய்ந்தார், ஆய்ந்தோர்' என மூன்று மொழிகளாக விரியும். இம்மூன்றுபெயர்களும் விகுதிகளால் விகாரரூபம் பெற்றபோதிலும், அந்த மூன்றுபதங்களுக்கும் பொருள் ஒன்றேயாம். 'ஆய்ந்தார்' என்னப்படுகின்றவர்கள் யாரோ அவர்களே ஆய்ந்தவரும், ஆய்ந்தோருமாம். இதை எவரும் ஒப்புகின்றனர்.

7. உயர்ந்தோர்.

இந்தப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால்விகுதிகள்கொடுக்க, 'உயர்ந்தவர், உயர்ந்தார், உயர்ந்தோர்' என மூன்றுபதங்களாக விரியும். இம்மூன்றுபெயர்களும் விகுதிக

ளால் விகாரரூபம்பெற்றபோதிலும், அந்த மூன்றுசொற் களுக்கும் பொருள் ஒன்றேயாம். 'உயர்ந்தார்' என்னப்படுகிற வர்கள்யாரோ அவர்களே உயர்ந்தவரும், உயர்ந்தோருமாம். இதை எவரும் ஒப்புகின்றனர்.

8. ஆரியர்.

இப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால்விகுதி கள்கொடுக்க, 'ஆரியர், ஆரியார், ஆரியோர்' என மூன்றுமொழி களாகவிரியும். இம்மூன்றுசொற்களும் விகுதிகளால் விகார ரூபம்பெற்றபோதிலும், அந்த மூன்றுபெயருக்கும் பொருள் ஒன்றேயாம். 'ஆரியார்' என்னப்படுகின்றவர்கள்யாரோ அவர் களே ஆரியரும், ஆரியோருமாம். இதை எவரும் ஒப்புகின்ற னர்.

9. உலகு=உலகோர்.

'உலகு' என்னும்பதம் இங்ஙனம் இடவாகுபெயரானமை யால், 'உலகோர்' எனப் பொருள்கொண்டு நிற்கின்றது.

உலகோர்.

இந்தப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால்விகுதி கள்கொடுக்க, 'உலகர், உலகார், உலகோர்' என மூன்றுபெயர் களாகவிரியும். இம்மூன்றுபதங்களும் விகுதிகளால் விகார ரூபம் பெற்றபோதிலும், அந்த மூன்றுபெயருக்கும் பொருள் ஒன்றேயாம். 'உலகார்' என்னப்படுகின்றவர்கள்யாரோ அவர் களே உலகரும், உலகோருமாம். இதை எவரும் ஒப்புகின்ற னர்.

10. ஆன்றோர்.

இப்பெயருக்கு 'அர், ஆர், ஓர்' என்னும் பலர்பால் விகுதி கள்கொடுக்க, 'ஆன்றவர், ஆன்றார், ஆன்றோர்' என மூன்று பெயர்களாக விரியும். இம்மூன்றுசொற்களும் விகுதிகளால் விகாரரூபம் பெற்றபோதிலும், அந்த மூன்றுபெயருக்கும் பொருள் ஒன்றேயாம். 'ஆன்றார்' என்னப்படுகின்றவர்கள் யாரோ அவர்களே ஆன்றவரும், ஆன்றோருமாம். இதை எவ ரும் ஒப்புகின்றனர்.

இதுவரையினும் 'சான்றோர்' என்னுந் தமிழ்ச்சத்திரியகுலக் கௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்ட பெயர்முடிச்சுகளை அவிழ்த்து உற்றுராய்ந்துபார்த்தோம். இவ்வாறு அவிழ்த்து விரித்துப்பார்த்த பெயர்முடிச்சுகளை இங்ஙனம் ஒருங்கேதிரட்டிப் பார்வையிடுவோமாக.

1. 'அறிவுடையர், அறிவுடையார், அறிவுடையோர்'—இவைமூன்றும் ஒருபொருட்பெயர்கள்.
2. 'மிக்கர், மிக்கார், மிக்கோர்'—இவைமூன்றும் ஒருபொருட்பெயர்கள்.
3. 'நல்லர், நல்லார், நல்லோர்'—இவைமூன்றும் ஒருபொருட்பெயர்கள்.
4. 'மேலர், மேலார், மேலோர்'—இவைமூன்றும் ஒருபொருட்பெயர்கள்.
5. 'ஆய்ந்தவர், ஆய்ந்தார், ஆய்ந்தோர்'—இவைமூன்றும் ஒருபொருட்பெயர்கள்.
6. 'உயர்ந்தவர், உயர்ந்தார், உயர்ந்தோர்'—இவைமூன்றும் ஒருபொருட்பெயர்கள்.
7. 'ஆரியர், ஆரியார், ஆரியோர்'—இவைமூன்றும் ஒருபொருட்பெயர்கள்.
8. 'உலகர், உலகார், உலகோர்'—இவைமூன்றும் ஒருபொருட்பெயர்கள்.
9. 'ஆன்றவர், ஆன்றார், ஆன்றோர்'—இவைமூன்றும் ஒருபொருட்பெயர்கள்.

'சான்றோர்' என்னும்பெயருடன் ஒருபொருள்கொண்டு வருகின்ற இந்த ஒன்பது பெயர்களில், ஒவ்வொருபெயரும், மும்மூன்றுபெயராக விகுதிகளால் விகாரரூபம்பெற்று ஒருபொருளில்வர, இந்தப்பெயர்களுக்கெல்லாந் தலைமைப்பெயராக நிற்கின்ற 'சான்றோர்' என்னும்பெயரும் மூன்றுபதங்களாக விகுதிகளால் விகாரரூபம்பெற்று ஒருபொருளில்வர மாட்டாதென்று சொல்லத்துணிபவன் எவனுவதொருவன்

ளனே? அவ்வாறு கூறத்துணிதல் மோடனத்தனமென்று புத்திமான்கள் சொல்வர் என்பதற்குச்சந்தேகமில்லை. ஆகவே,

10. 'சான்றவர், சான்றார், சான்றோர்'—இம்மூன்றுபெயர்களும் மற்றை ஒன்பது பெயர்களுக்கொப்பந்தம் ஒருபொருட்பெயர்களேயாம்.

அன்றியும், சேந்தன் எனப்பெயர்கொண்ட திவாகரநூலாசிரியன் காவிரிநதித்தீரத்திலிருந்த அம்பன் நாடாண்டுவந்த ஒரு சிற்றரசன், தமிழரசர்குலத்திலுதித்த சத்திரியகுலச்சானறோன். ஆனதால், தன்குலத்துக்குரிய கௌரவப்பட்டப்பெயராகிய 'சான்றோர்' என்னும்பெயரை ஒருமுடிச்சுப்பெயராக்கி, அரசர்குலப்பெயர்களுக்கெல்லாந் தலைப்பில் அமைத்துவைத்திருக்கின்றனன். எக்குலத்தவர்களாயினும் பிற்காலத்தில் இந்தப்பெயரைத் தங்கள்குலத்துக்குரியதென்று பூண்டுகொண்டு திரியத்தலைப்பட்டபோதிலும், 'சான்றோர்' என்னும் இந்தப்பெயர்முடிச்சை அவிழ்த்துப்பார்ப்போருக்கு இப்பெயர் பிறகுலத்தவர்களுக்கு உரியதாகாதென்றும், அரசர்குலத்தவர்களுக்கே உரியதாகுமென்றும், ஏற்றகாலத்தில் உண்மைப்பொருள் விளங்கும்பொருட்டு, தேங்காயின் சதைப்பற்றானது சிரட்டைக்குள் மறைத்துவைக்கப்பட்டிருக்கின்ற பிரகாரம் மெய்க்கருத்தை அந்தப்பெயர் முடிச்சினுள் மறைத்துவைத்தனன். தேங்காயை உடைத்துப்பார்ப்போருக்கு அதினுள்ளிருக்கின்ற சதைப்பற்றாகிய தித்திப்புப்பண்டம் வெளியாகின்றபடியே, மேற்படி 'சான்றோர்' என்னும் பெயரை உடைத்துப் பார்ப்போருக்கும் அதனுள் மறைந்திருக்கின்ற 'சான்றார்' என்னும் பெயர்வெளியாகி, 'சான்றோர்' என்னும் பெயர் இன்னகுலத்தவர்களுக்கு உரியதென்று தங்கப்பிரகாசம்போல துலங்குகிறது.

'சான்றோர்' என்னும் இந்தக்கௌரவப்பட்டப்பெயர் எங்களுக்கெங்களுக்கென்று இக்காலத்தில் வாதாடிக்கொண்டு நிற்பவர்கள் பார்ப்பனக்குலத்தவர்களுஞ் சூத்திரகுலத்தவர்களுமானமையால், அந்தவழக்கை இங்ஙனஞ் சற்றுதுலக்கிப் பார்வையிடுவோமாக.

(i) பார்ப்பனக்குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் வேண்டியதேயில்லை. மேலே இந்தச் 'சான்றோர்' என்னும் பட்டப்பெயர் பார்ப்பனக்குலத்தவர்களுக்கு ஏற்காதெனக் காண்பித்திருக்கிறோம். இனி இங்ஙனம் இந்தச் 'சான்றோர்' என்னும் பட்டப்பெயர் பார்ப்பனக்குலத்தவர்களுக்கு வேண்டுவதில்லையென எண்பிப்போம்.

மேலே நாம் எடுத்துரைத்திருக்கிறபிரகாரம், அரசர்குலத்தவர்களுக்குக் குலத்தாலும், குணத்தாலும், கொடையாலும் புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், அறிவாலும், 'சான்றோர்' என்னும் இந்தக் கௌரவப்பட்டப்பெயர் கிடைத்திருக்கிறது. பார்ப்பனக்குலத்தவர்களுக்கோ புஜபலம், பாராளுரிமை, கேட்டதளிக்குந்தகைமை இல்லாமையால், 'சான்றோர்' என்னும் பட்டப்பெயர் அக்குலத்தவர்களுக்கு ஏற்காது. மேலும், பார்ப்பனக்குலத்தவர்களுக்குக் குலத்தாலும், குணத்தாலும், தபோபலத்தாலும், அறிவாலும் சிறந்தமேன்மை யுண்டாயிருக்கின்றமையான், இந்த நான்கு இலக்ஷணங்களுக்கும் ஏற்ற சிறந்த பட்டப்பெயர்கள், மேலே நாம் எடுத்துக்கூறிக் காட்டியிருக்கிற 1-வது, 8-வது சூத்திரங்களில் கண்டிருக்கின்றன. அவைகளை இங்ஙனம் மீண்டும் எடுத்தெழுதிக்காட்டுவோம்.

மேற்படி இரண்டு திவாகரச்சூத்திரங்களிலும் பார்ப்பனக்குலத்தவர்களுக்கு வந்திருக்கின்ற சிறந்த பட்டப்பெயர்கள் வருமாறு:

| | |
|---|---|
| 1. அறிஞர், | 7. உம்பர் = மேலோர், |
| 2. மிக்கவர், | 8. மேற்குலத்தோர், |
| 3. ஆய்ந்தோர், | 9. அந்தணர், |
| 4. பெரியோர், | 10. வேதபாரகர், |
| 5. உயர்ந்தோர், | 11. வேதியர், |
| 6. நூலோர், | 12. மறையோர், |

இவைமுதலியவனவாம்.

இந்தப் பன்னிரண்டு பட்டப்பெயர்களில், 1-வது பெயர்மு

தல், 8-வது பெயர்வரையினும் வந்திருக்கிற எட்டுப்பெயர்களும் பார்ப்பனக்குலத்தவர்களுக்கும் அரசர்குலத்தவர்களுக்குமுரிய பொதுப்பட்டப்பெயர்களாம். 9-வது பெயர்முதல், 12-வது பெயர்வரையினும்வந்திருக்கின்ற நான்குபெயர்களும் பார்ப்பாருக்கேயுரிய சிறந்தபட்டப்பெயர்களாகும்.

இதுபோலவே அரசர்குலத்தவர்களுக்குரிய சிறந்த பட்டப்பெயர்கள் 9-வது 10-வது 11-வது 12-வது சூத்திரங்களிற் கண்டிருக்கின்றன. அவைவருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1. | நூலுரைப்போர், | 9. | உயர்ந்தோர், |
| 2. | கலைவல்லோர், | 10. | புலவர், |
| 3. | கவிஞர், | 11. | கற்றவர், |
| 4. | அறிவுடையோர், | 12. | சான்றோர், |
| 5. | மிக்கோர், | 13. | ஆரியர், |
| 6. | நல்லவர், | 14. | உலகு, |
| 7. | மேலவர், | 15. | ஆன்றோர், |
| 8. | ஆய்ந்தோர், | | இவைமுதலான பெயர்களாம். |

இந்தப் பதினைந்துபெயர்களில் 1-வது பெயர்முதல், 11-வது பெயர்வரையினும் வந்திருக்கிற பதினொருபெயர்களும் அரசர்குலத்தவர்களுக்கும் பார்ப்பனக்குலத்தவர்களுக்குமுரிய பொதுப்பட்டப்பெயர்களாம். 12-வது பெயர்முதல், 15-வது பெயர்வரையினும்வந்திருக்கிற நான்குபெயர்களும்அரசர்குலத்தவர்களுக்கேயுரிய சிறந்தபட்டப்பெயர்களாகும். இந்த நான்கு பெயர்களில் 'சான்றோர்' என்னும்பெயர் மிகவுஞ்சிறந்தது.

பார்ப்பாருக்கு வந்திருக்கின்ற கௌரவப்பட்டப்பெயர்கள் மேலே சொல்லியிருக்கிறபிரகாரம் குலத்தாலும், குணத்தாலும், தபோபலத்தாலும், அறிவாலும் வந்திருக்கின்ற பெயர்களாம். இதில் இக்குலத்தவர்களுக்குப் பெரியோர், ஆய்ந்தோர், உயர்ந்தோர், மிக்கவர், மேலவர் முதலானபெயர்கள் வந்திருப்பதேயல்லாமல், 'சான்றோர்' என்னும் பெயர் வரவேயில்லை. இந்தப் பார்ப்பனக்குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' என்னும் பெயர் நீங்கலாக அரசர்குலத்தவர்களுக்குரிய சிறந்த

பட்டப்பெயர்களெல்லாம் வந்திருக்கின்றன. மேலே அரசர் குலப்பட்டப்பெயர்களுடன் பார்ப்பனக்குலப்பட்டப்பெயர்களைச் சமரசப்படுத்திக் கூறியிருப்பதையுங் கண்டுகொள்க.

ஆகவே, பார்ப்பாருக்குச் 'சான்ருேர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் வேண்டியதேயில்லை. 'சான்ருேர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் அவர்களுக்கு வேண்டுமேயாயின் 'சான்ருர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயரையும் அவர்கள் தரித்துக்கொள்ளவேண்டும்.

(ii) சூத்திரகுலத்தவர்களுக்கோ 'சான்ருேர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் ஒருவிதத்திலும் ஏற்காது. மேலே நாங்காண்பித்திருக்கிறபிரகாரம், அரசர்குலத்தவர்களுக்குக் குலத்தாலுங், குணத்தாலுங், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், அறிவாலும், 'சான்ருேர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் கிடைத்திருக்கிறது. பூர்வ தமிழரசர்காலத்தில் ஏற்பட்ட குலத்தொழிற் சட்டப்பிரகாரஞ் சூத்திரகுலத்தவர்களுக்கு 'ஏருழல், பசுக்காத்தல், பொருளீட்டல், குயிலுவத்தொழிற்செய்தல், காருகவினைகளாக்கல், முதல் மூவர்க்கேவல்செய்தல்' ஆகிய ஆறுதொழில்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அக்காலத்தில் இந்தத்தொழில் வரம்புகடந்து நடப்பதற்கு எவ்வளவேனும் ஏதுவில்லை. கடந்து நடக்கத்துணிவார்களேயாயின், அரசனுக்கினைக்குள்ளாவது நிசம்.

இவர்கள் முதல்மூவர்க்கேவல் செய்பவர்களானதால், குலமேன்மை இவர்களுக்கில்லை. இவர்கள் நூல்கள் கற்பதற்கு விதியில்லாமையால், அறிவு இவர்களுக்கிருக்கவில்லை. இவர்கள் சூத்திரகுலத்தவர்களானதால், பாராளுரிமை முதலான அரசர்குலத்தொழில்கள் இவர்களுக்கில்லை. இப்படியிருந்து வந்தபடியால், அந்த ஆதிகாலத்தில் சூத்திரகுலத்தவர்கள் 'சான்ருேர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் தரித்துக்கொள்ளுதற்கு அயோக்கியராயிருந்துவந்தனர்.

தமிழரசர்ஆளுகை கட்டோடே ஒழிந்துபோகவே, வடுகராசாக்கள் தமிழ்நாட்டில் சிம்மாசனபதிகளாய் நாடெல்

லாம் வடுகர்குலத்தவர்கள் கைவசமாயின. அப்போது சூத்திரகுலத்தவர்கள் மேற்படி வடுகர்களையும், வடுகர்குலப்புரோகிதர்களாகிய வடமொழிப்பிராமணர்களையுஞ் சேர்ந்துகொண்டு, மேற்படி தமிழரசர்குலத்தவர்களைக் கருவறுத்தழிப்பதற்கும், அவர்களுடைய பூர்வமேன்மையை ஒழிப்பதற்கும் ஏதுவாயிருந்து வந்தார்கள். ஆனதால், அந்தச் சான்றோர் குலத்தவர்களுடைய பின்சந்ததியார் அறிவுவிருத்திசெய்துகொள்ளுதற்கு ஏதுவற்றவர்களாயினர். இதற்கெல்லாம் முக்கியகருவிகளாயிருந்துவந்த சூத்திரர்கள் தங்கள்குலம் பார்ப்பனக்குலத்துக்கடுத்த குலமாக விளங்குதற்கு அறிவில் தேற்சியடைந்தனர்; சைவநெறியிற் சிறந்தொழுக முயன்றனர்; தவவேடம் புனைந்தனர்; சிவாலயங்களனைத்தையும் வடுகவரசர்கள் வடமொழிப்பிராமணர்களுடைய துணையால் தங்கள் அனுபோகத்திற்குள்ளாக்கிக்கொண்டனர். பூர்வ தமிழரசர்குலத்தவர்கள் அந்த ஆலயங்களில் அனுபோகம் பெறுதபடிக்கு மிகு முயற்சிசெய்தனர். அவர்களுடைய முன்னவர்கள் தெய்வந் தொழுதற்குப் போய்வந்துகொண்டிருந்த சேத்திரங்களின் மேலைவாசல்கள் அநேகம் அடைபடும்படி செய்தனர்.

இந்தப்பிரகாரஞ் சூத்திரகுலத்தவர்கள் நாளுக்குநாள் ஆசாரத்திலும் அறிவிலும் விருத்தியடைந்துவருகையில், 'சான்றோர்' என்னும் பெயரைக் "கல்வியறிவுடையவர்கள்" என்கிற அருத்தத்தில் அமைத்துக்கொண்டு, தங்களுக்குச் 'சான்றோர்' எனப் பெயரிட்டுக்கொள்ள ஆரம்பித்தனர். இவர்களுக்குச் 'சான்றோர்' என்னும்பெயர் ஏற்குமேயாயின், அந்தப் பூர்வ காலத்தில், இந்தப்பெயருடன் ஒருபொருளில் வந்திருக்கின்ற 'மிக்கோர், மேலவர், உயர்ந்தோர், உலகு' முதலானபெயர்கள் இவர்களுக்கு ஏற்குமா? இவை ஏற்காததலால், 'சான்றோர்' என்னும் பெயரும் ஏற்காது. அன்றியும், 'சான்றோர்' என்னும் பெயர் 'சான்றார், சான்றவர்' என்னும் மொழிகளுடன் ஒருபொருள்கொண்ட பெயரென்று மேலே நாம் காண்பித்திருக்கிறோம். மேற்படி 'சான்றார்' என்னும்பெயர் தமிழ்

நாட்டரசர்குலத்தவர்களுக்குப் பெரும்பாலும் வழங்கிவந்த தினல் அந்தப்பெயரைச் சொல்லிக்கொள்ளாமல், 'சான்ரேர், சான்றவர்' என்னும் பெயர்களைப் பிற்காலத்திற் சொல்லிக்கொள்ளத் தலைப்பட்டனர். ஆனதால், 'சான்ரேர்' என்னும் பெயர் அவர்களுக்கு ஏற்கமாட்டாது.

ஆகையினலே, 'சான்ருர்' என்னும்பெயர் எந்தக்குலத்தவர்களுக்கு எக்காலத்திலும் ஏற்குமோ அந்தக்குலத்தவர்களுக்கே 'சான்ரேர், சான்றவர்' என்னும் பெயர்களும் ஏற்குமென்பதற்குச் சந்தேகமில்லை.

## இரண்டாவது.

'சான்ரேர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்டு வந்திருக்கின்ற பெயர்களுக்குத் தாற்பரியமும், இந்த ஒருபொருட்பெயர்கள் பூர்வ அரசர்குலத்தவர்களுக்கிடப்பட்டு வழங்கிவந்திருப்பதற்கு நூற்சாட்சிகளும் இங்ஙனங் கூறுவோம்.

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரம்.

"சான்ரேர்மிக்கோர் நல்லவர்மேலவ
ராய்ந்தோருயர்ந்தோராரியருலகெனை
வாய்ந்தவான்ரே ரறிவுடையோரே."

இந்தச்சூத்திரத்திலடங்கிய பத்துப்பெயர்களுக்குந் தாற்பரியமும், மேற்கோள்களும் இங்ஙனம் முறையே எடுத்துக்கூறுதல்செய்வோம். அவைவருமாறு:

### 1. அறிவுடையோர்.

'அறிவுடையோர்' என்னும்பெயர், 'அறி' என்னும் வினைமுதலடியாய் 'அறிவு' என்னுந் தொழிற்பெயரினின்றுவந்த பலர்பாற்பெயராம். 'அறிவுடையன், அறிவுடையான், அறிவுடையோன்' என்பவைகள் ஒருபொருள் ஆண்பாற்பெயர்கள். 'அறிவுடையர், அறிவுடையார், அறிவுடையோர்' என்பன ஒருபொருட்பலர்பாற்பெயர்கள்.

(i) வடக்கில் திருவேங்கட*முதல் தெற்கில் கன்னியா குமரிபரியந்தம் விசாலித்திருக்கின்ற நாட்டில் பூர்வத்தில் தமிழ்மொழி ஏகத்திற்கு வழங்கிவந்ததால், அதற்குத் தமிழ் நாடெனப் பெயருண்டாயிற்று. இந்தத் தமிழ்நாட்டில் ஒரு குலக்கிளைப்பிரிவார்களாய்த் தமிழ்மொழியொன்றையே குல ப்பாஷையாகவுடைய சேர சோழ பாண்டியர்கள் செங்கோற் செலுத்திவந்தமையால், அம்மூன்று கிளைப்பிரிவார்களுந் தமிழ்நாட்டு மூவேந்தர் என்னப்பட்டனர். ஆயினும், இம் மூன்று தமிழரசர் குலக்கிளைப்பிரிவார்களில், மதுராபுரியிலி ருந்து செங்கோற்செலுத்திய பாண்டியர்கள் அகஸ்தியமகா முனிவரைக்கொண்டும், அந்த அகஸ்தியரிடத்தில் நூல்கற்

---

* திருவேங்கடந் தமிழ்நாட்டிற்கு வடவெல்லையாயிருந்த தற்கு மேற்கோள்வருமாறு:

கம்பராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், நாடவிட்டபட லம், 25-வது கவி:

"வடசொற்குந் தென்சொற்கும் வரம்பிற்றாய்
நான்மறையு மற்றைநூலும்,
இடைசொற்றபொருட்கெல்லா மெல்லையதாய்
நல்லறத்துக்கீறாய்வேறு,
புடைசுற்றுந்துணையின்றிப் புகழ்பொதிந்த
மெய்யேபோற் பூத்துநின்ற
உடைசுற்றுந் தண்சாரலோங்கிய வேங்கடத்திற்
சென்றுறுதிர்மாதோ".

இதில் திருவேங்கடந் தமிழ்நாட்டிற்கு வடவெல்லையெனக் கூறியிருக்கிறது.

தொல்காப்பியம், சிறப்புப்பாயிரம்.

"வடவேங்கடந்தென் குமரியாயிடைத்
தமிழ்கூறுநல் லுலகத்து,
வழக்குஞ்செய்யுளுமாயிரு முதலி
னெழுத்துஞ்சொல்லும் பொருளுநாடிச்
செந்தமிழியற்கை சிவணியநிலத்தொடு" &c.

நன்னூல், சிறப்புப்பாயிரம், இடையுறுப்பு.

"முனிவறவருளிய மூவறுமொழியுளுங்
குணகடல்குமரிகுடகம் வேங்கட
மெனுநான்கெல்லையினிருந்தமிழ்க் கடலுள்" &c.

றுணர்ந்த தொல்காப்பியர், பனம்பாரனுர் முதலான பன்னி ருரிஷிகளேக்கொண்டுந் தமிழ்ப்பாஷையை ஆதியில் வளர்த் துவந்தனர். இந்தப்பாஷையை வளர்ப்பதற்கு ஆதிக்கல்விச் சங்கம் அகஸ்தியமகாமுனிவருக்கு இருப்பிடமான பொதிய மாமலேயிலிருந்தது.

தசரதராமன் வனவாசஞ்செய்யுதற்கு இந்தத் தமிழ்நாடு நோக்கி வருகையில், அந்தக் கல்விச்சங்கம் பொதிகைமலேயி லிருந்ததாகக் கம்பராமாயணத்திற் கண்டிருக்கின்றது.

(ii) கிஷ்கிந்தாகாண்டம், நாடவிட்டபடலம், 30-வது கவி :

"தென்றமிழ்நாட்டகன் பொதியிற்றிருமுனிவன்
  றமிழ்ச்சங்கஞ் சேருகிற்பீர்,
என்றுமவனுறை விடமாமாதலாலம்
  மலேயையிடத்திட்டேகிப்
பொன்றிணிந்தபுனல்பெருகும் பொருநையெனுந்
  திருநதிபின்பொழியநாகக்
கன்றுவளர்தடஞ்சாரன் மயேந்திரமா
  நெடுவரையுங் கடலுங்காண்பீர்."

ஸ்ரீராமர் தன்நாயகி சீதாதேவியிருக்குமிடமறிந்துவர ஆஞ்சனேயனே யனுப்புகின்றபோது, அவன்போய்த் தேடிப் பார்க்கவேண்டிய பற்பலநாடுகளுக்குக் குறிப்படையாளஞ் சொல்லிக்கொண்டு வருகையில், இந்தக் கவியில் தென்பாண் டிநாட்டிற்கு அறிகுறி கூறியிருக்கிறது. தசரதராமன் அனும னேயும், அவனேடு கூடப்போன கிஷ்கிந்தநாட்டுச் சத்திரியர் களேயும் பார்த்துச்சொல்வது : "தமிழ்நாட்டின் தென்பாகமா கிய தென்பாண்டி நாட்டிலிருக்கின்ற பொதியமாமலேயில் திருமுனிவனுன அகஸ்தியனும், அவன் முன்னிலேயில்கூடித் தமிழ்விருத்திசெய்துவருகின்ற கல்விச்சங்கத்தாரு மிருக்கின் றனர். அவ்விடத்தில் என்நாயகி சீதாபிராட்டியார் இருக்க மாட்டாள். ஆனதால், நீங்கள் அந்த மலேயை இடமாகவிட்டு நீங்கி, ஐம்பொன்களிலொன்ருகிய தாமிரங்கலந்த சலமான து எத்தேசகாலமும் ஓடிக்கொண்டிராநின்ற பொருநைஎனப்

பெயர்பெற்ற தாமிரவன்னிநதியைக்கடந்துபோகும்போது, யானைகள் வாழ்கின்ற வனச்சாரலையுடைய மயேந்திரகிரியை யுந் தென்சமுத்திரத்தையும் பார்ப்பீர்கள்."

இந்தக்கவியில் 'திருமுனிவன் தமிழ்ச்சங்கம்' பொதியமா மலையில் ஸ்ரீராமர்காலத்திலிருந்ததாகச் சொல்லியிருக்கிற து. இது ஆதித்தமிழ்ச்சங்கமாம். அதற்குப் பிற்காலத்தில் பாண்டியர்களால் அந்தச் சங்கம் மதுரையில் ஸ்தாபிக்கப்பட் டது. அது 'தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம்' என முச்சங்கங்களாகக் காலாகாலங்களில் விளங்கிற்று. கடைச் சங்கமானது திருவள்ளுவர்காலத்திலிருந்தது. அந்தக் கடை ச்சங்கத்தைச்சேர்ந்த மகாவித்துவான்கள் 49 பேர்; இந்தச் சங்கங்களைச்சேர்ந்த வித்துவான்கள் 'சங்கப்புலவர்கள்' என் னப்பட்டார்கள். அவர்கள் சங்கமாகக்கூடியதானத்துக் குச் 'சங்கப்பலகை' என்றுபெயர். இந்தத் தமிழ்க்கடைச் சங்கங் குலைந்தழிந்துபோகிறதற்குத் திருவள்ளுவர்செய்த மகாசிறந்த குறட்பாவானது காரணமாயிற்றென்று தோன்று கின்றது. மேற்படி தமிழ்க்கல்விச்சங்கங்களை மிகுவைராக்கி யத்தோடு வளர்த்துவந்த பாண்டியர்களும் வேதநீதிசாஸ்திர கலைக்கியான அறிவுகளில் மிகு பாண்டித்தியமுடையவர்க ளாய் நூலாசிரியர்களுமாயினர். ஆனதால், அவர்கள் நாட் டிற்குச் செந்தமிழ்நாடென்றும், அதைச் சூழ்ந்திருந்த பன் னிரண்டு தமிழ்நாடுகளுக்குக் கொடுந்தமிழ் நாடுகளெனப் பெயர்பெற்ற இயற்றமிழ்நாடுகளென்றும் பெயருண்டாயின. பாண்டியன் முக்கியமாகத் தமிழ்ப்பாஷையை வளர்த்தவனு னதினலே, அவனுக்குத் 'தமிழ்நாடன்' எனப் பட்டப்பெய ருண்டாயிற்று. இயற்றமிழ்நாடுகள் பன்னிரண்டுக்கும் மேலே ஆறுவது பிரகரணத்தில் விபரங்கூறியிருப்பதால், அவற்றை இங்ஙனஞ் சொல்லாது விடுகின்றனம்.

இவ்வாறு செந்தமிழ்நாடெனப் பெயர்பெற்ற பாண்டிநாட் டில் பாண்டியர்கள் 'அறிவில்' கீர்த்திபெற்றுவந்தமையால், பாண்டியனுக்கு 'அறிவன்' எனவும், அவன் நாட்டிற்கு 'அறி

வன்தேசம்' எனவும், பெயர்கள் வழங்கலாயின. பின்பு தமிழ்நாடு மொத்தத்துக்கு 'அறிவன்தேசம்' எனப்பெயராகி விட்டது.

(iii) தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணை யியல், 20-வது சூத்திரம்.

"அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்,
ஐவகைமரபின் அரசர்பக்கமும்,
இருமூன்றுமரபின் ஏனோர்பக்கமும்,
மறுவில்செய்தி மூவகைக்காலமும்,
நெறியினாற்றிய வறிவன்றேயமும்,
நாலிருவழக்கிற் றாபதப்பக்கமும்,
பாலறிமரபிற் பொருநர்க்கண்ணும்,
அனைநிலைவகையோ டாங்கெழுவகையிற்,
றொகைநிலைபெற்ற தென்மனார்புலவர்."

இந்தச்சூத்திரத்தில் 'அறிவன்றேயம்' (=அறிவன்தேசம்) எனப்பெயர்வந்திருப்பது பொதுவகையால் தமிழ்நாடு முழு மைக்கும், சிறப்புவகையால் பாண்டிநாட்டிற்கும் பெயராம். ஆனதால், தொல்காப்பியர்நாளையில் தமிழ்நாட்டிற்கு 'அறி வன்தேசம்' என்றும் ஒருபெயர்வந்து வழங்கலாயிற்று. தமிழ் நாட்டிற்கு 'அறிவன்தேசம்' எனப்பெயர்வந்து வழங்கிய மையால், தமிழ்ப்பாஷைக்கு 'அறிவன்பாஷை' எனவும், தமிழ்நாட்டரசர்குலத்தவர்களுக்கு 'அறிவுடையோர்' என வும் பெயர்கள்வந்து வழங்கின.

(iv) 26-வது நட்சத்திரமாகிய உத்திரட்டாதிக்கு 'அறிவ னாள்' எனவும், 'மன்னனாள்' எனவும் பெயர்கள் வந்திருக் கின்றன. இதில் 'அறிவனாள், மன்னனாள்' என வந்திருப்ப தற்குப் பொதுவகையால் 'அரசனாள்' எனவும், சிறப்புவகை யால் 'பாண்டியனாள்' எனவுந் தாற்பரியமாம்.

மேலே நாம் ஆறாவதுபிரகரணத்திற் காண்பித்திருக்கிற பிரகாரம், 3-வது நட்சத்திரமாகிய கார்த்திகைநட்சத்திரத் திற்கு 'நாடனாள்' எனப் பெயர்வந்திருக்கின்றது. இதில்

'நாடனுன்' எனப் பெயர்வந்திருப்பதற்குப் பொதுவகையால் 'அரசனுள்' எனவும், சிறப்புவகையால் 'சோழனுள்' என வுந் தாற்பரியமாம்.

அன்றியும், 1-வது நட்சத்திரமாகிய அசுவினிக்குச் 'செ ன்னிநாள்' எனப் பெயர்வந்திருக்கின்றது. 'சென்னிநாள்' என்பதற்குச் 'சோழனுள்' என்பது தாற்பரியமாம். இதைப் பார்க்கும்போது, நட்சத்திரங்களுக்குப் பெயரிட்டகாலத்திலே சோழனுக்கு 'நாடன், சென்னி' எனவும், பாண்டியனுக்கு 'அறிவன்' எனவும் பெயர்கள்வந்து வழங்கியது தெரியவரு கின்றது.

(v) தமிழ்ப்பாஷைக்கு 'அறிவன்பாஷை' எனப் பெயர் வந்து வழங்கியபடியாலும், வடுகர்கள் தமிழ்நாட்டைக்கட்டிக் கொண்டகாலத்திலுந் தமிழ்ப்பாஷைக்கு 'அறிவன்பாஷை' எனப்பெயர்வழங்கிவந்தபடியாலும், வடுகர்கள் தமிழை 'அற வப்பாஷை' என்றூர்கள். ஆனதால் அறிவன்பாஷையை 'அறவம்'* எனல் மரூஉ.

தெலுங்குப் பழமொழிச்சுலோகம்.

“తెనుగు తేట, కన్నడి కస్తురి, అరవం అద్వానం, మరాటి మన్ను, తురక దూళి.”

இதற்குத் தாற்பரியம்.

“தெலுங்குதெளிவு, கன்னடிகஸ்தூரி, அறவம் அத்துவா னம், மராட்டியம் மண், துலுக்கு தூசி” என்பதாம்.

இந்தச் சுலோகத்தில் தமிழ்ப்பாஷைக்கு 'அறவபாஷை' எனப் பெயர்வந்திருக்கிறது. இந்தத் தமிழ்ப்பாஷையை வடு கர் 'அத்துவானக்காடு' என்றூர்கள்.

---

* 'அறவம்' என்னும்பதத்தை 'அரவம்' எனவெழுதி இரு பதமாகப்பிரித்து 'ஒலியின்மை' எனப் பொருள்கொள்வா ரும் உளர். ஆயினும், இங்ஙனம் 'அறவம்' என்னும்பதத்தை ஒருபதமாகக்கொண்டு பொருளமைத்துணர்க.

அன்றியுந் துலுக்கர்கள் தமிழ்நாட்டுக்கு வந்தகாலத்திலுந் தமிழ்ப்பாஷைக்கு 'அறிவன்பாஷை' எனப் பெயர் வழங்கிய படியால், துலுக்கர்கள் தமிழ்ப்பாஷையை 'அறிவிப்பாஷை' என்றார்கள்.*

(vi) இந்தப்பிரகாரம், தமிழ்நாட்டிற்கு 'அறிவன்தேசம்' என்றும், தமிழ்ப்பாஷைக்கு 'அறிவன்பாஷை' என்றும் பெயர்கள் வந்துவழங்கினமையால், தமிழ்நாட்டரசர்குலத்தவர்களுக்கு 'அறிவுடையார்' எனப் பட்டப்பெயர் வழங்கியது தெளிவாகின்றது.

மேற்கோள்.

"வடுகர் அரிவாழர் வான்கருடர்
சுடுகாடு பேய் எருமையென்றிவையாறுங்
குறுகார் அறிவுடையார்."

இந்தச்சுலோகத்திற்கு "வடுகராசாங்கத்தார் சுடுகாட்டிற்கும், அரிவாழராசாங்கத்தார் பேய்க்கும், கன்னடிய ராசாங்கத்தார் எருமைக்குஞ் சமானமாயிருப்பதால், அறிவுடையார் எனப் பெயர்பெற்ற தமிழ்ராசாங்கத்தார் மேற்படி மூன்றுராசாங்கத்தார்களையுஞ் சேரார்கள்" என்பது தாற்பரியம். இச்சுலோகத்தில், தமிழரசர்குலத்தவர்களுக்கு 'அறிவுடையார்' எனப் பட்டப்பெயர்வந்திருக்கின்றது.

இந்தப்பிரகாரம், திவாகரநூலாசிரியர் காலத்திலுந் தமிழரசர்குலத்தவர்களுக்கு 'அறிவுடையோர்' என்னும் பட்டப்பெயர் வழங்கிவந்தமையால், மேற்படி திவாகரச்சூத்திரத்தில், 'அறிவுடையோர்' எனும் பெயர் அரசர்குலப்பட்டப்பெயராகிய 'சான்றோர்' என்னும் மொழியுடன் ஒருபொருள்கொண்ட பதங்களிலொன்றாக வந்திருக்கிறது. ஆனதால், அறிவுடையோர் = சான்றோர். இதுநிற்க,

* "The names of plants in Coimbatore are quite different from those given to the same at Trichinopoly, although in both countries the language of the Tamuls is spoken. The Tamil of Coimbatore is perfectly intelligible to my Madras servants, although natives of a different Desa. Among the Mussulmans, it is called *the Arabi* language, and their own northern dialect is here called *the Asmani*."—WILK's *History of Mysore, Vol. II, p.* 7.

(vii) திருமூலர், முதற்றந்திரம், இராசதோடம், 1-வது, 2-வது, 3-வது கவிகள் :

1-வது கவி.

"கல்லாவரசனுங் காலனுநேரொக்குங்,
கல்லாவரசனிற் காலன்மிகநல்லன்,
கல்லாவரசனறமோரான் கொல்லென்பான்,
நல்லாரைக்கால னணுகினில்லானே."

இந்தக்கவியில், அரசர்குலத்தவர்களுக்கு அந்தப்பூர்வகாலத்தில் குலமேன்மையல்லாது கல்வியறிவும்வேண்டும் எனக் கூறியிருக்கின்றது. இங்ஙனம், கல்லாவரசன் யமனுக்குச் சமானமானவன் என்றும், கல்லாவரசனிலும் யமன் நல்லவன் என்றும், கல்லாவரசன் அறம் ஓரான் என்றும், கொல் எனச் சொல்பவன் என்றும், அறநெறிதவறுதொழுகுகின்ற அறிவுடையவரசர்கள் 'நல்லோர்' என்னும் பட்டப்பெயர் புனைந்தவர்கள் என்றும், அவர்களை யமனும் அணுகான் என்றும் உரைத்திருக்கின்றது.

2-வது கவி.

"நாடோறுமன்னவனுட்டிற்றவநெறி
நாடோறுநாடியவனெறி நாடானேல்
நாடோறுநாடுகேடு முடனண்ணுமால்
நாடோறுஞ்செல்வநரபதிகுன்றுமே."

இதில், நாடாளுமன்னனானவன் நாடோறுந் தன்நாட்டில் தவநெறிவிளங்கும்பொருட்டு, கண்பார்த்துவருவதுமன்றித் தானுந் தவநெறியில் நடந்துவரவேண்டும் எனச் சொல்லியிருக்கிறது.

3-வது கவி.

"வேடநெறிநில்லார் வேடம்பூண்டென்பயன்,
வேடநெறிநிற்போர் வேடமேமெய்வேடம்,
வேடநெறிநில்லார் தம்மைவிறல்வேந்தன்,
வேடநெறிசெய்தால் வீடதுவாகுமே."

இக்கவியில், தத்தம்வருணத்தார் தத்தம்வருணத்துக்குரிய தொழில் வரம்புகடவாது அமைந்து நடந்துவரும்படி அரசர்கள் கண்பார்த்து வரவேண்டும் எனக் கூறியிருக்கின்றது.

ஆனதால், அரசர்குலத்தவர்களுக்குத் தங்கள் குலத்துக்குரிய மேன்மைகளோடுகூட கல்வியறிவும், அறநெறியொழுக்கமு மிருக்கவேண்டுவது அவசியமானமையால், அவர்களுக்கு 'அறிவுடையோர்' எனவும் பட்டப்பெயருண்டாயிற்று. இதுநிற்க,

(viii) கம்பராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், நாடவிட்டபடலம், 40, 48, 64, 66, 73-வது கவிகள் :

40-வது கவி.

" சிங்கலிற்சிறுகட்டாளி நந்தியின்றிரட்பூச்சேர்ந்த
பொங்குபொற்றுளையென்றூலும் புல்லிதுபுதுமைத்தாமால்
அங்கவளுந்தியொக்குஞ்சுழியெனக்கணித்ததுண்டேல்
கங்கையைநோக்கிச்சேறி கடலினுநெடிதுகற்றோய்."

இங்ஙனம் அனுமனுக்குக் 'கற்றோய்' எனப் பெயர்வந்திருக்கிறது.

48-வது கவி.

" அங்கையுமடியுங்கண்டா லரவிந்த நினைதியம்பொற்
செங்கதிர்சிதறிநீலஞ் செருக்கியதெய்வவாட்கண்
மங்கைதன்சுழுத்தைநோக்கின்வளரிளங்கமுகும்வாரிச்
சங்கமுநினைதியாயி னவையென்றுதுணிதிதக்கோய்."

இதில் அனுமனுக்குத் 'தக்கோய்' எனப் பெயர்வரைந்திருக்கிறது.

64-வது கவி.

" பூவருமழலையன்னம் புனைமடப்பிடியென்றின்ன
தேவருமருள்த்தக்க செலவினளெனவுந்தேறேன்
பாவருங்கிழமைத்தொன்மைப் பருணிதர்தொடுத்தபத்தி
நாவருங்கிளவிச்செவ்வி நடைவருநடையணல்லோய்."

இந்தக்கவியில் அனுமனுக்கு 'நல்லோய்' எனப் பெயர் வந்திருக்கிறது.

66-வது கவி.

" மங்கையரிவளையொப்பார் மற்றுளரில்லையென்னுஞ்
சங்கையிலுள்ளந்தானே சான்றெனக்கொண்டுசான்றோய்
அங்கவணிலைமையெல்லா மளந்தறிந்தருகுசார்ந்து
திங்கள்வான்முகத்திணட்குச் செப்பெனப்பின்னுஞ்
செப்பும்."

இக்கவியில் அனுமனைச் 'சான்றோய்' எனவிளித்திருக்கின்றது.

73-வது கவி.

"இனையவாறுரைசெயா வினிதினேகுதியெனு
வனையுமாமணிதன்மோதிரமளித்தறிஞநின்
வினையெலாமுடிகெனு விடைகொடுத்துதவலும்
புனையும்வார்கழலினனருளொடும்போயினன்."

இந்தச்செய்யுளில் ஆஞ்சனேயனை 'அறிஞ' என்று அழை த்திருக்கிறது.

மேற்படி கவிகளுக்குச் சார்புரை.

கன்னடநாட்டின் வடபாகத்தில் பம்பைநதி (=பம்பாநதி) யின் உற்பத்திஸ்தானத்திற்குச் சமீபத்தில் கிஷ்கிந்தா என்றொருமலையுண்டு. அந்த மலையையடுத்த நாடு பூர்வத்தில் கிஷ் கிந்தாநாடு எனப் பெயர்பெற்றிருந்தது. அந்நாட்டில் 'கோ ரங்கி' எனப் பெயர்கொண்ட ஒரு நகரமுமிருந்தது. அந்த நகரத்தின்பெயரால் அந்நாட்டிற்குக் 'கோரங்கிநாடு' எனவும், 'குரங்கிநாடு' எனவும் பெயர்களுண்டாயின. வித்துவாமிசர்கள் 'குரங்கி' என்னும்பெயரைக் 'குரங்கு' என விகாரப்படுத்தி, அந்த நாட்டுச் சத்திரியர்களைக் குரங்குக்குலத்தவர்களாக்கி, அவர்களுக்குக் குரங்குக்குலத்திற்குரிய வால் முதலான அங்கங்கள் கொடுத்து உருவகப்படுத்தி, நூல்களிற் பேசியிருக்கின்றனர். கம்பராமாயணம் வாசிப்பவர்கள் அந்த விகாரரூபத்தைக் களைந்து உருவகத்தை ஒழித்துவிட்டு, அவர்களைக் கிஷ்கிந்தாநாட்டுச் சத்திரியகுலத்திலுதித்த மானிடகுலத்தவர்களாக வைத்துத் தாற்பரியஞ் செய்துகொள்ள வேண்டியது.*

---

* இவ்வாறு புலவர்கள் பாணித்துவைத்துக் கூறுகின்ற விகாரரூபங்களைக் களையவேண்டுமென்பதற்கு மேற்கோள்.

(ix) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், மீட்சிப்படலம், 160-வது கவி :

"தேனுடையலங்கன் மவுலிச்செங்கதிர்ச்செல்வன் சேயு
மீனுடையகழிவேலையிலங்கையர்வேந்தும் வெற்றித்
தானையும் பிறருமற்றைப் படைப்பெருந்தலைவர்தாமு
மானிடவடிவங்கொண்டார் வள்ளறன்வாய்மைதன்னால்."

இந்தக்கவியில், அயோத்திமாநகரத்தில்வந்து சேர்ந்தபின்னர், கிஷ்கிந்தாநாட்டு அனுமனும், இலங்கையர்வேந்தனை

மேற்கூறிய கவிகளில், ஸ்ரீராகவர் ஆஞ்சனேயனுக்கும் அவனோடுகூடப்போன கிஷ்கிந்த நாட்டுச்சத்திரியர்களுக்கும் சீதாபிராட்டிக்குப் பாதாதிகேசவரையுமுள்ள அங்கலக்ஷணங் கூறிவருகையில், மேற்படி கவிகளில் அவர் அவனைப்பார்த்து,

'கற்றோய்' எனவும்,
'தக்கோய்' எனவும்,
'நல்லோய்' எனவும்,
'சான்றோய்' எனவும்,
'அறிஞ' எனவும்,

முன்னிலைவிளிப்பெயராகவைத்துக் கூறியிருக்கின்றனர். இவற்றுள்,

'கற்றோய்' என்பதற்குக் 'கற்றோனே' எனவும்,
'தக்கோய்' என்பதற்குத் 'தக்கோனே' எனவும்,
'நல்லோய்' என்பதற்கு 'நல்லோனே' எனவும்,
'சான்றோய்' என்பதற்குச் 'சான்றோனே' எனவும்,
'அறிஞ' என்பதற்கு 'அறிவுடையோனே' எனவும் தாற்பரியமாம். இதில் ஸ்ரீராமர் அனுமானொருவனுக்கே 'கற்றோன், தக்கோன், நல்லோன், சான்றோன், அறிவுடையோன்' எனப் பட்டப்பெயர் இடுவதாகப் புலவர்கூறியிருக்கிறார்.

---

அசுரராசன் விபீஷணனும், அவர்களுடைய சேனைதளங்களும் படைவீரர்களும் விகாரரூபங்கள்நீங்க, மானிடவடிவு கொண்டார்கள் என்று வருகிறது.

மேலே கிஷ்கிந்தாநாட்டு மானிடகுலத்தவர்களைக் குரங்குக் குலத்தவர்களும், இலங்கைநாட்டு மானிடரை இராக்ஷதகுலத்தவர்களுமாக்கி, அவர்களுக்கு விகாரரூபங்களைக்கொடுத்த வித்துவானானவன், அக்குலத்தவர்கள் மனிதகுலத்தவர்கள் வசித்த அயோத்திநகர்வந்து சேர்ந்தவுடனே அவர்களுக்கு அந்தவிகாரரூபங்கள் ஏற்காதெனக்கண்டு, அவர்களுடைய இயல்புரூபம் அவர்களுக்கு வந்துவிட்டதாகச் சொல்லியிருக்கிறான். மானிடகுலத்தவனொருவன் புலிவேஷதாரியாகி, சிறிதுநாள் புலியாகவிளங்கியபின், அவ்வேஷங்களைந்து மானிடகுலத்தவனாகின்றபிரகாரம், மனிதகுலத்தவர்கள் வித்துவானகையில் குரங்குவேஷதாரிகளும் ராக்ஷதவேஷதாரிகளுமாகி, பிறகு பழயபடிக்கு மானிடகுலத்தவர்களானாற்போலிருக்கின்றது. ஆகவே, கிஷ்கிந்தாநாட்டார்களும், இலங்கைநாட்டார்களும், அயோத்திநாட்டவர்களுக்கொப்பந்தம் மானிடகுலத்தவர்களேயல்லாது வேறல்லர்.

இவ்வைந்து பெயர்களும் ஒருவனுக்கே வந்திருப்பதால், இவைகள் ஒருபொருட்பெயர்களாம். இந்தப்பெயர்கள் 11-வது சூத்திரத்தில் வந்திருக்கின்ற பதங்களானமையால், அந்த 11-வது சூத்திரத்திற் கண்டிருக்கிற பெயர்கள் அரசர்குலத்தவர்களுக்குரிய பட்டப்பெயர்களாம். அனுமனுக்குச் 'சான்ரேன்' என்னும் கௌரவப்பட்டப்பெயர்வந்திருப்பதால், இவன் சத்திரியகுலத்தவன் என்பதற்குச் சந்தேகமேயில்லை. மேலும் 'அறிவுடையோன்' என்னும்பெயர் 'சான்ரேன், மேலோன்' முதலான பெயர்களுடன் ஒருபொருளில் வந்திருப்பதால், 'அறிவுடையோன்' என்னும் பெயரும் சத்திரிய குலப்பட்டப்பெயர்களி லொன்றேயல்லாது வெறல்லவாம் 'தக்கோர்' என்னும் பெயரும் 'சான்ரேர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட பட்டப்பெயராகும்.

சதுரகராதி, 2-வது பொருளகராதி, 'அறிவுடையோர்' காண்க.

(x) கம்பராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், ஆறுசெல் படலம், 13-வது, 18-வது கவிகள் :

“ துறையுந்தோகை நின்ருடுசூழலுங்
குறையுஞ்சோலையுங் குளிர்ந்தசார னீர்ச்
சிறையுந்தெள்ளுபூந் தடமுந் தெண்பளிக்
கறையுந்தேடினு ரறிவின்கேள்வியார்.”

“ அன்னதன்மையா லறிஞர்நாடியச்
செந்நெல்வேலிசூழ் சிந்துநாடொரீஇத்
தன்மமெண்ணுமத் தகைபுகுந்துளார்
துன்னுதண்டகங் கடிதுதுன்னினர்.”

இக்கவிகளில் அனுமனும் அவனேடு கூடப்போனவர்களும் வடபெண்ணைநதித்தீரத்திலிருக்கின்ற நாடெங்ஙனுஞ் சீதாதேவியைத் தேடியபின்னர், தண்டகநாடு எனப் பெயர் கொண்ட தொண்டைமண்டலத்தில் வந்து சேர்ந்தனர் எனவுரைத்திருக்கிறது. இந்த இரண்டுகவிகளிலும், மேற்படி சத்திரியர்களுக்கு 'அறிவின்கேள்வியார்' எனவும், 'அறிஞர்'

எனவும் பெயர்கள் வந்திருக்கின்றன. இந்த இரண்டுபெயர் களுக்கும் 'அறிவுடையோர்' என்பதுகருத்தாம்.

ஆனதால், இவ்விருபெயர்களும் 'சான்றோர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட பெயர்களாகும். ஆகவே, சத்திரியகுலத்தவர்களுக்கு 'அறிவுடையோர்' என்பதும் ஒரு பட்டப்பெயராம். பார்ப்பனக்குலத்தவர்களுக்கும் 'அறிஞர்' எனும்பதம் வந்திருப்பதால், அக்குலத்தவர்களுக்கும் 'அறி வுடையோர்' என்னும் பட்டப்பெயர் ஏற்கும்.

இந்தப்பிரகாரம், அந்தப்பூர்வகாலத்தில் சத்திரியருக்கும் பார்ப்பாருக்குமாத்திரம் 'அறிவுடையோர்' என்னும் பட்டப் பெயர் ஏற்குமேயல்லாது பிறகுலத்தவர்களுக்கு ஏற்காது. அவ்வாறு 'அறிவுடையோர்' என பட்டப்பெயர் பெறுங்குலத் தவர்கள் 'சான்றோர், மிக்கோர், நல்லவர், மேலவர், ஆய்ந் தோர், உயர்ந்தோர், ஆரியர், உலகு, ஆன்றோர், தக்கோர்' என வும் பட்டப்பெயர்கள் பெறத்தக்கவர்களாயிருக்கவேண்டும். வாயுபுத்திரன் 'அறிவுடையோன்' என்னும் பட்டப்பெயரு டன் பிறபட்டப்பெயர்களும் பெற்றிருக்கின்றபடியால், அவன் சத்திரியகுலச்சான்றோன் என்பதற்குச் சந்தேகமேயில்லை.

(xi) 'அறிவன்' என்னும் பெயர் 'கடவுளுக்கும், அருக னுக்கும், சிவனுக்கும், விண்டுவுக்கும் பட்டப்பெயர்களான மையால், அந்தப்பெயர் சத்திரியகுலத்தவர்கட்கும் பார்ப்ப னக்குலத்தவர்கட்குஞ் சிறந்த பெயராயிற்று.

(xii) மூதுரை, 30–வது கவி :

" சாந்தனையுந்தீயனவே செய்திடினுந்தாமவரை
யாந்தனையுங்காப்பரறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந்தனையுங் குளிர்நிழலைத்தந்து
மறைக்குமாங்கண்டீர்மரம்.

இங்ஙனம் 'அறிவுடையோர்' எனப் பெயர்பெற்ற தமிழர சர்கள் குடிகளையழிக்காது பாதுகாப்பார்கள் எனக் கூறியிருக் கின்றது.

(xiii) கம்பராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், மயேந்திரப்படலம் 78-வது கவியிலும்,
சுந்தரகாண்டம், ஊர்தேடுபடலம், 97-வது கவியிலும்,
,, காட்சிப்படலம், 46-வது கவியிலும்,
உயுத்தகாண்டம், மந்திரப்படலம், 48, 66, 78-வது கவியிலும்,
,, இரணியன்வதைப்படலம், 19-வது கவியிலும்,
,, விபீஷணனடைக்கலப்படலம், 105-வது கவியிலும்,
,, சேதுபந்தனப்படலம், 1-வது கவியிலும்,
,, விடைகொடுத்தபடலம், 12-வது கவியிலும்,
இதற்கு உதாரணங்கள்வருமாறு கண்டுகொள்க.

இனிச் 'சான்றோர்' என்னும் பட்டப்பெயருக்குத் தாற்பரியமும், மேற்கோளும் எடுத்துரைப்போம்.

## 2. சான்றோர்.

தமிழரசர்குலத்தவர்களுக்குரிய சிறந்த கௌரவப்பட்டப்பெயராகிய 'சான்றோர்' என்னுமொழியைச்சுட்டி நாம் இங்ஙனம் எழுதப்போகின்ற விபரவிஷயங்களை வாசிப்பதற்கு முன்னதாக, மேலே இரண்டாவது பிரகரணத்தில் 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர்களுக்கு வரைந்திருக்கின்ற தாற்பரியவுரையையும், நூலுதாரணங்களையும், மீண்டுங் கவனத்துடன் வாசித்து உய்த்துணர்ந்துகொள்ளவேண்டும். அவ்வாறு செய்தபின், இங்ஙனம் எடுத்துரைப்பவற்றை வாசிக்கில், பொருள் மனதுக்குத் தெளிவுற விளங்கலாகும்.

(i) திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரத்தை மீண்டும் இங்ஙனம் பேர்த்தெழுதுவம்.

"சான்றோர்மிக்கோர் நல்லவர்மேலவ
ராய்ந்தோருயர்ந்தோ ராரியருலகென
வாய்ந்தவான்றோ ரறிவுடையோரே."

இந்தச்சூத்திரத்தில் வருகிற 'சான்றோன்' என்னுங்கௌரவப்பட்டப்பெயர் நாம் மேலே இரண்டாவது பிரகரணத்தில் விபரமாகக் காண்பித்திருக்கிறபிரகாரம், 'சால் என்

னும் வினைமுதலினின்று பிறந்து, 'சான்றேன்' என்னும் இறந்தகாலவினைமுற்றினின்று வருகிற வினையாலணையும்பெயராம். அவ்வாறுவருகின்ற வினையாலணையும் ஆண்பாற்பெயர்கள் 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்பவைகளும் பலர்பாற்பெயர்கள் 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்பவைகளுமாம். இதுநிற்க,

மேற்படி 11-வது சூத்திரத்திற் கண்டிருக்கிற 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயரை விரித்துரைக்கின், 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்பவைகளாகும். மேலும், 'சான்றோர்' என்னும் பலர்பாற்பெயருக்கு ஆண்பாற்பெயர் 'சான்றோன்' என்பதாம். இந்தச் 'சான்றோன்' என்னும் ஆண்பாற்பெயரை விரித்துரைக்கின், 'சான்றவன் சான்றான் சான்றோன்' என்பவைகளாகும். ஆனதால், 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் ஆண்பாற்பெயர்களும், 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் அவற்றின் பலர்பாற்பெயர்களும், முற்கூறிய வினையாலணையும் ஆண்பாற்பெயர்களுக்கும், பலர்பாற்பெயர்களுக்கும் ஒத்திருப்பனவால் 11-வது சூத்திரத்திற் கூறியிருக்கிற 'சான்றோர்' என்னும் பெயர், 'சால்' என்னும் வினைமுதலடியினின்று பிறந்து வந்திருக்கிற 'சான்றேன்' என்னும் இறந்தகால வினைமுற்றினின்று வருகின்ற வினையாலணையும் பலர்பாற்பெயர் என்பதற்குச் சந்தேகமில்லை. ஆனதால், 'சால்' என்னும் வினையின்பொருளே இந்தச் 'சான்றோர்' என்னும் வினையாலணையும் பலர்பாற்பெயருக்கும் பொருளாகும். மேற்படி 'சால்' என்னும் வினைக்கும், 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் வினையாலணையும் பெயர்களுக்கும் மேலே இரண்டாவது பிரகரணத்திற் கூறியிருக்கிறபிரகாரம் வருகின்ற தாற்பரியவுரை வருமாறு:

(ii) சான்றோர்புராணம், பொன்னியணைப்படலம், 63-வது கவி:

"மீன்றாழுலகின்மகரனும் பெயர்வேண்டுமென்றான்,
தோன்றாதுசெய்தபிழை பொறுமென்றேதொழுதான்,
வான்றோய்புகழான் வளவனொடுசால்புற்ற
சான்றாண்மையென்னும் பெயர்தானுங்கொடுத்தனனால்.

இந்தக்கவியில், 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் பெயர்களின் உற்பத்திக்கு மூலபதம் இன்னதென்பதும், அந்த மூலபதத்தினின்று சித்திரதரபாண்டியனுடைய குலத்தவர்களுக்குப் பாணித்தளிக்கப்பட்ட கௌரவப்பட்டப்பெயர் இன்னதென்பதுந் தெளிவுறக் கூறியிருக்கின்றது. இதை இங்ஙனஞ் சற்றுவிபரப்பட எடுத்துக்காட்டுவோம்.

பூர்வகாலத்தில் உயிரினும் மேன்மை குலமேன்மை என நினைந்து பூலோகத்திற் புகழைநாட்டிய சித்திரதரபாண்டியன் வமிசத்தவர்களுக்கு எத்தேசகாலமுங் கீர்த்திபெற வழங்கி வரும்படியாக ஒரு சிறந்த கௌரவப்பட்டப்பெயர்கொடுக்க வேண்டுமென்று மகரன் என்பவன் கரிக்கால் (கரிகால) சோழனது சபாமண்டபத்திற்கூடிய மகாநாட்டுச்சபையார்களுக்கு முன்பாக வணங்கிச்சொல்ல, இராசசபையார்கள் யாதொரு ஆட்சேபனையின்றி அதற்குச் சம்மதித்து, கரிக்கால சோழன் சமுகத்தில் 'சான்றோன்' என்னுங் கௌரவப்பட்டப்பெயரைப் பாணித்து, சித்திரதரபாண்டியன் வமிசத்தவர்கள் இதுமுதல் சூரியாள் சந்திராளுள்ளவரையினும் *பூலோகத்தின்கண்ணே சிறந்து விளங்கிவரும்படியாக அக்குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் தரிப்பித்தனர். அக்காலத்தில் சித்திரதரபாண்டியன் குலத்தவர்கள் குலத்தாலுங், குணத்தாலுங், கொடையாலும், புஜபலத்தாலும், பதினெண்ணாயுதவித்தையாலும், பாராளுரிமையாலும், அறிவாலுங் கீர்த்திபெற்றிருந்தமையால், இந்தச் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் ஆதியில் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. இச் 'சான்றோர்' என்னும் பெயருடன், 'சான்றவர், சான்றார்' என்னும் பெயர்களும் ஒருபொருள்கொண்ட மொழிகளானமையால், இவ்விருபெயர்களுக்கும் அந்தச் 'சான்றோர்' என்னும் பதத்துக்கும் பொருள் ஒன்றேயாம்.

---

* சூரியசந்திரகுலவமிசத்தவர்களுள்ளவரையினும்.

மேற்படி கரிக்காலசோழன்* நாட்களுக்குமுன்னே, 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் பெயர்கள் தமிழ்நாட்டில் மேற்படியார் குலத்தவர்களுக்கு ஒருபெயராகவந்து வழங்காமல், இவன் காலமுதல் பிற்காலத்தில் அவ்வாறாக வந்து வழங்கலாயிற்று. அதற்கிசைய, சேரசோழபாண்டியகுலத்தவர்களனைவருக்கும் 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்

---

* சோழநாட்டரசர் பெயரட்டவணை.

Wilks' History of Mysore, Vol. II., p. 532.

"After this Naraputti, Gajaputti, and Ashaputti, three thrones were established.

"Naraputti throne was possessed by,—

1. Utunga Sholun, 32 years, உதங்கசோழன்,
2. Culatunga Sholun, 18 years, குலோத்துங்கசோழன்,
3. Rajaendra Sholun, 11 years, இராசேந்திரசோழன்,
4. Tirumudi Canda Sholun, 13 years, திருமுடிகண்டசோழன்,
5. Carical Sholun, 21 years, கரிக்காலசோழன் அல்லது கரிகாலசோழன்,
6. Arundavan Sholun, 13 years, அருந்தவசோழன்,
7. Womyuru Sholun, 17 years, வமியூறுசோழன்,
8. Shayngun Sholun, 15 years, செங்கண்சோழன்,
9. Munalinda Sholun, 12 years, மணலீந்தசோழன்,
10. Mavanadi Canda Sholun, 15 years, மாவணடிகண்டசோழன்,
11. Vacula Sholun, 14 years, வாக்குளசோழன்,
12. Alaperinda Sholun, 8 years, அளப்பறிந்தசோழன்,
13. Tiraveratu Sholun, 15 years, திரவிரட்டுசோழன்,
14. Arilouru Cadamay Canda Sholun, 62 years, ஆறிலொருகடமைகண்டசோழன்,
15. Jeyum Canda Sholun, 12 years, செயங்கண்டசோழன்,
16. Kirimi Canda Sholun, 20 years, கிரிமிகண்டசோழன்,
17. Tondaman Sholun, 12 years, தொண்டமான்சோழன்,
18. Puttum Cuttum Sholun, 45 years, பட்டங்கட்டுஞ்சோழன்,
19. Shomuman Sholun, 11 years, சோழமான்சோழன்,
20. Ghengui Conda Sholun, 11 years, கெங்கைகொண்ட, சோழன்,
21. Sundra Pandia Sholun, 40 years, சுந்தரபாண்டியசோழன்,

ணும் பெயர்கள் பொதுப்பெயர்களாய் விளங்கின. மேற்படி கரிக்காலசோழன் நாட்களுக்குமுன்னுக எழுதப்பட்ட நூல்க ளில், இந்த மூன்றுபெயர்களும் இவ்வாறுவந்து வழங்கியதா கக் காணப்படவில்லை. ஆனதால், சான்றோர்குலத்தவர்களு க்கு ஆதிமுதல் பொதுவான இயற்கைப்பெயர் 'அரசர் குலத் தார், மன்னர்குலத்தார், நாடாள்வார்குலத்தார், நாடார்குலத் தார், நாடாக்கள்' எனவும், சிறப்பியற்கைப்பெயர் 'சேரகுலத் தார், சோழகுலத்தார், பாண்டிகுலத்தார், ஈழகுலத்தார், கிரா மணிகுலத்தார்' எனவும் பெயர்கள்வந்து வழங்கிப் பிறகு, மேற்படி அரசர் குலக்கிளைப்பிரிவார்களுக்கெல்லாஞ் சகட்டு மேனிக்குச் 'சான்றோர்குலத்தவர்கள்' எனப் பெயராகிவிட்டது.

தமிழ்நாட்டரசர் அரசுரிமையிழந்தகாலத்திற்குப்பின்னர், 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் பேர்கள் மொத் தத்திற்குச் 'சாணூர்' என மரூஉமொழிப்பெயராகிப்போய் விட்டதினுலே, அக்குலத்தவர்களுக்குப் பூர்வத்திலுண்டாயிரு ந்த 'அரசர்குலம்' (=சத்திரியகுலம்) என்னும் இயல்புப் பெயர் அந்தச் 'சாணூர்' என்னும் மரூஉமொழிப்பெயருக்

---

22. Pottapu Sholun, 22 years, பொத்தப்புசோழன்,
23. Shingu Wullanda Sholun, 14 years, சிங்கவனசோழன்,
24. Deva Sholun, 10 years, தேவசோழன்,
25. Shaynahutti Sholun, 15 years, சயினவத்திசோழன்,
26. Vira Sholun, 30 years, வீரசோழன்,
27. Shayngara Sholun, 24 years, செங்கரசோழன்,

"Total of the Sholun Rajas 27, who reigned 534 years."

இந்த இருபத்தேழுசோழர்களில் ஐந்தாவது சோழன் கரிக் காலசோழன் என்றும், அவன் 21-வருஷம் அரசுபுரிந்தான் என்றும் இதிற்சொல்லப்பட்டிருக்கின்றது. இந்தக்கரிக்கால சோழன்நாளையில், சித்திரதரபாண்டியமரபினர்களில் இர ண்டுபேர் கூடைதொட்டு மண்ணெடுக்கமாட்டோம் என்ற தற்காக வன்கொலையாணூர்களென்றும், மேற்படியார்குலத் தவர்களுக்குச் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டங்கட்ட ப்பட்டதென்றும் மேற்படி சான்றோர்புராணத்தில் வருகிறது. இந்தப்பூர்வசம்பவத்தைக் காரணமாகக்கொண்டு, நாளது வரையினும், சான்றோர்குலத்தவர்களுகுள்ளே துஷ்டனுக் குக் 'கரிக்காலன்' என துர்ப்பட்டப்பெயரிட்டுக் கூப்பிட்டு வருவதுவழக்கம்.

குள் மறைந்திருந்துகொண்டது. இது காரணத்தினுல் பிற் காலத்திற் பலர் சான்ருர்குலத்தவர் இன்னகுலத்தவரெனத் தெரியாது மயங்கிவிட்டனர். பிறபாஷைக்குலத்தரசர்கள் அரசாட்சிகளில், சான்ருர்குலத்தவர்கள் அரசுரிமைத்தொழில்களிற் சம்பந்தப்படாமலும், கல்விமுயற்சி மிகுந்து செய்துகொள்ளாமலும் ஒதுங்கியிருந்துகொள்ளும்படி நேரிட்டதே அதற்குக்காரணமாம். இவ்வாறு இவர்கள் ஒதுங்கியிருந்துவர நேரிட்ட காரணத்தினுலேயே, சூத்திரகுலத்தவர்கள் முன்னுக்குவரவும் 'சான்ரோர்குலத்தவர்களுடைய பூர்வகுலத்தானத்தில் சுளுவில் ஏறி நின்றுகொள்ளவும், கல்விமுயற்சி மிகுந்து செய்யவும், வடமொழிப்பார்ப்பனக்குலத்தவர்களுடன் நெருங்கிநின்றுகொள்ளவும் ஏதுவுண்டாயிற்று.

உலகங்களனைத்தையும் ஒருகண்ணுற்பார்த்து, உயர்வுதாழ்வுகளைச் சமரசப்படுத்தி, ஒருகண்ட சீராக அவைகளை ஆண்டுவருகின்ற கடவுளானவர், உத்தேசம் ஐந்நூறு வருடக்காலமாக எதிரிகளால் படாதபாடுகளெல்லாம்பட்டு வெகு கஷ்டங்களடைந்துவந்த சான்ரோர்குலத்தவர்கள்மீது கிருபைக்கண் வைத்து, எக்குலத்தவர்களையும் ஒருகுலம்போல பாவித்துச் செங்கோற்செலுத்திவருகின்ற அங்கிலேயஅரசர்சார்பில் திவ்விய ஒளிவீசுகின்ற தமது திருமறைப்பிரகாசம் அக்குலத்தவர்கள் நடுவில் ஒளிவீசச்செய்து நல்லறிவுகளைப்புகட்டி, அவர்களுடைய பூர்வோத்திரம் இன்னதெனத் துலங்கும்படி செய்திருப்பதால், மேற்படி சான்ரோர்குலத்தவர்கள் அந்த அறிவுக்கேற்க இல்லற ஒழுக்கத்திலும், உலகியல்புநடையிலும், கல்விவிருத்தியிலும் நாளுக்குநாள் வளரும்படி சாக்கிரதையாயிருந்து வரவேண்டியது அவர்களுடைய கடமையாம்.

பார்ப்பனக்குலத்தவர்களுக்கோ அவர்களுடைய பூர்வகுலத்தானம் நாளதுவரையினும் எவ்வளவேனும் மறையாது துலங்கிக்கொண்டே நிற்கின்றமையால், அவர்களுடைய குலம் பண்டிருந்ததுபோலவே இன்றுமிருக்கின்றது. ஆனதால், பார்ப்பனக்குலம் அன்றும் இன்றும் முதற்குலமேயாம். எப்பாஷைக்குலத்தரசர்கள்வந்து நாடாண்டபோதிலும், அப்

பாஷைக்குலத்தரசர்களுக்கு இணங்க நடந்துகொள்ளும் உபாயம் அவர்களுக்குண்டாயிருந்ததே அதற்குக்காரணமாம்.

இது நிற்க, இனிச் 'சான்றோன்' என்னும் பெயரின் உற்பத்தித்தாற்பரியம் இங்ஙனஞ் சற்றுவிபரப்படக் காண்பிப்போம். மேலே சான்றோர்புராணத்திலிருந்தெடுத்துக்கூறிய, பொன்னியணைப்படலம், 63-வது கவியில்,

> "வான்றோய் புகழால் வளவனொடு சால்புற்ற
> சான்றாண்மை யென்னும் பெயர்தான் கொடுத்தான்"

என்று வருகிறது. இதில் 'வளவன்' என்பது சோழனைக்குறிக்கும். 'வளவன்' என்னும்பதத்துக்கு 'நிலவளம், நீர்வளம் முதலான நாலாவளங்களும்பொருந்திய சோழநாடாள்வான்' என்பது சப்தார்த்தமாம். சித்திரதரபாண்டியன்குலத்தவர்கள் மிகுகீர்த்திப்பிரதாபராதலால், வளவனுகிய சோழனுடைய கீர்த்திக்குச் சமமான நிறைகீர்த்தியுடையவர்களானார்கள். ஆகவே, அவர்களுக்குச் 'சால்புநிறைந்த சான்றாண்மை பொருந்தியவர்கள்' எனத் தாற்பரியங்கொள்ளும் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டங் கட்டப்பட்டது. 'சான்றோர்' என்பதற்குச் 'சால்புற்றசான்றாண்மையுடையவர்கள்' என்பது தாற்பரியமாம்.

இந்தத் தொடர்பதத்தில் வருகின்ற 'சால்பு, சான்றாண்மை' என்னும் இரண்டுபதங்களுக்குந் தாற்பரியம் வருமாறு:

**A.** சால்பு. இது 'சால்' என்னும் வினைமுதலடியிற் பிறந்த தொழிற்பெயர்.*

சால். சாலுகிறேன், சான்றேன், சாலுவேன்.

இந்தவினைக்கு மூன்றுகருத்துண்டு.

(i) மிகு. மிகுகிறேன், மிகுந்தேன், மிகுவேன்.

(ii) அமை. அமைகிறேன், அமைந்தேன், அமைவேன்.

(iii) நிறை. நிறைகிறேன், நிறைந்தேன், நிறைவேன்.

---

* 'சால்' என்னும் பகுதியடியாய்ப்பிறந்த 'சான்றோன்' என்னும்பதம் சூரியனுக்கு ஒருபேராகத்தொன்றுதொட்டு வழங்கிவந்திருக்கிறது.

'சான்றோன்' என்னுங் கௌரவப்பட்டப்பெயரோ மேற்படி மூன்றுகருத்துகளில், முக்கியமாய் நிறைஎன்னுங் கருத்தைக்கொள்ளுகின்றது. ஆனதால், 'சான்றோன்' என்னும் பெயருக்கு 'நிறைந்தோன்' என்பது பொருளாம்.

தமிழிங்கிலேய அகராதி ஆசிரியர்கள்,

(iv) நிறைதல் என்பதற்கு (a) to be full எனவும்,
(b) to be great எனவும்,
(c) to be noble, dignified, excellent எனவும்,

அர்த்தம்பண்ணியிருக்கிறார்கள். அந்த அர்த்தத்திற்கிசைய, 'சான்றோன்' என்பதற்கு,

Great-man, பெரியோன் எனவும்,
Nobleman, மேன்மகன், மேலோன், சால்புற்ற சான்றாண்மையுடையோன் எனவுந் தாற்பரியமாகும்.

சால்பு என்பதற்கு (1) மேன்மை, (2) பண்பு, (3) ஊக்கம், (4) மாட்சிமை, (5) கல்விஎன்பது கருத்தாம்.

இந்த ஐந்து குணங்களும் ஒருசேரத்திரண்ட குணத்துக்குச் 'சால்பு' என்று பெயர். மேற்படி 63-வது கவியில், "சால்புற்ற சான்றாண்மை" என்று சொல்லியிருக்கின்றது. ஆனதால், 'சால்புற்றசான்றாண்மை' என்பதற்கு 'மேன்மை, பண்பு, ஊக்கம், மாட்சிமை, கல்வி ஆகிய ஐந்தையும் ஒருசேரப்பொருந்திய சான்றாண்மை' என்பது தாற்பரியமாம். சான்றோன்=சால்புற்ற சான்றாண்மை யுடையோன். ஆனதால், 'சான்றோன்' என்னும்பெயருக்கு,

(i) மேன்மையுடையவன், மேலோன், மேன்மகன் எனவும்,

(ii) பண்புடையவன், நற்குணங்களையுடையவன் எனவும்,

(iii) ஊக்கமுடையவன், புஜபலபராக்கிரமமுடையவன் எனவும்,

(iv) மாட்சிமையுடையவன், மிக்கோன், உயர்ந்தோன், ஆரியன் எனவும்,

(v) கல்வியுடையோன், அறிவுடையோன் எனவும் தாற்பரியமாம்.

ஆகையினாலே, 'சான்றோன்' என்பதற்குக் குலமேன்மைகள், நற்குணங்கள், புஜபலபராக்கிரமங்கள், வரையாதளிக்கும் நன்கொடைகள், நீதிசாஸ்திர கலைக்கியான அறிவுகள் இவ்வைந்தினையும் ஒருங்கேயுடையவன் என்பது பொருளாகும். இந்தக்குணங்கள் அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்கு இன்றியமையாத குணங்களென்று தமிழ்நூல்கள் கூறுகின்றன.

(iii) பெருந்தேவனார் பாரதவெண்பா, உத்தியோகபருவம், 4-வது கவி:

"வண்மையாற்கல்வியான் மாபலத்தாலாள்வினையால்
உண்மையாற் பாராளுரிமையால்—திண்மையால்
தேர்வேந்தர்வானேறத் தெள்ளாற்றில்வென்றானோ
டேர்வேந்தரேற்பாரெதிர்."

இக்கவியில், வேந்தர்குலத்தவர்களாகிய சத்திரியர்களுக்கு இருக்கவேண்டிய குணங்கள் ஏழு எனக் கூறியிருக்கிறது. அவைவருமாறு:

(i) வண்மை, இதற்கு ஈகை, நன்கொடை எனவும்,
(ii) கல்வி, இதற்கு அறிவு எனவும்,
(iii) மாபலம், இதற்கு புஜபலபராக்கிரமங்கள் எனவும்,
(iv) ஆள்வினை, இதற்கு எடுத்ததுமுடிக்குந்திறம் எனவும்,
(v) உண்மை, இதற்குச் சத்தியவாக்கு எனவும்,
(vi) பாராளுரிமை, இதற்கு நாடாளும்பாத்தியம் எனவும்,
(vii) திண்மை, இதற்குத் திடத்தமனம் எனவும் பொருளாகும்.

இவ்வேழுஞ் சான்றோனுக்கு இருக்கவேண்டிய லக்ஷணங்களாம். 'சான்றவன், சான்றோன்' என்னும் பெயர்களுக்கும் இதுவேபொருளாகும். அன்றியும், அங்கிலேயவித்துவானனை

உவின்சிலோ ஆசிரியர் எழுதிய அகராதியில் 'அரசன்' என்னுஞ் சொல்லுக்கு அடியிற்கண்டிருக்கிறபடி, அரசர்குணம் மூன்று:—(i) தூங்காமை, (ii) கல்வி, (iii) துணிவு. அரசியல்புநான்கு:—(i) அஞ்சாமை, (ii) ஈகை, (iii) அறிவு, (iv) ஊக்கம். அரசர்குணம் மூன்றையும், அரசரியல்பு நான்கையுஞ் சேர்த்துப் பார்வையிடும்போது அரசர்குலத்துக்குரிய சிறப்புக்குணங்களோடு 'கல்வியறிவே' அவர்களுக்கு இன்றியமையாதகுணமென விளங்குகின்றது. ஆனதால் அவர்களுக்குச் சிறப்புவகையால் அறிவுடையோரெனப் பெயராயிற்று.

இவற்றைத் திரட்டிப்பார்வையிடும்போது, 'சான்றோன்' என்பதற்குக் குலத்தாலுங், குணத்தாலும், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், அறிவாலும், மேன்மைபெற்று விளங்கிய சத்திரியன் என்பது தாற்பரியமாகும்.

இங்ஙனம் பின்னும் ஒருதிருட்டாந்தம் எடுத்துரைப்போம்.

தசரதமகாராஜனானவன் தன்புத்திரன் இராமனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய நினைத்து, அரசர்குலத்தவர்களாகிய மந்திரிகளிடத்தில் ஆலோசனை செய்யுதற்குச் சபாமண்டபத்தில் அவர்களைக் கூடிவரச்செய்து அங்ஙனங் கூடிவந்த அரசர் குலப்பெரியோர்களுக்கு இருக்கவேண்டிய லக்ஷணங்கள் இவைகளென :

(iv) கம்பராமாயணம், 'அயோத்தியாகாண்டம், மந்திரப்படலம், 6-வது, 7-வது, 8-வது, 9-வது, 14-வது, கவிகளிற் வரைந்திருக்கிறது. அவைவருமாறு :

6-வது கவி.

"குலமுதற்றொன்மையுங் கலையின்குப்பையும்
பலமுதற்கேள்வியும் பயனுமெய்தினார்
நலமுதனலியினு நடுவுநோக்குவார்
சலமுதலறுத்தருந் தருமந்தாங்கினார்."

இந்தக்கவியில் அவர்களைச்சுட்டி, 'குலமேன்மையுடையவர்கள்' எனவும், 'கல்விக்குப்பையுடையவர்கள்' எனவும், 'கேள்வியும் பயனுமுடையவர்கள்' எனவும், 'அருந்தருமந்தாங்கினார்' எனவுஞ் சொல்லியிருக்கின்றது.

7-வது கவி.

"உற்றறுகொண்டுமேல்வந் துறுபொருளுணருங்கோளார்
மற்றதுவினையின்வந்த தாயினுமாற்றலாற்றும்
பெற்றியர்பிறப்பின்மேன்மைப் பெரியவரரியநூலுங்
கற்றவர்மானநோக்கிற் கவரிமாவனையநீரார்."

இச்செய்யுளில், அவர்களைச்சுட்டி, 'பிறப்பின்மேன்மைப் பெரியவர்கள்' எனவும், 'அரியநூல்கள் கற்றவர்கள்' எனவும், 'கவரிமாவையொத்த மானமுடையவர்கள்' எனவுஞ் சொல்லியிருக்கிறது.

8-வது கவி.

"காலமுமிடனுமேற்ற கருவியுந்தெரியக்கற்ற
நூலுறநோக்கித்தெய்வ நுணித்தறங்குணித்தமேலோர்
சீலமும்புகழ்க்குவேண்டுஞ் செய்கையுந்தெரிந்துகொண்டு
பால்வருமுறுதியாவுந் தலைவற்குப்பயக்குநீரார்."

இந்தக்கவியில், அவர்களைச்சுட்டி, 'காலமுமிடனும் ஏற்ற கருவியுந்தெரியக்கற்ற நூலுறநோக்கித்தெய்வநுணித்தறங் குணித்தமேலோர்' எனவும், 'சீலமும்புகழ்க்குவேண்டுஞ் செய்கையுந்தெரிந்துகொண்டு பால்வருமுறுதியாவுந் தலைவற்குப்பயக்கும்நீரார்' எனவுங் கூறியிருக்கின்றது.

9-வது கவி.

"தம்முயிர்க்குறுதியெண்ணார் தலைமகன்வெகுண்டபோதும்
வெம்மையைத்தாங்கிநீதி விடாதுநின்றுரைக்கும்வீரர் [ம்
செம்மையிற்றிறம்பல்செல்லாத் தேற்றத்தார்தெரியுங்கால
மும்மையுமுணரவல்லா ரொருமையேமொழியுநீரார்."

இக்கவியில் அவர்களைச்சுட்டி, 'வெம்மையைத்தாங்கி நீதி விடாதுநின்றுரைக்கும்வீரர்' எனவும், 'செம்மையிற்றிறம் பல்செல்லாத் தேற்றத்தார்' எனவும், 'முக்காலமு முணர வல்லார்' எனவும் உரைத்திருக்கிறது.

14-வது கவி.

"வெய்யவன்குலமுதல் வேந்தர்மேல்வர்
செய்கையினொருமுறை திறம்பலின்றியே
வையம்யாளுண்ட வாண்டுகள்மாட்சியால்
ஐயமிலறுபதினாயிரம்மரோ."

இக்கவியில், 'வெய்யவன்குலமுதல் வேந்தர்மேலவர்' எனச் சொல்லியிருக்கின்றது. 'வெய்யவன்குலமுதல் வேந்தர் மேலவர்' என்பதற்கு, சூரியகுலத்தவர் முதலான அரசர்குலத்தவர்கள் 'மேலவர்' என்னப்பட்டிருக்கின்றனர் என்பதுபொருள். 'மேலவர்' என்னும் கௌரவப்பட்டப்பெயர், 'சான்றோர்' என்னும் கௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருள் கொண்டபெயரானமையால், சூரியசந்திரகுலத்தவர்களாகிய அரசர்குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' என்னும் கௌரவப் பட்டப்பெயர் வந்து வழங்கியது தெரியவருகிறது. ஆகவே 'சான்றோர், மேலவர்' எனப் பூர்வத்திற் பட்டப்பெயர்பெற்று வாழ்ந்திருந்தவர்கள் அரசர்குலத்தவர்கள் என்பது இதனால் ருசுவாகின்றது.

மேற்கூறிய கவிகளில் அரசர்குலப் பெரியோர்களுக்கு,

(i) குலமுதற்றொன்மையும், கலையின்குப்பையும், பலமுதற்கேள்வியும் பயனும் எய்தினவர்கள் எனவும்,

(ii) நடுவுநோக்குவர், தருமந்தாங்கினர் எனவும்,

(iii) பிறப்பின்மேன்மைப் பெரியர் எனவும்,

(iv) அரியநூல் கற்றவர் எனவும்,

(v) கவரிமாவனைய மானமுடையவர் எனவும்,

(vi) அறங்குணித்த மேலோர் எனவும்,

(vii) தலைவற்கு உறுதிபயக்கும் நீரார் எனவும்,

(viii) நீதிவிடாது நின்றுரைக்கும் வீரர் எனவும்,

(ix) செம்மையிற்றிறம்பல் செல்லாத்தேற்றத்தார் எனவும்,

(x) திரிகாலமுமுணரவல்லார் எனவும்,

(xi) வெய்யவன்குலமுதல் வேந்தர்மேலவர் எனவும் பெயர்கள்வந்திருக்கின்றமையால்,

'சான்றோர்' எனப் பெயர்பெற்ற அரசர்குலத்தவர்கள் 'அறிவால்' மாத்திரமல்ல, 'குலத்தாலும், குணத்தாலும், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும்' பெயர் பெற்றிருந்தனர் என்பது ருசுவாகின்றது.

இனிச் 'சான்றாண்மை' என்னும்பதத்திற்குத் தாற்பரியங் கூறுவோம்.

**B. சான்றாண்மை.**—இந்தச் 'சான்றாண்மை' என்னும்பதமும், 'சால்' என்னும் வினைமுதலினின்று பிறந்த பதமாம். ஆகவே, 'சான்றாண்மை' என்பதற்குச் 'சால்புத் தன்மை' என்பது சப்தார்த்தமாகும். அத்துடன் 'நிறைவு, ஊக்கம், மேன்மை' எனவும் அதற்குப் பொருளமையும். ஆகையினாலே, 'சால்புற்ற சான்றாண்மை' என்பதற்குப் 'பாராளுரிமையாகிய மேன்மையும், ஆள்வினை உண்மை திண்மைகளாகிய நற்குணங்களும், புஜபலபராக்கிரமங்களுக்கேதுவாகிய ஊக்கமும், வண்மை என்னப்பட்ட ஈகையாகிய மாட்சிமையும், கல்வியாகிய அறிவும் பொருந்திய நிறைந்த மேன்மை' என்பது பொருளாம். ஆனபடியினாலே,

சான்றவன்,

சான்றான்,

சான்றோன்,

என்னும் இந்த மூன்றுபெயர்களுக்கும் 'பாராளுரிமையும், நற்குணங்களும், புஜபலபராக்கிரமங்களும், ஈகையாகிய மாட்சிமையும், நீதிசாஸ்திரகலைக்கியான அறிவுகளும் நிறைந்த சத்திரியன்' என்பது பொருளாம்.

தமிழரசர்குலத்தவர்கள் தங்கள் சுயவரசாட்சியின்காலத்தில், இத்தன்மையுள்ளவர்களாயிருந்து வந்தார்கள் என்பது நிசம். ஆனதால், 'சான்றவன், சான்றான், சான்றோன்' எனப் பெயர்பெற்றவன் 'குலத்தாலுங், குணத்தாலும், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், அறிவாலும் மேன்மைபெற்றுவிளங்கிய அரசர்குலத்தவனாகிய சத்திரியன்' என்பது தாற்பரியமாம்.

இதுவுமன்றி, 'சால்' என்னும் வினையை மூலமாகக்கொண்டு பிறந்துவழங்கிவருகிற 'சாலி, சாலிகை, சாலூகம், சாலூரம், சாலேகம், சாலேயம்' என்னும் பதங்களெல்லாங் குலமேன்மையை யுணர்த்திய பெயர்களாக வந்திருக்கின்றன.

இந்த ஆறுபதங்களுக்கும் விபரமான தாற்பரியம் மேலே இரண்டாவது பிரகரணத்திற் கூறியிருக்கிறோம். அங்ஙனங் கண்டுகொள்க.

இங்ஙனம் இந்த ஆறுபதங்களையும் ஒருமுகமாகத் திரட்டிப் பார்வையிடின்,

(i) 'சாலி' என்பதற்கு 'உயர்குலத்தானியம்' எனவும்,
(ii) 'சாலிகை' என்பதற்கு 'உயர்குல அணி' எனவும்,
(iii) 'சாலூகம்' என்பதற்கு 'உயர்குலக்காய்' எனவும்,
(iv) 'சாலூரம்' என்பதற்கு 'உயர்குலமேன்மை' எனவும்,
(v) 'சாலேகம்' என்பதற்கு 'உயர்குல விருக்ஷம்' எனவும்,
(vi) 'சாலேயம்' என்பதற்கு 'உயர்தரநிலம்' எனவும் பொருளாம்.

இதுபோலவே, 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் பதங்களுக்குந் தனித்தனியே 'உயர்குலமானிடன்' என்பதுபொருளாகும்.

இதுநிற்க, இனிச் 'சான்றோன், சான்றான், சான்றவன்' என்னும் பெயர்கள் அரசர்குலப்பட்டப்பெயர் என்பதற்கு நூற்சாட்சிகள் எடுத்துரைப்போம்.

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரம்.

"சான்றோர்மிக்கோர் நல்லவர்மேலவ
ராய்ந்தோருயர்ந்தோ ராரியருலகென
வாய்ந்தவான்றோரறிவுடையோரே."

மேலே தாற்பரியங் கூறியிருக்கிறபிரகாரம், 'சான்றோர்' என்னும் சத்திரியகுலப்பட்டப்பெயரை விரிக்கின், 'சான்றவர், சான்றார், சான்றோர்' என மலர்ந்து ஒருபொருளில் வருகின்றன எனவும், 'மிக்கோர், நல்லவர், மேலவர், ஆய்ந்தோர், உயர்ந்தோர், ஆரியர், உலகு, ஆன்றோர், அறிவுடையோர்' என்னும் பூர்வ சத்திரியகுலப்பட்டப்பெயர்கள் 'சான்றோர்' என்னும் அரசர்குலக்கௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருள்

இனிச் 'சான்றாண்மை' என்னும்பதத்திற்குத் தாற்பரியங் கூறுவோம்.

**B. சான்றாண்மை.**—இந்தச் 'சான்றாண்மை' என்னும்பதமும், 'சால்' என்னும் வினைமுதலினின்று பிறந்த பதமாம். ஆகவே, 'சான்றாண்மை' என்பதற்குச் 'சால்புத் தன்மை' என்பது சப்தார்த்தமாகும். அத்துடன் 'நிறைவு, ஊக்கம், மேன்மை' எனவும் அதற்குப் பொருளமையும். ஆகையினாலே, 'சால்புற்ற சான்றாண்மை' என்பதற்குப் 'பாராளுரிமையாகிய மேன்மையும், ஆள்வினை உண்மை திண்மைகளாகிய நற்குணங்களும், புஜபலபராக்கிரமங்களுக்கேதுவாகிய ஊக்கமும், வண்மை என்னப்பட்ட ஈகையாகிய மாட்சிமையும், கல்வியாகிய அறிவும் பொருந்திய நிறைந்த மேன்மை' என்பது பொருளாம். ஆனபடியினாலே,

சான்றவன்,

சான்றான்,

சான்றோன்,

என்னும் இந்த மூன்றுபெயர்களுக்கும் 'பாராளுரிமையும், நற்குணங்களும், புஜபலபராக்கிரமங்களும், ஈகையாகிய மாட்சிமையும், நீதிசாஸ்திரகலைக்கியான அறிவுகளும் நிறைந்த சத்திரியன்' என்பது பொருளாம்.

தமிழரசர்குலத்தவர்கள் தங்கள் சுயவரசாட்சியின்காலத்தில், இத்தன்மையுள்ளவர்களாயிருந்து வந்தார்கள் என்பது நிசம். ஆனதால், 'சான்றவன், சான்றான், சான்றோன்' எனப் பெயர்பெற்றவன் 'குலத்தாலுங், குணத்தாலும், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், அறிவாலும் மேன்மைபெற்றுவிளங்கிய அரசர்குலத்தவனாகிய சத்திரியன்' என்பது தாற்பரியமாம்.

இதுவுமன்றி, 'சால்' என்னும் வினையை மூலமாகக்கொண்டு பிறந்துவழங்கிவருகிற 'சாலி, சாலிகை, சாலூகம், சாலூரம், சாலேகம், சாலேயம்' என்னும் பதங்களெல்லாங் குலமேன்மையை யுணர்த்திய பெயர்களாக வந்திருக்கின்றன.

இந்த ஆறுபதங்களுக்கும் விபரமான தாற்பரியம் மேலே இரண்டாவது பிரகரணத்திற் கூறியிருக்கிறோம். அங்ஙனங் கண்டுகொள்க.

இங்ஙனம் இந்த ஆறுபதங்களையும் ஒருமுகமாகத் திரட்டிப் பார்வையிடின்,

(*i*) 'சாலி' என்பதற்கு 'உயர்குலத்தானியம்' எனவும்,
(*ii*) 'சாலிகை' என்பதற்கு 'உயர்குல அணி' எனவும்,
(*iii*) 'சாலூகம்' என்பதற்கு 'உயர்குலக்காய்' எனவும்,
(*iv*) 'சாலூரம்' என்பதற்கு 'உயர்குலமேன்மை' எனவும்,
(*v*) 'சாலேகம்' என்பதற்கு 'உயர்குல விருக்ஷம்' எனவும்,
(*vi*) 'சாலேயம்' என்பதற்கு 'உயர்தரநிலம்' எனவும் பொருளாம்.

இதுபோலவே, 'சான்றவன், சான்றான், சான்றோன்' என்னும் பதங்களுக்குந் தனித்தனியே 'உயர்குலமானிடன்' என்பதுபொருளாகும்.

இதுநிற்க, இனிச் 'சான்றோன், சான்றான், சான்றவன்' என்னும் பெயர்கள் அரசர்குலப்பட்டப்பெயர் என்பதற்கு நூற்சாட்சிகள் எடுத்துரைப்போம்.

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரம்.

"சான்றோர்மிக்கோர் நல்லவர்மேலவ
ராய்ந்தோருயர்ந்தோ ராரியருலகென
வாய்ந்தவான்றோரறிவுடையோரே."

மேலே தாற்பரியங் கூறியிருக்கிறபிரகாரம், 'சான்றோர்' என்னும் சத்திரியகுலப்பட்டப்பெயரை விரிக்கின், 'சான்றவர், சான்றார், சான்றோர்' என மலர்ந்து ஒருபொருளில் வருகின்றன எனவும், 'மிக்கோர், நல்லவர், மேலவர், ஆய்ந்தோர், உயர்ந்தோர், ஆரியர், உலகு, ஆன்றோர், அறிவுடையோர்' என்னும் பூர்வ சத்திரியகுலப்பட்டப்பெயர்கள் 'சான்றோர்' என்னும் அரசர்குலக்கௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருள்

கொண்டபதங்கள் எனவும், திவாகரநூலாசிரியர்காலத்தில் 'சாணர்' என மரூஉமொழியாகாது, 'சான்றோர், சான்றார், சான்றவர்' என அப்பட்டமான சுத்தப்பெயர்ப்பதங்களாக வழங்கிவந்தன எனவுந் தெளிவாகவிளங்குகின்றது.

ஆனதால் 'சான்றோர்' என இந்தச்சூத்திரத்தில்வந்திருப்பது, அரசர்குலப்பட்டப்பெயராம். இவ்வாறுவந்திருக்கச், 'சாணர்' குலம் திவாகரம் நூலாசிரியரது ஜாதியட்டவணையில் வரவில்லையென்று சொல்லப்படாது. 'சாணர்' என வராமல், 'சான்றோர்' எனவந்து அரசர்குலப்பெயர்களுக்கெல்லாந் தலைப்பில் அக்குலத்தவர்களுக்குரிய பட்டப்பெயராக நிற்கின்றது.

'அறிவுடையோர்' என்னும்பெயருக்கு 'எக்குலத்தவராயினும் கல்வியறிவுபெற்றவர்கள்' எனத் தாற்பரியங்கூறிப் பொருளுரைக்கப்பார்ப்பவர்கள், 'மிக்கோர், நல்லவர், மேலவர், உயர்ந்தோர், உலகு' முதலான பெயர்களுக்கும் 'கல்வியறிவு பெற்றவர்கள்' எனப் பொருள்கூறின் ஏற்குமோ? குலங் குணங் கொடை புஜபலம் பாராளுரிமைகளோடு கல்வியறிவு கூடினாலேயல்லாது, மற்றப்படி ஒருவரும் 'மேலவர், உயர்ந்தோர், உலகு' முதலான பட்டப்பெயர் பெறுதற்கு யோக்கியராகார். ஆனதால், திவாகரநூலாசிரியர்காலத்தில் 'சாணர்' என்னும் மரூஉவல்ல, 'சான்றோர்' என்னும்பெயரே அரசர் குலப்பட்டப்பெயராக வழங்கிவந்திருப்பது ருசுவாகின்றது.

(v) தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், 20-வது சூத்திரம்.

"அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்
ஐவகைமரபின் அரசர்பக்கமும்
இருமூன்றுமரபின் ஏனோர்பக்கமும்."

இந்தச்சூத்திரவுறுப்பில், பார்ப்பார், அரசர், ஏனோர் எனக் குலவிபரம் வருகின்றது.

(vi) மேற்படி புறத்திணையியல், 21-வது சூத்திரம்.

"தகட்டபுசிறப்பிற் சான்றோர்பக்கமும்
கட்டினீத்த காலினானும்."

இங்ஙனம், 20-வது சூத்திரத்தில், 'அரசர்பக்கம்' எனக்கூறி யிருப்பதும், 21-வது சூத்திரத்தில், 'சான்றோர்பக்கம்' என வருவதும் ஒருகுலத்தையே சுட்டிச்சொல்லப்பட்டிருக்கின் றது. ஆகவே, 'சான்றோர்குலம்' என்பது அரசர்குலமேயாம்.

(vii) தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், 5-வது சூத்திரம்.

"அந்தணர்திறத்துஞ் சான்றோர்தேஎத்து
மந்தமில்சிறப்பிற் பிறர்பிறர்திறத்தினும்."

இந்தச்சூத்திரவுறுப்பில், அந்தணர்குலம் எனவும், சான் றோர்குலம் எனவும், பிறகுலங்கள் எனவுங் குலப்பிரிவுப்பெ யர்கள் வந்திருக்கின்றன. இதில் 'அந்தணர்குலம்' என்பது, மேலே 'பார்ப்பனக்குலம்' எனவும், இதில் 'சான்றோர்குலம்' என்பது, மேலே 'அரசர்குலம்' எனவும் வருவதால், 'அந்தண ர்குலம்' என்பது 'பார்ப்பார்குலம்' எனவும், 'சான்றோர்குலம்' என்பது 'அரசர்குலம்' எனவும் ஐயமற ருசுவாகின்றது.

இதனால், தொல்காப்பியர்நாளையில் 'சானார்' எனும் மரூ உமொழிப்பெயரல்ல, 'சான்றோர்' என்னும் அப்பட்டமான பட்டப்பெயரே அரசர்குலப் பட்டப்பெயராக வழங்கிவந்தி ருப்பது ருசுவாகும். 'சான்றோர்' என வருகின்றதானங்க ளில், இதனோடு ஒருபொருள்கொண்ட 'சான்றார், சான்றவர்' என்னும் பெயர்கள், தொகைநிலைபெற்று வருகின்றமையால், இம்மூன்றுபெயர்களும் அக்காலத்துவழக்கம் என்றுணர்க.

(viii) வெற்றிவேற்கை, 60-வது சூத்திரம்.

"சான்றோரில்லாத் தொல்பதியிருத்தலின்
தேன்றேர்குறவர் தேயநன்றே."

இதன் தாற்பரியம்.

"அரசர்களில்லாத பூர்வநகரங்களிற் குடியிருப்பதிலும், குறிஞ்சிநிலநாடாகிய மலைநாட்டில் காட்டுத்தேன் உண்டு சுகிக்கும் வேடர்களோடு குடியிருப்பது நலம்" என்பதாம். இந்த 60-வது சூத்திரம் அங்கிலேயபாஷையில் தேலர் ஆசிரி யரால் இதனடியிற்கண்டிருக்கிறபிரகாரம் மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றது.

"Rather than dwell in an ancient country without *rulers* it is better to live in the woods, among wild people who feed on honey." *W. Taylor's Oriental Manuscripts, Vol. II. Appendix.*

இதில், 'சான்றோர்' என்னும்பெயர் 'Rulers' என மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. 'Rulers' என்பதற்கு 'அரசர்' என்று பொருளாம். அன்றியும், இந்த 60-வது சூத்திரத்தில் வருகிற 'சான்றோர்' என்னும்பெயருக்கு எக்குலத்தவராயினும் அறிவொன்றையுடையவர் எனக் கருத்தமைத்து 'அறிவுடையோர்' எனப் பொருளுரைப்பின் பொருத்தமிலதாம். மேலும் 'சான்றோர்' என்னும்பெயரை விரித்துரைத்து, அதினுள் ஒருபொருளில் அமைந்திருக்கின்ற 'சான்றார், சான்றவர்' என்னும்பெயர்களை அது நிற்கின்றதானத்தில்வைத்துப் பொருளுரைப்பினும் பொருள்மாறுவாம்.

எவ்வாறெனில்,

(*i*) "சான்றோரில்லாத் தொல்பதியிருத்தலின்
தேன்றேர் குறவர் தேயநன்றே."

(*ii*) "சான்றாரில்லாத் தொல்பதியிருத்தலின்
தேன்றேர் குறவர் தேயநன்றே."

(*iii*) "சான்றவரில்லாத் தொல்பதியிருத்தலின்
தேன்றேர்குறவர் தேயநன்றே."

இந்த மூன்றிற்கும், அரசரில்லாத தொல்பதி என்பதே பொருளாம்.

இதற்கு வெற்றிவேற்கையில் ஒரு திருட்டாந்தம் எடுத்துக் காட்டுவோம்.

18-வது சூத்திரம்.

"சிறியோரெல்லாஞ் சிறியருமல்லர்."

இங்ஙனம் வந்திருக்கின்ற 'சிறியோர்' என்னும் பெயரை விரித்துரைத்து, அதனுள் ஒருபொருளில் அமைந்திருக்கின்ற 'சிறியார், சிறியவர்' என்னும் பெயர்களை அதுநிற்கின்ற தானத்தில் வைத்துப் பொருளுரைப்பினும் பொருள்மாறுவாம். எவ்வாறெனில்,

(i) "சிறியோரெல்லாஞ் சிறியருமல்லர்."
(ii) "சிறியாரெல்லாஞ் சிறியருமல்லர்."
(iii) "சிறியவரெல்லாஞ் சிறியருமல்லர்."

இந்த மூன்றிற்கும் ஒன்றுபோல 'சிறியவர்களெல்லாருஞ் சிறியவர்களுமல்லர்' என்பதே பொருளாம்.

20-வது சூத்திரம்.

"பெற்றேரெல்லாம் பிள்ளைகளல்லர்."

இதை விரித்துரைப்பினும் பொருள் மாருவாம். எங்ஙனமெனின்,

(i) "பெற்றேரெல்லாம் பிள்ளைகளல்லர்,"
(ii) "பெற்ருரெல்லாம் பிள்ளைகளல்லர்,"
(iii) "பெற்றவரெல்லாம் பிள்ளைகளல்லர்."

இந்த மூன்றிற்கும் ஒன்றுபோல "தாய்தந்தைகளெல்லாம் பிள்ளைகளல்லர்" என்பதேபொருளாம்.

இவ்வாறு மேற்படி நூலில்வருகின்ற பிறபெயர்களையும் விரித்துரைத்துக் கண்டுகொள்க.

இப்படியிருக்க, இவ்வாறுவருகின்ற

(i) சான்றேரில்லாத்தொல்பதி,
(ii) சான்ருரில்லாத்தொல்பதி,
(iii) சான்றவரில்லாத்தொல்பதி,

இம்மூன்றுக்கும் பொருள் ஒன்றேயாம்.*

இதனுல், அதிவீரராமபாண்டியன் நூலையினும், 'சாணர்' என்னும் மரூஉமொழிப்பெயரல்ல, 'சான்றேர்' என்னும் அப்பட்டமான இயற்பட்டப்பெயரே அரசருக்கு வழங்கிவந்திருப்பது ருசுவாகின்றது.

(ix) ஆத்திசூடி.

44-வது சூத். "சான்றேரினத்திரு."
82-வது சூத். "பெரியாரைத்துணைக்கொள்."
94-வது சூத். "மேன்மக்கள் சொற்கேள்."

---

* 'சாணர்' என்னும் மரூஉமொழியை அமைப்பினும் பொருந்தும்.

தாற்பரியம்.

சங்கச்செய்யுட்களில், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரத்திற் கண்டிருக்கிற அரசர்குலப்பட்டப்பெயர்கள் வருமிடங்களில், அரசர்குலத்தவர்களைவைத்து முதல் தாற்பரியஞ் செய்யவேண்டும்; பிறகுலத்தவர்களுக்குத் தாற்பரியம் ஏற்குமிடங்களில் உபதேசப்போதனையாகக் கூறிப் பொருளமைக்கவேண்டும். சங்கச் செய்யுட்களிலெல்லாஞ் 'சான்றோர்' என்னும் பெயர் வருகின்றவிடங்களில் அக்காலத்து உரையாசிரியர்கள் 'பெரியோர்கள், மேன்மக்கள்' என வைத்து உரை எழுதியிருக்கிறார்கள். கல்வியறிவொன்றையே உடையவர்கள் என்பது அதற்கு உரையாக ஏற்கமாட்டாது. அந்தப் பூர்வகாலத்தில், 'பஞ்சமர்கள்' கல்வியறிவுபெற்றவர்களானபோதிலும், 'மேலவர், மேன்மக்கள், பெரியோர்கள், உயர்ந்தோர்கள், உலகு' என்னும் பெயர்கள் அவர்களுக்கு ஏற்காதல்லவா? ஒளவையார் எழுதியிருக்கிற நூல்களிலும் அரசர்குலக்கௌரவப்பட்டப்பெயர்கள் வருமிடங்களில் ராசகுலத்தைச்சுட்டியே முதல் அருத்தம் அமைக்கவேண்டும். எவ்வாறெனில்,

44. "சான்றோரினத்திரு."

வெற்றிவேற்கையில் 'சான்றோர்' என்னும் பெயருக்குக் கூறியதாற்பரியம் இதற்கும் அமையும். 'சான்றோரினத்திரு' என்பதற்கு 'அரசர்குலத்தினர்களைச் சார்ந்திருந்துவா' என்பது இயல்பான சப்தார்த்த உரையாம். கொன்றைவேந்தன், 88-வது சூத்திரத்தில், 'வேந்தன்சீறினுந்துணையில்லை' என வருகிறபிரகாரம், ராசகோபம்நேரிடின் தங்களுக்குந் தங்கள் குலத்துக்குந் தீங்குகள்வந்து சம்பவிக்கும் என்பதை யுணர்ந்தோராய், ஒவ்வொருகுலத்தவரும் அரசர்குலத்தவர்களாகிய சத்திரியவங்கிசத்தவர்களுக்கு இணங்க நடந்துவர முயலவேண்டுமென்பது சப்தார்த்தப்பொருளாகும்.

அறிவொன்றையே உடையவர்களெல்லாருஞ் சான்றோர்களாவார்களா? விசாகப்பெருமாளையர் செய்திருக்கிற உரையில், 'சான்றோர்' என்னும் பெயருக்குக் 'கல்விகற்றவர்கள்',

என்றல்ல, 'பெரியோர்கள்' எனத்தாற்பரியஞ் செய்திருக்கிறார். 'கல்விகற்றவர்கள்' எனத்தாற்பரியஞ் செய்யப்புகின், பஞ்சமர்கள் கல்விகற்றவர்களாகிறகாலத்தில், "பஞ்சமர்களினத்திலிரு" என்பது தாற்பரியமாகுமல்லவா? இந்தத்தாற்பரியம் அந்தப்பூர்வகாலத்தில் ஏற்குமா? ஏற்காதென அறிந்தவர்களாய் உரையாசிரியர்கள் 'பெரியோர்' என வுரைக்கலாயினர்.

இராமானுஜகவிராயர், தமது ஆத்திசூடி விருத்தியுரையில், 'சான்றோரினத்திரு' என்பதற்குப் 'பகைவரால் இடையூறின்றிவாழுதற்குப் பெரியோருடைய கூட்டத்திலே சேர்ந்திரு' எனப்பொருளெழுதிவைத்திருக்கிறார். 'பகைவர்' என விரித்துரைத்திருப்பதால், 'சான்றோரினத்திரு' என்பதற்கு 'இராசாங்கத்தார் கூட்டத்தைச்சார்ந்திரு' என்பதே சப்தார்த்தமாம்.

"Associate with the great (=the noble) so as to be protected from your enemies."

எதிரிகளால்வருந்துன்பந்தீர்ந்து வாழுதற்கும், இராசகோபத்திற்குள்ளாகாதிருப்பதற்கும், நாடாள்பவர்களாகிய பெரியோர்களுக்கு இணங்கநடந்து, அவர்கள் தயவுபெற்றிருக்க வேண்டுவது முக்கிய எத்தனமாம். இந்தக்கருத்தை இருத்தியமைப்பதற்கு ஔவையார் இதற்குமுந்திய 43-வது சூத்திரத்தில், "சக்கரநெறிநில்" எனக்கூறியிருக்கிறாள். இதற்கு உரையாசிரியர் 'அரசனுக்கிணைவழியில் நீ அடங்கிநில்லு' என உரைகூறி, குடிசனங்கள் நாடாளுமன்னனுடைய கட்டளைப்படி நடந்துவரவேண்டுவது கடமைஎனக் காண்பித்திருக்கின்றனர். இந்தப்படி அரசன்கட்டளைக்கு அமைந்து நடக்க விரும்புகிறவர்களே துரைத்தனத்தாருக்கு இணங்கநடக்கப் பிரயாசப்படுகிறவர்கள் என விதந்து கூறித் தெளிவுகாட்டப் பட்டிருக்கிறது. ஆகவே முன்சார்புச்சூத்திரத்தாலும் 'சான்றோர்' என்னும்பெயர் அரசர்குலத்தவர்களைக் குறித்துவந்திருப்பது விளங்குகின்றது.

82. "பெரியாரைத்துணைக்கொள்" என்பதற்கு 'அரசரி

மையுடைய பெரியோர்களுடைய உதவியைத்தேடிக்கொள்' என்பது பொருளாம். பூர்வகாலத்தில், கல்வியறிவுபெற்றவர் களெல்லாரும் பெரியோர்களாவரர்களா? ஆகவே 'பெரியார்' மேலே கூறியிருக்கிற சான்றோரேயாம்.

94. "மேன்மக்கள் சொற்கேள்" என்பதற்கு 'மேன்மக் கள் என்னப்பட்ட அரசாட்சியாருடைய கட்டளைக்கு இணங்க நடந்துவா' என்பது உரையாம். 'உயர்ந்தோருடைய சொல்லை நீகேளு' என்பது உரையாசிரியர் கூறியிருக்கிற தாற்பரியம். அந்தப் பூர்வகாலத்தில், கல்வியறிவொன்றைமாத்திரம் பெற் றிருப்பவர்களெல்லாரும் 'மேன்மக்கள்' ஆவார்களா?

மேற்படி மூன்று சூத்திரங்களிலும், 'சான்றோர், பெரியார், மேன்மக்கள்' என்னும்பெயர்கள் வந்திருக்கின்றன. இப் பெயர்கள், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத் திரத்திற் கூறியிருக்கிற ஒருபொருள்கொண்ட கௌரவப்பட் டப்பெயர்கள். 'பெரியார்' என்பது 'மேலோர்' என்பதற்கும், 'மேன்மக்கள்' என்பது 'உயர்ந்தோர், உலகு' என்னும்பெயர் களுக்குஞ் சரியாம். ஆனதால், 'சான்றோர், பெரியார், மேன் மக்கள்' என்னும் பெயர்கள் அரசர்குலப் பட்டப்பெயர்களா கும். அன்றியும்,

(i) "பெரியோரைத் துணைக்கொள்,"
(ii) "பெரியாரைத் துணைக்கொள்,"
(iii) "பெரியவரைத் துணைக்கொள்" என்னும் மூன்று பேதமான தொடர்களுக்கும் பொருளொன்றாய் வந்திருக்கிற பிரகாரம்,

(i) "சான்றோரினத்திரு,"
(ii) "சான்றாரினத்திரு,"
(iii) "சான்றவரினத்திரு" என்னும் மூன்றுவகைத் தொடர்களுக்கும் பொருள் ஒன்றேயாம்.

அதுபோல "மேன்மக்கள்சொற்கேள்" என்பதில் 'மேன் மக்கள்' என்னும் பெயர் நிற்கிற தானத்தில் 'உயர்ந்தோர்' எனவைத்து விரிக்கவருகிற,

(i) "உயர்ந்தோர் சொற்கேள்,"

(ii) "உயர்ந்தார் சொற்கேள்,"

(iii) "உயர்ந்தவர்சொற்கேள்" என்னும் மூன்று விதத்தொடர்களுக்கும் பொருள் ஒன்றாகும்.

ஆகவே, ஔவையார் காலத்திலும், 'சாணார்' என்னும் மரூஉமொழிப்பெயரல்ல, 'சான்றோர்' என்னும் அப்பட்டமான பட்டப்பெயரே ராசகுலப்பெயராக வழங்கிவந்திருப்பது ருசுவாகின்றது.

அன்றியும், நாலடியார் என்னுஞ் சிறந்த நீதிநூலானது பாண்டியன்காலத்தில் செய்யப்பட்டு, பாண்டியன்சபையில் அரங்கேற்றியது. மேலே கூறியிருக்கிறபிரகாரம், இந்தநூல் பாண்டியனை முன்னிலைவிளியாகவைத்து, பாண்டியனுக்கும் அவன் குலத்தவர்களுக்கும் உபதேசஞ் சொல்லுகின்றது. அறம்பொருள் என்னும் இருபால்களிலடங்கும் உயர்ந்து ஆழ்ந்த நீதிநெறிப்பொருட்சாரத்தை ராசகுலத்தவர்கள் கற்று, நீதிவழுவாது செங்கோற்செலுத்தி நாடாண்டுவருதற்கு வகை சொல்லுகின்றது. அறநெறிப்பொருள் எக்குலத்தவர்களுக்கும் ஏற்குமெனினும், அரசர்குலத்தவர்களுக்கே அந்தப்பூர்வ காலத்தில் முதல் உபதேசப்பொருளாயிற்று. பொருட்பாலோ மன்னர்குலத்தவர்களுக்கே முக்கிய உபதேசங் கூறுகின்றது. பிறகுலத்தவர்களுக்கு ஏற்கு மிடமறிந்து அமைத்துக்கொள்ள வேண்டும்.

திருவள்ளுவர் செய்திருக்கிற திருக்குறளுக்கும் இவ்வாறே நினைத்து, பூர்வவழக்கத்திற்கு ஏற்கத்தாற்பரியஞ் செய்துகொள்ளல்தகும். பொருட்பாலில் அரசியல் அங்கவியல் முதலியன கூறுகையில், அரசர்கள் செங்கோற்செலுத்தும் விஷயங்களில் குலமேன்மையல்லாது, குணமேன்மை கொடைமேன்மை புஜபலபராக்கிரமமேன்மை பாராளும் மேன்மைகளும் வேண்டியபடியால், அவற்றிற்கு ஏற்க நடந்துகொள்ளும்படியான உபதேசங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆனதால், பொருட்பால் அரசநீதியைச் சொல்லுகிறது.

மையுடைய பெரியோர்களுடைய உதவியைத்தேடிக்கொள்' என்பது பொருளாம். பூர்வகாலத்தில், கல்வியறிவுபெற்றவர் களெல்லாரும் பெரியோர்களாவார்களா? ஆகவே 'பெரியார்' மேலே கூறியிருக்கிற சான்றேரேயாம்.

94. "மேன்மக்கள் சொற்கேள்" என்பதற்கு 'மேன்மக் கள் என்னப்பட்ட அரசாட்சியாருடைய கட்டளைக்கு இணங்க நடந்துவா' என்பது உரையாம். 'உயர்ந்தோருடைய சொல்லை நீகேளு' என்பது உரையாசிரியர் கூறியிருக்கிற தாற்பரியம். அந்தப் பூர்வகாலத்தில், கல்வியறிவொன்றைமாத்திரம் பெற் றிருப்பவர்களெல்லாரும் 'மேன்மக்கள்' ஆவார்களா?

மேற்படி மூன்று சூத்திரங்களிலும், 'சான்றோர், பெரியார், மேன்மக்கள்' என்னும்பெயர்கள் வந்திருக்கின்றன. இப் பெயர்கள், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத் திரத்திற் கூறியிருக்கிற ஒருபொருள்கொண்ட கௌரவப்பட் டப்பெயர்கள். 'பெரியார்' என்பது 'மேலோர்' என்பதற்கும், 'மேன்மக்கள்' என்பது 'உயர்ந்தோர், உலகு' என்னும்பெயர் களுக்குஞ் சரியாம். ஆனதால், 'சான்றோர், பெரியார், மேன் மக்கள்' என்னும் பெயர்கள் அரசர்குலப் பட்டப்பெயர்களா கும். அன்றியும்,

(*i*) "பெரியோரைத் துணைக்கொள்,"
(*ii*) "பெரியாரைத் துணைக்கொள்,"
(*iii*) "பெரியவரைத் துணைக்கொள்" என்னும் மூன்று பேதமான தொடர்களுக்கும் பொருளொன்ருய் வந்திருக்கிற பிரகாரம்,

(*i*) "சான்றோரினத்திரு,"
(*ii*) "சான்ருரினத்திரு,"
(*iii*) "சான்றவரினத்திரு" என்னும் மூன்றுவகைத் தொடர்களுக்கும் பொருள் ஒன்றேயாம்.

அதுபோல "மேன்மக்கள்சொற்கேள்" என்பதில் 'மேன் மக்கள்' என்னும் பெயர் நிற்கிற தானத்தில் 'உயர்ந்தோர்' எனவைத்து விரிக்கவருகிற,

(i) "உயர்ந்தோர் சொற்கேள்,"

(ii) "உயர்ந்தார் சொற்கேள்,"

(iii) "உயர்ந்தவர்சொற்கேள்" என்னும் மூன்று விதத்தொடர்களுக்கும் பொருள் ஒன்றாகும்.

ஆகவே, ஔவையார் காலத்திலும், 'சாணர்' என்னும் மரூஉமொழிப்பெயரல்ல, 'சான்றோர்' என்னும் அப்பட்டமான பட்டப்பெயரே ராசகுலப்பெயராக வழங்கிவந்திருப்பது ருசுவாகின்றது.

அன்றியும், நாலடியார் என்னுஞ் சிறந்த நீதிநூலானது பாண்டியன்காலத்தில் செய்யப்பட்டு, பாண்டியன்சபையில் அரங்கேற்றியது. மேலே கூறியிருக்கிறபிரகாரம், இந்தநூல் பாண்டியனை முன்னிலேவிளியாகவைத்து, பாண்டியனுக்கும் அவன் குலத்தவர்களுக்கும் உபதேசஞ் சொல்லுகின்றது. அறம்பொருள் என்னும் இருபால்களிலடங்கும் உயர்ந்து ஆழ்ந்த நீதிநெறிப்பொருட்சாரத்தை ராசகுலத்தவர்கள் கற்று, நீதிவழுவாது செங்கோற்செலுத்தி நாடாண்டுவருதற்கு வகை சொல்லுகின்றது. அறநெறிப்பொருள் எக்குலத்தவர்களுக்கும் ஏற்குமெனினும், அரசர்குலத்தவர்களுக்கே அந்தப்பூர்வகாலத்தில் முதல் உபதேசப்பொருளாயிற்று. பொருட்பாலோ மன்னர்குலத்தவர்களுக்கே முக்கிய உபதேசங் கூறுகின்றது. பிறகுலத்தவர்களுக்கு ஏற்கு மிடமறிந்து அமைத்துக்கொள்ள வேண்டும்.

திருவள்ளுவர் செய்திருக்கிற திருக்குறளுக்கும் இவ்வாறே நினைத்து, பூர்வவழக்கத்திற்கு ஏற்கத்தாற்பரியஞ் செய்து கொள்ளல்தகும். பொருட்பாலில் அரசியல் அங்கவியல் முதலியன கூறுகையில், அரசர்கள் செங்கோற்செலுத்தும் விஷயங்களில் குலமேன்மையல்லாது, குணமேன்மை கொடைமேன்மை புஜபலபராக்கிரமமேன்மை பாராளும் மேன்மைகளும் வேண்டியபடியால், அவற்றிற்கு ஏற்க நடந்துகொள்ளும்படியான உபதேசங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆனதால், பொருட்பால் அரசநீதியைச் சொல்லுகிறது.

நாலடியாரின் இரண்டாவது பாகமாகிய பொருட்பாலே உய்த்தாராய்ந்து பார்க்கும்போது, மன்னர்குலக்கௌரவப்பட்டப்பெயராகிய 'சான்றோர்' என்னும்பேரும், அதன் தாற்பரியமும் நன்ருய் விளங்குவதால், அந்த நாலடியார் என்னும் நூலிலிருந்து சில உதாரணங்கள் இங்ஙனம் பேர்த்தெழுதுவோம்.

பொருட்பாலானது சப்தார்த்தப்படிக்கு அரசர்களுக்கும் ராசகுலத்தவர்களுக்கும் உபதேசங் கூறுகின்றது. இந்த நூலில், அரசர்களும் அரசகுலத்தவர்களும் 'மேன்மக்கள்' என்னப்பட்டிருக்கிருர்கள். 'மேன்மக்கள்' என்பது மன்னர் குலத்தவர்களுக்குரிய பட்டப்பேராம். 'சான்ருேர்' என்பதற்கும் சப்தார்த்தப்படிக்கு 'மேன்மக்கள்' என்பதே தாற்பரியவுரையாகும். குலமேன்மையில்லாது, அறிவொன்றையே உடைய பிறகுலத்தவர்களுக்கு 'மேன்மக்கள்' என்னும்பெயர் ஒருபோதும்ஏற்கமாட்டாது. கல்வியறிவுபெற்றிருக்கும் பஞ்சமர்களே'மேன்மக்கள்' என்று யாராவது சொல்லுவார்களா ?

(x) இது நமக்குத் தெளிவாய்த்தோன்றுதற்கு, நாலடியார், பொருட்பால், மேன்மக்கள் என்னும் 16-வது அதிகாரத்தை இங்ஙனம் பேர்த்தெழுதித் தாற்பரியங்கூறுவோம்.

## 16 - வது அதிகாரம், மேன்மக்கள்.

இந்த அதிகாரம் மேன்மக்களுடைய தன்மையைக் கூறுகின்றது.

1-வது கவி.

" அங்கண்விசும்பி னகனிலாப்பாரிக்குந்
திங்களுஞ்சான்ருேரு மொப்பர்மற்—றிங்கண்
மறுவாற்றுஞ் சான்ருேரஃதாற்ருர் தெருமந்து
தேய்வரொருமாசுறின்."

இந்தக்கவியில், 'சான்ருேர்' எனவந்திருப்பதற்கு, அதிகாரத்தில் 'மேன்மக்கள்' எனத்தலையலங்காரமிட்டிருக்கின்றது. ஆகவே, 'சான்ருேர்' என்பதற்கு, 'மேன்மக்கள்' என்பது தாற்பரியமாம். இங்ஙனம், சந்திரனேச்சான்ருேருக்கு ஒப்பி

ட்டுப்பேசினபோதிலும் இரண்டிற்கும் ஒரு பேதமுண்டு என வும், சந்திரன் தன் உடலிலிருக்கின்ற களங்கத்தைப்பொறுத் துக்கொள்ளுமாயினும், சான்றோர்கள் தங்களுக்கொரு மா னவீனம் நேரிடுங்காலத்தில் அதைப் பொறுக்கார்கள் என வுஞ் சொல்லியிருக்கிறது. 'சான்றோர்' எனவந்திருப்பது அரசர்குலத்தவர்களாகிய மேன்மக்களைக்குறிக்கும். பாட் டின் தாற்பரியத்திற்கிசைய உயிரினும் மானம் பெரிதென் றெண்ணுஞ் சத்திரியகுலவொழுக்கம் ஒத்திருக்கின்றது. 'சா ன்றோர்' என்னும்பெயர் நிற்கின்றதானத்தில், 'சான்றார்' என வைத்து, "திங்களுஞ் சான்றாருமொப்பர்" எனக்கூறி னும் பொருளொன்றேயாம்.

2-வது கவி.

"இசையுமெனினு மிசையாதெனினும்
வசைதீரவெண்ணுவர் சான்றோர்—விசையி
னரிமாவுளங்கிழித்தவம்பினிற்றீதோ
வரிமாப்பிழைப்பெய்தகோல்."

இந்தக்கவியிலும், 'சான்றோர்' என வந்திருப்பது ராச குலத்தவர்களாகிய மேன்மக்களுக்காம். செய்யுளின் தாற்பரி யத்திற்கிசையச் செயங்கிடைத்தாலுங் கிடையாதிருந்தாலும், உயிரினும் மானம் பெரிதென்றெண்ணுஞ் சத்திரியகுலவொ ழுக்கமும் ஒத்திருக்கின்றது. "வசைதீரவெண்ணுவர் சா ன்றார்" எனவரினும் பொருள் மாறாது.

3-வது கவி.

"நரம்பெழுந்து நல்கூர்ந்தாராயினுஞ்சான்றோர்
குரம்பெழுந்து குற்றங்கொண்டேறா—ருரங்கவரா
வுள்ளமெனுநாரினாற் கட்டியுளவரையாற்
செய்வர் செயற்பாலவை."

இங்ஙனம், 'சான்றோர்' எனவந்திருப்பது அரசர்குலத்தவர் களாகிய மேன்மக்களையே குறிக்கும். செய்யுளின் தாற்பரி யமும் மேன்மக்கள் தன்மையையுணர்த்துகின்றது. மேன்மக் களாகிய சத்திரியர் மிகுதரித்திரவான்களாகிப்போனபோதி

லும், 'ஏற்பதிகழ்ச்சி' என ஔவையார் அரசர்குலத்தவர்களை முக்கியமாகநோக்கி யுரைத்திருக்கின்றவாக்குக்கிணங்க, ஒருபோதும் ஏற்றற்றொழில் புரியார்கள்.' பார்ப்பனக்குலத்தவர்களுக்கோ, ஏற்றற்றொழிலானது அவர்கள் குலத்துக்குரிய அறுதொழில்களிலொன்றாண்மையால், 'ஏற்றல்' அவர்களுக்கு இகழ்ச்சியாகாது, குலமேன்மைத்தொழிலாம். "சான்றோர்குரம்பெழுந்து குற்றங்கொண்டோர்" எனக்கூறினும் பொருளமையும்.

4-வது கவி.

"செல்வழிக்கண்ணொருநாட்காணினுஞ் சான்றவர்
தொல்வழிக்கேண்மையிற்றோன்றப் புரிந்தியாப்பர்
நல்வரைநாட சிலநாளடிப்படிற்
கல்வரையுமுண்டாநெறி."

இக்கவியில், 'சான்றவர்' என வந்திருப்பது, 'சான்றோர்' என்னும் பெயருக்கொப்பந்தம், மன்னர்குலத்தவர்களாகிய மேன்மக்களைக்குறிக்கின்றது. இங்ஙனம், பாண்டியனை முன்னிலைவிளியாகவைத்துக் கூறியிருக்கிறது.

இதற்குத்தாற்பரியம்: "அழகியமலைகளையுடைய நாடாளும் அரசனாகிய பாண்டியா, நீ வனவேட்டையாடப்போகின்றகாலங்களில், மானிடர்காலடிகள் மலையின்மீது படவே, அம்மலைமீது வழியுண்டாகப்பார்த்ததில்லையா? அதுபோல உன்குலத்தவர்களாகிய சத்திரியச்சான்றவர்கள் முகப்பழக்கமில்லாதவர்களையுங் கண்ணுற்றமாத்திரத்தில், அவர்களைத் தொல்வழிச்சிநேகிதர்போல மதித்து, அவர்களுக்கு நட்புப் பாராட்டிவருவது அறிவாயே; இது உன்குலமேன்மை. நீயும் அந்தப்படிசெய்துவா" என்பதாம். பாண்டியனை முன்னிலைவிளியாகவைத்திராத செய்யுட்களிலும், இவ்வாறுவைத்துப் பொருள்கூறவேண்டும். வேதாந்தப்பொருள்கள் பிறகுலத்தவர்களுக்கும் ஏற்குமிடங்களில், பொருள்கூறிக் காட்டிவரவேண்டும். பிறகுலத்தவர்களுக்கு 'மேன்மக்கள், சான்றோர், சான்றவர்' என்னும்பெயர்கள் ஏற்காவாம். இங்ஙனம் "சான்றோர்தொல்வழிக்கேண்மையிற்றோன்றப்புரிந்தியாப்பர்" எனக்கூறினும் பொருள்மாறாது.

5-வது கவி.

" புல்லாவெழுத்திற் பொருளில்வறுங்கோட்டி
கல்லாவொருவ னுரைப்பவும்—கண்ணோடி
நல்லார்வருந்தியுங் கேட்பரே மற்றவன்
பல்லாருணைல் பரிந்து."

இந்தக்கவியில் வந்திருக்கின்ற 'நல்லார்' என்னும் பெயர், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரத்தில், 'சான்றோர்' என்னும் பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்டு வந்திருக்கிற பெயர்களில் ஒன்றும். உரையாசிரியர் 'நல்லார்' என்பதற்கு, 'மேன்மக்கள்' எனப் பொருள்கூறியிருக்கிறார். ஆனதால், 'சான்றோர், சான்றவர், நல்லார்' என்னும் அரசர்குலப்பட்டப்பெயர்கள், 'மேன்மக்கள்' என்னும் பதத்துடன் ஒருபொருள்கொண்டனவாம். இதில், அரசர்குலத்தவர்களாகிய 'நல்லார்' எனப்பெயர்பெற்ற மேன்மக்கள் தங்கள் சுயமானத்தை யல்லாது, அயலாருடைய மானத்தையுங் காத்துநடப்பர் எனக் கூறியிருக்கிறது. இதுவும் பூர்வ சத்திரியகுல வொழுக்கங்களிலொன்றும்.

6-வது கவி.

" கடித்துக்கரும்பினைக் கண்டகரநூறி
யிடித்துநீர்கொள்ளினு மின்சுவைத்தேயாகும்
வடுப்படவைதிறந்தக் கண்ணுங்குடிப்பிறந்தார்
கூறார்தம்வாயிற் சிதைந்து."

இங்ஙனம் வந்திருக்கின்ற 'குடிப்பிறந்தார்' * என்னும்பெயருக்கு, 'உயர்குலமாகிய அரசர்குலத்திற் பிறந்தவர்கள்' என்பது பொருளாம். ஆகவே, 'குடிப்பிறந்தார்' என்னும்பெயர், 'சான்றோர், சான்றவர், சான்றார், நல்லார், மேன்மக்கள்' என்னும்பதங்களுடன் ஒருபொருளில்வரும். இந்தச்செய்யுளில், அரசர்குலத்தவர்களாகிய 'வான்றோய் குடிப்பிறந்தார்' எனப் பெயர்பெற்ற மேன்மக்கள், எதிரிகள் தங்களை மான

---

* குடிப்பிறந்தார் = Men of high birth,
= Noblemen.

வீனமாக நிந்தைமொழி பேசினபோதினும், தங்கள் வாயால் மாறியவர்களே மானபங்கமாக நிந்தைமொழிபேசார்கள் எனவருகின்றது. இதுவும் பூர்வ சத்திரியகுலவொழுக்கங்களிலொன்றும்.

7-வது கவி.

"கள்ளார்கள்ளுண்ணுர் கடிவகடிந்தொரீஇ
யெள்ளிப்பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய்கூருர் வடுவறுகாட்சியார்
சாயிற் பரிவதிலர்."

இந்தக்கவியில் வந்திருக்கின்ற 'வடுவறுகாட்சியார்' என்னும் பெயருக்கு 'மானம் பெரிதெனநிற்கும் அரசர்குலத்தவர்களாகிய அறிவுடையோர்' என்பதுபொருளாம். ஆனதால், 'வடுவறுகாட்சியார்' என்னும்பெயரும், 'சான்ருேர், சான்றவர், சான்ருர், நல்லார், அறிவுடையோர், மேன்மக்கள்' என்னும்பெயர்களுடன் ஒருபொருள்கொண்டதாம். இங்ஙனம், அரசர்குலத்தவர்களாகிய 'வடுவறுகாட்சியார்' எனப்பெயர்பெற்ற மேன்மக்கள் பொய்வாக்குரையார் எனக்கூறியிருக்கின்றது. இதுவும் பூர்வசத்திரியகுலவொழுக்கங்களிலொன்ருகும். 'வடுவறுகாட்சியார்' என்பதற்குக் 'களங்கமற்ற அறிவுடையார்' என்பது உரையாசிரியர் தாற்பரியம். ஆனதால், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரப்பிரகாரம், 'அறிவுடையார்' என்னும்பெயர் 'சான்ருேர்' என்னும் கௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருளில் வந்தது.

8-வது கவி.

"பிறர்மறையின் கட்செவிடாய்த்திறனறிந்
தேதிலாரிற்கட் குருடனாய்த்—தீய
புறங்கூற்றின் மூகையாயநிற்பானேல்யாது
மறங்கூறவேண்டா மவற்கு."

இதில், 'அவற்கு (=அவனுக்கு)' எனவந்திருப்பது 'வடுவறுகாட்சியானுக்கு' என்னுந் தொடரைக் குறிக்கிறது. 'வடுவறுகாட்சியார்' என்பதற்கு, அரசர்குலத்தவர்களாகிய மேன்

மக்கள் என்பது கருத்தாம். இந்தச்செய்யுளிற் கூறியிருக்கின்ற மூன்று ஒழுக்கங்களையும் ஒருங்கேயுடையவர்கள் மேன்மக்கள் ஆவர். இதுவும் பூர்வசத்திரியகுலவொழுக்கங்களிலொன்றும்.

## 9-வது கவி.

"பன்னாளுஞ்சென்றக்காற் பண்பிலார்தம்முழை
யென்னானும்வேண்டுப வென்றிகழ்ப—வென்னானும்
வேண்டினுநன்று மற்றென்று விழுமியோர்
காண்டொறுஞ்செய்வர் சிறப்பு."

இந்தக்கவியில் வந்திருக்கின்ற 'விழுமியோர்' என்னும் பதத்திற்கு, அரசர்குலத்தவர்களாகிய மேன்மக்கள் என்பது பொருளாம். ஆகவே, 'விழுமியோர்' என்னும்பெயரும் 'சான்றோர்' முதலானபெயர்களுடன் ஒருபொருள்கொண்டதாம். இங்ஙனம், அரசர்குலத்தவர்களாகிய 'விழுமியோர்' எனப்பெயர்பெற்ற மேன்மக்கள் நன்கொடையளிப்பதற்குச் சடையார்என வருகிறது. இதுவும் பூர்வசத்திரியகுலவொழுக்கங்களிலொன்றாகும்.

## 10-வது கவி.

"உடையாரிவரென் றொருதலையாப்பற்றிக்
கடையாயார் பின்சென்றுவாழ்வ—ருடைய
பிலந்தலைப்பட்டது போலாதேநல்ல
குலந்தலைப்பட்டவிடத்து.

இக்கவியில் வந்திருக்கின்ற 'உடையார், நல்லகுலம்' என்னும் பெயர்களுக்கு, அரசர்குலத்தவர்களாகிய மேன்மக்கள் என்பது பொருளாம். இங்ஙனம், அரசர்குலத்தவர்களாகிய 'உடையார்' எனப் பெயர்பெற்ற மேன்மக்களைச் சார்ந்து நிற்பவர்கள் எப்போதும் வாழ்வடைவார்கள் என்பது தாற்பரியம். 'உடையார்' என்பது தொண்டைமண்டலத்து அகமுடையச்சான்றோருக்கு ஒருபட்டப்பெயராம். கன்னடிய நாட்டரசருக்குப் பூர்வமுதல் நாளதுவரையினும், 'உடையார்' என்பது பட்டப்பெயராக வழங்கிவந்திருக்கிறது. யாழ்ப்பாண

நாட்டிலும், காணியாட்சிக்காரர்களுக்கு 'உடையார்' என்பது பட்டப்பெயர். தொண்டைமண்டலத்துச் சேத்திரங்களி லிருக்கிற கல்வெட்டுகளில், பூர்வநிலமானியமளித்த அரசர் களுக்கு 'உடையார்' எனப்பட்டப்பெயர் சேர்த்தெழுதியிருப் பதைக்காணலாம். இந்தச்செய்யுளிற் கூறியிருப்பதும் பூர்வ சத்திரியவொழுக்கங்களிலொன்றும்.

இந்த 16-வது அதிகாரத்தில், மூலத்திலும் உரையிலும் வந்திருக்கிற 'மேன்மக்கள், சான்றோர்,* சான்றவர், பெரி யோர், நல்லார், நற்குடிப்பிறந்தார், வடுவறுகாட்சியார், அறிவுடையோர், விழுமியோர், உடையார்' என்னும்பெயர் கள், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரத் தில் வருகின்ற பெயர்களைப்போல ஒருபொருள்கொண்ட பெ யர்களாய் அரசர்குலத்தைச் சுட்டிவந்திருக்கின்றன.

(xi) நாலடியார், பொருட்பால், 15-வது அதிகாரம், குடிப்பிறப்பு, 2-வது கவி :

"சான்றாண்மைசாயலொழுக்க மிவைமூன்றும்
வான்றோய்குடிப்பிறந்தார்க் கல்லது—வான்றோயு
மைதவழ்வெற்ப படாஅபெருஞ்செல்வ
மெய்தியக்கண்ணும் பிறர்க்கு."

இங்ஙனம், 'வான்றோய்குடிப்பிறந்தார்' எனப்பெயர்பெற்ற அரசர்குலத்தவர்களாகிய மேன்மக்களுக்குச் 'சான்றாண் மை, சாயல், ஒழுக்கம்' இவைமூன்றும் உண்டெனக் கூறி யிருக்கிறது. 'சான்றாண்மை, சாயல், ஒழுக்கம்' என்பதற்குச் 'சால்புத்தன்மையாகிய பெருந்தன்மையும், குலமேன்மையும், நற்குண நற்செய்கைகளுமுடைத்தாயிருக்கை' என்பது பொரு ளாம். ஆனதால், 'சான்றோர்' என்னும் பெயருக்குச், 'சான் றாண்மைசாயலொழுக்கம் இம்மூன்றையும் ஒருங்கேயுடைய குலத்தவர்கள்' என்பது தாற்பரியமாம். இந்தச் செய்யுளில், ஆகாயத்தை யளாவிநின்று மேகங்கள் கவிந்துமூடுகிற மலை களையுடைய அரசனாகிய பாண்டியா, சான்றாண்மைசாயல்

* சான்றோர்=சான்றார்.

ஒழுக்கம் இவைமூன்றும் உன்குலத்தைப்போலொத்த சத்திரியகுலத்தவர்களுக்கு உண்டேயல்லாது, பிறகுலத்தவர்கள் எவ்வளவு பொருளுடையவர்களாயிருந்தபோதிலும், அவர்களுக்கில்லை எனக் கூறியிருக்கின்றது. இந்த அதிகாரத்தில் 'நற்குடிப்பிறந்தார், வான்றேய்குடிப்பிறந்தார்' என வந்திருக்கிற பெயர்களுக்கு, 'மேன்மக்கள்' என உரையாசிரியர் தாற்பரியங் கூறியிருக்கிறார்.

(xii) நாலடியார், பொருட்பால், 17-வது அதிகாரம், பெரியாரைப்பிழையாமை.

இந்த அதிகாரத்தின் தலைப்பில், 'பெரியார்' எனவும்,
2-வது கவியில், 'அறிவினர்' எனவும்,
3-வது கவியில், 'மிகைமக்கள்'* எனவும்,
4-வது கவியில், 'பெருமையுடையார்' எனவும்,
5-வது கவியில், 'சான்றோர்' எனவும்,
6-வது கவியில், 'தொல்புகழாளர்' எனவும்,
7-வது கவியில், 'மன்னர்' எனவும்,
9-வது 10-வது கவிகளில், 'பெரியார்' எனவும் வந்திருக்கிற பெயர்கள், அரசகௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்டனவாம்."

நாலடியார், 18-வது அதிகாரம், நல்லினஞ்சேர்தல்,
9-வது கவி.

" நிலநலத்தானந்திய நெல்லேபோற்றத்தங்
குலநலத்தாலாகுவர் சான்றோர்—கலநலத்தைத்
தீவளிசென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினஞ்சேரக்கெடும்."

இந்தக்கவியில், அறிவுமுதலான சிறப்புகளிருந்தபோதிலும், குலமேன்மையில்லாதபோயின், எவரும் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர்பெற அயோக்கியராவர் எனச் சொல்லியிருக்கின்றது. பூர்வகாலத்தில் அரசர்குலத்தவர்களுக்குக் குலமேன்மையோடு அறிவுமுதலான சிறப்புக்

* மிகைமக்கள்=மேன்மக்கள்.

குணங்களு முண்டாயிருந்தமையால், 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் அக்குலத்தவர்களுக்குரிய பெயரா யிற்று.

இவற்றை ஒருங்கே திரட்டிப்பார்வையிடும்போது, நாலடியார் என்னும்நூல் எழுதப்பட்டகாலத்தில், மன்னர்குலத்தவர்களுக்குச் 'சாணர்' என்னும் மரூஉமொழிப்பெயரல்ல, 'சான்றோர்' என்னும் அப்பட்டமான கௌரவப்பட்டப்பெயர் வழங்கிவந்திருப்பது ருசுவாகின்றது.

திருவள்ளுவர் திருக்குறள்.

திருவள்ளுவர் பகவனுக்கு ஆதியிடத்திற்பிறந்த புத்திரன். பகவன் பார்ப்பனக்குலத்திலும், ஆதி என்பவள் தவமுனிக்கு ஒரு பிராமணப்பெண்ணிடத்திலும் பிறந்தவர்கள். அந்த ஆதி என்பவள் முதல் உறையூர்ப்பெரும்பறையன் வீட்டிலும், பின்பு உறையூருக்கடுத்தமேலூரில் நீதியையன்வீட்டிலும் வளர்ந்தபெண். இந்த ஆதிக்கும் பகவனுக்கும் புதல்வனாக வந்துதித்தவர் திருவள்ளுவர். ஆனதால் இவர் சுத்தப்பறையர்குலத்தில் உதித்தவரென்று சொல்லுதற்கு ஏதுவில்லை. இவர் சிறுபிராயமுதல் கல்வியறிவுகளில் மிகுதேர்ச்சிபெற்றவர். திருக்குறளை எழுதுதற்குத் திருமூலர்திருமந்திரம் மூவாயிரமும், நாலடியார் என்னும் நீதிநூலும் திருவள்ளுவருக்கு முன்னூல்களாயிருந்தன. இந்த மூன்று நீதிநூல்களில், திருமூலர் எழுதியநூல் ஆதிநூல். அது அப்பட்டமான பூர்வ சுத்தத்தமிழில் எழுதப்பட்டிருக்கின்றது. தமிழரசர் மகிமை பெற்றிருந்தகாலத்தில் நாலடியார் என்னும் நீதிநூல் எழுதப்பட்டது. மதுரைக் கல்விச்சங்கங்களில் கடைச்சங்கம் முடிவடையப்போகிறகாலத்தில் திருவள்ளுவரிருந்தார். இந்துக்கள் பூலோக சராசர உற்பத்திக்கு மூலகாரணமாகிய வஸ்து ஆண்பெண்டன்மை விரவிய பொருளாயிருக்கவேண்டுமென அபிப்பிராயங்கொண்டார்கள். ஒருவித்துப் பயன்படுதற்கு விளைநிலம்வேணடும். அதுபோல ஒரு சிருட்டியுண்டாகிறதற்கும் வித்தும்நிலமும்வேண்டும். வித்து ஆணென்றும் இடம் பெண்ணென்றும் வைத்துக்கொண்டனர். அவற்றை

லிங்கமும் ஆவிடையுமாக்கி நிர்மிதஞ்செய்தார்கள். இவ்விரு தன்மையும் ஒன்ருய்ப் பொருந்திநிற்பதைச் சிவசத்தி எனவும், சத்திசிவம் எனவுங் கூறினர். அன்றியும் சிவபிரான் உடலை ஆண்ருபம்பாதி பெண்ருபம்பாதியாக்கிய சித்தாந்தத் தாற்பரியமும் இதுவேயாம். அன்னையில் நிலமும் பிதாவில் வித்துந்தோன்றி ஒரு சிசு பூலோகத்தில் உற்பத்தியாகின்றது என வைத்து, "அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்" என்ருர்கள். புத்திரோற்பத்திக்கு ஆண்பெண் என்னுமிருதன்மைப்பொருத்தம் வேண்டியதுபோல, சராசர உற்பத்திக்கும் கடவுளுக்குள் ஆண்பெண்டன்மைப் பொருத்தமிருக்க வேண்டுமென்றெண்ணினர்.

(xiii) இந்த அபிப்பிராயத்தைத் திருவள்ளுவர் ஒப்பி, திருக்குறள், கடவுள்வாழ்த்து, 1-வது கவியில் அமைத்து வைத்திருக்கின்றனர் என்பது இந்துமத நூலாசிரியரது சித்தாந்தம்.

1-வது கவி.

"அகரமுதலவெழுத்தெல்லாமாதி
பகவன்முதற்றேயுலகு."

இந்தக்கவியில் 'ஆதிபகவன் முதற்றேயுலகு' என்றெழுதி வைத்திருக்கிருர். 'ஆதிபகவ்ன் முதற்றேயுலகு' என்பதற்கு 'உலகம் ஆதிபகவனை முதலாகவுடைத்து' என்பது இயல்புத் தாற்பரியம். இதற்கு உள்ளுறைப்பொருள்: உலக உற்பத்திக்கு ஆண்பெண்டன்மைகளை யொருங்கேபொருந்திய ஆதி பகவனுகிய கடவுள் முதற்காரணமாயிருப்பதுபோல் திருவள்ளுவருடைய உற்பத்திக்கு அவருக்கு அன்னையாகிய ஆதியும், பிதாவாகிய பகவனும் அவர் முன்னறிந்தகாரணராயிருந்தனர். கடவுளினிடத்தில் ஆண்பெண்டன்மைகள் ஒருங்கே பொருந்தியிருப்பதால், திருவள்ளுவர் தம்முடைய தாய்தந்தையர்கள் பெயரால் அக்கடவுளுக்கு 'ஆதிபகவன்' எனப் பெயர்கூறியிருக்கிருர். ஆனதால், 'ஆதிபகவன்' என்பதற்கு 'உற்பத்திக்குக் காரணமாகிய ஆண்பெண்டன்மைகள் ஒருங்கேபொருந்திய கடவுள்' என்பது சப்தார்த்தமாம். ஆகவே

திருவள்ளுவர் தம்முடைய தாயாராகிய ஆதிபெயரையும், தந்தையாகிய பகவன்பெயரையும் இருபெயரொட்டுப்பெய ராகிக் கடவுளுக்கு நாமகரணஞ்சூட்டி இந்துக்களுடைய உலக உற்பத்தி மூலக்கருத்தை அந்தப்பெயரில் அமைத்துவைத் திருப்பதாக விளங்குகிறது.

திருக்குறள் என்னும் நூலைப் புகழ்ந்துபேசுகிற திருவள்ளுவ மாலையானது தமிழ்க் கடைச்சங்கத்தைச்சேர்ந்த நாற்பத் தொன்பது புலவர்களால் ஆளுக்கொருகவியாகப் பாடப்பட் டிருக்கின்றது. அந்தப்புலவர்களிற் சிலர் பாண்டியனை முன் னிலைவிளியாகவைத்துப் பேசியிருக்கிறார்கள். பொருட்பால் முழுவதும் அரசியலுக்குரிய நீதிநூலைப் போதிக்கையில் 'சான்றோர்' என்னும் அரசர்குலக்கௌரவப்பட்டப்பெயர் அதில் வந்து வழங்கியிருக்கிறது. ஆனதால், இந்தத் திருக் குறளிலிருந்து சில திருட்டாந்தங்கள் இங்ஙனம் பேர்த்தெழு திக்காட்டுவோம்.

(xiv) திருக்குறள், பொருட்பால், 99-வது அதிகாரம், சான்றாண்மை.

இந்த அதிகாரம் "சான்றோர், சான்றார், சான்றவர்" என் னும் பெயர்களுக்கு மூலபதமின்னதெனவும், அவற்றின் தாற் பரியமின்னதென்றுந் தெளிவுறக்காட்டுகின்றது. 'சான்றோர்' என்பதற்குச் சால்புத்தன்மையுடையோர், சான்றாண்மை யுடையோர், பலசிறப்புக்குணங்களும் நிறைந்து அவைகளை யாளுந்தன்மையுடையோர், குலம் குணங் கொடை புஜபலம் பாராளுரிமை கல்வியாகிய மேன்மைகளையுடையோர் என் பது தாற்பரியமாம்.

1-வது கவி.

"கடனென்பநல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு."

இந்தக்கவியிலுள்ள 'சான்றாண்மை' என்னும்பதம் 'சால்' என்னும் வினைமுதலினின்று பிறந்தது. இம்மொழிக்குச் சகல சிறப்புக்குணங்களுஞ் சிறப்புச் செய்கைகளும் ஒருங்கே

பொருந்தியவன் என்பது பொருளாம். 'சான்றோன்' எனப் பட்டப்பெயர்பெற்றவன் நற்குடிப்பிறப்புடையோனாமையா ல், நற்குணச்சிறப்பும் நற்செய்கைச்சிறப்புமுடையோனுயுமி ருக்கவேண்டும் என இந்தச்செய்யுள் கூறுகின்றது.

2-வது கவி.

"குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மென்னலத்துள்ளதூஉமன்று."

இக்கவியில் ஒருவன் வான்றோய்குடிப்பிறந்தோனுயிருந்த போதிலும், அவனுக்கிருக்கவேண்டிய லக்ஷணங்களிராது போயின் அவன் 'சான்றோன்' என்னுங் கௌரவப்பட்டம் பெறுதற்கு யோக்கியனாகான் எனக் கூறியிருக்கிறது. இங்ஙனம் 'சான்றோர்' எனவந்திருக்கின்ற பெயருக்குச் 'சால்புத் தன்மைபெற்றோர்' என்பது கருத்தாம்.

3-வது கவி.

"அன்புநாணொப்புரவு கண்ணோட்டம்வாய்மையோ
டைந்துசால் பூன்றியதூண்."

இச்செய்யுளில் வந்திருக்கின்ற 'சால்பு' என்னும்பெயர் 'சால்' என்னும் வினைமுதலடியாய்ப் பிறந்துவந்திருக்கிற தொழிற்பெயராம். ஆனதால் சால்புத்தன்மையுடையவர்க ளாகிய சான்றோருக்குக் குடிகள்மேல் அன்பும், தீங்குபுரிய நாணமும், வரையாதளிக்குங் கொடையும், பழைய நட்புப்பா ராட்டுஞ்சீரும், சத்தியவாக்குமிருக்கவேண்டும்எனக் கூறியி ருக்கின்றது.

4-வது கவி.

"கொல்லாநலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லாநலத்தது சால்பு."

இதில் சால்புத்தன்மையானது யாவரிடத்திலும் தீமைபுரி யாதொழுகும் ஒழுக்கம்என உரைத்திருக்கிறது.

5-வது கவி.

"ஆற்றுவாராற்றல் பணிதலதுசான்றோர்
மாற்றாரை மாற்றும்படை."

திருவள்ளுவர் தம்முடைய தாயாராகிய ஆதிபெயரையும், தந்தையாகிய பகவன்பெயரையும் இருபெயரொட்டுப்பெய ராகிக் கடவுளுக்கு நாமகரணஞ்சூட்டி இந்துக்களுடைய உலக உற்பத்தி மூலக்கருத்தை அந்தப்பெயரில் அமைத்துவைத் திருப்பதாக விளங்குகிறது.

திருக்குறள் என்னும் நூலைப் புகழ்ந்துபேசுகிற திருவள்ளுவ மாலையானது தமிழ்க் கடைச்சங்கத்தைச்சேர்ந்த நாற்பத் தொன்பது புலவர்களால் ஆளுக்கொருகவியாகப் பாடப்பட் டிருக்கின்றது. அந்தப்புலவர்களிற் சிலர் பாண்டியனை மூன் னிலைவிளியாகவைத்துப் பேசியிருக்கிறார்கள். பொருட்பால் முழுவதும் அரசியலுக்குரிய நீதிநூலைப் போதிக்கையில் 'சான்றோர்' என்னும் அரசர்குலக்கௌரவப்பட்டப்பெயர் அதில் வந்து வழங்கியிருக்கிறது. ஆனதால், இந்தத் திருக் குறளிலிருந்து சில திருட்டாந்தங்கள் இங்ஙனம் பேர்த்தெழு திக்காட்டுவோம்.

(xiv) திருக்குறள், பொருட்பால், 99-வது அதிகாரம், சான்றாண்மை.

இந்த அதிகாரம் "சான்றோர், சான்றார், சான்றவர்" என் னும் பெயர்களுக்கு மூலபதமின்னதெனவும், அவற்றின் தாற் பரியமின்னதென்றுந் தெளிவுறக்காட்டுகின்றது. 'சான்றோர்' என்பதற்குச் சால்புத்தன்மையுடையோர், சான்றாண்மை யுடையோர், பலசிறப்புக்குணங்களும் நிறைந்து அவைகளை யாளுந்தன்மையுடையோர், குலம் குணங் கொடை புஜபலம் பாராளுரிமை கல்வியாகிய மேன்மைகளையுடையோர் என் பது தாற்பரியமாம்.

1-வது கவி.

"கடனென்பநல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு."

இந்தக்கவியிலுள்ள 'சான்றாண்மை' என்னும்பதம் 'சால்' என்னும் வினைமுதலினின்று பிறந்தது. இம்மொழிக்குச் சகல சிறப்புக்குணங்களுஞ் சிறப்புச் செய்கைகளும் ஒருங்கே

பொருந்தியவன் என்பது பொருளாம். 'சான்றோன்' எனப் பட்டப்பெயர்பெற்றவன் நற்குடிப்பிறப்புடையோனுனமையா ல், நற்குணச்சிறப்பும் நற்செய்கைச்சிறப்புமுடையோனுயுமி ருக்கவேண்டும் என இந்தச்செய்யுள் கூறுகின்றது.

2-வது கவி.

"குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மென்னலத்துள்ளதூஉமன்று."

இக்கவியில் ஒருவன் வான்றோய்குடிப்பிறந்தோனுயிருந்த போதிலும், அவனுக்கிருக்கவேண்டிய லக்ஷணங்களிராது போயின் அவன் 'சான்றோன்' என்னுங் கௌரவப்பட்டம் பெறுதற்கு யோக்கியனுகான் எனக் கூறியிருக்கிறது. இங்ஙனம் 'சான்றோர்' எனவந்திருக்கின்ற பெயருக்குச் 'சால்புத் தன்மைபெற்றோர்' என்பது கருத்தாம்.

3-வது கவி.

"அன்புநாணொப்புரவு கண்ணோட்டம்வாய்மையோ
டைந்துசால் பூன்றியதூண்."

இச்செய்யுளில் வந்திருக்கின்ற 'சால்பு' என்னும்பெயர் 'சால்' என்னும் வினைமுதலடியாய்ப் பிறந்துவந்திருக்கிற தொழிற்பெயராம். ஆனதால் சால்புத்தன்மையுடையவர்க ளாகிய சான்றோருக்குக் குடிகள்மேல் அன்பும், தீங்குபுரிய நாணமும், வரையாதளிக்குங் கொடையும், பழைய நட்புப்பா ராட்டுஞ்சீரும், சத்தியவாக்குமிருக்கவேண்டும்எனக் கூறியி ருக்கின்றது.

4-வது கவி.

"கொல்லாநலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லாநலத்தது சால்பு."

இதில் சால்புத்தன்மையானது யாவரிடத்திலும் தீமைபுரி யாதொழுகும் ஒழுக்கம்என உரைத்திருக்கிறது.

5-வது கவி.

"ஆற்றுவாராற்றல் பணிதலதுசான்றோர்
மாற்றாரை மாற்றும்படை."

இங்ஙனம் சால்புத்தன்மையுடைய சான்றோர் எதிரிகளை உபாயத்தாலிணக்கி வெல்லும் வல்லபமுடையவர்கள் எனச் சொல்லியிருக்கின்றது.

6-வது கவி.

" சால்பிற்குக் கட்டளையாதெனிற்றோல்வி
துலையல்லார் கண்ணுங்கொளல்."

இதற்கு எதிரிகள் இழிந்தவர்களேயாயின் 'சான்றோர்' அவர்களோடெதிர்த்துப் போர்புரிந்து வெற்றிபெறக் கருதார் என்பது தாற்பரியமாம். சான்றோருக்குச் சான்றாண்மைக் குணங்களுண்டாயிருப்பதே அதற்குக் காரணமாகும். இழிந்தவர்களை வெல்லுங்காலத்தில் இவர்கள் தங்களுக்குச் சமமானவர்களாகிவிடுவார்களென நினைத்து அவ்வாறு செய்கின்றனர்.

7-வது கவி.

" இன்னாசெய்தார்க்கு மினியவேசெய்யாக்கா
லென்னபயத்ததோ சால்பு."

இந்தக்கவியில், சால்புத்தன்மையுடைய சான்றோர் தங்களுக்குத் தீமைபுரியும் எதிரிகளுக்கும் நன்மையேபுரிவர் எனக் கூறியிருக்கின்றது.

8-வது கவி.

" இன்மையொருவற்கிழிவன்று சால்பென்னுந்
திண்மையுண்டாகப்பெறின்."

இதில் சால்பென்னுந் திண்மையையுடைய 'சான்றோன்' தரித்திரமடைந்தபோதிலும், சான்றாண்மைக்குப் பங்கம் வரநடவான் எனச் சொல்லியிருக்கிறது. 'சால்பென்னுந் திண்மையுடையோன்' என்பதற்குக் குலமேன்மையும், மனவலிமையும், புஜபலமும், சத்தியவாக்கும், உரமென்னுங் கல்வியறிவுமுடையோன்என்பது தாற்பரியமாம்.

9-வது கவி.

" ஊழிபெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழியெனப்படுவார்."

இந்தக்கவியில், சான்ருண்மைக்காழியெனப்படுபவர்களாகி ய சான்ரோர்கள் கடலுங்கரையும் நிலைகுலையும் ஊழிகாலங்க ளாகிய கல்பாந்தப்பிரளயகாலங்கள் வந்தபோதினும், சான் ருண்மையாகிய கடற்கரைவரம்பழிய அவ்வெல்கையைத் தாண்டி ஒருபோதும் நடவாரென உரைத்திருக்கின்றது. 'சான் ருண்மைக்கு ஆழியெனப்படுவார்' என்னுந் தொடருக்குச் 'சால்புத்திண்மையாகிய சமுத்திரத்திற்குக் கரைஎனப்படு கின்றவர்கள்' என்பது தாற்பரியமாம். இத்தன்மையுடைய வர்களே சான்ரோர்குலத்தவர்களாவர்.

## 10-வது கவி.

"சான்றவர்சான்ருண்மை குன்றினிலந்தான்
றுங்காதுமன்னோ பொறை."

இங்ஙனம் சான்ரோர்கள் சான்ருண்மையற்றவர்களாயின், பெரியபூமியானது தன் பாரத்தைத் தாங்கிக்கொள்ளமாட் டாதுஎன்பது தாற்பரியம். இதற்கு அரசர்குலத்தவர்களா கிய சான்ரோர்கள் பூமிபாரந்தாங்கி அதைப் பாதுகாப்பதற் குச் சான்ருண்மையுடையவர்களாயிருக்கவேண்டும் என்பது கருத்தாம்.

இந்த 99-வது அதிகாரப்பொருளே, பொருட்பால் கூறுகின்ற முக்கியநோக்கப்பிரகாரம், அரசவம்கிசத்தவர்களாகிய சான் ரோர்குலத்தவர்களுக்கு அமைத்துப் பொருள்கூறின், சால் புற்ற சான்ருண்மைக்குரிய சத்திரிய லக்ஷணங்களனைத்தை யும் ஒருங்கேயுடையவர்கள் சான்ரோர்குலத்தவர்கள்என்பது பொருளாகும். மற்ற அதிகாரங்களுக்கொப்பந்தம் இதிலும் வேதாந்தக்கருத்தையமைத்து, பிறகுலங்களுக்கு ஏற்குமிடங் களில் பொருளுக்கேற்கப் பேசியுரைத்தலும் வழுவன்ரும். அரசர்களுக்கு புத்திபோதனைகூறுகின்ற இந்தப் பொருட் பாலில், தொல்காப்பிய நூற்பிரகாரம் 'சான்ரோர்' என்னும் அரசர்குலப்பட்டப்பெயர் வந்திருப்பதையும், அந்தப்பெயரு க்கு மூலபதம் 'சால்' என்னும் வினையெனத் தோன்றவுரைத் திருப்பதையும், சால்பு என்னுங்குணத்தில் 'மேன்மை, பண் பு, ஊக்கம், மாட்சிமை, கல்வி' என்னும் லக்ஷணங்களும்,

திண்மை என்பதில் 'வலிமை, மெய்மை, உரம், நிதானம், பாரம்' என்னுந்தன்மைகளும் இணைந்துவந்திருப்பதையுங் கூர்ந்துணரவேண்டும்.

ஆகவே, திருவள்ளுவர்காலத்திலும் 'சாணார்' என்னும் மரூஉமொழிப்பெயரல்ல, தொல்காப்பிய நூற்பிரகாரம், 'சான்றோர்'* என்னும் அப்பட்டமான கௌரவப்பட்டப்பெயர்களே வழங்கிவந்திருப்பது ருசுவாகின்றது.

இனிக் கம்பராமாயணத்திலிருந்து சில உதாரணங்கள் எடுத்துரைப்போம்.

(xv) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், திருவபிஷேகப்படலம், ஏட்டுப்பிரதியில் 35-வது கவி :

[அச்சுப்பிரதியிலுள்ள 35-வது கவி ஏட்டுப்பிரதியிலில்லை.]

"அந்தணர்வணிகர்வேளாண் மரபினராலிநாட்டுச்
சந்தணிபுயத்துவள்ளற் சடையனேயனையசான்றோர்
உய்ந்தனமடியோமென்னு முவகையருவரிநாண
வந்தனரிராமன்கோயில் மங்கலத்துரிமைமாக்கள்."

இந்தக்கவியில் ஸ்ரீராமருடைய பட்டாபிஷேகத்திருக்கோலங் காணவரும்படி நாடெங்ஙனும் பறைசாற்றியவுடனே, அந்தணரும், வணிகரும், வேளாண்மரபினரும், சந்தணிபுயத்துவள்ளற் சடையனேயனைய சான்றோரும், மிகுதிரளாக அயோத்திமாநகரத்திற்கு வந்தார்கள்எனச் சொல்லியிருக்கின்றது. 'அந்தணர்' என்பது முதலாவது குலமாகிய பார்ப்பனக்குலத்தையும் 'வணிகர்' என்பது மூன்றாவது குலமாகிய செட்டிக்குலத்தையும் 'வேளாண்மரபினர்' என்பது நான்காவது குலமாகிய சூத்திரகுலத்தையும் 'சான்றோர்' என்பது இரண்டாவது குலமாகிய அரசர்குலமென்னப்பட்ட சத்திரிய குலத்தையும் குறிக்கும். இந்தப்பிரகாரம், கம்பநாடர் தொல்காப்பியநூற்பிரகாரம் அரசர்குலத்தவர்களுக்குத் தன்காலத்தில் சான்றோர்குலத்தவர்களெனப் பெயர்வந்து வழங்கியமையால், அரசர்குலத்தைச் சான்றோர்குலமென எழுதிவைத்திரு

* சான்றோர்=சான்றார்.

க்கிறார். மேற்படி கவியில், ராசகுலத்திற்குச் சான்றோர்குல மெனப்பெயர்வந்திருக்கின்றமையால் 'சான்றோர்' என்னும் பெயருடன் ஒருபொருளில் தொகைநிலைப்பெயர்களாக வருகின்ற 'சான்றார், சான்றவர்' என்னும்பெயர்களும் அந்த அரசர்குலத்திற்கேயுரியபெயர்களாகும். அந்தப்படிக்கு அரசர்குலத்திற்குச் 'சான்றார்குலம்' எனவும், 'சான்றவர்குலம்' எனவும் பெயர்கள்வந்து வழங்குகின்றன. இப்படியிருக்க, சான்றோர்குலத்தவர்கள் அரசர்குலத்தவர்களாகிய சத்திரியகுலத்தவர்களல்லவென்று யார்சொல்லத்துணியலாம்?

(xvi) கம்பராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், அரசியற் படலம், 50-வது கவி:

"ஆன்றவர்க்குரியதாய வரசினைநிறுவியப்பால்
ஏன்றெனக்குரியதாய கருமமுமியற்றற்கொத்த
சான்றவர்நின்னினில்லை யாகலாற்றருமந்தானே
போன்றநீயானேவேண்ட வத்தலைபோதியென்றான்."

இந்தக்கவியில் ஸ்ரீராமர் அனுமானைப்பார்த்து, 'சான்றவர் நின்னினில்லை' என்கிறார். 'சான்றவர் நின்னினில்லை' என்பதற்கு 'அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களில் உன்னிலுமுயர்ந்த சத்திரியனில்லை' என்பது பொருளாம். மேலும், 'ஆன்றவர்க்குரியதான வரசினைநிறுவி' எனவும் வந்திருக்கிறது. அதற்குச் 'சான்றோருக்குரியதான அரசைநிறுத்தி' என்றும், 'அரசர்குலத்தவர்களுக்குரிய அரசைநிறுத்தி' என்றும் பொருளாகும்.

(xvii) மேற்படி கிஷ்கிந்தாகாண்டம், நாடவிட்டபடலம், 50-வது கவி:

"முல்லையுமுருந்துமுத்து முறுவலென்றுரைத்தபோது
சொல்லையுமமிர்தும்பாலுந் தேனுமென்றுரைத்தொன்றும்
அல்லதொன்றுவதில்லை யமிர்திற்குமுவமையுண்டோ
வல்லையேலறிந்துகோடி மாறிலாவாறுசான்றோய்."

இக்கவியில் ஸ்ரீராமர் வாயுபுத்திரனைப்பார்த்து, 'சான்றோய்'

என்கிறார். 'சான்றோய்' என்பதற்குச் 'சான்றோனே' எனவும், அரசர்குலத்தவனே, சத்திரியனே' எனவும் பொருளாம்.'

மேற்படிபடலம், 65-வது கவியிலும் அனுமான் 'சான்றோன்' என்னப்பட்டிருக்கிறான்.

(xviii) இவைகளையன்றி,

அயோத்தியாகாண்டம், நகர்நீங்குபடலம், 5-வது, 138-வது கவிகளையும்,
,, ஆற்றுப்படலம், 14-வது கவியையும்,
,, கிளைகண்டுநீங்கு படலம், 89 - வது, 126-வது, 137-வது கவிகளையும்,
ஆரணியகாண்டம், கவந்தன்படலம், 25-வது, 42-வது கவிகளையுங்காண்க.

(xix) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், பிரமாஸ்திரப்படலம், 211-வது, கவி:

"சான்றோர்மாதைத்தக்கதரக்கன் சிறைதட்ட
வான்றோர்சொல்லுநல்லற மன்னுன்வசமானால்
மூன்றாய்நின்றபேருலகொன்றாய் முடியாவேற்
றோன்றாவோவென்வல்லிவின் வீரத்தொழிலம்மா."

இங்ஙனம், சீதைக்குச் 'சான்றோர்மாது' எனப் பெயர் வந்திருக்கிறது. 'சான்றோர்மாது' என்பதற்குச் 'சான்றோர் குலப்பெண்,* அரசர்குலப்பெண், சத்திரியகுலப்பெண்' என்பது தாற்பரியமாகும்.

(xx) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், மந்திரப்படலம், 23-வது கவி:

"மற்றவன்பின்னுற மகோதரப்பெயர்க்
கற்றடந்தோளினு னெரியுங்கண்ணினன்
முற்றுறநோக்கினன் முடிவுமன்னதாற்
கொற்றவகேளென வினையகூறினன்."

இந்தக்கவியில், இராவணன் சபாமண்டபத்திற்கூடிய மந்

---

* "சாணார்குலப்பெண்" என்பது மரூஉ.

திரிகள் படைத்தலைவர்களோடு ஆலோசனைசெய்கையில் அவனுடைய மந்திரிகளிலொருவனாகிய மகோதரன் இன்னபடி சொல்ல ஆரம்பித்தானென்று சொல்லியிருக்கிறது. இராவணன் மந்திரியாகிய இந்த மகோதரன் சான்றோர்குலச்சத்திரியன் என்னப்பட்டிருக்கிறான்.*

(xxi) திவாகர நூலாசிரியனான சேந்தன் சான்றோர்குலச்சத்திரியன், அதற்கு விபரம்வருமாறு :

(a) திவாகரம், தெய்வப்பெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"வடநூற்கரசன் தென்றமிழ்க்கவிஞன்
கவியரங்கேற்று முபயகவிப்புலவன்
செறிகுணத்தம்பற் கிழவோன்சேந்த
னறிவுகரியாக தெரிசொற்றிவாகரத்து
முதலாவது தெய்வப்பெயர்த்தொகுதி."

இதில் சேந்தனுக்கு 'அம்பற்கிழவோன்' எனப் பெயர்வத்திருக்கிறது. 'அம்பற்கிழவோன்' என்பதற்குக் காவிரிநதித்தீரத்திலிருந்த சிறுநாடுகளிலொன்றாகிய "அம்பன்நாட்டிற்குரியவன், அம்பன்நாட்டரசன்" என்பது பொருளாம்.†

---

* திருவெண்காட்டுச்சான்றோர்மடம், தாமிரசாதனம், காண்க.

† "அம்பற்கிழவோன்" என்னுந்தொடரில் வந்திருக்கின்ற 'கிழவோன்' என்னும்பெயர் மருதநிலப்பூமியாண்டுவந்த அரசன்பெயராம்.

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 139-வது சூத்திரம், மருதநிலத்தலைவன்பெயர்.

"ஊரன்மகிழ்நன் கிழவனென்றிவை,
சாலிமருதத் தலைவன்பெயரே."

இந்தச்சூத்திரத்தில், 'கிழவன்' எனவந்திருக்கின்றபெயர் 'கிழவோன்' என்னும்பெயருடன் ஒருபொருள்கொண்டதாம். மேற்படி சேந்தன் 'கிழவோன்' எனப் பட்டப்பெயர் பெற்றிருக்கின்றமையால், அவன் மருதநிலப்பூமியாண்டுவந்த அரசர்களிலொருவனும்.

(*b*) திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"கற்றநாவினன் கேட்டசெவியினன்
முற்றவுணர்ந்த மூதறிவாள
ஞகரிகநாட்டத் தாரியனருவந்தைத்
தேருங்காட்சிச் சேந்தன்றிவாகரத்
திரண்டாவது மக்கட்பெயர்த்தொகுதி."

இதில் சேந்தனுக்கு 'ஆரியன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. 'ஆரியன்' என்னும்பெயர், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரப்பிரகாரம், 'சான்ரேர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட பதமாம்.

(*c*) திவாகரம், விலங்கின்பெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"காதலீகையிற் போதிப்பெருந்தவன்
றெவ்வடுகால வைவேலெழிலி
யவ்வைபாடிய வம்பற்கிழவன்
றேன்ருர்ச்சேந்தன் றெரிசொற்றிவாகரத்து
மூன்ருவது விலங்கின்பெயர்த்தொகுதி."

இங்ஙனம், சேந்தன் 'வைவேலெழிலி யவ்வைபாடிய அம்பற்கிழவன்' என்னப்பட்டிருக்கிருன். ஆனதால், அவன் அம்பன்நாடாண்டவரசன்.

(*d*) திவாகரம், மரப்பெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"நாடேபிறர்நாட்டிற் குவமையாறே
காலமறிந்துதவும் காவிரிதானே
யாடவர்திலக னம்பன்மன்ன
னீடிசைத்தலைவனருவந்தைச் சேந்த
ஞய்ந்ததிவாகரத்தரும் பொருள்விளக்கு
நான்காவது மரப்பெயர்த்தொகுதி."

இந்தக்கவியில் சேந்தனுக்கு 'அம்பன்மன்னன்' எனப் பெயர்வந்திருக்கின்றது. 'அம்பன்மன்னன்' என்பதற்கு 'அம்பன் நாட்டரசன்' என்றுபொருளாம்.

(e) திவாகரம், இடப்பெயர்த்தொகுதி, கடைசிக்கவி

"ஒருவற்கொருவனுகி யுதவியும்
பரிசின்மாக்கள் பற்பலராயினுந்
தாமொருவன்னே தரணிமாநவன்
செந்தமிழ்ச்சேந்தன் றெரிந்ததிவாகரத்
தைந்தாவது இடப்பெயர்த்தொகுதி."

இங்ஙனம் சேந்தனுக்குத் 'தரணிமானவன்' எனவும் 'செந்தமிழ்ச்சேந்தன்' எனவும் பெயர்கள் வந்திருக்கின்றன.

(f) திவாகரம், பல்பொருட்பெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"வருநற்கங்கை வடதிசைப்பெருமையுந்
தென்றிசைச்சிறுமையு நீக்கியகுறுமுநி
குண்டிகைப்பழம்புனற் காவிரிப்பெரும்பதி
யம்பற்கதிபதி சேந்தன்றிவாகரத்
தாறுவது பல்பொருட்பெயர்த்தொகுதி."

இதில், சேந்தனுக்குக் 'காவிரிப்பெரும்பதி யம்பற்கதிபதி' எனப்பெயர்வந்திருக்கிறது. அப்பெயருக்குக் 'காவிரிநதித்தீரத்திலிருக்கின்ற பெரும்பதியாகிய அம்பற்கு அரசன்' என்பதுகருத்தாம்.

(g) திவாகரம், பண்புபற்றிய பெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"மறக்குறும் போட்டியறத்தின்வழிநின்று,
கவிகைத்தண்ணளி புவிபெறவாணையி
னைம்புலனுளுமம்பற்கோமான்
றிண்பெருஞ்சேந்தன்றிவாகரத்தெட்டாவது
பண்புபற்றிய பெயர்த்தொகுதி."

இந்தக்கவியில், சேர்ந்தனுக்கு 'அம்பற்கோமான்' என்று பேரிட்டிருக்கிறது. இந்தப்பேருக்கும் 'அம்பன்நாட்டிற்கரசன்' என்பதுபொருள்.

(h) திவாகரம், செயல்பற்றிய பெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"அண்ணல் செம்பாதிக் காணியாட்டியைப்
பெண்ணணங்கைமூவுலகும் பெற்றவம்மையைச்
செந்தமிழ்மாலையந் தாதிபுனைந்த
நாவலனம்பற் காவலன்சேந்த
னியல்வுற்றதிவாகரத் தொன்பதாவது
செயல்பற்றிய பெயர்த்தொகுதி."

இங்ஙனம், சேந்தனுக்கு 'அம்பற்காவலன்' எனப்பெயர் வந்திருப்பதற்கு 'அம்பன்நாடாண்ட மன்னன்' என்பது பொருளாம். அன்றியும், உமையவளாகிய காளிகாதேவியின் பேரில் 'செந்தமிழ்மாலையந்தாதி' எனப்பெயர்பெற்ற ஒரு பிரபந்தமொன்று சேந்தன் செய்ததாகவுஞ் சொல்லியிருக்கின்றது.

(k) திவாகரம், ஒலிபற்றியபெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"அரக்கரைப்பொருத முரட்போர்வில்லும்
பாரதம்பொருத பேரிசைச்சிலையுந்
தாருகற்கடிந்த வீரத்தயிலும்
பாடியபுலவன் பதியம்பற்சேந்தன்
பயில்வுற்றதிவாகரத்துப் பத்தாவ
தொலிபற்றிய பெயர்த்தொகுதி."

இதில், சேந்தனுக்கு 'அம்பற்சேந்தன்' எனப் பெயர் கொடுத்திருக்கிறது. அன்றியும், இந்தச்சேந்தன் 'அரக்கரைப்பொருதமுரட்போர்வில்' எனவும், 'பாரதம் பொருத பேரிசைச்சிலை' எனவும், 'தாருகற்கடிந்த வீரத்தயில்' எனவும் பெயர்பெற்ற மூன்றுநூல்கள் செய்ததாகவுஞ் சொல்லியிருக்கிறது.

இந்த ஒன்பதுகவிகளிலுங் கூறியிருப்பதைத் திரட்டிப் பார்வையிடும்போது, சேந்தனுக்கு 'வடநூற்கரசன், தென்றமிழ்க்கவிஞன், கவியரங்கேற்றுமுபயகவிப்புலவன், அம்பற்

கிழவோன், முற்றவுணர்ந்தமுதறிவாளன், கற்றநாவினன் நாகரிகநாட்டத்தாரியன், ஈகையிற்போதிப்பெருந்தவன், ஆடவர்திலகன், அம்பன்மன்னன், நீடிசைத்தலைவன், தரணிமாளவன், செந்தமிழ்ச்சேந்தன், அம்பற்கதிபதி, அம்பற்கோமான், அம்பற்காவலன்' எனப்பெயர்கள் வந்திருப்பதால், அந்தச் சேந்தன் குலத்தாலும், குணத்தாலும், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், கல்வியறிவாலும் அரசர்குலமேன்மையிற் சிறப்புற்றோங்கிய தமிழ்நாட்டுச்சத்திரியச்சான்றோர்குலத்தவன் என்பது தானாகவிளங்குகின்றது.

(xxii) கம்பநாடன் தமிழ்நாட்டுச்சத்திரியகுலச்சான்றோன் என மேலே ஆறுவது பிரகரணத்தில் விபரமாகக் கூறியிருப்பதால், அதை இங்ஙனம் மீண்டுங் கூறிக்காட்டாது நிறுத்துதல் செய்கின்றோம்.

ஆயினும், ஒருகவி இங்ஙனம் பேர்த்தெழுதுவோம். கம்பராமாயணம், தனியன்கள்.

நேரிசைவெண்பா.

"தராதலத்திலுள்ள தமிழ்க்குற்றமெல்லாம்
அராவுமரமாயிற்றன்றே—இராவணன்மேல்
அம்புநாட்டாழ்வா னடிபணியு மாதித்தன்
கம்பநாட்டாழ்வான் கவி."

இந்தக்கவியில், கம்பனுக்கு 'ஆதித்தன் கம்பநாட்டாழ்வான்' எனப் பெயர்வந்திருக்கிறது. 'ஆதித்தன்' என்பதற்குச் 'சான்றோன்' எனவும், 'கம்பநாட்டாள்ழ்வான்' என்பதற்குக் 'கம்பநாடாள்வான், கம்பநாடான், கம்பநாடன்' எனவும் பொருளாகும். சேந்தனைப்போல கம்பனும் காவிரிநதித் தீரத்திலுள்ள ஒரு சிறுநாட்டிற்கு அரசனானதினாலும், கல்வியறிவிற் சிறந்தவனானதினாலும், 'நாடன், சான்றோன்' என்னும் அரசர்குலப்பட்டப்பெயர்கள் பெற்றவனானதாலும், அவன் தமிழ்நாட்டரசர்குலத்திலுதித்த தமிழ்ச்சத்திரியகுலச் சான்றோன் என்பதற்குச் சந்தேகமில்லை.

(h) திவாகரம், செயல்பற்றிய பெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"அண்ணல் செம்பாதிக் காணியாட்டியைப்
பெண்ணணங்கைமூவுலகும் பெற்றவம்மையைச்
செந்தமிழ்மாலையந் தாதிபுனைந்த
நாவலனம்பற் காவலன்சேந்த
னியல்வுற்றதிவாகரத் தொன்பதாவது
செயல்பற்றிய பெயர்த்தொகுதி."

இங்ஙனம், சேந்தனுக்கு 'அம்பற்காவலன்' எனப்பெயர் வந்திருப்பதற்கு 'அம்பன்நாடாண்ட மன்னன்' என்பது பொருளாம். அன்றியும், உமையவளாகிய காளிகாதேவியின் பேரில் 'செந்தமிழ்மாலையந்தாதி' எனப்பெயர்பெற்ற ஒரு பிரபந்தமொன்று சேந்தன் செய்ததாகவுஞ் சொல்லியிருக்கின்றது.

(k) திவாகரம், ஒலிபற்றியபெயர்த்தொகுதி, கடைசிக்கவி.

"அரக்கரைப்பொருத முரட்போர்வில்லும்
பாரதம்பொருத பேரிசைச்சிலையுந்
தாருகற்கடிந்த வீரத்தயிலும்
பாடியபுலவன் பதியம்பற்சேந்தன்
பயில்வுற்றதிவாகரத்துப் பத்தாவ
தொலிபற்றிய பெயர்த்தொகுதி."

இதில், சேந்தனுக்கு 'அம்பற்சேந்தன்' எனப் பெயர் கொடுத்திருக்கிறது. அன்றியும், இந்தச்சேந்தன் 'அரக்கரைப்பொருதமுரட்போர்வில்' எனவும், 'பாரதம் பொருத பேரிசைச்சிலை' எனவும், 'தாருகற்கடிந்த வீரத்தயில்' எனவும் பெயர்பெற்ற மூன்றுநூல்கள் செய்ததாகவுஞ் சொல்லியிருக்கிறது.

இந்த ஒன்பதுக்கவிகளிலுங் கூறியிருப்பதைத் திரட்டிப் பார்வையிடும்போது, சேந்தனுக்கு 'வடநூற்கரசன், தென்றமிழ்க்கவிஞன், கவியரங்கேற்றுமுபயகவிப்புலவன், அம்பற்

கிழவோன், முற்றவுணர்ந்தமூதறிவாளன், கற்றநாவினன் நாகரிகநாட்டத்தாரியன், ஈகையிற்போதிப்பெருந்தவன், ஆடவர்திலகன், அம்பன்மன்னன், நீடிசைத்தலைவன், தரணிமாளவன், செந்தமிழ்ச்சேந்தன், அம்பற்கதிபதி, அம்பற்கோமான், அம்பற்காவலன்' எனப்பெயர்கள் வந்திருப்பதால், அந்தச் சேந்தன் குலத்தாலுங், குணத்தாலுங், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், கல்வியறிவாலும் அரசர்குலமேன்மையிற் சிறப்புற்றோங்கிய தமிழ்நாட்டுச்சத்திரியச்சான்றோர்குலத்தவன் என்பது தானாகவிளங்குகின்றது.

(xxii) கம்பநாடன் தமிழ்நாட்டுச்சத்திரியகுலச்சான்றோன் என மேலே ஆறாவது பிரகரணத்தில் விபரமாகக் கூறியிருப்பதால், அதை இங்ஙனம் மீண்டுங் கூறிக்காட்டாது நிறுத்துதல் செய்கின்றோம்.

ஆயினும், ஒருகவி இங்ஙனம் பேர்த்தெழுதுவோம். கம்பராமாயணம், தனியன்கள்.

நேரிசைவெண்பா.

"தராதலத்தினுள்ள தமிழ்க்குற்றமெல்லாம்
அராவுமரமாயிற்றன்றோ—இராவணன்மேல்
அம்புநாட்டாழ்வா னடிபணியு மாதித்தன்
கம்பநாட்டாழ்வான் கவி."

இந்தக்கவியில், கம்பனுக்கு 'ஆதித்தன் கம்பநாட்டாழ்வான்' எனப் பெயர்வந்திருக்கிறது. 'ஆதித்தன்' என்பதற்குச் 'சான்றோன்' எனவும், 'கம்பநாட்டாள்ழ்வான்' என்பதற்குக் 'கம்பநாடாள்வான், கம்பநாடான், கம்பநாடன்' எனவும் பொருளாகும். சேந்தனைப்போல கம்பனும் காவிரிநதித் தீரத்திலுள்ள ஒரு சிறுநாட்டிற்கு அரசனானதினாலும், கல்வியறிவிற் சிறந்தவனானதினாலும், 'நாடன், சான்றோன்' என்னும் அரசர்குலப்பட்டப்பெயர்கள் பெற்றவனானதாலும், அவன் தமிழ்நாட்டரசர்குலத்திலுதித்த தமிழ்ச்சத்திரியகுலச் சான்றோன் என்பதற்குச் சந்தேகமில்லை.

(h) திவாகரம், செயல்பற்றிய பெயர்த்தொகுதி, கடை
சிக்கவி.

"அண்ணல் செம்பாதிக் காணியாட்டியைப்
பெண்ணணங்கைமூவுலகும் பெற்றவம்மையைச்
செந்தமிழ்மாலையந் தாதிபுனைந்த
நாவலனம்பற் காவலன்சேந்த
னியல்வுற்றதிவாகரத் தொன்பதாவது
செயல்பற்றிய பெயர்த்தொகுதி."

இங்ஙனம், சேந்தனுக்கு 'அம்பற்காவலன்' எனப்பெயர் வந்திருப்பதற்கு 'அம்பன்நாடாண்ட மன்னன்' என்பது பொருளாம். அன்றியும், உமையவளாகிய காளிகாதேவியின் பேரில் 'செந்தமிழ்மாலையந்தாதி' எனப்பெயர்பெற்ற ஒரு பிரபந்தமொன்று சேந்தன் செய்ததாகவுஞ் சொல்லியிருக்கின்றது.

(k) திவாகரம், ஒலிபற்றியபெயர்த்தொகுதி, கடை
சிக்கவி.

"அரக்கரைப்பொருத முரட்போர்வில்லும்
பாரதம்பொருத பேரிசைச்சிலையுந்
தாருகற்கடிந்த வீரத்தயிலும்
பாடியபுலவன் பதியம்பற்சேந்தன்
பயில்வுற்றதிவாகரத்துப் பத்தாவ
தொலிபற்றிய பெயர்த்தொகுதி."

இதில், சேந்தனுக்கு 'அம்பற்சேந்தன்' எனப் பெயர் கொடுத்திருக்கிறது. அன்றியும், இந்தச்சேந்தன் 'அரக்கரைப்பொருதமுரட்போர்வில்' எனவும், 'பாரதம் பொருத பேரிசைச்சிலை' எனவும், 'தாருகற்கடிந்த வீரத்தயில்' எனவும் பெயர்பெற்ற மூன்றுநூல்கள் செய்ததாகவுஞ் சொல்லியிருக்கிறது.

இந்த ஒன்பதுக்கவிகளிலுங் கூறியிருப்பதைத் திரட்டிப் பார்வையிடும்போது, சேந்தனுக்கு 'வடநூற்கரசன், தென்றமிழ்க்கவிஞன், கவியரங்கேற்றுமுபயகவிப்புலவன், அம்பற்

கிழவோன், முற்றவுணர்ந்தமூதறிவாளன், கற்றநாவினன் நாகரிகநாட்டத்தாரியன், ஈகையிற்போதிப்பெருந்தவன், ஆடவர்திலகன், அம்பன்மன்னன், நீடிசைத்தலைவன், தரணிமானவன், செந்தமிழ்ச்சேந்தன், அம்பற்கதிபதி, அம்பற்கோமான், அம்பற்காவலன்' எனப்பெயர்கள் வந்திருப்பதால், அந்தச் சேந்தன் குலத்தாலுங், குணத்தாலுங், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், கல்வியறிவாலும் அரசர்குலமேன்மையிற் சிறப்புற்றோங்கிய தமிழ்நாட்டுச்சத்திரியச்சான்றோர்குலத்தவன் என்பது தானாகவிளங்குகின்றது.

(xxii) கம்பநாடன் தமிழ்நாட்டுச்சத்திரியகுலச்சான்றோன் என மேலே ஆறாவது பிரகரணத்தில் விபரமாகக் கூறியிருப்பதால், அதை இங்ஙனம் மீண்டுங் கூறிக்காட்டாது நிறுத்துதல் செய்கின்றோம்.

ஆயினும், ஒருகவி இங்ஙனம் பேர்த்தெழுதுவோம். கம்பராமாயணம், தனியன்கள்.

நேரிசைவெண்பா.

"தராதலத்தினுள்ள தமிழ்க்குற்றமெல்லாம்
அராவுமரமாயிற்றன்றே—இராவணன்மேல்
அம்புநாட்டாழ்வா னடிபணியு மாதித்தன்
கம்பநாட்டாழ்வான் கவி."

இந்தக்கவியில், கம்பனுக்கு 'ஆதித்தன் கம்பநாட்டாழ்வான்' எனப் பெயர்வந்திருக்கிறது. 'ஆதித்தன்' என்பதற்குச் 'சான்றோன்' எனவும், 'கம்பநாட்டாள்ழ்வான்' என்பதற்குக் 'கம்பநாடாள்வான், கம்பநாடான், கம்பநாடன்' எனவும் பொருளாகும். சேந்தனைப்போல கம்பனும் காவிரிநதித் தீரத்திலுள்ள ஒரு சிறுநாட்டிற்கு அரசனானதினாலும், கல்வியறிவிற் சிறந்தவனானதினாலும், 'நாடன், சான்றோன்' என்னும் அரசர்குலப்பட்டப்பெயர்கள் பெற்றவனானதாலும், அவன் தமிழ்நாட்டரசர்குலத்திலுதித்த தமிழ்ச்சத்திரியகுலச் சான்றோன் என்பதற்குச் சந்தேகமில்லை.

(xxiii) தண்டியலங்காரஞ்செய்த தண்டிஎன்பவன் சத்திரியகுலச்சான்ரேனும். அவன் அம்பிகாபதியின் புத்திரன், கம்பநாடன்பேரன். இந்தத்தண்டிஎன்பவன் அன்பாயசோழன் காலத்தில் உத்தேசம் 800 வருடங்களுக்கு முன்னிருந்தபுலவன்.

மேற்கோள்.

தண்டியலங்காரம், சிறப்புப்பாயிரம்.

" வடதிசையிருந்து தென்மலைக்கேகி
மதிதவழ்குடுமிப் பொதியமால்வரை
இருந்தவன்றன்பா லருந்தமிழுணர்ந்த
பன்னிருபுலவரின் முன்னவன்பகர்ந்த
தொல்காப்பியநெறி பல்காப்பியத்தும்
அணிபெறுமிலக்கண மரிதினிற்றெரிந்து
வடநூல்வழிமுறை மரபினின்வழா அது
ஈரிரண்டெல்லை யினிதவா மும்மைப்
பாகதவிலக்கணம் பண்புறத்தழீஇத்
திருந்தியமணிமுடிச் செம்பியனவையத்
தரும்பொருள்யாப்பின் வகுத்தனன்
ஆடகமன்றத்து நாடகநவிற்றும்
வடநூலுணர்ந்த தமிழ்நூற்புலவன்
பூவிரிதண்பொழிற் காவிரிநாட்டு
வம்பவிழ்தெரியலம்பிகாபதி
மேவருந்தவத்தினிற்பயந்த
தாவருஞ் சீர்த்தித் தண்டியென்பவனே."

இச்சிறப்புப்பாயிரத்தில், தண்டிஎன்பவன் அம்பிகாபதியின் புதல்வன் என்னப்பட்டிருக்கிறான். அம்பிகாபதி கம்பநாடன் புத்திரன். சமஸ்கிருதத்தில் முதனூற்செய்தவனுக்குந் தண்டிஎன்றே பெயராம். அதைத் தமிழில் மொழிபெயர்த்த அம்பிகாபதியின் குமாரனுக்குந் தண்டிஎன்றேபெயர். இந்தத்தண்டி என்பவன் கம்பநாடன் பேரனானபடியால், அவனுஞ் சத்திரியகுலச்சான்ரேனும்.

(xxiv) ஸ்ரீராமருஞ் சத்திரியகுலச்சான்றோராம், கம்ப ராமாயணம், காப்புகள், 2-வது கவி:

"அஞ்சிலேயொன்றுபெற்ற னஞ்சிலேயொன்றைத்தாவி
அஞ்சிலேயொன்றாறாக வாரியர்க்காகவேகி
அஞ்சிலேயொன்றுபெற்ற வணங்கைக்கண்டயலாரூரில்
அஞ்சிலேயொன்றைவைத்தா னவனெம்மையளித்துக்காப்
பான்."

இந்தச்செய்யுளில், ஐம்பூதியங்களிலொன்றாகிய வாயுவுக்கு நாயகனாகிய வாயுபகவானுக்குப்பிறந்த அனுமன், ஐம்பூதியங்களிலொன்றாகிய சலம் நிறைந்த கடலைத்தாண்டி, ஸ்ரீராமர் முதலான ஆரியர்* எனப்பெயர்பெற்ற சான்றோர்குலத்தவர்களுக்காக ஐம்பூதங்களிலொன்றாகிய ஆகாயமார்க்கமாகச் சென்று, ஐம்பூதங்களிலொன்றாகிய மண்ணுக்கு நாயகியான பூமாதேவிபெற்ற புத்திரியான சீதாதேவியைக் கண்ணுற்று, ஐம்பூதியங்களிலொன்றாகிய அக்கினியை இராவணனது இலங்காபுரியிலிட்டு அந்நகரியைச் சுட்டழித்தனன் என வருகின்றது. இங்ஙனம், இராமர்குலமரபோர் 'ஆரியர்' என்னப்பட்டிருக்கின்றனர்.

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரம்.

"சான்றோர்மிக்கோர் நல்லவர்மேலவ
ராய்ந்தோருயர்ந்தோ ராரியருலகெ
வாய்ந்தவான்றோ ரறிவுடையோரே."

இந்தச்சூத்திரத்தில் அரசர்குலப்பட்டப்பெயராகிய 'ஆரியர்' என்பது, 'சான்றோர்' என்னும்பெயருடன் ஒருபொருள் கொண்ட பதமாகக் கூறியிருப்பதால், ஆரியர்குலத்தவர்கள் சான்றோர் ஆவர். மேலே சீதைக்கும் 'சான்றோர்மாது' எனப்பெயர்வந்திருக்கிறது. ஆகவே, ஆரியகுலத்தவர்களும் சான்றோர்குலத்தவர்களும் ஏககுலத்தினரென்பது பிரத்தியட்சமாகிறது.†

---

* cf. காந்தம், அண்டகோசப்படலம், 48-வது செய்யுள்.

† "Ayodia was founded by the race of Soorya by Ikshwaku. Mithila was founded by Mithila the grandson of Ikshwaku." *Vide Tod, Vol. i., Chapt.* 16.

(xxv) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், தைல மாட்டுபடலம், 46 - வது கவி :

" ஆரியனிளவலை நோக்கியய்யவிச்
சீரியவல்லன செப்பலென்றபின்
பாரிடைவணங்கினன் பதைக்குநெஞ்சினன்
தேரிடைவித்தகன் சேறல்மேயினான்."

இந்தக்கவியில், 'சான்றோன்' எனப்பெயர்பெற்ற ஸ்ரீராமரா னவர் தன்தம்பி இலக்ஷ்மணனை நோக்கி அவ்வாறுபேசாதே எனச் சொல்லித்தடுக்க, அவன் அந்தப்படிசெய்தான் என்று கூறுகையில் இராமருக்கு 'ஆரியன்' எனப்பெயர்வந்திருக்கி றது. 'ஆரியன்' என்னும் பட்டப்பெயரைச்சுட்டி இந்தப்பிர கரணத்தின் பிற்பாகத்தில் தாற்பரியங்கூற நினைத்திருக்கின் றமையால், இங்ஙனம் அதை நிறுத்துகிறோம். சேந்தனுக்கும் 'ஆரியன்' எனப் பட்டப்பேர் வந்திருப்பதாக மேலேகூறியி ருக்கிறோம். இவர்கள் சான்றோர்குலத்தவர்களானமையால், சான்றார்* குலத்தவர்களும் அவர்கள்தான், சான்றவர்குலத்த வர்களும் அவர்கள்தான் என்பதற்குச் சந்தேகமில்லை.

(xxvi) ஏனாதிநாதநாயனாருஞ் சத்திரியகுலச்சான் றோனும்.

பெரியபுராணம், ஏனாதிநாதநாயனார் புராணம் 1-வது கவி:

" புண்டரிகம்பொன்வரை மேலேற்றிப் புவியளிக்கும்
தண்டரள வெண்கவிகைத்தார்வளவர்சோணாட்டில்
வண்டறைபூஞ்சோலைவயன் மருதத்தண் பணைசூழ்ந்
தெண்டிசையுமேறிய சீர்மூதூரெயினனூர்."

இங்ஙனம், சோழவளநாட்டில் எயினனூர் என்றொரு பழ யநகருமுண்டு எனச் சொல்லியிருக்கின்றது.

2-வது கவி :

" வேழக்கரும்பினொடு மென்கரும்பு தண்வயலிற்
றாழக்கதிர்ச்சாலி தானோங்குந்தன்மையதாய்
வாழக்குடிதழைத்து மன்னியவப்பொற்பதியில்
ஈழக்குலச்சான்றாரேனாதி நாதனார்."

* 'சாணார்' என்பது மரூஉ.

இந்தக்கவியில், அந்த எயினனூரில் ஈழக்குலச்சான்றார் குலத்தில் ஏனாதிநாதநாயனார் எனப் பெயர்கொண்ட சிவ தொண்டரொருவரிருந்தாரென உரைத்திருக்கிறது.

(xxvii.) இரட்டிலராசிரியர் (Rottler) எழுதியதமிழங்கி லேய அகராதியில், 'ஈழம்' என்னும் மொழிக்கு அடியில் ஏனாதிநாதநாயனாரைச்சுட்டி, "ஈழக்குலச்சான்றோன், one of the 63 Apostles of சிவன்" எனக் கண்டிருக்கின்றது. பெரியபுராணம் ஓலையேட்டுப்பிரதிகளிலும், ஏனாதிநாதநாயனாரை 'ஈழக்குலச்சான்றோன்' என வரைந்திருக்கிறது.

மேலே ஏனாதிநாதநாயனாருக்குச் 'சான்றோன், சான்றான்' எனப் பெயர்கள் வந்திருக்கின்றன. ஏனாதிநாதர் தமிழரசர்குலத்தையொட்டியவரானதால், தொல்காப்பிய நூற்பிரகாரம், அவருக்குச் 'சான்றான்' எனவும், 'சான்றோன்' எனவும் சத்திரியகுலப்பட்டப்பேர்கள் வந்திருக்கின்றன. ஆகவே அவைகளையொட்டிய 'சான்றவன்' என்னும் பெயரும் அவருக்குண்டு.

(xxviii) அரக்குமாளிகைஎனப் பெயர்கொண்ட இள்வரசு நாடகம், 3-வது பக்கத்தில், ராயதல்லூர் சூரியகுலத்திலகராகிய இராமச்சந்திரகவிராயர் எழுதியிருப்பது :

## மங்களம்.

இராகம்—அசாவேரி. தாளம்—திரிபுடை.

மங்களஞ் செயமங்களம், சுபமங்களம் மங்களம்.

* * * * * *

"சிந்தித்திடுமுகையூர் தன்னடைநக
ருந்தற்புத நாவலூர் வளநகர்
செப்புந்தலைமைக் கொருநதிகுல
முற்றும்புகழ் விற்பரிமளநிறை
சீரகநன்மாலை படைத்தவர்
காரணபத்திர காளிவரத்தினர்
சிங்கக்கொடியுந் தங்கமலையும்
வளங்கொண்ட
துங்கப்புகழால் தங்குநல்ல
சான்றோர்க்கும்.......................(மங்களஞ்.)

இந்தச்செய்யுளில், 'சான்றோர்' என்னும்பெயர் குலப்பெயர் எனவும், கங்காகுலத்தினர் என்னும்பெயர் அவர்களுக்குப் பட்டப்பெயர்எனவும், சிரகமாலையணிதல் சான்றோர்குலத்தினர்க்குரியதெனவும், காளிகாதேவி வரபுத்திரர் என்னும் பெயர் அவர்களுக்குண்டு எனவும், சிங்கக்கொடிகட்டி தங்கமலைபுமுடையராய்ப் புகழ்பெற்றிருந்தனர் எனவுங் கூறியிருக்கின்றது. ஆகவே, தமிழரசர்குலத்தவர்கள் 'சான்றோர்' எனப்பெயர்படைத்து வந்திருப்பது நிசம் என நன்றாய்த் தெரியவருகிறது.

'சான்றோர்' என்னும் அரசர்குலக்கௌரவப்பட்டப்பெயருக்குத் தாற்பரியமும் மேற்கோளுங் கூறியானபடியால், இனி 'மிக்கோர்' என்னும் பெயருக்குத் தாற்பரியமும் மேற்கோளுங்கூறுவோம்.

## 3 மிக்கோர்.

'மிக்கோர்' என்னும் பெயர், 'மிகு' என்னும் வினைமுதலடியினின்று பிறந்த 'மிக்கு' என்னுந் தொழிற்பெயரினின்று வந்த பலர்பாற்பெயராம். 'மிக்கன், மிக்கான், மிக்கோன்' என்பவைகள் ஒருபொருள் ஆண்பாற்பெயர்கள். 'மிக்கர், மிக்கார், மிக்கோர்' என்பன ஒருபொருட்பலர்பாற்பெயர்கள். 'மிக்கோர்' என்பதற்கு நிறைந்தோர், பெருந்தன்மையுடையோர்' என்பது தாற்பரியமாம்.

மிக்கோர்=Great-men,
=Noblemen,
=மேன்மக்கள்.

இது 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்ட பெயராம். 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் பார்ப்பனக்குலத்தவர்களுக்கு ஏற்காதிருந்தும், 'மிக்கோர்' என்னும்பெயர் அவர்களுக்கு ஏற்கும். ஆகவே, 8-வது சூத்திரத்தில் பார்ப்பனக்குலத்தவர்களுக்கு 'மிக்கவர்' என்னும் பெயர்வந்திருக்கின்றது. அரசர்குலத்தவர்கள் 'குலத்தாலுங், குணத்தாலுங், கொடையாலும்,

புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், அறிவாலும்' மிக்கோர் ஆகுகின்றனர். பார்ப்பனக்குலத்தவர்களோ 'குலத்தாலும், குணத்தாலும், தபோபலத்தாலும், அறிவாலும்' மிக்கோர் ஆகின்றனர்.

(i) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், மந்திரப்படலம், 99-வது கவி.

"இசையுஞ்செய்கையு முயர்குலத்தியற்கையுமெஞ்ச
வசையுங்கீண்மையும் மீக்கொளக்கிளையொடுமடியா
தசைவில்கற்பினவ்வணங்கை விட்டருளுதியிதன்மேல்
விசையமில்லெனச் சொல்லினனறிஞரின்மிக்கோன்."

இந்தக்கவியில், விபீஷணன் இராவணனைப்பார்த்து, நம்முடைய குலத்துக்கு நாசம்நேரிடாதபடிக்குச் சீதையை விட்டுவிடு என்பதாக யோசனைசொன்னதாகச் சொல்லியிருக்கின்றது. இங்ஙனம், விபீஷணனுக்கு 'அறிஞரின் மிக்கோன்' எனப்பெயர்வந்திருக்கின்றது. விபீஷணன் அசுரகுலச்சத்திரியனானதினாலே அவனுக்கு 'மிக்கோன்' எனவும், 'அறிவுடையோர்' எனப்பெயர்பெற்ற சத்திரியகுலத்தவருள் சிரேஷ்டனானதினாலே 'அறிஞரின் மிக்கோன்' எனவுஞ் சிறந்த பட்டப்பெயர் வந்திருக்கிறது.

(ii) கம்பராமாயணம், உயுத்தகாண்டம், ஒற்றுக்கேள்விப்படலம், 30-வது கவி.

"கல்விக்கண்மிக்கோன்சொல்லக் கருமனதிருதக்கள்வர்
வல்விற்கைவீரமற்றிவ் வானரர்வலியைநோக்கி
வெல்விக்கையரிதென்றெண்ணி வினையத்தாலெம்மையெல்லாங்
கொல்விக்கவந்தான்மெய்ம்மை குரங்குநாங்கொள்கவென்றார்."

இக்கவியில், அனுமனுக்கு 'கல்விக்கண்மிக்கோன்' எனப்பெயர்வந்திருக்கிறது. ஆஞ்சனேயன், கிஷ்கிந்தாநாட்டுச் சத்திரியனானதினாலே, 'சான்றோன்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட 'மிக்கோன்' என்னும்பெயர் அவனுக்

கேற்கும். அவன் கல்வியறிவினுங் குன்றுதலில்லாத சத்திரியனென உணர்த்துதற்கு, 'கல்விக்கண்மிக்கோன்' எனப் பெயர்வந்திருக்கின்றது.

இனி அரசர்குலக்கௌரவப்பட்டப்பெயராகிய 'நல்லவர்' என்னும் பெயருக்குத் தாற்பரியமும், மேற்கோளுங் கூறுவோம்.

## 4. நல்லவர்.

'நல்லவர்' என்னும்பெயர், 'நன்மை' என்னும் பண்புச் சொல்லடியிற்பிறந்த பலர்பாற்பெயர்ச்சொல்லாம். 'நல்லவன், நல்லான், நல்லோன்' என்பன ஒருபொருள் ஆண்பாற் பெயர்கள். 'நல்லவர், நல்லார், நல்லோர்' என்பவைகள் ஒருபொருட் பலர்பாற்பெயர்கள். 'நல்லவர்' என்னும் பெயருக்கு 'நன்மைநிறைந்தோர், அரசர்குலச் சிறப்புகளெல்லாமொருங்கேயுடையோர்' என்பது பொருளாம்.

நல்லவர் = Excellent-men,
= Great-men,
= Noblemen,
= மேன்மக்கள்.

இதுவும் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்டபெயராம். குலத்தாலுங், குணத்தாலுங், கொடையாலும், புஜபலத்தாலும், பாராளுரிமையாலும், அறிவாலும் நலம்பெற முதிர்ந்தவர்களே நல்லவர்களாம். 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் பார்ப்பனக்குலத்தவர்களுக்கு ஏற்காதிருந்தாலும், 'நல்லவர்' என்னும்பெயர் அவர்களுக்கு ஏற்கும். இந்தப்பெயர் 'அந்தணர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட பதமாம்.

(i) கம்பராமாயணம், பாலகாண்டம், கார்முகப்படலம், 32-வது கவி.

"தோகையரின்னனசொல்லிடநல்லோர்
ஓகைவிளம்பிட வும்பருவப்ப
மாகமடங்கலு மால்விடையும்பொன்
நாகமுநாகமு நாணநடந்தான்."

இந்தக்கவியில், மணமங்கலவில்லை நாணேற்றுதற்கு இராமர் எழுந்து நடந்துபோகிறதைக்கண்ட சனங்களெல்லாரும் பற்பலவிதமாகப் பேசிப்புகழ்ந்தனர் எனவும், அதைக்கேட்டு இராசசபையிலுள்ளவர்களெல்லாரும் மிகவுங் களிப்படைந்தனர் எனவுங் கூறியிருக்கின்றது. இங்ஙனம், 'நல்லோர்' எனப் பெயர்பெற்றிருக்கிறவர்கள் இராசசபையிலிருந்த அரசர்குலப் பெரியோர்களாகிய சான்றோர்களாம்.

(*ii*) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், ஆற்றுப்படலம், 22-வது கவி.

"நல்லவனுரைசெய நம்பிகூறலும்
அல்லவிலழுங்கிய வன்பின்மாநகர்
ஒல்லெனவிரைத்ததாலுயிரில் யாக்கையை
சொல்லெனுமமிர்தினுற் றுளித்ததென்னவே."

இதில், ஸ்ரீராமர் வனவாசஞ்செய்யப்போயினபின்னர், பரதன் பட்டாபிஷேகத்துக்குடன்படாமல், தன்தமையனையழைத்துவரச் சேனைகளோடு புறப்படப்போகிறான் எனச் சொல்லியிருக்கின்றது. இங்ஙனம்,பரதனுக்கு 'நல்லவன்' எனப் பெயர்வந்திருக்கிறது. 'நல்லவன்' என்பதற்கு 'அரசர்குல மேன்மைகளாகிய நலங்களெல்லாம் ஒருங்கேயுடையவன்' என்பது பொருளாம். ஆனதால், 'நல்லவன்' என்னும் பட்டப்பெயர் 'சான்றோன்' என்னும்பெயருடன் ஒருபொருள் கொண்ட பதமாம்.

(*iii*) கம்பராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம், நாடவிட்டபடலம், 64-வது கவி.

"பூவருமழலையன்னம் புனைமடப்பிடியென்றின்ன
தேவருமருளத்தக்க செலவினளெனவுந்தேறேன்
பாவருங்கிழமைத்தொன்மைப் பருணிதர்தொடுத்தபத்தி
நாவருங்கிளவிச்செவ்வி நடைவருநடையணல்லோய்."

இந்தக்கவியில், ஸ்ரீராமர் அநுமனைப்பார்த்து, 'நல்லோய்' என்கிறார்.

நல்லோய்=நல்லோனே, விளி.

'நல்லோன்' என்பதற்குச் 'சத்திரியகுலநலமெல்லாம் நிறைந்தவன்' என்பதுபொருளாம்.

(iv) மேற்படி நாடவிட்டபடலம், 66-வது கவி.

"மங்கையரிவளையொப்பார் மற்றுளரில்லையென்னும்
சங்கையிலுள்ளந்தானே சான்றெனக்கொண்டுசான்றோய்
அங்கவணிலைமையெல்லா மளந்தறிந்தருகுசார்ந்து
திங்கள்வாண்முகத்தினாட்குச் செப்பெனப் பின்னும்செப்பும்."

இதில், ஸ்ரீராமர் அனுமனைப்பார்த்துச், 'சான்றோய்' என்கிறார்.

சான்றோய்=சான்றோனே, விளி.

அனுமனுக்கு 'நல்லோன்' எனவும், 'சான்றோன்' எனவும் பெயர்கள் வந்திருக்கின்றமையால், இரண்டுபெயர்களும் ஒரு பொருள்கொண்ட சத்திரியகுலக்கௌரவப்பட்டப்பெயர்கள் என்பதற்கு எள்ளளவுஞ் சந்தேகமேயில்லை.

(v) மேற்படி கிஷ்கிந்தாகாண்டம், பிலநீங்குபடலம், 58-வது கவி.

"நான்முகநுனித்தநெறி நூறுவரதொய்தாய்
மேன்முகநிமிர்த்துவெயில் காலொடுவிழுங்கா
மான்முகநலத்தவன் மயன்செய்ததவத்தால்
நான்முகனளித்துளதி மாநகரநல்லோய்."

இச்செய்யுளில், முன்போல் அனுமனுக்கு 'நல்லோய்' எனப்பெயர்வந்திருக்கிறது. மேற்படிபடலம், 61-வது கவியிலும், வாயுபுத்திரனுக்கு 'நல்லோய்' எனப்பேரிட்டிருக்கின்றது.

(vi) பின்னும், கம்பராமாயணம், கிஷ்கிந்தாகாண்டம் மயேந்திரப்படலம், 3-வது கவியிலும், சுந்தரகாண்டம், சூடாமணிப்படலம், 42-வது கவியிலுங் காண்க. இவைகளால்

நல்லோர்' என்னும்பெயர் 'சான்றோர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட பூர்வ கௌரவப்பட்டப்பெயர் எனத் தெளிவாக விளங்கும்.

இனி 'மேலவர்' என்னும் பெயருக்குத்தாற்பரியமும், மேற்கோளுங் கூறுவோம்.

5. மேலவர்.

மேலவர் = மேலோர்,
= மேன்மக்கள்,
= Noblemen.

'மேலோர்' என்னும்பெயர் 'மேன்மை' என்னும் பண்புப்பெயர்ச்சொல்லினின்று பிறந்த பலர்பாற்பெயராம். 'மேலவன், மேலான், மேலோன்' என்பவைகள் ஆண்பால் ஒருபொருட்பெயர்களாம். 'மேலவர், மேலார், மேலோர்' என்பன பலர்பால் ஒருபொருட்பெயர்களாகும். 'மேன்மை' என்பதற்கு (a) Greatness, (b) Grandeur, (c) Sublimity, (d) Eminence, (e) Excellence, (f) Magnanimity, (g) Dignity, 'மகத்துவம்' என்பது தாற்பரியமாம், ஆகவே, 'மேலோர்' என்பதற்கு, (a) Great-men, (b) Noblemen, (c) Kings and Princes, (d) அரசர்குலத்தார், 'மேன்மக்கள்' என்பது தாற்பரியமாகும்.

அறிவொன்றைமாத்திரமுடைய எந்தக்குலத்தவர்களுக்கும் 'மேலோர், மேன்மக்கள்' என்னும்பெயர்கள் ஏற்கவேமாட்டாறு. பூர்வகுலமேன்மையையுடையவர்களுக்குமாத்திரம் இப்பெயர்கள் ஏற்கும். இந்த 'மேலோர், மேன்மக்கள்' என்னும் பெயர்கள் அரசர்குலமகிமைகளோடு கல்வியறிவையுமுடையவர்களுக்குமாத்திரம் பூர்வஏற்பாட்டிற் பொருந்தும்.

நாலடியார், 16-வது அதிகாரத்தில், 'மேன்மக்கள்' எனவந்திருக்கின்றபெயர் அரசர்குலத்தவர்களுக்கேயுரிய சிறந்த பூர்வபட்டப்பெயரென மேலே தெளிவாகக் காண்பித்திருக்கிறேம்.

இங்ஙனம் வேறு சிலருசுக்கள் எடுத்துரைப்போம்.

(i) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், மந்திரப் படலம், 14-வது கவி.

" வெய்யவன்குலமுதல் வேந்தர்மேலவர்
செய்கையினொருமுறை திறம்பலின்றியே
வையம்யாளுண்ட வாண்டுங்கள்மாட்சியால்
ஐயமிலறுபதினாயிரம்மரோ."

இக்கவியில், தசரதமகாராஜன் சபாமண்டபத்திற்கூடிய இராசசபையார்களைப்பார்த்து, " வெய்யவன் குலமுதல் வேந்தர் மேலவர்" என்று சொல்லுகிறான். 'வெய்யவன்குலமுதல் வேந்தர்மேலவர்' என்பதற்கு 'சூரியசந்திரகுலங்களிலுதித்த அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர்களே, 'மேலவர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் பெறத்தக்க பெரியோர்கள் என்பது பொருளாம். ஆனதால், வேந்தர்குலத்தவர்களே, 'மேலவர், மேலோர், மேன்மக்கள்' என்னுஞ் சிறப்புப்பெயர் பெறத்தக்கவர்கள் என்பது இதனால் தெளிவாகவிளங்குகின்றது.

(ii) மேற்படி மந்திரப்படலம், 8-வது கவி.

" காலமுமிடனுமேற்ற கருவியுந்தெரியக்கற்ற
நூலுறநோக்கித்தெய்வநுணித்தறங் குணித்தமேலோர்
சீலமும்புகழ்க்குவேண்டுஞ் செய்கையுந்தெரிந்துகொண்டு
பால்வருமுறுதியாவுந் தலைவற்குப்பயக்குநீரார்."

இந்தக்கவியில், தசரதமகாராசனுடைய மந்திரசபாமண்டபத்திற்கூடிய அரசர்குலத்தவர்களுக்கு, 'மேலோர்' எனப் பெயர்வந்திருக்கின்றது. முந்தினகவியில், 'மேலவர்' எனவந்திருக்கிறது. ஆகவே, 'மேலவர், மேலோர்' என்னும் இரண்டு பெயர்களும் ஒருபொருள் கொள்வனவாம்.

(iii) அரசர்குலத்தவர்களாகிய மேன்மக்களுக்கு இருக்க வேண்டிய சிறப்புக்குணங்கள் வருமாறு :—

கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், மந்தரைசூழ்ச்சிப்படலம், 62-வது கவி.

" கல்வியுமிளமையுங் கணக்கிலாற்றலும்
வில்வினையுரிமையு மழகும்வீரமும்
எல்லையில்குணங்களும் பரதற்கேயது
புல்லிடையுகுத்தமுதேயும் போலென்றான்."

இங்ஙனம், பரதனுக்கு 'கல்வியறிவும், இளமைப்பருவமும், பாராளுந்திறமும், வில்வித்தைச்சமர்த்தும், உடற்கட்டழகும், புஜபலபராக்கிரமமும், கொடைமுதலான பல சிறந்த குணங்களுமுண்டு' எனச் சொல்லியிருக்கின்றது. ஆகவே, 'மேலோர்' எனப் பெயர்பெற்ற 'மேன்மக்களுக்கு' மேற்கூறிய அரசர்குலச்சிறப்புலக்ஷணங்களெல்லாம் ஒருங்கேயிருக்கவேண்டும்.

(iv) மேற்படி மந்தரைசூழ்ச்சிப்படலம், 64-வது கவி.

"வெயின்முறைக்குலக்கத்திரவன் முதலியமேலோர்
உயிர்முதற்பொருடிறம்பினு முறைதிறம்பாதோர்
மயின்முறைக்குலத்துரிமையை மனுமுதல்மரபை
செயிருறப்புலச்சிந்தையா லென்சொனாய்தீயோய்."

இக்கவியில், கைகேசியானவள் அந்தக் கூனியைப்பார்த்து, சூரியசந்திரகுலத்தரசர்களாகிய 'மேலோர்' எனக் கௌரவப்பட்டம் பெற்றவர்கள் உயிர்மோசம் பொருள்மோசங்கள் வந்தபோதிலும், மனத்தளர்வின்றி சத்திரியகருமமுறையில் மாறுபடார்கள் என்று சொல்லுகிறார்கள். இங்ஙனம், சத்திரியகுலத்தவர்களுக்கு 'மேலோர்' என்று பெயர்வந்திருக்கிறது.

(v) பின்னும்,

கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், தைலமாட்டுபடலம், 36-வது கவியிலும்,

" கிஷ்கிந்தாகாண்டம், சம்பாதிப்படலம், 36-வது கவியிலும்,

" சுந்தரகாண்டம், சூடாமணிப்படலம், 76-வது கவியிலும் காண்க.

(vi) மூதுரை, 4-வது கவி:

"அட்டாலும்பால்சுவையிற் குன்றாதளவல்ல
நட்டாலும்நண்பல்லார் நண்பல்லர்—கெட்டாலும்
மேன்மக்கண்மேன்மக்களே சங்குசுட்டாலுந்
தான்மிக்கவெண்மைதரும்."

இந்தக்கவியில், 'சங்குசுட்டாலுந் தான்மிக்கவெண்மை தரும்' எனவும், 'கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே' எனவுஞ் சொல்லியிருக்கிறது. அதற்குத் தாற்பரியம் வருமாறு: "வெண்ணிறம்பொருந்திய சங்கைநீற்றவே அதின் நிறங்குன்றாது, அதிகவெண்ணிறமாகவிளங்கும். அதுபோல, சத்திரியகுலத்தவர்களாகிய மேன்மக்கள் கைகெட்டுப்போன போதிலும், சத்திரியகுலத்திற்குரிய மேன்பாடான கருமங்களிற் குன்றார்கள்" 'கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே'='The noble will be noble still, though they be reduced to poverty.' இக்கவியில் வந்திருக்கிற 'மேன்மக்கள்' என்பது அரசர்குலத்தவர்களைக் குறித்து, 'சான்றோர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட பதமாம்.

(*vii*) மூதுரை, 23-வது கவி:

"கற்பிளவோடொப்பர் கயவர்கடுஞ்சினத்துப்
பொற்பிளவோடொப்பாரும்போல்வாரே-விற்பிடித்து
நீர்கிழியவெய்தவடுப்போல மாறுமே
சீரொழுகுசான்றோர் சினம்."

இதில், கயவருஞ், சான்றோரும் எதிர்நிலைப்பொருள்களிற் கூறப்பட்டிருக்கின்றனர். ஆனதால், கயவர் கீழ்மக்களும், சான்றோர் மேன்மக்களுமாம். இங்ஙனம், 'சான்றோர், மேன்மக்கள்' என்னும் பெயர்கள் ஒருபொருளில்வந்தன.

(*viii*) மூதுரை, 18-வது கவி:

"சீரியர்கெட்டாலுஞ் சீரியர்சீரியரே
யல்லாதார்கெட்டாலங் கென்னாகுஞ்—சீரிய
பொன்னின்குடமுடைந்தாற் பொன்னாகுமென்னாகும்
மண்ணின்குடமுடைந்தக்கால்."

இத்தக்கவியில், 'அல்லாதார்' என்னப்பட்ட கயவரும், சீரியரும் எதிர்நிலையில் வைத்துக்கூறப்பட்டிருக்கின்றனர். ஆனதால், கயவர் கீழ்மக்களும், சீரியர் மேன்மக்களுமாம். 'சீரியர்' என்னும்பெயர் 'சான்றோர்' என்னும் பெயருடன் ஒரு

பொருள்கொண்டதாம்.* 'சீரியர்கெட்டாலுஞ் சீரியர் சீரியரே'='மேன்மக்கள்கெட்டாலும் மேன்மக்கள்.மேன்மக்களே,'
='Though the noble be reduced in circumstances, the noble are noble still.'

(ix) ஆத்திசூடி, 94-வது சூத்திரம்.

"மேன்மக்கள்சொற்கேள்."

இதற்கு 'அரசர்குலத்தவர்களாகிய துரைத்தனத்தார் கட்டளைக்கு இணங்கநடந்துவா' என்பது பொருளாம். இதில், 'மேன்மக்கள்' என்பதற்கு, 'மேலோர், அரசர்குலத்தவர்களாகிய சத்திரியர், துரைத்தனத்தார்' என்பது கருத்தாகும்.

(x) திருவள்ளுவர்குறள், 98-வது அதிகாரம், 3-வது கவி:

"மேலிருந்து மேலல்லார் மேலல்லர்
கீழிருந்துங் கீழ்லல்லார் கீழல்லர்."

இதற்குத் தாற்பரியம்.

"கயவராகிய கீழ்மக்கள் மேன்மக்கள் தானத்துக்குவந்தபோதிலும், மேன்மக்களாகார். மேன்மக்கள் கைகெட்டுப்போய் கீழ்மக்கள்தானத்திலிருந்தபோதிலும், கீழ்மக்களாகாது, மேன்மக்களாகவே விளங்குவர்" என்பதாம். இவைகளைத் திரட்டிப்பார்வையிடும்போது, 'மேலோர்'எனப் பெயர்பெற்ற மேன்மக்கள் அரசர்குலத்தவர்களாய்ச் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் பெற்றவர்களாவர்.

இனி 'ஆய்ந்தோர்' என்னும் பெயருக்குத் தாற்பரியங்கூறுவோம்.

## 6. ஆய்ந்தோர்.

'ஆய்ந்தோர்' என்பது, 'ஆய்' என்னும் வினைமுதலடியிற்பிறந்த 'ஆய்ந்தேன்' என்னும் இறந்தகாலவினைமுற்றினின்றுவந்த வினையாலணையும் பலர்பாற்பெயராம். 'ஆய்ந்தவன், ஆய்ந்தான், ஆய்ந்தோன்' என்பன வினையாலணையும் ஒருபொருள் ஆண்பாற்பெயர்களும், 'ஆய்ந்தவர், ஆய்ந்தார்,

---

* சதுரகராதி, உ-வது பொருளகராதி 'அறிவுடையோர்' காண்க.

ஆய்ந்தோர்' என்பன வினையாலணையும் ஒருபொருட்பலர்பாற் பெயர்களுமாம். 'ஆய்ந்தோர்' என்பதற்குச் சத்திரியகுல மேன்மைக்குரியவற்றைத் தீர்க்கவாராய்ச்சிசெய்து, அந்தப் பிரகாரம் ஒழுகிவருபவர்கள் என்பது பொருளாகும். பார்ப் பனக்குலத்தவர்களுக்கும் இப்பெயர் ஏற்கும். 'ஆய்ந்தோர்' என்பது 'சான்றோர்' என்னும்பெயருடன் ஒருபொருள்கொ ள்வதற்கு உதாரணங்கள் வருமிடங்களிற் கண்டுகொள்க.

இனி 'உயர்ந்தோர்' என்னும் பெயருக்குத் தாற்பரியங் கூறு வோம்.

## 7. உயர்ந்தோர்.

'உயர்ந்தோர்' என்பது, 'உயர்' என்னும் வினைமுதலடியி னின்று பிறந்த 'உயர்ந்தேன்' என்னும் இறந்தகால வினை முற்றினின்று வந்த வினையாலணையும் பலர்பாற்பெயராம். 'உயர்ந்தவன், உயர்ந்தான், உயர்ந்தோன்' என்பவைகள் இறந்த காலவினையாலணையும் ஒருபொருள் ஆண்பாற்பெயர்களும், 'உயர்ந்தவர், உயர்ந்தார், உயர்ந்தோர்' என்பன இறந்தகால வினையாலணையும் ஒருபொருட் பலர்பாற்பெயர்களுமாம். 'உயர்ந்தோர்' என்பதற்குச் 'சத்திரியகுலமேன்மைக்குரிய வற்றிற்சிறந்த மேன்மக்கள்' என்பது பொருளாம். பார்ப் பனக்குலத்தவர்களுக்கும் இந்தப்பேர் ஏற்கும். 'உயர்ந்தோர்' என்னும் பட்டப்பெயர் 'சான்றோர்' என்னும் பட்டப்பெயரு டன் ஒருபொருள்கொள்வதற்கு பெயராம். உதாரணங்கள் வருமிடங்களிற்காண்க.

இனி 'ஆரியர்' என்னும்பெயருக்குத் தாற்பரியமும், மேற் கோளுங் கூறுவோம்.

## 8. ஆரியர்.

இந்த 'ஆரியர்' என்னும் பெயருக்கு உற்பத்தி மூன்றுவகை ப்படும்.

க-வது. 'ஆரியம்' என்பது ஒருநாடாம். அது இமயகிரிமுதல் விந்தியகிரிவரையினுமுள்ளது. அதில் சமஸ்கிருதவாரியபா

ஷை பேசப்பட்டது. அதற்கு ஆரியநாடு* என்றுபெயர்: இந்தச்சமஸ்கிருதவாரியர் அந்தநாட்டிற்கு வருவதற்குமுன்னே, தமிழாரியப்பாஷைக்காரர் அந்தநாட்டிற்குடியிருந்தார்கள். சமஸ்கிருதவாரியர் அந்தநாட்டிற்குவந்தபிற்பாடு, அவர்கள் தமிழாரியர்களை விந்தியமலைக்குத் தெற்கிலுள்ள தக்ஷணநாட்டிற்கு ஓட்டிவிட்டார்கள். இந்தத் தென்பூமிநாட்டிற்குத் தமிழ்நாடு, அல்லது திராவிடநாடு என்றும், அந்தவடநாட்டிற்கு சமஸ்கிருதர்நாடு, அல்லது ஆரியநாடு என்றும் பெயர்களுண்டாயின. ஆகவே, சமஸ்கிருதராகிய ஆரியநாட்டாருக்கு 'ஆரியர்' என்றொரு பேருண்டு. மேலே, திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிற'ஆரியர்,' இந்த சமஸ்கிருதர்களாகிய ஆரியரல்லர். ஆனதால், இந்த ஆரியர் இன்னாரென்று இதனடியில் காண்பிப்போம்.

2-வது. 'ஆரியர்' என்பது 'ஆரி' என்னும் தமிழ்மொழியை அடியாகக்கொண்டு பிறந்துவந்திருக்கின்ற பெயராம். 'ஆரியன், ஆரியான், ஆரியோன்' என்பன ஒருபொருள் ஆண்பாற்பெயர்களும், 'ஆரியர், ஆரியார், ஆரியோர்' என்பன ஒருபொருட் பலர்பாற்பெயர்களுமாம். 'ஆரி' என்னும்பெயருக்கு (i) ஆரமாலையாகிய ஆத்திமாலைதரித்த சோழன், ஆரமாலையன் எனவும், (ii) மேன்மை எனவும், தாற்பரியமாம். ஆகவே, 'ஆரியர்' என்பதற்கு (i) தமிழ்நாட்டரசர்குலத்தவர்கள் எனவும், (ii) மேன்மையுடையோர், மேலோர், மேன்மக்கள் எனவும், பொருளமையும்.

௩-வது. 'ஆரி' என்பது உமையவளாகிய காளிக்குப்பெயராகும். 'ஆரியை' என்றும் சொல்வர். ஆனதால், 'ஆரியர்' என்பதற்கு 'காளிகாதேவிக்குரிமையுடைய தமிழரசர்குலத்தவர்கள்' என்பது பொருளாம். தமிழரசர்குலத்தவர்களுக்குச் சிவனுங்காளியுங் குலதெய்வங்களானதால், அவர்கள் காளிகாதேவி புத்திரரென்னப்பட்டார்கள். ஆகவே, அவர்களுக்கு 'ஆரியர்' எனப் பட்டப்பெயருண்டாயிற்று.

---

* 'ஆரியநாடு' என்பதற்கு 'ஆரியவர்த்தம்' என்னும் ஒரு பெயருண்டு. ஆரியவர்த்தம்=Aryavarta.

தமிழரசர்குலத்தவர்கள் தாங்கள்போய்க் குடியேறிய நகரங்களின் வடதிசையில் சத்தியாகிய காளியையும், கிழ்திசையில் ஐயனாரையும், மேல்திசையில் திருமாலையும், தென்திசையில் சத்தமாதர்களையும், நகரத்துமத்தியில் சிவனையும் நகரிகாவலர்களாக ஸ்தாபித்து அந்தந்தத்திசையில் அவர்களுக்கு ஆலயங்கள்கட்டி அவர்களை நமஸ்கரித்து வந்தார்கள். அன்றியும், சேர சோழ பாண்டியர்கள் ஆதியில் இந்தத்தமிழ் நாட்டிற்குவந்து குடியேறியபோது, கருவூருக்குச் சமீபத்திலிருக்கின்ற 'மதுக்கரை' என்னும் ஊர் இந்த மூன்றுபேர்களுடைய நாடுகளுக்கும் நடு எல்லையிலிருந்தது. அந்த மதுக்கரையில் மூவர்களுங்கூடி தங்கள் குலநாயகியாகிய காளிகாதேவிக்கு ஒரு ஆலயங்கட்டி அவளுடையச் சிலையை ஸ்தாபித்துப் பூசித்துவந்து, அந்தக்கோவிலுக்கு, செல்லாயியம்மன் கோவிலென்று பெயரிட்டார்கள்.

'செல்லாயி' என்பது காளிகாதேவிக்கு ஒரு செல்லப்பேராம். தமிழ்நாட்டரசர்கள் காளிகாதேவி வரபுத்திரரானபடியால், அவர்கள் காளியைச் செல்லத்தாய் என்றுசொல்லி யருமைபாராட்டிவந்தனர். ஆகவே, அந்த ஆதிக்கோவிலுக்குச் செல்லாயியம்மன்கோவிலென்று பெயரிட்டிருந்தனர். உமையவளாகிய காளிக்குத் தமிழரசர்குலத்தவர்களின் தாய் என்று அருத்தங்கொண்டுவருகின்ற 'அம்மை' என்னும் பெயரிட்டு அவளை அம்மைஎன்றே சொல்லிவந்தனர். அவர்கள் பிற்காலத்தில் பங்குபாகங்கள் பிரிக்கிறபோது, இந்தப் பொதுக்கோவிலில் வைக்கப்பட்டிருந்த காளிகாதேவி சிலையைத் 'தலை, உடல், பாதங்கள்' என மூன்று கூறுக்கினர். பாதங்கள் இரண்டும் சோழன் பங்குக்கும், தலை பாண்டியன் பங்குக்கும், உடல் சேரன்பங்குக்கும்வந்தது. சோழன் தன்பங்குக்குவந்த பாதங்களிரண்டையும் தன் நகரியாகிய உறையூருக்குக்கொண்டுவந்து, அந்த வூருக்கு வடபாரிசத்தில் காளிகாதேவிக்கு ஒரு ஆலயங்கட்டி, அந்த ஆலயத்திற்குள்ளே அந்தப் பாதங்களிரண்டையும்வைத்து அவளுக்குப் பூசைசெய்து வந்தான். நாளதுவரையும் அந்தப்பாதங்களிரண்டும் அந்த

ஆலயத்திற்குள்ளிருந்து வருகின்றன. காளிகாதேவி சிலை யொன்று பிரத்தியேகமாகச் செய்துவைத்து, ஊர்கோலம் போகும்போது, அதை விமானத்திலேற்றிக்கொண்டு போவது வழக்கம்.

இந்தக்கோவிலுக்கும் செல்லாயியம்மன்கோவிலென்றே பெயர். மதுக்கரை சேரன்பூமியிலிருந்ததினாலே, அவன் தன் பங்குக்குவந்த காளிகாதேவியுடலை அந்த மதுகரையிலிருந்த செல்லாயியம்மன்கோவிலிலேயே வைத்துப் பூசைசெய்து வந்தனன். அந்த உடலை மதுக்கரையிலிருக்கிற செல்லாயியம்மன்கோவிலிற் நாளதுங் காணலாம். பாண்டியன் தன் பங்குக்குவந்த தலையைத் தன் பூமிக்குக்கொண்டுபோய்விட்டான். இந்த மதுக்கரை மூன்றுபேருக்கும் பொதுப்பூமியாயிருந்தது. இந்த ஊருக்குக் கற்பக அமுதமாகிய 'மது' என்னும் பெயரைச்சேர்த்து, 'மதுக்கரை' எனப் பெயரிட்டனர்.

இதனால், தமிழ்நாட்டு மூவேந்தர்களும் தங்கள் குலநாயகியாகிய காளிகாதேவியையே முக்கியமாக வணங்கி, அவளை அருமைபெருமையாகச் 'செல்லாயியம்மன்' எனச்சொல்லி மகிழ்ந்துவந்தது தெளிவாக விளங்குகின்றது. ஆகவே, அவர்களுக்குக் 'காளிபுத்திரர்' எனப்பெயருண்டாயிற்று. இந்தப் பதவுற்பத்திப்படிக்கு, 'ஆரியர்' என்பதற்குக் 'காளிகாதேவி வரபுத்திரர், காளிகாதேவிதொண்டர்' என்பதுபொருளாம்.

தமிழாரியரெல்லாரும் ஆதியில் சிவபக்தர்களாகிய காளி பூசைசெய்துவந்தனர்.

ஆரியர் = மேன்மக்கள்,
= Great-men,
= Noblemen.

இது 'சான்றோர்' என்பதோடு ஒருபொருள்கொண்டபெயராம்.

(i) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், வனம் புகுபடலம், 1-வது கவி.

"பூரியர்புணர்மாதர் பொதுமனமெனமன்னும்
ஈரமுமுளதிலன் றறிவருவிளவேனில்
ஆரியன்வரலோடு மமுதனவியசீதக்
காருறுகுறிமானக் காட்டியதவனெங்கும்."

இந்தக்கவியில், இராமருக்கு 'ஆரியன்'எனப் பெயர்வந்திருக்கின்றது. 'ஆரியன்' என்பதற்கு, 'மேன்மகன், சான்றோன்' என்பது பொருளாம்.

(*ii*) கம்பராமாயணம், ஆரணியகாண்டம், மாரீசன் வதைப்படலம், 229-வது கவி.

"ஆரியனையகூற வன்னதுதன்னைநோக்கிச்
சீரியதன்றிதென்று சிந்தையிற்றெளிந்ததம்பி
காரியமென்னையீண்டு கண்டதுகனகமானால்
வேரியந்தெரியல்வீர மீள்வதேமேன்மையென்றான்."

இக்கவியிலும், இராமருக்கு 'ஆரியன்' எனப் பெயர்வந்திருக்கிறது. ஆகவே, 'ஆரியர், சான்றோர்' என்பன ஒரு பொருட்பதங்களாகும்.

(*iii*) இவைகளையன்றி,

கம்பராமாயணம், ஆரணியகாண்டம், சடாயுவதைப்படலம், 143-வது கவியையும்,
" கிஷ்கிந்தாகாண்டம்,வாலிவதைப்படலம், 34-வது கவியையும்,
" கிஷ்கிந்தாகாண்டம், அரசியற்படலம், 52-வது கவியையும்,
" கிஷ்கிந்தாகாண்டம்,கிஷ்கிந்தைப்படலம், 68-வது, 134-வது கவிகளையும்,
" கிஷ்கிந்தாகாண்டம், ஆறுசெல்படலம், 9-வது கவியையும்,
" கிஷ்கிந்தாகாண்டம், மயேந்திரப்படலம், 2-வது, 8-வது கவிகளையும்,
" சுந்தரகாண்டம், ஊர்தேடுபடலம்,96-வது கவியையும்,
" சுந்தரகாண்டம், நிந்தனைப்படலம்,40-வது கவியையும்,
" சுந்தரகாண்டம், உருக்காட்டுபடலம், 25-வது, 95-வது கவிகளையும்,
" உயுத்தகாண்டம், மந்திரப்படலம், 43-வது கவியையுங்காண்க.

இனி 'உலகு' என்னும் பெயருக்குத் தாற்பரியமும், மேற்கோளுங் கூறுவோம்.

### 9. உலகு.

உலகு இடவாகுபெயரானதால்,

உலகு = உலகோர்,
= உயர்ந்தோர்,
= மேன்மக்கள்,
= அரசர்குலப்பெரியோர்.

திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 17-வது சூத்திரம்.

'உலகமென்பதுயர்ந்தோர்மாட்டே.'

இந்தச்சூத்திரம் அரசர்குலப்பிரிவுப்பெயர் கூறுகின்ற சூத்திரங்களிலொன்றும். 'உயர்ந்தோர்' என்னும்பெயர் 'சான்றோர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட பதங்களிலொன்றும். ஆனதால், 'உலகு' என்பதும் அரசர்குலக் கௌரவப்பட்டப்பெயர்களிலொன்றாகும்.

'உலகவழக்கு' = உயர்ந்தோர்வழக்கு,
= உலகோம்பும் அரசர்வழக்கு,
= மேன்மக்கள்வழக்கு.

(i) கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், நகர் நீங்குபடலம், 44-வது கவி.

"கொழுநன்றுஞ்சுமெனவுங்கொள்ளாதுலகமெனவும்
பழிநின்றுயருமெனவும் பாவமுளதாமெனவும்
ஒழிகின்றிலையன்றியுமொன்றுணர்கின்றிலையானினிமேல்
மொழிகின்றனவென்னென்னுமுனியுமுறையன்றென்பான்."

இந்தக்கவியில், வசிட்டன் கைகேசியைப்பார்த்து, நீ உன் பிடிவாதச்சிந்தையை நீக்காயேயாயின், உன் நாயகனிறந்து போவான், உலகம் உன்செய்கையை ஒப்பாது, பழிநீங்காது பெருகும், பாவம்வரும். என்னசொன்னாலும் நீ கேட்கிறாயில்லை. நான் இனி என்னசொல்லப்போகிறேன் என்றான் எனச் சொல்லியிருக்கின்றது. இங்ஙனம் 'உலகங்கொள்ளாது'

எனக் கூறியிருக்கிறது. 'உலகங்கொள்ளாது' என்பதற்கு, 'உயர்ந்தோர் ஒப்பார்கள், மேன்மக்கள் ஒப்பார்கள், உலக மோம்பும், அரசர்கள் ஒப்பார்கள்' என்பதுகருத்தாம். ஆகவே, 'உலகு' என்னும்பெயர் 'சான்றோர்' என்னும் பெயருடன் ஒருபொருள்கொண்ட மொழியாம்.

(*ii*) மேற்படி நகர்நீங்குபடலம், 52-வது கவி.

*"மாற்றாள்செயலாமென்றுங் கணவன் வரமீய்ந்துள்ளம்*
*ஆற்றாதயர்ந்தானென்று மறிந்தாளவளுமவனைத்*
*தேற்றாநின்றாள்மகனைத் திரிவானென்றாளரசன்*
*தோற்றான்மெய்யென்றுலகஞ்சொல்லும் பழிக்குஞ்சோர்வா [ள்."*

இங்ஙனம், கோசலையாகிறவள் "அரசன்தோற்றான் மெய் யென்றுலகஞ்சொல்லும் பழிக்குஞ்சோர்வாள்" எனச் சொல் லியிருக்கின்றது. அதற்கு 'அரசன் வாக்குத்தவறிப்போனு னென்று உலகம்பழிக்குமேஎன்று நினைத்து மயங்கினாள்' என் பது பொருளாம்.

" உலகம்பழிசொல்லும்"—உயர்ந்தோர் பழிசொல்லுவார்கள்,
—அரசர்கள் பழிசொல்லுவார்கள்,
—மேன்மக்கள்பழிசொல்லுவார்கள்.

(*iii*) மேற்படி நகர்நீங்குபடலம், 53-வது கவி.

*"தள்ளாநிலைசால்மெய்மை தழுவாவழுவாவகைநின்*
*றெள்ளாநிலைகூர்பெருமைக் கிழிவாமென்றாலுரவோய்*
*விள்ளாநிலைசேரன்பால் மகன்மேல்மெலிவினுலகங்*
*கொள்ளாதன்றேவென்றாள் கணவன்குறையக்குறைவாள்."*

இக்கவியில், கோசலையாகிறவள் 'உலகங்கொள்ளாதன் றே வென்றாள்' எனவருகின்றது. இதில் 'உலகங்கொள் ளாது' எனவந்திருப்பதற்கும் மேலேகூறியதேபொருளாம். அன்றியும், இந்தக்கவியில் தசரதனுக்கு 'உரவோய்' எனப்

பெயர்வந்திருக்கிறது. 'உரவோய்' என்பதற்கு 'அறிவுடையோனே, சான்றோனே' என்பதுபொருளாம். 'அறிவுடையோன்' என்பதுஞ் சத்திரியகுலப்பட்டப்பெயராக இங்ஙனம் வருவதுகாண்க.

(iv) பின்னும்,

திருவள்ளுவர்குறள், 47-வது அதிகாரம், 10-வது கவியையும்,
,, 67-வது அதிகாரம் 10-வது கவியையுங் காண்க.

இனி 'ஆன்றோர்' என்னும் பெயருக்குத் தாற்பரியமும் மேற்கோளுங்கூறுவோம்.

## 10. ஆன்றோர்.

'ஆன்றோர்' என்பது, 'ஆலு' என்னும் வினைமுதலடியினின்று பிறந்த 'ஆன்றேன்' என்னும் இறந்தகாலவினைமுற்றினின்று வந்தவினையாலணையும் பலர்பாற்பெயராம்.

'ஆலு'—ஆலுகிறேன், ஆன்றேன், ஆலுவேன்.

இந்த 'ஆலு' என்னும் வினையும், 'சால்' (=சாலு) என்னும் வினையும் ஒருபொருள்கொண்ட வினைகளாய், 'நிறைதல்' என்னுங்கருத்தில் வந்துவழங்குகின்றன.

ஆன்றோர்=சான்றோர்,
=நிறைந்தோர்,
=Great-men,
=Noblemen.

'ஆன்றவன், ஆன்றான், ஆன்றோன்' என்பன இறந்தகால வினையாலணையும் ஆண்பால் ஒருபொருட்பெயர்களும், 'ஆன்றவர், ஆன்றார், ஆன்றோர்' என்பவைகள் இறந்தகாலவினையாலணையும் ஒருபொருட் பலர்பாற்பெயர்களுமாம். ஆகவே, 'ஆன்றோர், சான்றோர்' என்பன ஒருபொருட்கிளவிகள்.

(i) கம்பராமாயணம், கைகேசிசூழ்வினைப்படலம், 8-வது கவி.

"ஆன்றவனவ்வுரை கூறவையமில்லாள்
தோன்றியபேரவலந் துடைத்ததுண்டேல்
சான்றிமையோர்குலமாக மன்னநீயன்
றேன்றவரங்க ளிரண்டுமீதியென்றாள்."

இந்தக்கவியில், கைகேசியாகிறவள் தசரதனைப்பார்த்து, "நீர் அன்று எனக்கு வாக்களித்த இரண்டு வரமுந்தரவேண்டும் என்றாள்" என வருகின்றது. இங்ஙனம் தசரதனுக்கு 'ஆன்றவன்' எனப் பெயர்வந்திருக்கிறது. 'ஆன்றவன்' என்பதற்குச் 'சத்திரியகுலச்சான்றோன்' என்றுபொருளாம்.

மேலேகாண்பித்திருக்கிறபிரகாரம்,

சீதைக்குச், 'சான்றோர்மாது' எனவும்,
ஸ்ரீராமருக்கு, 'ஆரியன்' எனவும்,
தசரதனுக்கு, 'ஆன்றவன்' எனவும் பெயர்கள் வந்திருக்கின்றமையால், இவர்களெல்லாருஞ் சத்திரியகுலச்சான்றோர்களேயாம். ஆனதால், 'சான்றோர், ஆரியர், ஆன்றவர்' என்னும் பெயர்கள் ஒருபொருட்குலப்பெயர்களாம்.

(ii) பின்னும்,

கம்பராமாயணம், அயோத்தியாகாண்டம், நகர்நீங்குபடலம், 138-வது கவியையும்,
" அயோத்தியாகாண்டம், குகப்படலம், 5-வது கவியையுங் காண்க.

இந்தப்பிரகாரமாக, நாம் இங்ஙனம், திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரத்திற்கு விபரமான தாற்பரியமும் மேற்கோளுங்கூறி, அதின்பொருளைத் தெளிவாகக் காண்பித்தோம். இந்தப்பிரகரணத்தை முடிப்பதற்குமுன்னே, இன்னமும் ஒருவிஷயத்தைத் தெரியக்கூறுவோம். அதை வினாவிடைரூபமாக வரைகின்றோம்.

## வினா.

சான்றார்குலத்தவர்கள் தென்னாட்டில் நெரிஞ்சிதூர்த்துக் குடியேறி, நெடுநாளாக அந்தவிடத்தில் வாசஞ்செய்துவந்தும், தமிழ்ச்சாதியட்டவணை நூல்களாகிய திவாகரம், நிகண்டு, தொல்காப்பியம் முதலியவற்றில், 'சாணார்' என்னும் பெயர் வரவில்லையே ஏன்?

## விடை.

திவாகரம், நிகண்டு, தொல்காப்பியம் முதலான சாதியட்டவணை நூல்களில், 'சாணார்' என்னுங் குலப்பெயர் வரவில்லை, அது நிசந்தான். அந்த நூல்கள் எழுதப்பட்டகாலத்தில், 'சாணார்'. என்னும் மரூஉமொழிப்பெயர்வந்து வழங்காததால், அப்பெயர் அந்தநூல்களிற் வரையப்படவில்லை. திவாகரம், நிகண்டு, தொல்காப்பியம், சான்றோர்புராணம் முதலான நூல்கள் எழுதப்பட்டகாலத்தில் இந்தக்குலத்தவர்கள் 'சான்றோர், சான்றார், சான்றவர்' எனப் பெயர்பெற்றிருந்தனர். ஆனதால், அந்த நூல்களில் இந்த மூன்றுபெயர்களும் வந்துவழங்கியிருப்பதைத் தெளிவுறக் காண்கிறோம். தொல்காப்பியத்தில்—'சான்றோர்' என்னும் பெயர் அரசர்குலப்பெயராக வந்திருக்கிறது. 'சான்றார், சான்றவர்' என்னும்பெயர்களும் அதினோடு ஒருபொருள்கொண்ட தொகைநிலைப்பெயர்களாக வந்துவழங்கின. திவாகரநூலில்—'சான்றோர்' என்னும்பெயர் அரசர்குலப்பெயராக வந்திருக்கின்றது. 'சான்றார், சான்றவர்' என்னும் பெயர்கள் அதினோடு ஒருபொருள்கொண்ட தொகைநிலைப்பேர்களாக வந்து வழங்கின. சூடாமணிநிகண்டில்—'சான்றவர்' என்னும் பெயர் அரசர்குலப்பெயராக வந்திருக்கின்றது. 'சான்றோர், சான்றார்' என்னும் பெயர்களும் அதினோடு ஒருபொருள்கொண்ட தொகைநிலப்பெயர்களாக வந்து வழங்கின. சான்றோர்புராணத்தில்—'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் மூன்றுபெயர்களும் அரசர்குலப்பெயர்களாக வந்து வழங்கியிருக்கின்றன. பெரியபுராணத்தில்—'சான்றார்' என்னும் பெயர் அரசர்குலப்பெயராக வந்திருக்கின்றது. 'சான்றோர், சான்றவர்' என்னும் பெயர்களும் அதினோடு ஒருபொருள்கொண்ட தொகைநிலைப்பெயர்களாக வந்து வழங்கின. இதுபோலவே, ஆத்திசூடி, மூதுரை, வெற்றிவேற்கை, நாலடியார், குறள் முதலான நூல்களிலும் இந்த இயல்புப்பெயர்களே வந்து வழங்கியிருக்கின்றன. ஆனதால், பூர்வ சாதியட்டவணை நூல்களிலும், பிறநூல்களிலும், 'சான்றோர், சான்றார், சான்றவர்' என்னும்பெயர்

கள் எந்தவிடத்தில் வருகிறதோ அதுதான் இந்தக்குலத்தவர்களுடைய பெயர் நிற்கவேண்டிய விடமாம்.

ஜாதிசங்கிரகசார நூலாசிரியர் இது தெரியாதவராய், 'சான்றோர்' என்னும் பெயர்வந்திருக்கிற 11-வது சூத்திரத்தை விட்டுவிட்டு, அந்தப் பெயர்வந்திராத 50-வது சூத்திரத்தில், சங்கச்செய்யுள்களில் வராத 'சாணார்' என்னும் பெயரை முன்பின்பாராமல் அப்பிவைத்திருக்கிறார். அவர் 'சாணார்' என்னும்பெயரை 11-வது சூத்திரத்தில் ஒட்டவைக்க முயன்றிருப்பாரானால், சரியாயிருக்கும். 'சான்றோர்' என்னும் பெயருக்குச் 'சாணார்' என்னும் பதம் மரூஉமொழிப்பெயர் என்பாரேயாயின், நியாயஞ்சரியாயிருக்கும். 'சான்றோர்' என்னும்பெயருடன் 'சான்றார், சான்றவர்' என்னும் மொழிகள் தொகைநிலைப்பெயராகி, பிற்காலத்தில் 'சாணார்' என மரூஉமொழியாகி, உலகவழக்கில் வரலாயிற்றென்று விபரித்துக்கூறினால், காரியமுஞ் சரியாயிருக்கும், இலக்கணத்திற்கும் வழுவின்றாம்.

ஆகவே, திவாகரம், மக்கட்பெயர்த்தொகுதி, 11-வது சூத்திரமே, 'சாணார்' என மரூஉமொழிப்பெயர்பெற்ற 'சான்றார் குலத்தவர்களைச்சுட்டிக் கூறியிருக்கிற சூத்திரமாம். அந்தச் சூத்திரம் அரசர்குலப்பெயர்களோடு வந்திருப்பதை அறிவுடையோரெவரும் உய்த்துரைக்கக்கடவர்.

மேற்படி சூத்திரம் வருமாறு:

"சான்றோர்மிக்கோர் நல்லவர்மேலவ
ராய்ந்தோருயர்ந்தோ ராரியருலகென
வாய்ந்தவான்றோ ரறிவுடையோரே."

இனிவருகின்ற பிரகரணத்தில், சான்றோர்குலப் பூர்வோத்திரத்திற்கும், அக்குலக்கிளைப்பிரிவுகளுக்கும் விபரங்கூறுவோம்.



## ௯. பிரகரணம்.

*சான்றோர்குலப் பூர்வோத்திரம், கௌரவப்பட்டம், குலக்கிளைப்பிரிவுமுதலானவைகளுக்கு விபரங் கூறுகின்றது.*

மேற்கூறிய எட்டுப்பிரகரணங்களிலுஞ் சொல்லியிருப்பவற்றைக்கூர்ந்து ஆராய்ந்துப்பார்ப்பவர்களுக்குச் சான்றோர்குலஞ் சத்திரியகுலமென விளங்குமென்பதற்குச் சந்தேகமில்லை. இனி இந்த ஒன்பதாவது பிரகரணத்தில்,

முதலாவது. எக்குலத்தவருக்குந் தத்தங்குலத்துப் பூர்வோத்திரவுற்பத்திக் கிரமமாராய்தல் பிரியம் எனவும்,

இரண்டாவது. தமிழ்நாட்டுச்சத்திரியகுலத்தார் இன்னாரெனவும், அவர்களுக்குச் 'சான்றோர்' என்னுங் கௌரவப் பட்டப்பெயர் இன்னகாரணத்தாற் கொடுக்கப்பட்டதெனவும்,

மூன்றாவது. தமிழ்நாட்டுச் சத்திரியகுலமாகிய சான்றோர் குலத்துப் பிரதான கிளைப்பிரிவுகள் இன்னவைகளெனவுங் காண்பிப்போம். அவற்றுள்,

### முதலாவது.

எக்குலத்தவருக்குந் தத்தங்குலத்துப் பூர்வோத்திரவுற்பத்திக்கிரமங்களை உய்த்தாராய்தல் பிரியம் எனக் காட்டுவோம்.

சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்தின்கண்ணே வாசஞ்செய்துவருகின்ற நாலாகுலத்து நாலாபாஷைக்காரர்களும், அவரவர்குலத்துப் பூர்வோத்திரவுற்பத்திக்கிரமங்களையும், அவரவர்குலத்துப் பரம்பரைச்சரித்திரங்களையும் உய்த்தாராய்ந்தறிய மிகு நாட்டமுற்றிருக்கிறார்கள். நாலாதேசத்துப் பூர்வசரித்திரங்களடங்கிய இதிகாசங்களை வாசித்துப் பார்க்குமிடத்தில் இதன் உண்மை துலாம்பரமாக விளங்கும். பெயரொட்டுச்சார்பிற் சம்பந்தரூபமாகத்தோன்றும் அந்நியநாட்டுப் பெயர்களையும், அந்நியபாஷைச் சொற்சார்புகளையும் நுட்பமாக ஆராய்ச்சிசெய்பவர்கள் இரண்டிற்கும் ஒப்புமை சாடையாகத்தோன்றினபோதிலுந் துணிவுற்று, தங்கள் குலச் சார்புகளை எளிதில் வெளியிட்டுக்கூற ஆசைகாட்டுகிறார்கள்.

அதற்கு இரண்டொரு திருட்டாந்தம் இங்ஙனங் கூறுவோம்.

1. நம்முடையதேசத்தில் இக்காலத்திற் செங்கோற்செலுத்திவருகிற அங்கிலேயநாட்டாருடைய இதிகாசசரித்திர நூல்களால் அங்கிலேயருக்கு இவ்வகை அபேட்சையுண்டாயிருக்கிறதாகத் தெரியவருகின்றது. அவர்களுடைய நாட்டுக்குப் பூர்வபெயர் பிரிட்டன் (Britain). இந்தப்பிரிட்டன் என்னும்பெயர் உரோமரால் அங்கிலேய (England) நாட்டுக்கும் ஸ்கோத்தர் (Scotland) நாட்டுக்கும் இடப்பட்ட பொதுப்பெயர் என்பதாக கிரேக்கர் குலத்திலுதித்த அரிஸ்டோட்டல் (Aristotle) எனப் பெயர்கொண்ட மகாவித்துவானொருவன் பூர்வத்தில் எழுதிவைத்திருக்கிறான். அங்கிலேயநாட்டு இதிகாசசாஸ்திரிகளிற் சிலர் சொல்லுகிறபடிக்கு பிரிட்டன் (Britain) என்னும் பதம், பிரிட் (Brit=party-coloured) என்னும் மூலபதத்தினின்று பிறந்த பகுபதப்பெயராம். பிரிட்டன் என்பதற்குப் 'பலவன்னங்கள் தீட்டிய தேகமுடையோர்' என்பது சப்தார்த்தம். நம்முடைய தேசத்திற் சிலகுலத்தவர்கள் கைகால்முதலிய உறுப்புகளிற் பச்சைகுத்திவருகிறபிரகாரம், பிரிட்டன்நாட்டு ஆதிக்குடிகளாகிய பிரிட்டன்னியரும் தேகமடங்கலும் பற்பலவன்னங்கள் குத்திவரும் வழக்கமிருந்தகாரணத்தையிட்டு, அந்தநாட்டுக்குப் பிரிட்டன் (Britain) என்கிறபெயர் வந்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். வேறு சிலர் பிரிட்டன் என்னும்பதம் பூர்வகாலத்தில் ஆசியாக்கண்டத்து மேல்பாகத்திலிருந்த துரோயா (Troy) நாட்டிற் செங்கோற்செலுத்திய அஸ்கேனியஸ் எனப் பெயர்கொண்ட அரசன் புத்திரன் புருட்டஸ் (Brutus) என்பவனுடைய பெயர்ப்பதத்தினின்று சப்தத்தொனிக்கிசையப் பிறந்த பதம் என்கிறார்கள். புருட்டஸ் என்பவன் ஆதிகாலத்திற் சேனைகளோடு பிரிட்டன் நாட்டிற்குப் படையெடுத்துப்போய், அதைத் தன் கைவசப்படுத்திக்கொண்டு, அந்த நாட்டிற்குத் தன் நாமகரணப்படிக்குப் பிரிட்டன்நாடு எனப் பெயரிட்டான் என்பது இதிகாசச்சாட்சி.

இதுபோலவே யூரோப்புக்கண்டத்திலிருந்து வாழ்கின்ற வெவ்வேறு குலத்தவர்கள் தத்தங்குலத்துப் பூர்வோத்திரக்

கிரமங்களைச் சிரண்டிச்சிரண்டிக் கிணற்றூற்றுக் கண்டுபிடிக்கும்பிரகாரம் நுட்பவாராய்ச்சிசெய்து, குலவுற்பத்திக்கிரமங்களைத் துலக்கிவருகிறார்கள்.

2. இக்காலத்தில் அங்கிலேயர், ஜெர்மனியர் முதலான ஐரோப்பாக்கண்டத்து வடநாட்டு இதிகாசசாஸ்திரிகள், ஆதிகாலத்தில் மகாபிரளயத்திற்குத் தப்பிப்பிழைத்தவர்களுடைய வமிசத்தவர்கள் ஆசியாக்கண்டத்து மத்தியபாகத்தில், மலைத்தொடர்ச்சங்கமத்திற் சாகத்தீவு* எனப் பெயர்பெற்றிருந்த

---

* வைவசுவதமநுவின் பிரளயகாலத்திற்குப்பின் இதிகாசநூல்களிற் பேசப்படும் மகாமேரு (Maha Merú=*Ararat*, in Hebrew) வையடுத்த சாகத்தீவில் ஆரியர் இருந்ததற்கு ருசு.—காந்தம், அண்டகோசப்படலம், 48-வது செய்யுள்.

> "இங்கிவைசம்புத்தீவி னிடனேதண்பா
> விருங்கடல்சூழ் சாகத்தினெல்லைதன்னிற்
> றங்கியகோமேதாதி யற்குமைந்தர்
> சாந்தவயன்சிசிரன்கோ தயனுனந்தன்
> றுங்கமிகுசிவனெனுடுகே மகன்சிறந்த
> துருவணிவர் பேராலேழ் வருடமாக்கி
> யங்கவருக் கருள்புரிந்தான் கடவுள்வாயு
> வாரியர் விந்தகர்குகர ராண்டுவாழ்வார்."

இந்தச்செய்யுளில் சாகத்தீவில் ஆரியர் என்போர் ஆண்டு வந்ததாகச் சொல்லியிருக்கிறது. ஆரியக்கிளைகளில் இரண்டு பிரிந்து ஒன்று மேல்பக்கமாகச்சென்று ஐரோப்பாவிற் பலவிடங்களில் பரவுகையில், பின்னொரு கிளைப்பிரிவு தென்கீழ்திசையிற்சென்று இரண்டாகி ஒன்று தமிழாரியராய்ப் பரதகண்டமாகிய இந்துதேசத்திலும், பின்னொன்று இப்போது பார்சுதேசமென்று சொலப்படும் ஐரானிலும் குடியேறிற்று. ஐரானியவாரியர் இரண்டுபிரிவாய் ஒன்று சமஸ்கிருதவாரியராய்க் கீழ்திசையிற்சென்று இந்துதேயத்தில் நுழைந்து தமிழாரியராகிய பூர்வ ஆரியரைத் தக்கணபாகத்திற்கு வெகுவாய்த் தூரத்திவிட்டுத் தாங்கள் உத்தரவாரியராய் வடநாட்டில் தாபகமாயினர்.

Cf. "The *Saka-Dwipa*, or conntry north-west of Himalaya, we believe to have been the earliest cradle of the human race, in its renovations after the flood."—*Taylor's Oriental* Mss. *Vol. II, Appendix A, p.* 9.

" Mr. Gover's theory is simply this.—Tamil is an Aryan language, and came as an early off-shoot (i. e. Pre-Aryan) from the father land of the Sanskrit which is the mistress of all the Aryan tongues." *Daily News, 6th January* 1872.

சித்தியா (Scythia) நாட்டினின்று புறப்பட்டு, கீழ்திசை மேல் திசைகளைநோக்கி இரண்டு பெருங்கிளைப்பிரிவுகளாகப் பிரிந்துபோய், பெர்ஷியா, ஆப்கானிஸ்தான், இந்துஸ்தான் முதலான கீழ்தேசங்களிலும், ஐரோப்பாக்கண்டத்துவடநாடுகளிலுங் குடியேறினார்கள் என்றும், இவ்விருகிளைப்பிரிவார்களுடைய பாஷைகளையும் ஒழுக்கவழக்கங்களையும் ஒப்பிட்டுச் சமரசப்படுத்தி, இவர்களுக்குக் குலமொன்று கிளையிரண்டென்று நிச்சயித்து, ஒருகிளைப்பிரிவார் கீழ்திசைஆரியர்எனவும், மற்றொருகிளைப்பிரிவார் மேல்திசைஆரியர்எனவும் பெயர் பெற்றிருந்தார்கள் என்றும் பூர்வோத்திர உற்பத்திக்கிரமங் கூறிவருகிறார்கள்.

இதுகாரணத்தையிட்டு அங்கிலேயாகள் இந்துதேசத்துச் சமஸ்கிருதர்களாகிய ஆரியகுலத்தவர்களை ஆரியகுலத்துச் சொக்கரார் (Aryan Cousins) எனச்சொல்லி இனமுறைபாராட்டிவருகிறார்கள். இவ்வாறு பூர்வகுலந் துலங்குதற்கு என்னென்ன பாடுகளெல்லாம் படுகிறார்கள். இதன் உண்மைக்குச் சாட்சியாக இந்து இதிகாச அகராதியொன்றிற் கூறியிருப்பதை இங்ஙனம் மேற்கோளாகப் பேர்த்தெழுதுகிறோம்:—

"The name of Aryan is now generally used to designate that ethnological division of mankind otherwise called Indo-European or Indo-Germanic. No one now doubts that the Brahmans of India belong to the same family, the Aryan or Indo-European family, which civilized the whole of Europe. The Aryan race consists of two branches, an eastern and a western. The western branch comprehends the inhabitants of Europe, with the exception of the Turks, Magyars, and Finns: the eastern comprehends the inhabitants of Armenia, of Persia, of Afghanistan and Hindustan. The evidence on which a family relation has been established among these nations is that of language."*

இந்த மேற்கோளில், "No one now doubts that the Brah-

* Vide Garrett's Classical Dictionary of India, art. *Aryan Race.*

mans of India belong to the same family, the Aryan or Indo-European family." எனச் சொல்லியிருக்கின்றது. இதற்கு "இந்துதேசத்துப் பிராமணரும், ஐரோப்பாக்கண்டத்து வட நாட்டார்களும் ஏககுலத்தினர் என்பதற்குச் சந்தேகமில்லை" என்பது தாற்பரியமாம்.

வேறொருநூலிற் சொல்லியிருக்கிறதாவது:—" But if abstract justice requires us to clear out, on the very same principle our Aryan cousins must pack up."* இதில் யூரோப்பியரும், பிராமணரும் ஆரியகுலச்சொக்காரர் (Aryan cousins) என்னப்பட்டிருக்கிறார்கள்.

இதனால், தருந்தபிரகாரம் ஆராய்ச்சிசெய்து வருபவர்கள் குலப்பூர்வோத்திரங்களை இவ்வாறு சமுசயமறத் துலக்கிவிடலாம் எனத் துலாம்பரமாக விளங்குகின்றது. இதுபோலவே, சான்றோர் குலத்தவர்களும், பூர்வ தமிழ்நாட்டரசர்குலத்தவர்களும், ஏககுலத்தினர் என்பதும் ஆராய்ச்சிசெய்யச்செய்யத் துலக்கமாக விளங்குமென்பதற்குச் சந்தேகமில்லை.

3. இக்காலத்தில் அங்கிலேய குலத்தவர்களுக்குள்ளிருக்கின்ற சில வித்துவான்கள் ஆசியாக்கண்டத்து மேல்பாகத்திலிருக்கிற 'திருநாடு' எனப் பெயர்பெற்ற பலஸ்தீனநாட்டு வாசிகளான யூதகுலத்தவர்களாகிய இசரவேலருடைய ஒழுக்கவழக்கமுதலியவற்றோடு ' தங்கள்நாட்டு ஒழுக்கவழக்கங்களை யொப்பிட்டுத் தங்கள்குலம் யூதகுலத்துக்கு இனமானகுலமென்று திருட்டாந்தப்படுத்தி நூலெழுதிப் பிரசுரஞ்செய்து வருகிறார்கள். இந்தக்காலந் தெய்வச்செயலாற் பூர்வோத்திர வுற்பத்திக்கிரமங்களைக் கிண்டித் துலக்கிவிடுகிறகாலமென்று விளங்குகின்றது.

இதுபோலொத்த திருட்டாந்தங்கள் அநேகமுண்டு. ஆயினும் மேற்கூறியனபோதும். குலப்பூர்வோத்திரத்திற்குரிய உண்மைகள் தோன்றுதற்குப் பூர்வநூலாராய்ச்சியே முக்கிய காரணம். இக்காலத்தில், அங்கிலேய துரைத்தனத்தார் தென்

* Vide Dr. J. Murdoch's letter on Government and University Education in India, p. 88.

குமரிமுதல் இமயகிரிபரியந்தம் அரசிலையுருவென விரிந்துகிடக்கின்ற இந்துதேசமடங்கலும் வசிக்கின்ற பதினெண் பாஷைக்காரர்களுக்குள்ளே அந்தந்தப் பாஷைப் பிரிவுப் படிக்குப் பிரிந்துநிற்கின்ற நாற்பாற்குலத்துப்பிள்ளைகளுக்கும் இனிய தெள்ளமுதுபோன்ற கல்வியறிவைப்புகட்டுதற்கு உயர்வுந்தாழ்வுமாகிய அநேகமாயிரஞ் சாதாரண பள்ளிக்கூடங்களும், கல்விச்சாலைகளுஞ், சருவகலாசாலைகளும் ஏற்படுத்தி, அறிவு விருத்திசெய்துவருகிறபடியால், முன் அறிவீனத்தால், நூலாராய்ச்சியின்மையால், தங்கள் பூர்வகுலக்கிளைப் பிரிவுகள் துலங்காதிருந்தவர்கள், இக்காலத்தில் அதையறிந்து அதற்கிணங்க ஆசாரவொழுக்கங்களிற் தேற்சிபெற நடந்துகொள்வது வசையுமன்று, குற்றமுமன்றும்.

பூர்வத்தில் காசிநாட்டுக்கு அரசனாகிய துளசிமகாராஜனுக்கு அவன்தேவி கற்பூரவல்லி வயிற்றிலுதித்த புதல்வன் மாலையுங்கொடியுஞ் சுற்றிப்பிறந்ததினாற் சோதிடர்கள் அரசனைப்பார்த்து, மாலைசுற்றிப்பிறந்த பிள்ளை மாமனுக்கு ஆகாதென்றும், கொடிச்சுற்றிப்பிறந்த பிள்ளை கோத்திரத்துக்கு ஆகாதென்றும் பலவாறாகச்சொல்லி அரசனுக்குப் பயங்காட்டினதினாலே, அவன் அவர்கள் சொற்படிக்கு அருமாந்தகுழந்தையை ஆரணியத்திற்கொண்டுபோய் வைத்துவிடக் கற்பிக்க, அந்தப்படிக்கு ஏவலாளர்கள் அந்தப் பாலகனைக்கொண்டு போய், நடுக்காட்டுக்குள்ளே கிடத்திப்போட்டு வந்துவிட்டார்கள். அந்தக்குழந்தையை ஒருசக்கிலியனுஞ் சக்கிலிச்சியுங் கண்டெடுத்துவளர்த்தார்கள். அவனுக்குப் பக்குவப்பிராயமானகாலத்தில், தன்குலத்தினுண்மை தெரிந்தவனாய், அரசர்குலத்திற் பெண்ணெடுத்து, மதுரையில் திருமலைநாய்க்கன் நாளையிலே தன்னரசுநாட்டுக் கள்ளர்குலத்தவர்களைச் சங்காரஞ்செய்து, புஜபலபராக்கிரமனாய்க் கீர்த்திப்பிரதாபனாகி, மதுரைவீரனெனப் பெயர்பெற்றிருந்தது, எவருக்குந் தெரிந்தகாரியமல்லவா?

சான்றோர்குலத்தவர்கள் அரசிழந்தநாள்முதல், தமிழ்நாடுகளைக்கட்டி, ஆண்டுவந்த வடுகர்குலத்தரசர்கள்காலத்தில்,

தமிழ்நாட்டுப்பிறகுலத்தவர்கள் அந்த வடுகராசாக்களை மூட்டிவிட்டு, இந்தத் தமிழரசர்குலத்தவர்களை அரசாட்சியிற் சம்பந்தப்படவொட்டாதபடிசெய்து அரசாட்சிவகையில் தாங்களே சம்பந்தப்பட்டுக்கொண்டு, வடுக அரசனாகிய விசுவநாத நாய்க்கனுக்குள் தளவாயுத்தியோகஞ்செய்த அரியநாதமுதலி எந்தப்பிரகாரஞ்செய்தானோ அந்தப்பிரகாரஞ்செய்துவந்தார்கள். அந்தகாலமுதல் சான்றோர்குலத்தவர்கள் கல்விசாஸ்திரமுயற்சிக்கு ஏதுவில்லாமையால் அறிவிற்குன்றி, மூலைமுடக்குகளில் ஒளித்துப் பிழைத்துவந்தார்கள். சில தலைமுறைகளுக்குப்பிற்பாடு, அவர்களுடைய பின்னடியார் தங்கள் குலவுற்பத்திக்கிரமந் தீர்க்கமுறத் தெரியாதவர்களாய்ப்போய்விட்டார்கள். யூதகுலத்தவர்கள் எகிப்து தேசத்தில் உத்தேசம் நானூறு வருடக்காலம் எகிப்தியரால் என்னபாடுகள்பட்டார்களோ அந்தப்பாடுகளெல்லாம் சான்றோர்குலத்தவர்கள் வடுகர்களாலும் அவர்களுடன் கூடிக்கொண்ட சூத்திரகுலத்தவர்களாலும் பட்டனுபவித்தார்கள்* எகிப்தியர் யூதகுலத்தவர்களோடு அக்காலத்தில் உண்பன தின்பனவற்றில் எவ்வாறு கலவாதிருந்து அவர்களை வெறுத்துவந்தார்களோ அவ்வாறு வடுகர்களும் சூத்திரகுலத்தவர்களும் உண்பன தின்பனவற்றில் சான்றோர்குலத்தவர்களோடு கலவாதிருந்து அவர்களை வெறுத்துவந்தார்கள். தெய்வம் மோசேமுனியைக்கொண்டு எவ்வாறு யூதகுலத்தவர்களை மானங்காத்து இரட்சித்தாரோ அவ்வாறே தெய்வம் மிஷன் சங்கத்தார்களால் அனுப்பப்பட்ட குருக்கள்மாரைக்கொண்டு தமது திருமறைப்பிரகாசத்தால் சான்றோர்குலத்தவர்கள் அறிவில் தேறல், நாகரிகமடைதல், ஒடுக்கம்நீங்கல் முதலிய சலாக்கியங்களை அடையச் சித்தமானார். தெய்வம் சிறுமைப்பட்ட யூதகுலம் ஏற்றகாலத்தில் மகிமைபெற்று விளங்கச்செய்த பிரகாரம், இவ்வாறு சிறுமைப்பட்ட சான்றோர்குலமும் ஏற்றகாலத்தில் க்ஷேமமடைந்து விளங்கச்செய்வார் என்று ஐயமற உரைக்கலாம்.

---

* சேரநாட்டுச் சான்றோர்குலத்தவர்களைச்சுட்டி எழுதுகிற ஒருவர் "Down-trodden Shanars" என்று எழுதியிருக்கிறார்.

இக்காலத்தில், கல்விச்சாலைகளிற் பிறகுலத்து வாலிபர்களுக்கொப்பந்தங் கல்விகற்றுவருகின்ற சான்றோர்குலத்து வாலிபர்கள் பற்பலநூலாராய்ச்சி செய்யுந் திறமையுடையவர்களாகி, அங்கிலேயபாஷையிலுந் தமிழ்ப்பாஷையிலும் இருக்கின்ற இலக்கண இலக்கியநூல்களை விஸ்தாரமாக ஆராய்ந்து வாசித்துணர்ந்துவருகையில், அவர்கள் தங்கள் குலத்தின் பூர்வோத்திர உண்மையைத் தீர்க்கமுறக்கண்டு தெளிந்துகொள்ளுதற்கேதுவாயிற்று.

சான்றோர்குலஞ் சத்திரியகுலம் என்பதற்குத் தொல்காப்பியநூல் சாட்சிபகருகின்றது.

தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், 20-வது, 21-வது, சூத்திரங்களும், மேற்படி அதிகாரம், கற்பியல், 5-வது சூத்திரமுமாம்.

20-வது சூத்திரம், முதலுறுப்பு.

“ அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்,
ஐவகைமரபின் அரசர்பக்கமும்,
இருமூன்றுமரபின் ஏனோர்பக்கமும், &c.”

இதில், பார்ப்பனகுலமும், அரசர்குலமும், ஏனையோர்குலமுங் கூறப்பட்டிருக்கின்றன. இங்ஙனம், பிராமணகுலத்துக்குப் ‘ பார்ப்பனக்குலம்’ எனவும், சத்திரியகுலத்துக்கு ‘ அரசகுலம்’ எனவும் பெயர்கள் வந்திருப்பது கண்டுகொள்க.

21-வது சூத்திரம் அரசகுலத்தைச்சுட்டிப் பேசுகின்றது.

அதின் நடுவுறுப்பு.

“ ஒல்லாரிடவயிற் புல்லியபாங்கினும்
பகட்டினு மாவினும்
துகட்டபுசிறப்பிற் சான்றோர்பக்கமும், &c.”

இதில் மேற்படி அரசகுலத்துக்குச் ‘ சான்றோர் குலம்’ எனப் பெயர்வந்திருக்கிறது.

கற்பியல், 5-வது சூத்திரம், நடுவுறுப்பு.

“ அந்தணர்திறத்துஞ் சான்றோர்தேஎத்தும்
அந்தமில்சிறப்பிற் பிறர்பிறர்திறத்தினும், &c.”

இந்தச்சூத்திரத்தில், பார்ப்பனக்குலத்திற்கு 'அந்தணர்குலம்' எனவும், அரசகுலத்திற்குச் 'சான்றோர்குலம்' எனவும் பெயர்கள் வந்திருக்கின்றன. ஆகவே, அரசகுலமும், சான்றோர்குலமும் ஒருகுலமெனத் தெளிவுறவிளங்குகின்றது. 'அர், ஆர், ஓர்' என்னும் ஒருபொருட்பலர்பால்விகுதிகளேற்ற, மேற்படிபெயர் 'சான்றவர், சான்றார், சான்றோர்' என மூன்றுபேதரூபம்பெற்று ஒருபொருளில்வந்திருக்கின்றமையால், நாளது 'சான்றார்' எனப் பெயர்பெற்றிருக்கின்ற குலத்தவர்களே மேற்படி சான்றோர்குலத்தவர்களாம். ஆனதால், சான்றார்குலத்தவர்களே அரசகுலத்தவர்களுமாம்.

சான்றோர்புராணம், ஓலையேட்டுப்பிரதியில் கடைசியேட்டில், "நாஞ்சிநாடு மலையாளத்தில், அகத்தீசுரபுரத்துக்கு வடக்கில் அழகியபாண்டியபுரத்தில் சுப்பிரமணியமுதலியாரிடமாய் அவர்கள் வங்கிசபரம்பரையாய் கிரந்தவடமொழியால் சான்றோர் பூர்வஉற்பத்திப்புராணமிருக்கின்றது" எனக் கண்டிருக்கிறது. இதில் 'சான்றோர் பூர்வஉற்பத்திப்புராணம்' எனப் பெயர்வந்திருக்கிறது.

மேற்படி தொல்காப்பியச்சூத்திரப்பிரகாரம், இதிற் சொல்லப்பட்டிருக்கிற 'சான்றோர்' குலத்தவர்கள் அரசகுலத்தவர்களாகிய சத்திரியகுலத்தவர்களேயாம். மேற்படி சான்றோர்புராணம் எழுதப்பட்டகாலத்தில் மேற்படி குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' எனப் பெயர் வழங்கிவந்திருப்பது இதினாலுந் தெரியவருகின்றது.

வெற்றிவேற்கை, 60-வது சூத்திரம்.

"சான்றோரில்லாத் தொல்பதியிருத்தலின்
தேன்றேர்குறவர் தேயநன்றே."

இச்சூத்திரத்தில், 'சான்றோர்' என்னும்பெயர் அரசரைச் சுட்டி நிற்கின்றது. இவைகளையும், மேலே இரண்டாவது எட்டாவது பிரகரணங்களில் விபரப்படக் கூறியிருக்கிற வேறு அநேக மேற்கோள்களையுஞ்சேர்த்துப் பார்வையிடும்போது, சான்றோர்குலமே தமிழ்நாட்டுச் சத்திரியகுலம் என்பது தானாக விளங்கிநிற்கின்றது.

இக்காலத்தில், கல்விச்சாலைகளிற் பிறகுலத்து வாலிபர்களுக்கொப்பந்தங் கல்விகற்றுவருகின்ற சான்றோர்குலத்து வாலிபர்கள் பற்பலநூலாராய்ச்சி செய்யுந் திறமையுடையவர்களாகி, அங்கிலேயபாஷையிலுந் தமிழ்ப்பாஷையிலும் இருக்கின்ற இலக்கண இலக்கியநூல்களை விஸ்தாரமாக ஆராய்ந்து வாசித்துணர்ந்துவருகையில், அவர்கள் தங்கள் குலத்தின் பூர்வோத்திர உண்மையைத் தீர்க்கமுறக்கண்டு தெளிந்துகொள்ளுதற்கேதுவாயிற்று.

சான்றோர்குலஞ் சத்திரியகுலம் என்பதற்குத் தொல்காப்பியநூல் சாட்சிபகருகின்றது.

தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், 20-வது, 21-வது, சூத்திரங்களும், மேற்படி அதிகாரம், கற்பியல், 5-வது சூத்திரமுமாம்.

20-வது சூத்திரம், முதலுறுப்பு.

"அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்,
ஐவகைமரபின் அரசர்பக்கமும்,
இருமூன்றுமரபின் ஏனோர்பக்கமும், &c."

இதில், பார்ப்பனகுலமும், அரசர்குலமும், ஏனையோர்குலமுங் கூறப்பட்டிருக்கின்றன. இங்ஙனம், பிராமணகுலத்துக்குப் 'பார்ப்பனக்குலம்' எனவும், சத்திரியகுலத்துக்கு 'அரசகுலம்' எனவும் பெயர்கள் வந்திருப்பது கண்டுகொள்க.

21-வது சூத்திரம் அரசகுலத்தைச்சுட்டிப் பேசுகின்றது. அதின் நடுவுறுப்பு.

"ஒல்லாரிடவயிற் புல்லியபாங்கினும்
பகட்டினானு மாவினானும்
துகட்டபுசிறப்பிற் சான்றோர்பக்கமும், &c."

இதில் மேற்படி அரசகுலத்துக்குச் 'சான்றோர் குலம்' எனப் பெயர்வந்திருக்கிறது.

கற்பியல், 5-வது சூத்திரம், நடுவுறுப்பு.

"அந்தணர்திறத்துஞ் சான்றோர்தேஎத்தும்
அந்தமில்சிறப்பிற் பிறர்பிறர்திறத்தினும், &c."

இந்தச்சூத்திரத்தில், பார்ப்பனக்குலத்திற்கு 'அந்தணர்குலம்' எனவும், அரசகுலத்திற்குச் 'சான்றோர்குலம்' எனவும் பெயர்கள் வந்திருக்கின்றன. ஆகவே, அரசகுலமும், சான்றோர்குலமும் ஒருகுலமெனத் தெளிவுறவிளங்குகின்றது. 'அர், ஆர், ஓர்' என்னும் ஒருபொருட்பலர்பால்விகுதிகளேற்ற, மேற்படிபெயர் 'சான்றவர், சான்றார், சான்றோர்' என மூன்றுபேதரூபம்பெற்று ஒருபொருளில்வந்திருக்கின்றமையால், நாளது 'சான்றார்' எனப் பெயர்பெற்றிருக்கின்ற குலத்தவர்களே மேற்படி சான்றோர்குலத்தவர்களாம். ஆனதால், சான்றார்குலத்தவர்களே அரசகுலத்தவர்களுமாம்.

சான்றோர்புராணம், ஓலையேட்டுப்பிரதியில் கடைசியேட்டில், "நாஞ்சிநாடு மலையாளத்தில், அகத்தீசுரபுரத்துக்கு வடக்கில் அழகியபாண்டியபுரத்தில் சுப்பிரமணியமுதலியாரிடமாய் அவர்கள் வங்கிசபரம்பரையாய் கிரந்தவடமொழியால் சான்றோர் பூர்வஉற்பத்திப்புராணமிருக்கின்றது" எனக் கண்டிருக்கிறது. இதில் 'சான்றோர் பூர்வஉற்பத்திப்புராணம்' எனப் பெயர்வந்திருக்கிறது.

மேற்படி தொல்காப்பியச்சூத்திரப்பிரகாரம், இதிற் சொல்லப்பட்டிருக்கிற 'சான்றோர்' குலத்தவர்கள் அரசகுலத்தவர்களாகிய சத்திரியகுலத்தவர்களேயாம். மேற்படி சான்றோர்புராணம் எழுதப்பட்டகாலத்தில் மேற்படி குலத்தவர்களுக்குச் 'சான்றோர்' எனப் பெயர் வழங்கிவந்திருப்பது இதினுந் தெரியவருகின்றது.

வெற்றிவேற்கை, 60-வது சூத்திரம்.

"சான்றோரில்லாத் தொல்பதியிருத்தலின்
தேன்றோர்குறவர் தேயநன்றே."

இச்சூத்திரத்தில், 'சான்றோர்' என்னும்பெயர் அரசரைச் சுட்டி நிற்கின்றது. இவைகளையும், மேலே இரண்டாவது எட்டாவது பிரகரணங்களில் விபரப்படக் கூறியிருக்கிற வேறு அநேக மேற்கோள்களையுஞ்சேர்த்துப் பார்வையிடும்போது, சான்றோர்குலமே தமிழ்நாட்டுச் சத்திரியகுலம் என்பது தானாக விளங்கிநிற்கின்றது.

குப்பைமேட்டில் நெடுநாளாக மறைந்துகிடந்த மாணிக்கத்தைக் கண்டெடுத்தவன் அதைப் பிரகாசம்பெறத்துலக்கிக் காட்டமாட்டானா? நெடுநாளாகத் தூர்ந்துகிடந்த கிணற்றைக் கண்டுபிடித்தவன் தூரெடுத்து அதின் நீரை உண்ணமாட்டானா? இவ்வாறு செய்வது இயற்கையல்லவா? இப்படிக்குக் குலத்துக்குரிய பூர்வோத்திர ஆராய்ச்சி செய்துவருகிறவிஷயத்தில் சிலர் இதை மதவிஷயத்துடன் சம்பந்தப்படுத்தி, சகலகுலமும் மனிதகுலமானதால், குலம் ஒன்றென்றுபேசுதல் மதத்தைநோக்கிக் குற்றமன்றாம். தேசவழக்கை நோக்கிக் குலப்பேச்சுப்பேசுவது இயற்கையாம். குலம் ஒன்றென்று இடிமுழங்குகிறதுபோல முழங்கிப்பேசினாலும், குலம் ஒன்றென்று தீர்க்கமுற வுணர்ந்துநடப்பவர்கள் அரிதாம். நடந்துகாட்டிக் குலம் ஒன்றென முழங்கிப் பேசித்திரிபவனே புத்திமானும் பத்திமானுமாம். சொல்லுகிறதொன்று செய்கிறதொன்றேயாயின், குலம் ஒன்றென்று என்னமுழக்கமிட்டபோதிலும், அவர்கள் பேச்சு பயன்படாது.

அந்நிய நாட்டவர்கள் நம்முடைய நாட்டிற்குப் படையெடுத்து வருகிறதற்குமுன்னுதாக, நம்முடைய நாட்டவர்களில் மார்க்க அறிவில் தேறி, கடவுளொன்று மனிதகுலமுமொன்றென்று பேசிய ஞானவான்கள் சாதிபேதம் பாராட்டாது நடந்துவந்திருக்கிறார்களே, அவர்கள் பைபிலே (Bible) யும் அறியார்கள். சுயமனதால் வேண்டுமென்றே சாதிபேதத்தை அகற்றிவிட்டு, மரணபரியந்தம் வைராக்கியத்தோடு அந்நிலையில்நின்று சாதித்துவந்திருக்கிறார்களே. தேச ஆசாரத்திற்குக் குலமறியவேண்டும்; மதாசாரத்திற்குத் தெரிந்தகுலத்தைப் பாராட்டாதிருக்கவேண்டும்.

பார்ப்பார், செட்டிகள், சூத்திரர்முதலான குலத்தவர்கள் தங்கள் குலவுண்மைதெரிந்து அதைப் பாராட்டிவருகிறகாலத்தில், திவ்விய ஞானத்தில் முதிர்ந்து கடவுள் சிந்தையுடையவர்களாய், பூலோகவாழ்வை வெறுத்து, பரலோகவாழ்வில் மனம் பூண்டு, திவ்வியவேதநெறிப்படி நடக்க முயலுகிறகாலத்தில், தங்கள் உள்ளம் நிரம்பப் பெருகியிருக்கிற மெய்ப்பத்தியில் மித்ந்து, குலபேதம் பாராட்டாது, நார்குலத்தவர்

களை ஒருகுலத்தினரென மதித்து நடப்பது அவர்களுடைய சுயபிரியமாகும். அது அலங்காரம், அது மகிமை. அப்படிப் பட்டவர்கள் அகத்தும் புறத்தும் ஒன்றுபோல நடப்பார்கள். பலோத்காரத்தாற் குலபேதத்தை அழிக்கப்பார்ப்பது அபத்தம். குலபேதம் ஆகாதென்று உணர்ந்த உத்தம பத்திமான்கள் அகத்தும் புறத்தும் ஒன்றுபோல நடந்துகாட்டி உபதேசஞ் செய்யவேண்டும். குலபேதமாகாதென்று உணர்ந்த உத்தம பத்திமான்கள் அகத்தும் புறத்தும் ஒன்றுபோல குலபேதம் பாராட்டாது நடந்துவரவும்வேண்டும். குலபேதம் மனிதனுல் அழிபட்டுத்திராது. அது சுப்பிரமணியர் வெட்ட வெட்ட முளைத்த சூரபத்மனுடைய சிரசுபோலிருக்கிறதல்லவா? கடைசியில், அந்த அசுரன் மேற்படி சுப்பிரமணியரால் இருதுண்டமாக வெட்டுண்டு மடிந்துபோனுனல்லவா? அதுபோல, குலபேதமும் வெட்டவெட்டத் துளிர்விடுகின்றது. ஆயினும் காலம்வரும், அப்போது அது துண்டுதுண்டாக வெட்டுண்டு மாண்டுபோகும்.*

---

* Cf. "On the very important question of caste, Mr. Collins holds opinions that are diametrically opposite to those which have been expressed for many years past by the Nestors of Missionary Societies. Starting on the assumption that caste in India is but an exaggerated form of what is found in all countries where one race has brought another into subjection, he shows that the peculiar characteristic of class distinction in India is that it involves the idea of moral defilement. Class distinctions will remain "as long as the Sun and Moon endureth" in India as they will in other parts of the world, and nothing but evil can result from the frantic endeavours of European Missionaries to compel their converts to do violence to their own, and the world's innate convictions of the imperative necessity for such a distinction, as social differences, in an essentially aristocratic country like India, cannot be ignored without incurring great danger and responsibility, and it is preposterous that European clergymen who in their native land recognize the impropriety of thrusting a lot of Street Arabs into Eton or Westminster should deliberately attempt in India to force low caste boys into high caste schools. Human nature being what it is, and the laws that bind Society together what they are, the energy that is directed to persuading converts to break caste is a most mischievous one that should be countenanced no longer by the inhabitants of a land whose chief boast it is that it is the home *dar excellence* of freedom. The intelligent Missionary, who has advanced with the times, in which he lives, will follow Mr. Collins's

சான்றோர்குலத்தவர்களுடைய பூர்வ எதார்த்தகுலம் விளங்குவதிலும், அதையெடுத்துப்பேசுவதிலுங் குற்றமின்றாம். பார்ப்பனக்குலத்தவன் தன்குலம் இன்னதெனத் தெரிந்தவனாய் முதிர்ந்தபத்தியால் மனதாரக் குலபேதம்பாராட்டாது நடக்கவேண்டியபிரகாரம், சான்றோர்குலத்தவனுந் தன்குலம் இன்னதெனத் தெரிந்தவனாய் மனதார முதிர்ந்தபத்தியால் குலபேதம் பாராட்டாது நடந்துவரவேண்டும். குலத்தைஎடுத்துப் பேசாததினால் குலமழியவுமாட்டாது, குலத்தை எடுத்துப் பேசுவதினால் குலம் நிற்கவுமாட்டாது. குலபேதமானது விசுவரூபங்கொண்டு பருவதம்போல நிற்கின்றது. அது இந்த இந்துதேசத்தவர்களையாளும்பிரகாரம், ஒருவாறு பிறதேசத்தவர்களையும் ஆளுகின்றது. ஐரோப்பியருக்கும் யூரேசியருக்குமிருக்கின்ற குலபேதத்தர்க்கங்களையும், விரோதங்களையும், உய்த்துணர்ந்து பார்ப்போருக்கும் இது தெரியவரும்.

பூனைக்குந் தன்குட்டிபொன்குட்டி. எவனுக்குந் தன்குலம் பொன்குலமாம். அயலார்குலத்தை இழிவுபடப்பேசுவது எவருக்கும் எளிது. நிசநிலை தோன்றப்பேசுவதே உரவோர் நெறியாகும். சூத்திரகுலத்தவர்கள் சத்திரியகுலமேன்மை பெற விருப்புளோராவாராயின், அவர்கள்குலத்தின் நிசநிலை விளங்கும்போது உண்மைவெளியாகும்.

உலகமெல்லாங் குலத்திலேகிடந்து மாயுது. சிலகுலத்தவர்களுக்கு உண்பனதின்பனவற்றிற் பேதமில்லாதிருந்தபோதினும், இன்னமும் அனந்தவிஷயங்களிற் பேதமுண்டு. தெய்வபத்தனானவன் அதைப் பாராட்டாததுபோல இதையும்

---

advice, by directing his efforts solely against the religious elements of caste, the idea of moral defilement. Socialism, such as is fostered by the well-meaning fanatics who require converts break caste as "an outward and visible sign of inward and spiritual grace," would be as dangerous in the East as it threatens to be in the West; but that great curse of India, the idea of moral pollution in connection with caste, may in the long run be undermined by Christianity, and the country be thereby emancipated from the most terrible form of slavery that the world has ever produced. * * * There is a prospect of Christianity and education eventually undermining the moral feature of caste, and dissipating the notion that social distinctions involve moral pollution."—*Madras Mail, 9th July* 1873.

பாராட்டானும். தெய்வபத்தனுக்கு முன்பாகத் தோட்டி யுஞ்சரி, தொண்டமானுஞ்சரி. ஆனதால், தெய்வபத்தனை வன் தோட்டியுஞ்சரி தொண்டமானுஞ்சரிஎன மதித்து நடந் துவருவான். குலபேதகங்களெல்லாம் அடியோடே ஒழிந்து போகுங்காலம் வருகுது. அப்போது குலபேதகங்கள் இருந்த விடந் தடந்தெரியாமற்போய்விடும். அதுபரியந்தம் உத்தம தெய்வபக்தர்கள் சித்தலேச்சாத்தனரைப்போல முட்டி மோ திக்கொண்டு திரிவார்கள். அது தீர ஒழிந்துபோகுங்காலம் வரும்பரியந்தம், குலபேதத்தர்க்கங்கள் நடந்துகொண்டிருக் கும். கடவுள் சிந்தைபெற்ற பத்திமான்கள் பத்தியில் முதிர முதிரத் தங்கள்மட்டில் மனதாரக் குலபேதம்பாராட்டாதிரு க்க முயல்வதுமன்றி, சித்தலேச்சாத்தனரைப்போல மனத்து யரமுற்று அழுதுகொண்டு திரிவார்கள். இது திவ்வியவேதா ந்தப்போதனையாகும். இந்தத் திவ்வியவேதாந்தப்போதனை யானது குலப்பூர்வோத்திர உண்மைகளை யாராய்ந்து பார்ப்ப தற்குத் தடையன்றாம்.

இதுவரையினும், எந்தக்குலத்தவருக்குந் தத்தங்குலத்துப் பூர்வோத்திர உற்பத்திக்கிரமங்களை ஆராய்ந்துபார்ப்பது பிரி யம் எனக் காண்பித்தோம்.

## இரண்டாவது.

தமிழ்நாட்டுச் சத்திரியகுலத்தார் இன்னாரெனவும், அவர்க ளுக்குச் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் இன்ன காரணத்தாற் கொடுக்கப்பட்டதெனவுங் காண்பிப்போம்.

I. தமிழ்நாட்டுச்சத்திரியகுலத்தவர்கள் இன்னாரென்று நாம் மேலே விபரமாகக் காண்பித்திருந்தபோதிலும், அதை இங்ஙனம் மீண்டும் சுருங்கக்கூறுவது தெளிவுக்கேதுவாம். ஆதிமுதல் நம்முடைய தேசத்தில் ஏற்பட்டிருக்கிற குலப் பிரிவுகளை உய்த்தாராய்ந்து பார்க்குமிடத்தில், ஒரு காரியத் தை மனதில் தீர்க்கமுற நிறுத்திவைத்துக்கொண்டு நிதானித் துப் பார்க்கவேண்டியது. பழயகணக்குப்பிரகாரம் நம்முடை யதேசத்திற் பாஷைகள் பதினெட்டு. ஒவ்வொருபாஷை பேசு பவர்கள் இயல்பாக ஒவ்வொருகூட்டமாகப் பிரிந்திருக்கிறார்

கள். ஒவ்வொருபாஷைபேசுங் குழுவினரும் நந்நான்கு குல மாகப் பிரிந்திருக்கிறார்கள். இந்த நான்குகுலங்களுக்குங் கிழானவர்கள் பஞ்சமர் எனப் பெயர்பெற்றிருக்கின்றனர். ஆனதால், ஒவ்வொரு பாஷைக்காரருக்குள்ளும் ஐந்து குலங்களுண்டு. திருட்டாந்தமாக.

1. தமிழ்ப்பாஷைக்காரர்களையெல்லாம் ஒருங்கே திரட்டிப்பார்க்கும்போது, (i) தமிழ்ப் பார்ப்பனக்குலத்தார் எனவும், (ii) தமிழரசகுலத்தார், அல்லது தமிழ்ச்சத்திரியகுலத்தார், அல்லது சான்றோர்குலத்தார் எனவும், (iii) தமிழ் வணிகர்குலத்தார், அல்லது தமிழ்ச்செட்டிகுலத்தார் எனவும், (iv) தமிழ்ச் சூத்திரகுலத்தார் எனவும், (v) தமிழ்ப் பஞ்சமகுலத்தார் எனவும், ஐந்து பெருந்தமிழ்க்குலங்களாகப் பிரிந்து நிற்கிறார்கள்.

2. தெலுங்கு, அல்லது வடுகப்பாஷைக்காரர்களையெல்லாம் ஒருங்கேதிரட்டிப்பார்க்கும்போது, (i) தெலுங்குப் பார்ப்பனக்குலத்தார் எனவும், (ii) தெலுங்கரசகுலத்தார், அல்லது வடுக அரசகுலத்தார், அல்லது வடுகச் சத்திரியகுலத்தார் எனவும், (iii) தெலுங்கு வணிகர்குலத்தார், அல்லது வடுகச் செட்டிகுலத்தார் எனவும், (iv) தெலுங்குச் சூத்திரகுலத்தார், அல்லது வடுகச் சூத்திரகுலத்தார் எனவும், (v) தெலுங்குப் பஞ்சமகுலத்தார், அல்லது வடுகப்பஞ்சமகுலத்தார் எனவும், ஐந்து பெருந் தெலுங்குக்குலங்களாகப் பிரிந்துநிற்கிறார்கள்.

3. கன்னடப்பாஷைக்காரர்களையெல்லாம் ஒருங்கேதிரட்டிப்பார்வையிடும்போது, (i) கன்னடப் பார்ப்பனக்குலத்தார் எனவும், (ii) கன்னட அரசகுலத்தார், அல்லது கன்னடச் சத்திரியகுலத்தார் எனவும், (iii) கன்னட வணிகர்குலத்தார், அல்லது கன்னடச்செட்டிகுலத்தார் எனவும், (iv) கன்னடச் சூத்திரகுலத்தார் எனவும், (v) கன்னடப் பஞ்சமகுலத்தார் எனவும், ஐந்து பெருங்கன்னடக்குலங்களாகப் பிரிந்து நிற்கிறார்கள்.

4. மராட்டிய பாஷைக்காரர்களையெல்லாம் ஒருங்கே திரட்டிப்பார்வையிடும்போது, (i) மராட்டியப் பார்ப்பனக்குலத்

தார் எனவும், (*ii*) மராட்டிய அரசகுலத்தார், அல்லது மராட்டியச் சத்திரியகுலத்தார் எனவும், (*iii*) மராட்டிய வணிகர்குலத்தார், அல்லது மராட்டியச் செட்டிகுலத்தார் எனவும், (*iv*) மராட்டியச் சூத்திரகுலத்தார் எனவும், (*v*) மராட்டியப் பஞ்சமகுலத்தார் எனவும், ஐந்து பெரிய மராட்டியக்குலங்களாகப் பிரிந்துநிற்கிறார்கள்.

5. மலையாளபாஷைக்காரர்களையெல்லாம் ஒருங்கேதிரட்டிப்பார்வையிடும்போது, (*i*) மலையாளப் பார்ப்பனக்குலத்தார் எனவும், (*ii*) மலையாள அரசகுலத்தார், அல்லது மலையாளச் சத்திரியகுலத்தார் எனவும், (*iii*) மலையாளவணிகர்குலத்தார், அல்லது மலையாளச் செட்டிகுலத்தார் எனவும், (*iv*) மலையாளச் சூத்திரகுலத்தார் எனவும், (*v*) மலையாளப் பஞ்சமகுலத்தார் எனவும், ஐந்து பெரும் மலையாளக்குலங்களாகப் பிரிந்துநிற்கிறார்கள்.

இக்காலத்தில் தமிழ்நாட்டை நாலட்டமும் நோக்கிப்பார்ப்பவர்கள் பலபாஷைக்காரர்கள் அந்த நாட்டில் வாசம்பண்ணி வருகிறதாகக் காண்பார்கள். தமிழர், தெலுங்கராகிய வடுகர், மலையாளர், கன்னடியர், மராட்டியர், மகமதியர், ஐரோப்பியர்களாகிய பலபாஷைக்காரர்கள் காலாகாலங்களில் தமிழ்நாட்டிற்குப் படையெடுத்துவந்து வெற்றிபெற்ற காரணத்தையிட்டு, அவர்களுடைய சந்ததியார்கள் நாளதுவரையினும் இந்தத் தமிழ்நாட்டிற் பற்பலவிடங்களிற் காணிபூமிகளுக்குரிமைபெற்றுக் குடியிருந்துவருகிறார்கள். ஆனதால், தமிழ்நாட்டிற் குலப்பிரிவுகள் பிரித்துபார்க்கும்போது, அந்நாட்டிற் குடியிருந்துவருகிற தெலுங்கராகிய வடுகர், மலையாளர், துளுக்கர், கன்னடியர், மராட்டியர், ஐரோப்பியர்களையெல்லாம் ஒருங்கேதிரட்டி அப்பால் நீக்கிவைத்துவிட்டு, தமிழ்ப்பாஷையைக் குலப்பாஷையாக வுடையவர்களைமாத்திரம் ஒருங்கே சேர்த்துத் தமிழ்க்குலப்பிரிவுகள் பார்க்கவேண்டும்.

தமிழ்நாட்டிலிருக்கின்ற பார்ப்பனக்குலத்தவர்கள் தமிழ்ப் பார்ப்பனக்குலத்தவர்கள் எனவும், சமஸ்கிருதப் பார்ப்பனக் குலத்தவர்கள் எனவும், இரண்டுபிரிவாகப் பிரிந்துநிற்கிறார்

கள். ஆனதால், தமிழ்நாட்டு முதற்குலத்தவர்களைப் பார்க்கும்போது, சமஸ்கிருதப் பார்ப்பார்களை நீக்கிவிட்டுத் தமிழ்ப் பாஷையைக் குலப்பாஷையாகவுடைய பார்ப்பார்களைமாத்திரம் பார்க்கவேண்டியது.

இந்தப்பிரகாரம், பாஷைபாஷையாகக் குலம் பிரித்துப் பார்த்தால்மாத்திரம் மனதுக்குத் தெளிவுண்டாயிருக்கும். சென்னபட்டணக் குடிமதிப்புக் கம்மிட்டியார் (Madras Census Committee) அப்படிச்செய்யாமல், தமிழ்நாட்டில் வசிக்கின்ற பல பாஷைக்காரர்களையும் மொத்தமாகத்திரட்டிக் குலப்பிரிவுகள் செய்ததினால் மனதுக்குத் தெளிவுண்டாகாமல் மயங்குவதற்கிடமுண்டாயிற்று.

இந்தநூலில் நாஞ்சான்றோர்குலம் இன்னதென நிச்சயித்தறிவதற்குக் குலப்பிரிவுகள் செய்யும்போது, தமிழ்ப்பாஷையைக் குலப்பாஷையாகவுடைய குலத்தவர்களைமாத்திரம் பார்வையிட்டுக் குலப்பிரிவுகள் செய்திருக்கிறோம். அந்தப் படிக்கு,

1. இந்தத் தமிழ்நாட்டில் தமிழ்ப்பாஷையைக் குலப்பாஷையாகவுடைய பார்ப்பார்களே தமிழ்ப்பார்ப்பார்களாம்.

மற்றப்பார்ப்பார்கள் தெலுங்குமுதலிய பிறபாஷைகட்குரியவர்களாம். இவர்களைத் தமிழ்ப்பார்ப்பாரோடு சேர்க்கவேகூடாது. இவர்களுக்கு சமஸ்கிருதத்தில் 'பிராமணர்' அல்லது, 'வடமொழிப்பார்ப்பார்' எனவும், தமிழ்ப்பிராமணர்களுக்குப் 'பார்ப்பார்' அல்லது 'தென்மொழிப்பார்ப்பார்' எனவும் பெயராம். சமஸ்கிருதப்பிராமணர் தமிழ்ப் பார்ப்பாரல்ல. இந்தச் சமஸ்கிருதப்பிராமணர் வடுகர்களாகிய தெலுங்கர்களைச்சேர்ந்தவர்கள். அவர்களுக்குச் சமஸ்கிருதமே முக்கியபாஷை. தமிழ்ப்பார்ப்பாரும், தமிழ்ச்சத்திரியரும் நூலாராய்ச்சியினிமித்தம் சமஸ்கிருதம் நன்குணர்ந்துவந்தனர். ஆனதால், சேந்தன் 'வடநூற்கரசன், தென்றமிழ்க்கவிஞன், கவியரங்கேற்றும் உபயகவிப்புலவன்' என்னப்பட்டிருக்கிறான். கம்பநாடன்பேரன் தண்டி என்பவன் 'வடநூலுணர்ந்த தமிழ்நூற்புலவன்' என்னப்பட்டிருக்கிறான்.

வடமொழியாருக்குந், தென்மொழியாருக்கும் நெடுகிலும் பாஷையைவிட்டு, எதிரித்தனமுண்டாயிருந்தகாரணத்தினா லே, தமிழரசர்கள் வடமொழியிற்சமைந்த இலக்கண இலக் கியநூல்களை தமிழிற் மொழிபெயர்க்கச்செய்தும், வடமொ ழியாகிய சமஸ்கிருதபாஷையின் கொடுந்தொனிகளை இகழ் ந்து தள்ளிவிட்டு, அவ்வகைக் கொடுந்தொனிகளையுடைய சமஸ்கிருதமொழிகளைத் தமிழ்மொழிகளாக்குதற்கு விதி ஏற் படுத்தி, அந்த விதிப்பிரகாரம் வடமொழிகளைத் தென்மொ ழிகளாக்கித் தமிழில் உபயோகப்படுத்திக்கொண்டனர். திரு ட்டாந்தமாக:—

| | | |
|---|---|---|
| வருஷம் என்னும்மொழியை | | வருடம் எனவும், |
| பக்ஷம் | ,, | பட்சம், பக்கம் எனவும், |
| ரிஷபம் | ,, | இடபம் எனவும், |
| மஹாராஜன் | ,, | மகாராசன் எனவும், |
| ராக்ஷதன் | ,, | இராட்சதன் எனவும், |

தாங்கள் விதித்த விதிப்பிரகாரம் வடமொழியட்சரங்களைத் தென்மொழி யட்சரங்களாக மாற்றி எழுதிவந்தனர். அதுபோ லவே,

'பிராமணகுலம்' என்பதற்குப் 'பார்ப்பனக்குலம்' எனவும்,
'சத்திரியகுலம்' என்பதற்கு 'அரசகுலம்' எனவும்,
'வைசியகுலம்' என்பதற்குச் 'செட்டிகுலம்' எனவும்,

மொழிபெயர்த்து, வடமொழிப்பெயரைத் தென்மொழிப்பெ யராக்கிக்கொண்டனர். நான்காவது குலம் வடமொழியிலுந் தென்மொழியிலும் ஒன்றுபோல 'சூத்திரகுலம்' எனப் பெ யர்பெற்றது. தமிழ்நூல்களிலெல்லாம் பெரும்பாலும் இந்த நான்கு வருணத்தவர்களும் 'பார்ப்பார், அரசர், செட்டிகள், சூத்திரர்' எனப் பெயர்பெற்றுவந்திருக்கிறார்கள். 'சத்திரி யன்' என்னும்பெயர் 'சேத்திரம்' (=க்ஷேத்திரம்) என்னுஞ் சமஸ்கிருத மூலபதத்தினின்று பிறந்தபெயராம். 'சேத்தி ரம்' என்பதற்குக் 'காணிபூமி' என்பது தாற்பரியமாகும். ஆனதால், 'சத்திரியன்' என்பதற்குக் 'காணிபூமியுடையவன், காணியாட்சிக்காரன், நிலமைக்காரன், நாடாள்வான் என்று

பொருளாம். 'அரசன்' என்பதற்கும் 'காணிபூமியுடையவன் காணியாட்சிக்காரன், நிலமைக்காரன், நாடாள்வான்' என்பது தாற்பரியமாம். ஆனபடியினாலே, சத்திரியகுலம் அரசகுலமாம். மேலே நாம் ருசுப்படுத்தியிருக்கிறபிறகாரம், சான்றோர்குலமும் அரசகுலமாம். ஆகையால், சான்றோர் குலம் சத்திரியகுலமாகும்.

இந்த இந்துதேசத்து நாலாபாஷைக்காரர்களுக்குள்ளும் இந்த நாலுகுலமுமிருந்துவருகின்றன. இத்தமிழ்நாட்டுத் தமிழ்ப்பாஷைக்காரர்களுக்குள்ளே இந்த நாலுகுலமும் இருக்கிறதா என்று விசாரிக்குமிடத்தில்,

தமிழ்ப்பார்ப்பாரும்,
தமிழ்ச்செட்டிகளும்,
தமிழ்ச்சூத்திரரும், இருக்கிறார்கள்.

தமிழ்ச்சத்திரியராகிய அரசகுலத்தவர்கள் தமிழ்நாடெங்ஙனும் இல்லவே இல்லை என்றும், ஆனதால் தமிழ்ச்சத்திரியகுலம் முற்றிலும் அருகிப்போய்விட்டது என்றுஞ் சொல்லுகிறார்கள். தமிழ்நாட்டுக் குலவிபரங்களை ஆராய்ந்து நூல்கள் எழுதிவருகிற அந்நியநாட்டார்கள் இக்காலத்தில் தமிழ்ச்சத்திரியகுலந் தமிழ்நாட்டில் இல்லை என்பதாக எழுதியிருக்கிறார்கள். திருட்டாந்தமாக:—

In Wilks' History of Mysore, Vol. i., p. 231, we read thus: "These ceremonies are reserved for the three higher castes only; and of these, the second is entirely extinct." Again, in p. 179, "The second pure caste (Kshattrya caste) has become extinct."

இவ்வாறு தமிழ்நாட்டுச் சத்திரியகுலத்தவர்கள் முற்றிலும் அற்றுப்போய்விட்டார்கள் என்று சொல்லுகின்ற சித்தாந்தம் நிசமல்லவேயாயின், தமிழ்நாட்டுத் தமிழ்க்குலத்தவர்களுக்குள்ளே சத்திரியகுலத்தவர்கள் இன்னாரென்பதைத் தெளிவுறக்காட்டவேண்டியதாயிருக்கின்றது.

இக்காலத்தில் தமிழ்நாடெங்குந் தமிழர்களோடு கலந்து குடியிருந்துவருகிற தெலுங்குப்பாஷைக்காரர்களாகிய வடு

கர்கள் ரெட்டிகள் முதலானவர்களையும், மராட்டியர் கன்னடியர் மலையாளர்களையும், குலவரம்பற்றவர்களாகிய துலுக்கர்களையும், மற்றும் அந்நிய மொழிக்காரர்களையும், களைந்து பிரத்தியேகப்படுத்திவைத்துவிட்டு, சுத்தத் தமிழ்க்குலத்தவர்களையெல்லாம் ஒன்றுபடத் திரட்டி, அவர்களுக்குள்ளே நாற்பாற்குலவரம்புப்படிக்கு, அந்த நாலுகுலங்களில் ஒவ்வொரு குலத்தைச் சேர்ந்தவர்கள் இன்னார் இன்னாரென்றும், தமிழ்ப் பஞ்சமகுலத்தைச்சேர்ந்தவர்கள் இன்னாரென்றும் நிச்சயிக்க வேண்டும். அவ்வாறு வகுத்துப் பார்க்கும்போது, தமிழ்ப் பாஷையையே குலப்பாஷையாகப் பேசிவருகிற பார்ப்பார் முதற்குலமாம். தமிழ்ப்பாஷையையே குலப்பாஷையாகப் பேசிவருகிற செட்டிகள் மூன்றாவது குலமாம். தமிழ்ப் பாஷையையே குலப்பாஷையாகப் பேசிவருகிற சூத்திரர்கள் நான்காவது குலமாம். தமிழ்ப்பாஷையையே குலப் பாஷையாகப் பேசிவருகிற பஞ்சமர்கள் கீழ்க்குலத்தவர்களாம்.

தமிழ்நாட்டுத் தமிழ்ப்பாஷைக்காரருக்குள்ளிருந்து வருகிற பார்ப்பார்களையுஞ் செட்டிகளையும் பஞ்சமர்களையும் எளிதிற் பிரித்துவிடலாம். அந்த மூவகைக் குலத்தவர்களையுஞ்சுட்டிக் குலமயக்கமில்லை. சூத்திரகுலத்தவர்களுக்குள்ளே பலபிரிவுகளுண்டு. 'அந்தப்பிரிவுகளைச் சூத்திரகுலத்தவர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிற ஆறுதொழில்களால் நிச்சயித்தறிய வேண்டும். அந்த ஆறுதொழில்களையும் இங்ஙனம் மீண்டும் பேர்த்தெழுதுகிறோம்.

> திவாகரம், 12-வது தொகுதி, 81-வது சூத்திரம்.
> வேளாளராறுதொழி லுழவுபசுக்காவ
> லெள்ளிதின்வாணிபங் குயிலுவங்காருகவினை
> யொள்ளியவிருபிறப் பாளர்க்கேவல்செயல்."
>
> (*i*) உழவு, (*iv*) குயிலுவம்,
> (*ii*) பசுக்காவல், (*v*) காருகவினை,
> (*iii*) வாணிபம், (*vi*) முதல் மூவர்க்கேவல்செய்தல்.

இந்த ஆறுதொழில்களில்,

(i) முதற்றொழில் உழவு. இந்த உழவுத்தொழிலையே பூர்வ முதல் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து செய்துவருகிறவர்களே வேளாண்மாந்தர் என்னப்பட்டுவருகிறார்கள்.

தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல்,
81-வது சூத்திரம்.

"வேளாண்மாந்தர்க் குழுதுணையல்ல
தில்லெனமொழிப பிறவகைநிகழ்ச்சி."

இதனால் ஆதிகாலமுதல் குலத்தொழிலாக உழவுத்தொழில் செய்துவருகிற சூத்திரகுலத்தவர்களே வேளாண்மாந்தர்களாம். இவர்கள் விவாகக் கொள்வினை கொடுப்பினையிற் பிற சூத்திரகுலத்தவர்களோடு கலவார்கள், இவர்களுக்குத்தான் பிள்ளைப்பட்டமுண்டு. இக்காலத்திற் பிள்ளைப்பட்டம் பாராட்டிவருகிற வேறொரு பெருங்கூட்டத்தாராகிய சூத்திரக் கிளைப்பிரிவாருண்டு. அவர்கள் இன்னாரென்று இங்ஙனம் இனந்துலக்கிக்காட்டுவோம். இதை யாவருங்கூர்ந்து கவனிக்கவேண்டியது.

இந்தத்தமிழ்நாட்டில் ஆயிரத்தெட்டுச் (1,008) சிவாலயங்களும், நூற்றெட்டு (108) விஷ்ணுவாலயங்களுமுண்டு. இவைகளையன்றி, இவைகளைப்போலொத்த வேறு அநேக ஆலயங்களுமுண்டு. இந்த ஆலயங்களிலொன்றாவது தாசிகளில்லாத ஆலயங்களில்லை. இந்தத்தாசிகள் தமிழ்நாட்டில் ஆலயங்கள் ஏற்பட்டகாலமுதலிருந்துவருகிறார்கள். நாலாகுலத்தவர்களும் அவர்களோடு கூடுகிறதினாலே ஆண்களும் பெண்களுமாகிய குழந்தைகள் தலைமுறை தலைமுறையாகப் பிறந்து விருத்தியடைந்துவருகிறார்கள். பெண்குழந்தைகள் பக்குவகாலங்களில் நாடறிய ஊரறியக் கோயில்தாலிகட்டிக்கொண்டு தாய்க்குரிய குலத்தொழிற்செய்துவருகின்றனர். ஆண்பிள்ளைகள் சைவவேடம்பூண்டு, பிள்ளைப்பட்டம் பாராட்டிக்கொண்டு, சூத்திரரோடு சூத்திரராயிருந்துவருகிறார்கள். இவர்கள்தொகை பெருந்தொகையாகும். இவர்களெல்லாருஞ் சூத்திரகுலமாகிய பெருங்கடலிற் கலந்துபோகிறார்கள். இவ்

வாறு பிள்ளைப்பட்டம் பாராட்டிவருகிற சங்கரகுலத்தவர்களைக் களைந்து நீக்கிவிட்டால், அப்பட்டமான வேளாண்மாந்தர்கள் தொகை சிறுத்துப்போகும்.

(*ii*) பசுக்காவல்செய்துவருகிற சூத்திரகுலத்தவர்களும் வேளாளர்களாம்.

(*iii*) வாணிபஞ்செய்துவருகிற சூத்திரகுலத்தவர்களும் வேளாளர்களாம். பூர்வம்முதல் இருந்துவருகிற அவர்களுக்கு வேளாண்செட்டிகள் என்றுபெயர்.

(*iv*) குயிலுவத்தொழிற்செய்துவருகிற சூத்திரகுலத்தவர்களும் வேளாளர்களாம். அவர்கள் மேளதாளவாத்தியங்கள் சேவிக்கிறவர்களாவர்.

திவாகரம், 12-வது தொகுதி, 82-வது சூத்திரம்.

"குயிலுவம்வாத்தியங் கொட்டுதலாகும்."

(*v*) காருகவினை செய்துவருகிற சூத்திரகுலத்தவர்களும் வேளாளர்களாம். அவர்கள் நெசவுத்தொழிற் செய்துவருகிறவர்கள்.

திவாகரம், 12-வது தொகுதி, 83-வது சூத்திரம்.

"பருத்திநூல்பட்டுநூல் மைத்தாடையாக்கலுஞ்
சுமத்தலும்பிறவுங் காருகவினைத்தொழில்."

(*vi*) முதல் மூன்றுகுலத்தவர்களாகிய பார்ப்பனக்குலத்தவர்களுக்கும், அரசகுலத்தவர்களுக்கும், செட்டிகுலத்தவர்களுக்கும் ஏவற்றொழிற்செய்துவருகிற சூத்திரர்களும் வேளாளர்களாம்.

தமிழ்நாட்டுத் தமிழ்ப்பாஷைக்காரர்களுக்குள்ளிருக்கிற பார்ப்பனக்குலத்தவர்களையுஞ், செட்டிகுலத்தவர்களையுஞ், சூத்திரகுலத்தவர்களையும், பஞ்சமகுலத்தவர்களையும் நீக்கியபின், மீதியாயிருக்கிற குலத்தவர்களிற் பூர்வத்தில் தமிழ்நாடு ஆண்டுவந்த அரசகுலத்துடன் சம்பந்தப்பட்ட குலத்தவர்கள் யாரோ அவர்களே தமிழ்நாட்டுச் சத்திரியர்களாயிருக்கவேண்டும். பூர்வகாலத்தில் தாயாதிகளோடு சச்சரவுபட்டுக்கொண்டு உத்தர இந்தியாவினின்று புறப்பட்டு, விந்தியபருவதத்திற்குத்

தெற்கிலிருக்கிற தக்ஷண இந்தியாவுக்குவந்து குடியேறிய குருசுனமகாராசன் புத்திரர்களாகிய கலிங்கன், கேரளன், சோழன், பாண்டியன் என்னும் நாலுபேரும் மேலும்மேலுந் தென்னாடுநோக்கிச்சென்று, நாலு இராச்சியங்கள் ஏற்படுத்தினார்கள். அவர்களிற் கலிங்கன் கலிங்கநாட்டிலும், கேரளன் எனப் பெயர்கொண்ட சேரன் சேரநாட்டிலும், சோழன் சோழநாட்டிலும், பாண்டியன் பாண்டிநாட்டிலுஞ் செங்கோற்செலுத்திவந்தார்கள். இவர்களும் இவர்கள் குலத்தாருந்தான் தமிழ்நாட்டுப் பூர்வ அரசகுலத்தவர்களாம். இவர்களே பூர்வ தமிழ்நாட்டுச் சத்திரியர்களாவர். இந்தத் தமிழரசகுலத்தவர்களுக்குப் பிற்காலத்திற் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயருண்டானதினாலே, தமிழரசகுலமானது சான்றோர்குலம் என்னும்பெயருக்குள் அடங்கிப்போக, அவர்கள் சான்றோர்குலத்தாரெனப் பெயர்பெற்றிருந்தார்கள். இதற்கிசைய தொல்காப்பியர் அரசகுலத்தைச் சான்றோர்குலம் எனக் கூறியிருக்கிறார்.

நாலடியார், 10-வது அதிகாரம், ஈகை, 10-வது கவி.

" கடிப்பிடுகண்முரசங் காதத்தோர்கேட்ப
ரிடித்துமுழங்கியதோர் யோசனையோர்கேட்ப
ரடுக்கியமூவுலகுங் கேட்குமேசான்றோர்
கொடுத்தாரெனப்படுஞ்சொல்."

இதற்குத்தாற்பரியம்.

" (தமிழ்நாடு ஆளுகின்ற பாண்டியா,) உன்நாட்டில் கடிப்பாகிய குறுந்தடியினால் அடிக்கப்படுகின்ற பேரிகைச்சத்தம் காதவழிதூரத்திலுள்ளவர்களுக்குக் கேட்கும், இடித்து முழங்குகின்ற மேகக்கர்ச்சிதம் ஒருயோசனைதூரத்திலுள்ளவர்களுக்குக் கேட்கும். சான்றோர் குலத்தவர்களாகிய உன்குலத்தரசர்கள் கொடுக்குங்கொடையோ சுவர்க்கமத்தியபாதலமென்னும் மூன்றுலோகத்திலுள்ளவர்களுக்குங் கேட்கும்" என்பதாம்.

அரசர்களுக்குரிய ஆறுதொழில்களில் மேம்பாடானதொழில் ஈகை. ஆனதால், 'சான்றோர் கொடுத்தார்' என்பது அரசர்களுக்குரிய ஈகைத்தொழிலைக்குறிக்கின்றது. கொடை

கொடுப்பதற்குரியவர்கள் அரசர்கள். முரசச்சத்தமும், இடி முழக்கமும் பிறகுலத்தவர்கள் கொடுக்கும் கொடைக்குச் சமரசமாகும். மூவுலகும் அறிந்துபுகழத்தக்க பெருங்கொடையோ அரசர்கள் கொடுக்குங்கொடையாம். 'அரசர்கள்' தொல்காப்பிய திவாகரநூற்பிரகாரம், இங்ஙனம் 'சான்றோர்' என்னப்பட்டிருக்கிறார்கள். ஆகையால், சான்றோர்குலத்தவர்களே அரசகுலத்தவர்களாம்.

நெடுங்காலமாகத் தமிழ்நாடு ஆண்டுவந்த அரசகுலத்தவர்கள் முற்றிலும் அருகி ஒழிந்துபோய்விட்டார்கள் என்பதாகச் சொல்லிக்கொள்ளுகிற பேச்சு நம்பப்படத்தக்கதல்ல; என்னத்தினாலென்றால்,

1. கிறிஸ்துவுக்கு உத்தேசம் 1,600 வருடங்களுக்குமுன்னுதாக, அல்லது தசரதராமனுக்கு உத்தேசம் 600 வருடங்களுக்கு முன்னுதாக, தக்ஷண இந்தியாவுக்குவந்து குடியேறி நாலு பெரிய இராச்சியங்களை உண்டுபண்ணிய குருசுனமகாராசன் புத்திரர்கள் நாலுபேர்களில் மூவர்களாகிய சேரசோழ பாண்டியர்குலத்தவர்கள், கிறிஸ்துவுக்குப்பின் உத்தேசம் 1,600 வருடக்காலம்வரையினும் இடையறாது தமிழ்நாடு ஆண்டுவந்திருப்பதினாலே, உத்தேசம் 3,200 வருடக்காலங்களாகத் தழைத்துப் பெருகிய தமிழரசகுலத்தவர்கள் கட்டோடே ஒழிந்துபோய்விட்டார்களென்று சொல்லுவது எளிதில் நம்பப்படத்தக்கதல்ல.

2. வடமேற்குத்திசையிலிருந்து இந்தியாவுக்குக் காலாகாலங்களிற் படையெடுத்துவந்த அசீரியர், பெர்ஷியர், கிரேக்கர், சீரியர்முதலான அந்நியநாட்டார்கள் இந்தியாவின் வடதிசையினின்று தென்திசைநோக்கி புஜபலபராக்கிரமத்தால் நாடுகளைக்கட்டி ஆண்டுவந்தகாலங்களில், தக்ஷண இந்தியாவின் தென்கடைகோடியிலிருந்த தமிழ்நாடுகளிற்புகுந்து, அதின் பூர்வ நிலைகுலைய, அரசகுலங்கள் நாசப்படச்செய்ததாகச் சரித்திரமில்லை. மகமதியர்கள் தமிழ்நாடுகளிற் புகுந்தபோதிலும், அதின் தென்பாகத்தில் கீழ்சடலையடுத்த நாடுகளிற் பெருந்தீமைகள்செய்து, மேற்படி குலநாசஞ்செய்ததாக

மையும் ஒருகுடைக்குள் அடக்கியாண்டவர்கள் என்பது பொருளாம். தென்பரதகண்டம் முழுமையும் பூர்வத்தில் மூன்று பெரும்பிரிவுகளாகப்பிரிக்கப்பட்டிருந்தது. அந்த மூன்றுபிரிவுகளுக்கும் ‘இமயமலைநாடு, சமபூமிநாடு, மலையிடைப் பூமிநாடு’ எனப்பெயராம். இவற்றுள், இமயமலைநாட்டிற்குச் ‘சுரர்நாடு, தேவர்நாடு’ எனவும், சமபூமிநாட்டிற்கு ‘நரர்நாடு’ எனவும், மலையிடைப்பூமிநாட்டிற்கு ‘நாகர்நாடு’ எனவும் பெயராம்.

மேலும், சுரர்நாட்டிற்கு ‘தேவலோகம், சுவர்க்கலோகம்’ எனவும், நரர்நாட்டிற்குப் ‘பூலோகம், மத்தியலோகம்’ எனவும், நாகர்நாட்டிற்குப் ‘பாதலலோகம்’ எனவும் பெயராம்.

“சுவர்க்கமத்திய பாதலலோகங்களாகிய திரிலோகங்களையும் ஒருகுடைக்குள் அடக்கியாண்டவேந்த சக்கரவர்த்தி” என்பதற்கு ‘சுரர்நாடு, நரர்நாடு, நாகர்நாடு எனப் பாகிக்கப்பட்டு நின்ற தென் பரதகண்டம் முழுமையையும் ஒருகுடைக்குள் அடக்கியாண்டவேந்த ஏகாதிபதி’ என்பது பொருளாகும். ஆனதால், ‘திரிலோகவேந்தர்’ என்பதற்கு மூன்றுபெரியநாடுகளாகப் பிரிந்துநின்ற ‘இந்துதேசம்முழுமையையும் ஒருகுடைக்குள் அடக்கியாண்டவேந்த அரசர்’ என்பதுகருத்தாம்.

இந்தத் தாற்பரியவுரைப்படிக்கு, மேற்படி 5-வது சூத்திரத்தில் ‘உலகம்’ என வந்திருக்கிற பெயருக்கு ‘நாடு’ என்பது பொருளாம். மேற்கூறிய ஐந்தாவது சூத்திரத்தில்,

1. காடுறையுலகம் என்பதற்கு ‘பாலை முல்லைநிலங்களாகிய வனநாடு’ (Desert, arid and sylvan tracts) எனவும்,

2. மைவரையுலகம் என்பதற்குக் ‘குறிஞ்சிநிலமாகிய மலைநாடு’ (Hilly tracts) எனவும்,

3. தீம்புனலுலகம் என்பதற்கு ‘மருதநிலநாடு’ (Agricultural tracts) எனவும்,

4. பெருமணலுலகம் என்பதற்கு ‘நெய்தல் நிலமாகிய மணற்கொண்ட கடற்கரைநாடு’ (Maritime tracts) எனவும், தாற்பரியமாம்.

பூர்வகாலத்தில் தமிழ்நாடு மேற்படி பிரிவுப்படிக்கு, பாலை நிலநாடு, முல்லைநிலநாடு, குறிஞ்சிநிலநாடு, மருதநில்நாடு, நெய்தல்நிலநாடு என ஐந்து பெரியநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஆதிகாலத்தில் இந்த ஐந்துநாடுகளிலும் ஐந்து அரசர்களிருந்து அரசுபுரிந்துவந்தனர். திவாகர நூலாசிரியர் காலத்தில்,

1. பாலைநிலநாடு ஆண்டுவந்த அரசன் 'பாலைக்கிறைவன்'' எனவும்,
2. முல்லைநிலநாடு ஆண்டுவந்த அரசன் 'முல்லைநிலத் தலைமகன், குறும்பொறைநாடன், கானகநாடன்' எனவும்,
3. குறிஞ்சிநிலநாடு ஆண்டுவந்த அரசன் 'குறிஞ்சிக்கிறைவன், கானகநாடன், மலையரசன், மலைநாடன்' எனவும்,
4. மருதநிலநாடு ஆண்டுவந்த அரசன் 'மருதநிலத்தலைவன், மருதநிலநாடாள்வோன், தமிழ்நாடன், புனனாடன், குடநாடன்' எனவும்,
5. நெய்தல்நிலநாடு ஆண்டுவந்த அரசன் 'நெய்தற்றலைமகன்' எனவும், பெயர்பெற்றிருந்தார்கள்.

பிற்காலத்தில், மருதநிலநாட்டிற்குரிமையுடையவர்களான சேரசோழபாண்டிய வமிசத்து நாடாள்வார்கள் மற்ற நாலுவகைநாடுகளையுந் தங்கள் அரசுக்குட்படுத்தி, ஐந்திணை நாடுகளையும் ஒருகுடைக்குள் அடக்கியாண்டுவந்தார்கள். அப்போது, 'பாலைநிலநாடு, முல்லைநிலநாடு, குறிஞ்சிநிலநாடு, நெய்தல்நிலநாடு' ஆண்டுவந்த தலைவர்கள் மருதநிலநாட்டு வேந்தருக்கு அடங்கி நடந்துவர, மருதநிலநாட்டு வேந்தர்களே தமிழ்நாட்டுமூவேந்தர்களாய் விளங்கிச் செங்கோற்செலுத்திவந்தமையால், இந்த மருதநிலநாட்டுவேந்தர்களும் அவர்கள்குலத்தவர்களுமே தமிழ்நாட்டுச்சத்திரியர்களாயினர். இந்தத் தமிழ்நாட்டுச்சத்திரியர்கள்தான் 'சான்றோர்' எனக் கௌரவப்பட்டப்பெயர்பெற்றிருந்தவர்கள். இந்தச் சான்றோர் என்னும்பெயர் பிற்காலத்தில் 'சாணார்' என மரூஉ

மொழிப்பெயராகி, உலகவழக்கில் வந்து வழங்கியிருக்கின்றது. ஆனதால், இக்காலத்தில் 'சாணர்' என மரூஉமொழிப் பெயர்பெற்றிருக்கிற குலத்தவர்களே பூர்வத்தில் 'சான்றோர்' எனப் பெயர்பெற்றிருந்தவர்களாம். சான்றோர்குலத்தவர்களோ தமிழ்நாட்டுச் சத்திரியகுலத்தவர்களாகிய அரசகுலத்தவர்களானமையால், 'சாணர்' என மரூஉமொழிப்பெயர் தரித்தவர்களே பூர்வதமிழ்நாட்டுச் சத்திரியராகிய அரசகுலத்தவர்களாம்.

II. இனித் தமிழ்நாட்டரசகுலத்தவர்களுக்குச் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் சூட்டப்பட்ட காரணத்திற்கு விபரங்கூறுவோம்.

'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர் இக்குலத்தவர்களுக்கு இடப்பட்டதற்கு இதிகாசச்சாட்சியுண்டு. இதற்கு விபரஞ் சான்றோர்புராணம், பொன்னியணைப்படலத்திற் சொல்லியிருக்கின்றது. அந்தப்படலத்திலடங்கிய விஷயங்களை இங்ஙனஞ் சுருக்கிக்கூறுவோம்.

ஆதிகாலத்தில், பாண்டியர்களுக்குப் பொருநைநதிச்சங்கமத்தில், அலைவாய்க்கரையில் கொற்கைப்பதி இராசநகரமாயிருந்துவந்தபிரகாரம், சோழராசர்களுக்குக் காவிரிநதிச்சங்கமத்தில், அலைவாய்க்கரையில், 'புகார்' எனப்பெயர்கொண்ட காவிரிப்பூம்பட்டணம் இராசநகரமாயிருந்துவந்தது. அப்படியிருந்துவருகிறநாளையிலே, அந்தக் காவிரிப்பூம்பட்டணத்தில் சூரியகுல* பரம்பரையிலுதித்த கரிகாலசோழன் (கரிக்காலசோழன்) இருந்து செங்கோற்செலுத்தி மனுநீதிதவறாது குடிகளிடத்தில் ஆறிலொரு கடமைவாங்கி, அசையாமணிகட்டி நாடாண்டுவந்தான். இவ்வாறு நாடாண்டுவருகிறகாலத்திற் கொள்ளைமழைபெய்து, காவேரிநதியிற் கங்குகரையின்றி வெள்ளம்பெருகி, இருகரையும் புரண்டோடி, நாடெங்கும் பேரழிவுண்டாக்கிற்று. அப்போது, கரிகாலசோழன் நாடெங்கும்

* சந்திரகுலத்திலுதித்த சோழன் சௌராட்டிரநாட்டுச் சூரியவங்கிசத்தோடு பிற்காலத்தில் கலந்ததால் 'சூரியகுலம்' எனப்பட்டது; 'சோழன்' என்னும் பதத்திற்கும் 'சூரியன்' என்றேபொருளாம்.

பறைசாத்தி, குறுநிலமன்னராகிய சிற்றரசர்கள் தங்கள்தங்கள் குடிசனங்களோடுஞ் சேனைதளங்களோடும்வந்து காவேரிநதிக்கு இருகரையிலும் அணைகட்டிச் சலத்தைத்தடுக்கும்படி கற்பித்தான். அதுகேட்டு, மேற்படி சிற்றரசர்களெல்லோரும் அவரவர் குடிசனங்களோடுஞ் சேனைதளங்களோடும் ஒருமுகமாகத்திரண்டு அணைகட்டுதற்குக் கூடிவந்தார்கள். அப்படிக் கூடிவந்தகாலத்தில், காந்தமாரிஷி எனவும், வித்தியாதரரிஷி எனவும், பெயர்பெற்ற சுராபாண்டியமகாராசன் புத்திரரிலொருவனை சினம்பலபாண்டியன் மரபினர் ஒன்றுகூடி தங்கள் குடிசனங்களோடும் சேனைதளங்களோடும் அணைகட்டுதற்கு வந்தார்கள். இதைச்சுட்டிச் சான்றோர்புராணம், பொன்னியணைப்படலம், 21-வது கவியிற் சொல்லியிருப்பது :—

"கங்கைகுமரியினிடைக்கண்டதேசத்திற் கலந்தமன்னர்
தங்கள்சேனுமுகங் குடிமைதருகின்றசனமுமெங்குமாய்ப்
பொங்குகடல்காவிரிக் கரைபுகுவதெனவந்து புகுதமுத்திச்
செங்கைவித்தியாதரன் புதல்வரும்படையாய்த் திரண்டுவந்தார்."

இதில் வித்தியாதரன் என்பது சுராபாண்டியராசனை காந்தமாரிஷியாம்.

இவ்வாறு அரசர்களுங், குடிசனங்களாதியோரும் ஆற்றுக்கு அணைகட்டுதற்குத் திரண்டுவந்துநிற்கையில், கரிகாலசோழனும்வந்து, அவரவருக்குத் தகுந்தபிரகாரம் வேலைசெய்யுதற்கு எல்லைமால் குறித்துக்கொடுத்தான். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 22-வது கவியிற் சொல்லியிருப்பது :—

"கரிகாற்பெருங்குரிசிலுந்தனது சேனைக்கருங்கடலுடன்
விரிகாவிரிக்கரையடைந்தனன் முடங்குதிரைவெள்ளம்வடிய
திருகாதவணைகட்ட மூளைப்பிடித்தழியாததேசநின்று
வருவார்தலைக்கொண்டு மண்சுமைத்தோளிடை வகுத்துவிட்டான்."

அணைக்கட்டுவேலை சாக்கிரதையாய் நடந்துவந்தது. அப்படி நடந்துவருகிறபோது, மேல்வரத்துவெள்ளம் மிகுந்து

வந்து, கட்டிய அணைகளை அறுத்துப் பிடுங்கிக்கொண்டோ டிற்று, இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 25-வது கவியிற் சொல்லியிருப்பது :—

"பாதிசென்றளவிற் பெரும்புனல்சுழித்துமண் பாய்கின்றதிற்
கோதின்மலையிடினுஞ் சுழித்திழுக்குங்கெபிக் குழிநிரம்ப
மேதினிபிடுங்கிமண் கொட்டவுமலைக்குவடு வெட்டியிடவுந்
தாது சொரிதருவைத் தறித்திடவுநிலையாத தாழ்வுகண்டார்."

இதுகண்டு மந்திரிகள் அரசனுக்குச்சொல்ல, அரசனும் வந்துபார்த்து, மனம் பதைபதைத்து, மண்சுமக்காமல் சும்மா வேலை ஏவிக்கொண்டுநின்ற சிற்றரசர்களுந் தலைவர்களுங் கூடையெடுத்து மண், கல் முதலியவற்றை அள்ளிக் கொட் டும்படி கட்டளைசெய்தான். அரசன்கட்டளைப்பிரகாரஞ் சிற் றரசர்களும் மற்றுந்தலைவர்களுங் கூடையெடுத்து மண்ணள் ளிக்கொட்டினார்கள். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப் படலம், 26-வது கவியில் வருவது :—

"இடுதோறுமுழையு மலைமாறும்பிடுங்கி மண்ணேழும் வெட்டிக்
கொடுகட்டினுங்கரைக் குஞ்செய்கைமன்னனெடு கூறவவனுங்
கடுகிச்சுமக்கின்ற தொழிலோர்கண்முதனின்ற கனமன்னருந்
தொடுகூடைகொண்டுமண்சுமையெடுமினென்னச் சுமந்துசென்றார்."

அப்போது, சினம்பலபாண்டியன் மரபினர் கூடைதொட்டு மண்சுமக்காமல் சும்மாநின்றுவிட்டார்கள். அதைக்கண்டவர் களில், மகரன்முதலான சிலபேர்கள் போய்க் கரிகாலசோழ னுக்கு அதைத் தெரிவித்தார்கள். அதுகேட்டு, சோழன் சொ ல்லுகிறான் : "சினம்பலபாண்டியன் வம்சத்தவர்கள் படைத் தொழிலாகிய பதினெண்ணாயுத வித்தைகளில் மிகு வல்ல வர்கள், மகாபுஜபலபராக்கிரமர்களாகிய சுத்தவீரர்கள், நம்மு டையநாட்டில் முன் அரசுபுரிந்த செங்கோல் மன்னர்களிடத்

தில் நாடுகள்பெற்று ஆளுகிறவர்கள். ஆனபடியினாலே அவர்களிருக்கட்டும்" என்றான். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 28-வது கவியிற் சொல்லியிருக்கிறதாவது :—

" சேவகத்தொழின்முதன்மை பெற்றுளோர்முன்னாட்
செகம்புரந்த
காவலர்கொடுப்ப வரசுடையார்களென்று கரிகாலமன்னன்
ஆவலொடுபுகலவம் மொழிமகரனென்பா னழித்துரைப்
பான்
மூவரிற்பெரியார்க ளெவர்மண்சுமந்தனன் முக்கணனும்."

இங்ஙனம் சினம்பலபாண்டியன்குலத்தவர்கள் அரசுரிமைபெற்றவர்களென்று சொல்லியிருக்கின்றமையால், அவர்கள் அரசகுலத்தவர்களென்பது இயல்பாக விளங்குகின்றது.

இவ்வாறு கரிகாலசோழன் சொல்ல, அதுகேட்டு மகரன் சொல்லுவான் : " திரிமூர்த்திகளில் முதல்வனாகிய சிவனுங் கூடைதொட்டு மண்சுமந்திருக்கிறான், ஆதிசேடனும் இன்னமும் பூமியைச் சுமந்துநிற்கிறான், இப்போது அரசகுலத்தவர்களில் வெகு ஆயிரம்பேர்கள் அரசன்கட்டளையைச் சிரமேற்கொண்டு, இதோ கூடையெடுத்து மண்ணள்ளிக் கிரீடங்களணியுஞ் சிரமீதுவைத்துச் சுமக்கிறார்களே, தேவேந்திரன்முதலான அட்டதிக்குப்பாலகர்கள் எட்டுத்திக்கிலும்நின்று பூமிப்பாரஞ் சுமக்கிறார்களே. இப்படியிருக்க, இவர்கள் சுமக்கிறதற்கென்ன? அரசன் ஆக்கினைக்கு அடங்காதவர்களாய் நிற்கிறார்களே" என்றான்.

இந்த வசனங்கேட்டு, கரிகாலசோழனவன் மேற்படி சினம்பலபாண்டியன்குலத்தவர்களையிட்டுத் தன் மனதிலுண்டாயிருந்த சிறந்த எண்ணங்களை யகற்றிவிட்டு, அவர்கள்மீது கடுங்கோபமாகி, அவர்களைத் தன்சமுகத்தில் வருவித்து நிறுத்தி, அவர்களைப்பார்த்து, " கூடையெடுத்து மண்சுமக்கத்தான்வேண்டும். அப்படிச்செய்யுங்கள்" என்றான். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 31-வது கவியிற் சொல்லியிருப்பது :—

"நெஞ்சந்திரும்பினு னேரியர்கோனெஞ்சகத்து
வஞ்சம்பயிலாதார் தம்மைவரவழைத்தான்
கஞ்சமலர்முகத்தீர் காவேரிகட்டுதற்கு
எஞ்சாதுமண்சுமக்க வேண்டுமெனவுரைத்தான்."

அந்தவசனங்கேட்டு, சினம்பலபாண்டியன் மரபினர் கரிகாலசோழனைப்பார்த்துச் சொல்லுகிறார்கள்: "முன்னாளிலே செயதுங்கமகாராசன் எங்களுக்குப் பொன்முடிபுனைந்து, பூவேந்துசோழர் எனப் பட்டமுங்கட்டி நாடாளவைத்திருக்கிறார். எங்கள் குலத்துக்குரிய இந்தப் பூர்வமகிமையை நீர் அழிப்பது நியாயமல்ல. அரசர்களுக்குச் செவியே கண்ணானதினாலே, தங்கள் காதில்விழுஞ்செய்திகளைச் சீர்தூக்கி நிதானித்து உண்மைதெரிந்து, செங்கோற்கோனாது அரசுபுரிய வேண்டும். உலகம் இகழத்தக்க செய்கைகளை அரசர்கள் புரியலாகாது" என்றார்கள். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 32-வது, 33-வது கவிகளிற் சொல்லியிருப்பது:—

32-வது கவி.

"முன்னாட்செயதுங்க முன்னோனெமக்குமிகும்
பொன்னார்முடிபுனைந்து பூவேந்துசோழனென
அன்னாளரசுரிமை யாக்கினனன்னதனை
இன்னாளழிப்பதியல்பல்ல வென்றுரைத்தான்."

இந்தச்செய்யுளில், சினம்பலபாண்டியன் குலத்தவர்கள் இராசப்பட்டம்பெற்று நாடாண்டுவந்தசங்கதி சொல்லியிருக்கின்றது. ஆனதால், சான்றோர்குலம் அரசகுலமென்பது இதனாலுந் தெரியவருகின்றது.

33-வது கவி.

"கண்ணேசெவியாய்க் கருதும்வயவேந்தர்
நண்ணாருரைக்கு நடுவின்மொழிகேட்டு
மண்ணோரிகழ வருகாரியநினைவி
னெண்ணாதுசெய்வ தியல்பன்றிழுக்குண்டால்."

இவ்வசனங்கேட்டமாத்திரத்தில், கரிகாலசோழனுகிறவன் மனம்வெகுண்டு, பக்கத்தில் நின்றவர்களைப்பார்த்து, "புத்தி

வழிசெல்லாத இப்புன்மைநினைவோர்களைக் கூடையெடுத்து மண்சுமக்க மூட்டுங்கள்" என்றான். அதுகேட்டு காளிகாதேவி புத்திரர்கள் அரசனைப்பார்த்து, "கொத்துமுடியறினுங் கூடைதொடோம்" என்றார்கள். இதைச்சுட்டிய மேற்படி பொன்னியணைப்படலம், 34-வது கவி வருமாறு :—

" இத்தகையசொற்கேட் டெரியின்வெகுண்டனனற்
புத்திவழிசெல்லாத புன்மைநினைவோரை
மொய்த்தநதிமண்சுமக்க மூட்டுகென்றானன்னவர்கள்
கொத்துமுடியறினுங் கூடைதொடோமென்றுரைத்தார்."

இக்கவியில், 'கொத்துமுடி' எனவும், 'கூடைதொடோம்' எனவுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. சினம்பலபாண்டியன் குலத்தவர்களுக்கு வளர்ந்த தலைரோமமிருந்ததினாலும், கூடைதொடுவது* மானவீனமானதினாலும், உயிரினும் மானமே பெரிதென்றெண்ணி நடந்துவந்ததினாலும், அவர்கள் சத்திரியகுலவுரிமையுடையவர்கள் என்பது தெரியவருகின்றது. இதுதான் பூர்வசத்திரியகுலவைராக்கியம். கூடை தொடாததையிட்டுத் தலையிழக்கக்கொடுத்த இந்தப் பூர்வ கதை நாளதுஞ் சான்றோர்குலத்தவர்களுக்குள் வீட்டுக்கதை

* தமிழ்நாட்டுப் பூர்வ ஏற்பாட்டில் கூடைதொட்டெடுத்துச் சுமைசுமக்குதல் சூத்திரகுலத்தவர்களுக்கு விதிக்கப்பட்டிருந்ததால், சத்திரியகுலத்தவர்கள் சூத்திரகுலத்தவர்களுக்கொப்பந்தங் கூடையெடுத்துச் சுமைசுமக்குதலை மானவீனமாக எண்ணி, அதைச்சுமப்பதிலும் எதையும் படநின்றனர். கூடைதொட்டுப் புழங்குதலோ சூத்திரகுலச்சிறப்பாம். இதற்கு மேற்கோள் வருமாறு :—

கம்பர்வேளாளர் மேற்பாடிய ஏரெழுபது, 24-வது கவி.

எருக்கூடைச்சிறப்பு.

" அடுத்திறக்கிப் பெருங்கூடையளவுபட வேயெருவை
" எடுத்திறக்கித்தலைமேலே கொண்டவர்தாமிடையிடையே
" கொடுத்திறக்கிநிலமகளைக் கும்பிட்டுவணங்காரேற்,
" படுத்திறக்கித்திரிவார்தம் பழிமறுக்கமாட்டாரே."

இந்தக்கவியில், கம்பநாடான் கூடைகளில் எருமுதலான உரங்களையள்ளித் தலைமேல்வைத்துச் சுமந்துகொண்டு நன்செய் புன்செய்களுக்குக் கொண்டுபோய்ப்போடுவது சூத்திர குலத்தவர்களுக்குச் சிறப்பென்று கூறியிருக்கிறார்.

யாகப் பரம்பரையாய்ச் சொல்லப்பட்டுவருகிறது. இதி னல் இந்தக்கதையின் பூர்வ உண்மை துலங்குகின்றது. அன் றியும், நாளதுஞ் சான்றோர்குலத்தவர்களுக்குள் மகாதுஷ் டனை 'கரிகாலப்பயல்' என்று சொல்லிவருவதும் வழக்க மாம். இதனால் சான்றோர்குலத்து முன்னவர்களுக்கு இந்தக் கொடுமைசெய்தவன் கரிகாலசோழன் என்பதுந் துலங்குகி ன்றது.

இந்தப்பிரகாரம் 'கொத்துமுடியறினுங் குடைதொடோம்' என்று அவர்கள் சொல்லிய வசனங்கேட்டு, கரிகாலசோழ னென்கிறவன் மிகவுஞ் சினந்து, அவர்களில் முன்நின்றவனைப் பிடித்து, மழுவாயுதங்கொண்டு சிரசு துணிபட, கழுத்தற இருதுண்டமாக வீசிவிடக் கட்டளையிட்டான். அரசன் கட் டளைப்படி தலையாரியானவன் அவனைப்பிடித்துக் காவேரிநதி க்கரையில் நிறுத்தினன். அப்போது, அரசர்கள் முதலான மேன்மக்களுங், குடிசனங்களும் ஏகோபித்து, நாலட்டமும்

---

63-வது கவி.

குடைச்சிறப்பு.

"ஆடையாபரணங்க ளணிந்துமுடிசுமந்திடலும்
ஓடையானையினெருத்த முயர்ந்துலகந்தாங்குதலும்
பேடையோடனநீங்காப் பெருங்கழனிப்பெருக்காளர்
குடையானதுகையிற் கொண்டுகளம்புகுந்திடவே."

இக்கவியில், கம்பநாடான் குடையுங்கையுமாய்க் களத்திற் குப்போகுதல் சூத்திரகுலத்தவர்களுக்குச் சிறப்பு என்கிறார். ஆனதால், அது சத்திரியகுலத்தவர்களுக்கு இகழ்ச்சியாயிற்று.

64-வது கவி, பொலிதூற்றுங் குடைச்சிறப்புக்கூறுகின் றது; அதுகாண்க.

மேற்படி செய்யுட்களில், குடைதொட்டுப் புழங்கும் வழக் கஞ் சூத்திரகுலமகிமையென்று சொல்லியிருக்கிறது. சத் திரியகுலத்தவர்களுக்கோ குடைதொட்டுப் புழங்குவது அந் தப் பூர்வகாலத்தில் மகாக்கொடிய நிந்தையாயிற்று. மன் னர் மரபினராகிய 'சான்றார்' குலத்தவர்கள் அந்தப் பூர்வ காலத்தில் மேற்படி பூர்வவழக்கத்தைப் பாராட்டி, தேசமறிய உயிர்கொடுத்து, மேற்படி நிந்தையைநீக்கி, தங்கள் குலமகி மையை பூலோகத்தில் நிலைநிறுத்தியிருப்பதால், அவர்கள் தமிழரசகுலச் சத்திரியரென்பது தானாகத் துலங்குகின்றது.

புடைசூழ்ந்து நின்று பார்த்தார்கள். அப்படிப்பார்த்துக்கொண்டு நிற்கையில், தலையாரியானவன் கூர்மையான மழுவாயுதம் ஒன்றைக் கையிற்பிடித்துக்கொண்டு, அவனருகில்நின்று, அந்த மழுவாயுதத்தால் ஒரேவீச்சில் தலையறத்துணித்துவிட்டான். துணிபட்ட தலையானது 'கூடைதொடேன், கூடைதொடேன்' என்று நாவில்தொனிபிறக்க உருண்டோடிற்று. இவன்தலையுருண்டதுகண்டு, கரிகாலசோழனானவன் அது பார்த்து நின்ற மற்றப்பாண்டியர்களாகிய காளிபுத்திரர்களைப்பார்த்து, 'உங்கள் அளப்பென்ன? கூடைதொட்டு மண் சுமப்பீர்களா, சுமக்கமாட்டீர்களா? என்று வினவினான். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 35-வது கவியிற்கூறியிருப்பது :—

> "என்றுரைத்தோன்றன்னை யிருதுணியாய்வீசுகெனத்
> துன்றுகழற்காலோன் சொன்னமொழிகேட்டு,
> வென்றிமழுக்கொண்டு வீசவிழுந்தானொருவன்
> நின்றோரைப்பார்த்து நினைவேதெனக்கேட்டான்."

மடிந்தவன்போக நீக்கிநின்ற மற்றப்பாண்டியர்களைப்பார்த்து, கரிகாலசோழன் உங்கள் அளப்பென்னவென்று வினவ, அவர்கள் சொல்லுகிறார்கள் : "அரசனே, சமுத்திரஞ்சூழ்ந்த இந்தப்பூலோகத்திலே மானமிழப்பதைவிட மடிவதுவே உத்தமமென்று மேலோர்களுடைய வாக்கு இருப்பதால், எங்களுக்கும் அதுவேகருத்து. ஒருபோதுங் கூடைதொடோம். என்றைக்கிருந்தாலும், இறப்பது நிசம். பந்துகள்போன்ற எங்கள் சிரசுகள் வெட்டுண்டு பூமிமீது உருண்டோடினபோதிலும், வாசமலர்மாலைகள் சூடியமன்னவா, நாங்கள் ஒருபோதுங் கூடைதொடோம்" என்றார்கள். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 36-வது, 37-வது கவிகளிற் சொல்லியிருக்கிறதாவது :—

36-வது கவி.

> "மண்டுதிரையுலகின் மானமிழப்பதினி
> லெண்டானிலாம விறப்பதியல்பென்று
> பண்டையோர்சொல்லாற் பான்மைநினைத்ததற்பின்
> றண்டாவெமக்கு மதுவேதவமென்றார்."

37-வது கவி.

"முந்துற்றசாவு முளரிப்பிரமனுர்
தந்துற்றதன்றெய்து மெமக்குத்தக்கதால்
பந்திற்றலையுருண்டு பார்மீதிலோடுகினும்
கொந்துற்றதாரோய்நாங் கூடைதொடோமென்றனரால்."

அவ்வசனங்கேட்டு கரிகாலசோழன் மண்டைமுட்டக் கோபமாகி, கண்களிரண்டுங் கொவ்வம்பழம்போற்சிவக்க, மந்திரிகளைப்பார்த்துச்சொல்லுகிருன்: "ஓ மந்திரிமார்களே, இவர்களில் இதோ இங்கே முன்னுக்குநின்று துணிவுகொண்டுபேசுகிற இவனைப்பிடித்து, ஆற்றின் அணைக்கட்டிற்கொண்டுபோய் நிறுத்தி, இவன் மாரளவுக்கு மண்கொட்டி, கார்முகில்நிறத்து மதயானையை இங்ஙனங்கொண்டுவந்து, அதின் காலால் இவனுடைய கருந்தலை பூமியிலுருளும்படியாக எத்திவிடுங்கள்" என்றுன். இதைச்சுட்டிய மேற்படி பொன்னியணைப்படலம், 38-வது கவிவருமாறு :—

"மண்கட்டுகூலத்து மார்முழுகமண்சுமந்து
விண்கிட்டவோங்குமத வேழத்தின்பாவடியாற்
கண்கிட்டிநின்று கருந்தலைபோயுருள
எண்கெட்டவன்றலையை யெத்திடுகவென்றுரைத்தான்."

அந்தப்பிரகாரந் தக்ஷணமே அவனைப்பிடித்து காவேரிநதிக் கரையில் அணைக்கட்டில் நிறுத்தி, மார்மட்டும் மண்கொட்டி, மதயானைகொண்டு அவனுடைய சிரசை இடறிவிட்டார்கள். இடறுண்ட சிரசானது, 'சீரொழுக்கமில்லாச் சிறுகுடியானெமக்குப் பார்முழுதுங்காணப் பழியாம்' எனச்சொல்லிப் புவிமீது உருண்டோடிற்று.* இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 39-வது கவியிற் சொல்லியிருப்பது :—

"நீரொழுகுபொன்னி நெடுங்கரைக்கண்ணே நிறுவித்
தார்கெழுமுதோளா னொருவன்றலையிடறச்
சீரொழுக்கமில்லாச் சிறுகுடியானெமக்குப்
பார்முழுதுங்காணப் பழியாமென்றோடியதால்."

---

* மற்றொருநூற்படிக்கு "அத்தலைக்கித்தலை பொய்த்தலையோ, கூடைதொடேன், கூடைதொடேன்" எனச் சொல்லியோடிற்று.

இதுகண்டு, கரிகாலசோழன் இந்தப் பாண்டியர்களுடைய மனத்துணிவையும், சுத்தவீரத்தனத்தையுங்கண்டு அதிசயித்து, மற்றப் பாண்டியர்களுக்கும் தகுந்த மரியாதைகள்செய்து, அவர்களுடைய பட்டணத்திற்கு அவர்களை யனுப்பிவிட்டான். காவேரியணையுங் கட்டப்பட்டுத் தீர்ந்தது. தேசமெல்லாஞ் செழித்தது, குடிசனங்கள் வாழ்வடைந்தனர்.

சினம்பலபாண்டியன் மரபினர் தங்கள் பட்டணம்போய்ச் சேர்ந்து, தங்களுக்கு அரசனால்நேரிட்ட கொடியநிந்தையை நினைத்துப் பிரலாபித்து, தங்கள் குலதெய்வத்தைநோக்கித் தங்கள் மனக்குறைகளைச்சொல்லி அமைந்திருந்தார்கள். அப்படியிருந்துவருகிறநாளையிலே சோழநாடெங்கும் மழையில்லாமற்போய், வாவிகள், குளங்கள், குட்டங்கள், ஏரிகள், ஓடைகள், நதிகள் சலமற்று வறண்டுபோயின. ஆகாயமெங்கும் வெண்மேகங்களேயல்லாது கருமேகங்கள் காணப்படவில்லை. இதைச்சுட்டிய மேற்படி பொன்னியணைப்படலம், 42-வது கவி வருமாறு :—

“ அன்றுமுதற்கொண்ட லகன்றகுடகநெடுங்
குன்றுகுளிரகுளிர் துளிதுவ்வாமையினன்
மன்றுபறித்தோன் மனைபோல்வளநாட்டை
கொன்றுகுறைக்கக் கொண்டலகன்றோடியபதால்.”

இந்தப்பிரகாரம் ஆறுபருவகாலம்* மழையில்லாமற்போய் விட்டதினாலே, சோழநாடெங்கனுங் கொடிய பஞ்ச முண்டாகி, குடிசனங்களெல்லாரும் மிகு கஷ்டத்திற்குள்ளானார்கள். மிருகாதிபிராணிகளும் பட்சிசாலங்களும் இரையின்றி, சலமின்றிப் பட்டதுன்பங்கள் மிகுதி. தனது கொடுங்கோன்மை இந்தப் பஞ்சத்துக்குக் காரணமோ என்பதாக அரசன் எண்ணமிட்டு, மிகவும் மனநொந்து பிரலாபித்துத் துக்கசாகரத்தில் மூழ்கி, ஒருகாலத்திலுஞ் சலமில்லாது போகாத் காவிரிநதியானது வற்றிவறண்டுபோன காரணம்யாதென மனதில் எண்ணமிட்டுக் கண்ணீர் சிந்தி, அந்தணர்களுக்குத் தச

---

* ஆறுபருவகாலம்=ஆறுவருடம்.

தானங்கள் கொடுத்து, சிவாலயங்களுக்குச் சிவபூசைகள் குறைவற நடக்கச்செய்தான். ஆயினும், ஆகாயமெங்ஙனும் பஞ்சமுகில்கள் வந்தடைந்ததல்லாது, மழைமுகில்களில்லாதுபோயின. அப்பொழுது, கரிகாலசோழராசன் தன் நாடெங்கும் வசிக்கின்ற அந்தணர்கள், சோதிடர்கள் முதலான சாஸ்திரிகளையும், மந்திரிகள் பிரதானிகள் முதலான மேன் மக்களையும், தன் அரசுக்குட்பட்ட குறுநிலமன்னர்களையும், அவர்களுக்குட்பட்ட பெரியோர்களையும் வருந்திக், காவிரிப்பூம்பட்டணத்தில் இராஜ சபாமண்டபத்தில், மகாசபையாகக் கூடியிருந்துகொண்டு, இந்தப் பஞ்சத்துக்குக் காரணம் யாதெனவும், தன் அரசாட்சிக்குட்பட்ட நாடுகளிற் செங்கோல்முறை பிறழ்ந்து நடக்கிறதுண்டோ எனவும் வினவ, அவர்கள் சொல்லுகிறார்கள் : "மனுநீதி முறைதவறாது குடிகளிடத்தில் தீர்வைகள் வாங்கிவருகிறோம். தேவாலயங்களில் தேவர்பூசைகள் முடக்கமின்றி நடந்துவருகின்றன. ஸ்திரீகளுடைய கற்புநிலைக்கு மானபங்கங்கள்நேரிடாது அரசுபுரிந்துவருகிறோம். குடிசனங்களுக்கு மிருக சில்லறைகளில்லாதபடிக்குத் திட்டகாலங்களில் வனவேட்டைகளாடி வனமிருகசங்காரஞ் செய்துவருகிறோம். சிஷ்டபரிபாலனத் துஷ்டநிக்கிரகங்கள் வெகுசாக்கிரதையுடன்செய்துவருகிறோம். பொன்பொன்னாய்ச் சொரிந்தாலும், பொய்யென்பது புகலோம். நீதிகோணாது குடிவழக்குகள்கேட்டுத் தீர்த்துவருகிறோம். திசைகாவல்காத்து, எதிரிகளையடக்கி, குடிசனங்கள் சுகத்துடன் வாழ்ந்திருக்கும்படிசெய்துவருகிறோம். எங்களுக்குத் தெரியாதகுறைகள் வேறே ஏதாகினுமுண்டோ நாங்கள் அறியோம்" என்றார்கள்.

அதுகேட்டு, கரிகாலசோழன் இந்தப் பஞ்சம் வருவதற்கேதுவான காரணத்தைக் கண்டுபிடியாது மயங்கிக்கொண்டிருக்கையில், இதுகளையெல்லாங் கேட்டுக்கொண்டிருந்த மகரன் என்பவன், தான் முன் சினம்பலபாண்டியன் புத்திரர்கள்மீது கோட்சொல்லி, அவர்களில் இரண்டுபேர்கள் தலைவெட்டுண்டுருளச்செய்த வன்கொலையைநினைத்து, அந்தக்

கொலைதான் இந்தப்பஞ்சத்திற்கு நிசக்காரணம் என்பதாக தன் உள்ளத்தின்கண் எண்ணமிட்டு, எழுந்துநின்று, அரசனை யும் மகா சபையார்களையும்பார்த்துக் கும்பிட்டுச் சொல்லுகி றான்: "மகாராஜனே, முன் காவேரி உடைப்பெடுத்தகால த்தில் சினம்பலபாண்டியன் புத்திரர்களில் இரண்டுபேர்களை வன்கொலைப்படுத்திய பழியொன்றிருக்கிறதே, அந்தப்பழி நிமித்தந்தான் இந்த மகாகொடியபஞ்சம் வந்திருக்கிறது" என்றான். இவ்வசனங்கேட்டமாத்திரத்தில் சபாமண்டபத் திற் கூடியிருந்த அரசர்களும், மேன்மக்களும் அது உள்ளது தானென்று தலையசைத்தார்கள். கரிகாலசோழனும் முன் நடந்தவற்றை நினைத்து, அது உள்ளதுதானென்றான். இப்ப டிப் பேசிக்கொண்டிருக்கையில், அந்தரத்தில் அசரீரிவாக் கொன்று பிறந்து, "ஓம், இது உள்ளதுதான்" என்றது.

இந்த அசரீரிவாக்கைக்கேட்டு, அரசனானவன் மனங்கலங் கி, மகாசபையார்களைப்பார்த்து, "மகரன்சொற்படி வந்த பழி சும்மாபோகாது. அதற்கு மதியென்ன? இனி அதைச் சாந்திசெய்யுதற்குச் செய்யவேண்டுவதைச் சொல்லுங்கள்" என்றான். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 55-வது, 56-வது கவிகளிற் சொல்லியிருப்பது:—

55-வது கவி:

"ஆமென்றகில வரசர்முடிதுளக்கத்
தாமம்புனைவளவன் றானுமஃதுண்டென்றான்,
ஓமென்றசொல்லொன் றுதித்ததுவால்வானிடையில்,
வாமன்வளவன் மனமெலிவுகொண்டுரைப்பான்."

56-வது கவி:

"எம்மால்வரும்பிழையென் றென்னினைவுபேதித்த
பொய்மாண்சிறுகுடிமை பூண்டமகரனென்பான்
மொய்மலர்த்தாரான் மொழிப்படியேவந்தபழி
சும்மாகழிவதன்றாற் சொன்மின்மதியென்றான்."

அவ்வசனங்கேட்டு, அவர்கள் அரசனைப்பார்த்து, "காளி புத்திரர்கள்மீது கோட்சொன்ன மகரனையும் அவனைச்சேர்ந்த வர்களையும் பழிக்குப்பழிகொடுத்தால் மழைபெய்யும்" என் றார்கள்.

காளிபுத்திரர்களாகிய சினம்பலபாண்டியன் குமாரர்கள் காவேரிநதித்தீரத்தில் தங்களுடன்பிறந்தவர்களில் இரண்டு பேர்கள் வன்கொலையாய் மடிந்துபோனநாள்முதல், அவர்களும் அவர்களைச்சேர்ந்தவர்களுஞ் சோழராசன் சமுகத்திற்கு வராமல் தங்கள் நகரத்தில்தானே இருந்துவிட்டார்கள். ஆனதால், சோழராசன் தக்ஷணமே தூதர்களையனுப்பிக் காளிகுலமைந்தர்களை வரவழைத்தான். அவர்களும்வந்து, அரசன் சமுகத்தில் நின்றார்கள். இதைச்சுட்டிய மேற்படி பொன்னியணைப்படலம், 58-வது கவிவருவது :—

“ வேண்டியதன்குலத்தோர் வெட்டுண்டநாண்முதலாய்ப்
பூண்டசிறையிற் பொலிவழிந்துநேரியனை
காண்டலிலராற் காளிகுலமைந்தர்தமை
கூட்டிநெடுந்தூதர் கடிதிற்கொணர்ந்தனரால்.”

அவ்வாறு வந்துநின்றவர்களுடைய முகம்பார்த்து, கரிகால சோழன் சொல்லுகிறான் : “ நீங்கள் உங்கள் உடற்பிறப்பாளரில் இரண்டுபேர்கள் வன்கொலையாய் மடிந்துபோனதை நினைத்து மனஞ்சலிக்கவேண்டாம், துக்கத்தை விட்டுவிடுங்கள். உங்கள்மேற் கோட்சொன்ன மகரனிடத்திலும், அவன் வகையராப்பேர்களிடத்திலும் பழிக்குப்பழி வாங்கிக்கொள்ளும்படியாக உங்கள்கையில் அவர்களை ஒப்பித்துவிடுகிறேன். உங்கள் மனம்போல செய்துகொள்ளுங்கள்” என்று சொல்லவும், உடனே காந்தமாரிஷியின் புதல்வனான சினம்பலபாண்டியன் புத்திரர்கள் அவர்கள் தலைமுடியைப் பிடித்திழுத்து, அவர்களைக் காவேரிநதிக்கரையில் வெட்டிப்போடுதற்குக் கொண்டுபோனார்கள். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப் படலம், 59-வது கவியிற் சொல்லியிருப்பது :—

“ வந்தோரைப்பார்த்து வளவர்பிரான்வன்கொலையின்
சிந்தைமயக்கம்விடுமின் சிறுகுடியான்
முந்துபழியுமக்குத் தந்தேனெனமொழிய
விந்தைமுனிமைந்தர் விரைவிற்பிடித்தனரால்.”

இந்தக்கவியிற் ‘ விந்தைமுனி’ என வந்திருப்பது, காந்தமாரிஷி எனவும், வித்தியாதரமுனி எனவும், பெயர்கொண்ட சுராபாண்டியராசனும்.

அவ்வாறு மகரனையும் அவனைச்சேர்ந்தவர்களையுஞ் சினம்பலபாண்டியன்புத்திரர்கள்* பிடித்திழுத்துக்கொண்டு போகையில், அவர்களிலொருவனாகிய சந்திரபாலபாண்டியன் சோழனைப்பார்த்து, "இவர்களை இப்போது வெட்டிப்போடுவதிற் காரியமில்லை. இன்றுமுதல் இவர்களையும், இவர்கள் வமிசத்தாரையும், எங்கள் பண்ணைவேலைக்கு அடிமைகளாகத் தந்துவிடவேண்டும்" என்றுசொல்ல, சோழனும் அதற்கிணங்கி, அப்படியே அவர்களைக் காளிகுலத்தவர்களுக்குக் கையளித்துவிட்டான். இதைச்சுட்டிய மேற்படி பொன்னியணைப்படலம், 60-வது கவி வருமாறு :—

"சென்னிதிருமுன்னர் சென்னிபிடித்திழுத்துப்
பொன்னியினில்வெட்டக கொடுபோம்பொழுதுதனிற்
பன்னுசான்றோன்சந்திர பாலகனுங்கையமைத்தே
இன்னவனைக்கொல்வ தியல்பல்லவென்றுரைத்தான்."

இச்செய்யுளில், சந்திரபாலபாண்டியன் 'சான்றோன்' என்னப்பட்டிருக்கிறான்.

அந்தப்படிக்குச் சினம்பலபாண்டியன் புத்திரர்கள் மகரனையும் அவனைச்சேர்ந்தவர்களையும் அன்றுமுதல் அடிமைகளாக வைத்து ஆண்டுவந்தார்கள். அவர்களைத் தலைமுடிபிடித்திழுத்தகாரணத்தையிட்டு அவர்களுக்கு 'ஈழவர்' என்றொருபெயருண்டாயிற்று. 'ஈழவர்' என்பதற்கு 'இழுபட்டவர்கள்' என்பது தாற்பரியமாம். இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 61-வது கவியிற் சொல்லியிருப்பது :—

"பாரேழுங்காணப் பழிவிலையாய்க்கைக்கொண்டான்
ஆராயுங்கூந்தற் பிடித்திழுத்தவப்பொழுதே
பேராகவீழவ னென்னுமொருபேர்புனைந்து
சீராகக்கொண்ட சிறைபோலவாண்டனரால்."

இவ்வாறு மகரனும் அவனைச்சேர்ந்தவர்களுந் தலைமுடி தொட்டிழுபட்டபடியால், அவர்களையும் அவர்கள் வமிசத்த

---

* புத்திரர் என்பது சிற்சிலவிடங்களில் வங்கிசத்தாரைக் குறிக்கும்; அவைகளை உய்த்துணர்க.

வர்களையும் மயிர்வினைஞர்களாகிய நாவிதர்களும், ஏகாலியர் களாகிய வண்ணார்களுமாக்கிவைத்தனர்.* இதைச்சுட்டி மேற் படி பொன்னியனைப்படலம், 62-வது கவிகூறுவது :—

"காவானநீசன் கனமுடியைத்தான்விளக்கும்
பூவார்கருவிப் புதியமயிர்வினைஞ
னேவாதொலிக்கு முயர்வண்ணான்றன்னுரிமைத்
தாவேதுமில்லார் தமையவர்க்குக்கற்பித்தான்."

அதுவுமல்லாமல், சினம்பலபாண்டியன் புத்திரர்கள் நற் குணநற்செய்கைகளிலும், புஜபலபராக்கிரமங்களிலும், கல் வியறிவுகளிலுஞ் சிறந்த சால்புற்ற சான்றாண்மையுடைய வர்களாக விளங்கியபடியால்,† அன்றைத்தினத்திற் கரிகா லசோழன் அங்ஙனங்கூடிய மகாசபையாரறிய அவர்களுக்

---

* சோழராசன் 'ஈழுவன், நாவிதன், ஏகாலி' ஆகிய மூசு ரைக்கொடுத்துப் பழிதீர்த்ததாகக் கூறுவது சிலநூல்களது சித்தாந்தம். சான்றோர்குலத்து வண்ணார்களுக்கு நானதும் ஏகாலிகள்' என்றும், 'பாண்டிவண்ணார்கள்' என்றும் பெய ராம். 'ஈழுன்' என்று சிலவிடங்களில் இடைக்குறையாய் வந்து ஈழுவனைக்குறிக்கும்.

† சினம்பலபாண்டியன் வமிசத்தவர்கள் கல்வியறிவுகளி லும் மிகு தேற்சிபெற்றிருந்தனர் என்பதற்கு ஒரு திருட்டாந் தம் இங்ஙனங்கூறுவோம்.

மதுரைக்கடைச் சங்கத்தைச்சேர்ந்த நாற்பத்தொன்பது புலவர்களில் ஒருவரான "முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்" எனப் பெயர்பெற்றிருந்த புலவர் சினம்பலபாண்டியன் வமி சத்தவர். இதற்குவிபரஞ் சான்றோர்புராணம், அபிமானபுங் கவன்படலம், 111-வது கவிமுதல் 122-வது கவிவரையினுங் காண்க. இந்தச்சிறுகருந்தும்பியார் சிறிதுகாலம் முகசை மாநகர்எனப் பெயர்பெற்ற முகையலூரில் வாசஞ்செய்தபடி யால், அவருக்கு 'முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்' எனப் பெயராயிற்று. இவரைச்சுட்டி மேற்படி அபிமானபுங்கவன் படலம், 118-வது, 119-வது கவிகளிற் சொல்லியிருப்பது:

118-வது கவி.

"திரண்டசெம்பொருளளித்துநாற்சேனைகள்சிறப்ப
இரண்டுமக்களை முகசையம்பதியினிலிருத்தி
இருண்டபாவங்களனைத்துமாய்த்திருங்கதியென்னும்
முரண்டருந்திருப் பொருனைசூழ்மதுரைமாமூதூர்."

கும், அவர்கள் குலத்தவர்களுக்குஞ் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர்சூட்டி, அவர்களை அரசகுலத்தவர்களுக்குள்ளே மேன்மைப்படுத்திவைத்தான். அந்தக்காலம்மு

119-வது கவி:

"சேர்ந்துவைகினன் செழியர்கோனிடத்தினின் முன்போற்
சார்ந்தபுத்திரரிருவரி லொருவன் முத்தமிழிற்
றேர்ந்தகல்வியான் சிறுகருந்தும்பிநாமத்தன
ஆர்ந்தகூடலிற் புலவர்சங்கத்தினிலமர்ந்தான்."

இந்த இரண்டுகவிகளில், அதிசூரபாண்டியனுகிறவன் குலசேகரபாண்டியன் சிறுகருந்தும்பிப்பாண்டியன் எனப் பெயர் கொண்ட தன் இரண்டுபுத்திரர்களோடும் மனைவியோடுங் காசியாத்திரைசெய்து திரும்பிவருகிறபோது, முகையலூருக்குவந்து, தன் குமாரர் இரண்டுபேருக்கும் விவாகஞ்செய்வித்து, மேற்படி முகையலூரில் அவர்கள் குடியிருக்கும்படி செய்ததாகவும், அந்த இரண்டுபேரில் சிறுகருந்தும்பியார் இயலிசைநாடகமென்னும் முத்தமிழில் வல்லபராய் மதுரைச்சங்கப்பலகையில் நாற்பத்தொன்பது புலவர்களிலொருவராக வீற்றிருந்ததாகவும் சொல்லியிருக்கின்றது. திருவள்ளுவர் தமது மகாசிறந்தநூலை மேற்படி கல்விச்சங்கத்தில் அரங்கேற்றுகிறகாலத்தில், இந்தச் சிறுகருந்தும்பியாருங் கூடவே இருந்தார். அப்போது இவரும் மற்ற நாற்பத்தெட்டுப் புலவருக்கொப்பநதம், மேற்படி திருக்குறளைப்புகழ்ந்து ஒரு கவி பாடியிருக்கிறார், அந்தக்கவி வருமாறு:—

முகையலூர்ச் சிறுகருந்தும்பியார் வாக்கு.

நேரிசைவெண்பா.

"உள்ளுதலுள்ளி யுரைத்தலுரைத்ததனைத்
தெள்ளுதலன்றே செயற்பால—வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண்டெனப்பகர்வா
ரெப்பாவலரினுமில்."

இதன் தாற்பரியம்.

"திருவள்ளுவர்செய்த திருக்குறளுக்கு மேற்பட்டநூல் ஒன்றுள்ளதென்று சொல்லத்துணிபவர்கள் எவ்வகைப்பட்ட புலவருள்ளுமில்லை. ஆனதால், இந்தநூற்பொருளைச் சிந்தித்தலும், அவ்வாறு சிந்தித்துக்கொண்டவற்றை பிறருக்குச் சொல்லுதலும், அவ்வாறு சொல்லியதைத் தெளிதலுமே இந்த நூலைக்குறித்து நாஞ்செய்யவேண்டுபவைகள்" என்பதாம்.

இவர் சான்றோர்குலத்தவர். பூர்வத்தில் சான்றோர்குலத்தவர்கள் இவ்வாறு கல்வியறிவுகளில் மிகு வல்லவர்களாயிருந்துவந்தது இதினாலே தெரியவருகின்றது.

தற்கொண்டு அவர்கள் குலத்தவர்களுக்குச் "சான்றோர், சான்றார், சான்றவர்" என்னுங் கௌரவப்பட்டப்பெயர் அரசகுலப்பெயராகத் தமிழ்நாடெங்கணும் வந்து வழங்கலாயிற்று. இதைச்சுட்டி மேற்படி பொன்னியணைப்படலம், 63-வது, 64-வது கவிகளிற் கூறியிருப்பது :—

63-வது கவி :

"மீன்றருழுலகின் மகரனும்பேர் வேண்டுமென்றான்
தோன்றாதுசெய்தபிழை பொறுமென்றேதொழுதான்
வான்றோய்புகழான் வளவனொடுசால்புற்ற
சான்றாண்மையென்னும்பேர் தானுங்கொடுத்தனனால்."

64-வது கவி :

"அன்றுமுதற்சான்றோ ரெனும்பேரறைந்தனரால்
துன்றுகரிகாற் சோழன்பழிநீங்கி
ஒன்றுமனமகிழ வோங்கிவளம்பெருக
மன்றுநிலங்களிப்ப மாரிவழங்கியதே."

இந்தக்கவிகளில், சினம்பலபாண்டியன் குலத்தவர்கள் 'வான்றோய்புகழால் வளவனொடுசால்புற்ற சான்றாண்மை' யுடையவர்களாய் விளங்கியமையால், அவர்களும், அவர்கள் குலத்தவர்களும் 'சான்றோர்' என்னுங் கௌரவப்பட்டப்பெயர்பெற்று தமிழ்நாடுகளில் வாழ்ந்துவந்தனர்எனச் சொல்லியிருக்கிறது. 64-வது கவியில், 'அன்றுமுதற் சான்றோரெனும்பேரறைந்தனர்' எனக் கூறியிருப்பதால், கரிகாலசோழன் காலத்திற்குப்பிறகுதான் 'சான்றோர்' என்னும்பெயர் வந்து பிரபலமாய் வழங்கலாயிற்றென்று மிகவுந் தெளிவுறத் தோன்றுகின்றது.

இந்தப்பிரகாரஞ் சுராபாண்டியராசன்குலத்தவர்களுக்குச் சிறந்த கௌரவப்பட்டப்பெயரளித்து, அவர்களுக்கு மிகு மரியாதைகள்செய்து, அவர்கள் மனத்துயரத்தைத் தீர்த்தபிறகு, கரிகாலசோழன் பழிநீங்கிற்று, மிகு மழைபெய்தது, குடிகள் வாழ்வடைந்தார்கள், சோழன் மனமகிழ்ந்தான். மிகு மழைபெய்து நாடுசெழித்ததுகண்டு, சோழராசன் காளிபுத்திரர்க

னாகிய சான்றோர்களுக்கு மிகுந்த மரியாதைகள்செய்து, அநேகவிருதுகளுஞ் சிறப்புகளுமளித்து அவர்களைக் கன்னியப்படுத்திவந்தான்.*

* இந்தச்சரித்திரம் நூல்களிற் கூறப்பட்டிருப்பதுமன்றி நாளதுவரையினும் பரம்பரையாய்ச் சான்றோர்குலத்தவர்களுக்குள்ளே சொல்லப்பட்டுவருகின்ற நாடோடிய கதையாம். சான்றோர்குலத்தவர்கள் நாளதுவரையினும் குறவர்கள் முதலானவர்கள் பின்னிவிற்கிற கூடைகளைவாங்கித் தங்கள் வீடுகளிற் புழங்குகிறதுமில்லை, அவைகளிற் சாமான்கள் வாங்கிவைத்துச் சுமக்கிறதுமில்லை. காட்டுவேலைகள் செய்துவருகிற சூத்திரகுலத்தவர்கள் இந்தக்கூடைகளைச் சாதாரணமாகத் தங்கள்வீடுகளிற் புழங்குவதுமன்றி, அணைக்கட்டுமுதலான வேலைகளுக்கும் மண்ணைவத்துச்சுமத்தல் முதலியவைகளுக்கும் உபயோகப்படுத்திக்கொண்டுவருகிறார்கள். ஆனதால் கம்பநாடார் 'ஏரெழுபதில்' மேற்படி கூடைகள் வேளாண்மாந்தருக்குச் சிறப்பென்று எழுதிவைத்திருக்கிறார்.

சான்றவர்குலத்தவர்களோ கற்பகவிருக்ஷமாகிய தாலமரத்தின் நாரினாலும் ஓலையினாலுஞ் செய்துவருகிற பற்பலவகைப் பெட்டிகளை வீட்டுவேலைக்குங் காட்டுவேலைக்கும் உபயோகப்படுத்திவருகிறார்கள். இந்தப்பெட்டிகளுக்குக் கூடை என்னும் பெயர் ஏற்காது. அவைகளுக்கு 'நார்ப்பெட்டி, குருத்தோலைப் பெட்டி, சாரோலைப்பெட்டி, தட்டுப்பெட்டி, கடகப்பெட்டி, அஞ்சரைப்பெட்டி,கிண்ணிப்பெட்டி, திருநீற்றுப்பெட்டி, பேழைப்பெட்டி, கட்டுப்பெட்டி, வட்டிப்பெட்டி, வெற்றிலைபாக்குப்பெட்டி, புகையிலைப்பெட்டி' எனப் பெயர்கள்வந்துவழங்குகின்றன. சான்றோர்குலத்தவர்களுக்குள்ளே நாளதும் ஒருவனுங் கூடைச்சுமை சுமக்கமாட்டான். கலியாண சோபனகாலங்களில்,மெல்லிய வெண்மையான புத்தாம்புது நாரினாலும், தூய்யவெண்ணிற இளங்குருத்தோலையினாலும், மிகு அலங்கிருதமாகச் செய்யப்பட்ட பெட்டியில் திருமங்கிலியமாகிய சங்குதாலிகள்வைத்து உபயோகப்படுத்திவருகிறார்கள். அதற்கு நாளதும் 'பேழைப்பெட்டி' என்றுபேர்.

அங்கிலேய குலத்தரசியாகிய 'விக்டோரியாள்' எனப் பெயர்கொண்ட மகா-இராணியவர்களுக்குச் சிரேஷ்டபுத்திரரான பிரின்சவ் வேல்ஸ் (Prince of Wales) எனப் பெயர்கொண்ட பட்டத்துக்குமாரர் பிறந்தபோது, ஞானஸ்நானத்துக்கு யோர்தான் நதிச்சலமும், ஞானஸ்நான விருந்துமண்டபத்திற்குக் கற்பகவிருக்ஷமாகிய பனைமரத்துத் தூய்யவெண்ணிற நாரினாற் பின்னப்பட்ட அலங்கிருதமான நார்ப்பாயும் உபயோகிக்கப்பட்டன. ஆனதால், அது மங்கலகாரியங்களுக்கு இன்றியமையாத அருமைப்பண்டமாம்.

இவ்வாறு 'சான்றோர்' என்னும் கௌரவப்பட்டப்பெயர் பெற்றபின்பு, சினம்பலபாண்டியன் குலத்தவர்கள் தங்கள் குலக்கிளைப்பிரிவார்களோடு விவாகசம்பந்தங்கலந்து, தமிழ் நாடெங்ஙனும் மிகவும்பெருகி வாழ்ந்துவந்தார்கள். இந்தச் சான்றோர்குலத்தவர்கள் பிற்காலத்தில் 'சாணார்குலத்தவர் கள்' என மரூஉமொழி பெயர்பெற்றிருக்கின்றனர். இச் சான்றோர்குலத்தவர்கள் தமிழ்நாட்டுக் குலப்பிரிவுகளில் எந்

---

மேலும், 'திருமுகம்' எனப் பெயர்பெற்ற கலியாண ஓலைக ளுங் கற்பகவிருக்ஷத்துக் குருத்தோலைகளில் எழுதிச் செந்தி ருக்கத்திலடைத்து, பொன்னிறமிலங்க மஞ்சள்தடவி இனச னத்தாருக்கு அனுப்புவது சான்றோர்குலமேன்மக்களுக்குள் வழக்கமாம். பூர்வ தமிழரசர்களும் இவ்வாறு செய்துவந்ததாக நூல்கள் கூறுகின்றன.

அன்றியும், அங்கிலேயகுலத்து மகாராணியவர்களின் இர ண்டாவது புத்திரர் 'டியுக் கவ் எடின்பரோ பிரபு' (Duke of Edinburgh) எனப் பட்டப்பெயர்பெற்ற இராசகுமாரர் கிறிஸ் தாப்தம் 1870 ஆம் சென்னபட்டணத்திற்கு வந்திருந்தபோ து, அந்த இராசபுத்திரருக்கு மகிமையாகச் சமைக்கப்பட்ட அலங்காரப்பந்தல்களின் முகப்புச் சிங்காரப்பந்தலில் கற்பக விருக்ஷங்களாகிய பனை, தெங்கு, ஈந்து, கமுகு என்னும் விரு க்ஷங்கள் கனிக்குலைகளோடும், புஷ்பக்கொத்துகளோடும், ஓ லைகளோடும் முழுவிருக்ஷங்களாக வேரோடு தூரோடு பிடுங்கி நாட்டப்பட்டன. இந்தவிருக்ஷங்கள் சுபசோபனமங்கலகாரி யங்களுக்கு ஆதிமுதல் இன்றியமையாத விருக்ஷங்களாக மதிக் கப்பட்டும், உபயோகிக்கப்பட்டும் வந்திருக்கின்றன.

இந்துக்களுக்குள்ளே பெரியோர்களுடைய கலியாணப்பந் தல்களில் இவ்வகை விருக்ஷங்கள் உபயோகிக்கப்படுவது நித் தக்காட்சியாம்.

சான்றோர்குலத்து மேன்மக்களுடைய கலியாணப்பந்தல்க ளெல்லாம் கற்பகவிருக்ஷமயமாகவே நாளதுஞ் சிங்காரிக்கப் பட்டுவருகின்றன. பூர்வ அரசகுலத்தவர்கள் இந்தக் கற்பக விருக்ஷப் பரிபாலனத்தைத் தங்கள் குலப்பிரிவாருக்குள்ளே அமைத்துக்கொண்டதற்கு இதுவே மூகாந்திரமாம். ஆனதால், விருக்ஷக்குலங்களுக்குள் இராசவிருக்ஷமாக விளங்கிய கற்பக விருக்ஷங்கள், ஆதிகாலத்தில் மனிதகுலத்தாருக்குள் இராச குலத்தாரானவர்கள் எவர்களோ அவர்களால் பரிபாலனஞ்செ ய்யப்பட்டுவந்தது வியப்பன்றாம்.

தமிழ்நாட்டரசர்களுக்குக் கற்பகவிருக்ஷங்களே சுபசோப னத்துக்குரிய விருக்ஷங்களாக இருந்துவந்தன. அவர்களுடைய

தக்குலத்தைச்சேர்ந்தவர்கள் என வினவுமிடத்து, இதற்குத் தகுந்த விடைகூறத் தெரிந்தவர்கள் யாருமில்லை. இதைக் குறித்து இரண்டொரு விஷயங்களை இங்ஙனங் கூறுவோம்.

1. தமிழ் நூல்களில், சாதியட்டவணை கூறுகின்றபாகங்களில், 'சாணார்' என்னும் மரூஉமொழி வரவே இல்லை. ஆகையால், இந்தப்பெயருடையவர்கள் இன்னகுலத்தவர்கள் என நேர்நேராகத் தோன்றாதிருந்தபோதிலும்,

---

கலியாணப்பந்தல்களுக்குக் கற்பகவிருக்ஷங்கள் இன்றியமையாத விருக்ஷங்களாயின. அதற்கு இங்ஙனம் ஒரு திருட்டாந்தங்கூறுவோம். ஔவையார் உக்கிரப்பெருவழுதி என்னும் பாண்டியன்காலத்தில் ஈழநாட்டிற்குப் போயிருந்தாள். அக்காலத்தில் அந்தநாடு ஆண்டுவந்த ஈழநாடனுக்கு இரண்டு பெண்களிருந்தார்கள். அந்த இரண்டுபெண்களும் ஔவையாருக்கு மிகு மரியாதைகள் செய்தபடியால், அவள் தொண்டைமண்டலத்திற்குத் திரும்பிவந்தபின்பு, அந்த இரண்டுபெண்களையுந் திருக்கோவலூர் தெய்வீகராசனுக்கு விவாகஞ் செய்துகொடுக்கப்பேசினாள். தெய்வீகராசனோ, சேரசோழபாண்டியர்கள் சம்மதமின்றி அந்தப்பெண்களை விவாகஞ்செய்துகொள்ளமாட்டேனென்றுசொல்ல, ஔவையார் உடனே கலியாண ஓலையெழுதிச் சேரசோழபாண்டியர்களுக்கு அனுப்ப, மூவரும்வந்து சேர்ந்தார்கள். அந்த அரசர்கள் கலியாணப்பந்தலிற் கூடியிருக்கும்போது, பந்தலில் நாட்டியிருந்த பனைமரத்துண்டைக்காட்டி ஔவையாரைப்பார்த்து, "இந்தப் பனந்துண்டு பனையாகி எங்களுக்கு ஆளுக்கொருபழந்தரும்படி செய்தால், அதன்பிறகு கலியாணம் முடிக்கிறோம்" என்றார்கள். அதுகேட்டு, ஔவையார்பாடிய கட்டளைக்கலித்துறையாவது:—

"திங்கட்குடையுடை சேரனுஞ்சோழனும் பாண்டியனும்
மங்கைக்கறுகிட வந்துநின்றார் மணப்பந்தலிலே
சங்கொக்கவெண்குருத் தீன்றுபச்சோலை சலசலத்து
நுங்குக்கண்முற்றி யடிக்கண்கறுத்து நுனிசிவந்து
பங்குக்குமூன்று பழந்தரவேணும் பனந்துண்டமே."

என்று பாடினாள். பாடியவுடனே அந்தப் பனந்துண்டம் வளர்ந்து, குருத்துவிட்டுக்காய்த்தது என்றும், இதைக்கண்டவுடனே கலியாணம் முடிந்தது என்றுங் கதை சொல்லுகின்றது.

இதனால் கற்பகவிருக்ஷங்கள் தமிழரசர்களுக்கு மிகு பிரியமான விருக்ஷங்களாயிருந்ததும், அவற்றின் அமுதமுங் கனியும் அவர்களுக்கு மிகு அருமைப்பண்டங்களாயிருந்துவந்ததும் விளங்குகின்றது.

2. தொல்காப்பியம், திவாகரம், வெற்றிவேற்கை முதலான நூல்களில், அரசகுலத்திற்குச் 'சான்றோர் குலம்' எனப் பெயர்வந்திருக்கின்றது. ஆனதால் 'சான்றோர்குலம்' அரசகுலமாம். 'சான்றவர், சான்றார், சான்றோர்' என்னும் பெயர்களுக்கு மரூஉமொழிப்பெயர் 'சாணார்' என்பதாம். ஆனபடியினாலே, 'சாணார்' குலத்தவர்களே 'சான்றோர்' குலத்தவர் ஆவர்.

3. 'சாணார்' என்று மரூஉமொழிப்பெயர் தரித்தவர்கள் பஞ்சமர்குலத்தவர்களுமல்ல, சூத்திரகுலத்தவர்களுமல்ல, செட்டிகுலத்தவர்களுமல்ல, பார்ப்பனக்குலத்தவர்களுமல்லவேயாயின், அவர்கள்குலம் தமிழ்நாட்டில் இல்லையென்று சொல்லுகிற அரசகுலமாய்த்தானிருக்கவேண்டுமென்பது அருத்தாபத்திப் பிரமாணருசுவாம். நூற்சாட்சியும் இதற்கிசைந்திருப்பதால், 'சாணார்' என மரூஉமொழிப்பெயர்பெற்றிருக்கிறவர்களே தமிழ்நாட்டுச்சத்திரியகுலத்தவர்களாவர்.

இனிச் சான்றோர்குலக்கிளைப்பிரிவுகளுக்கு விபரங் கூறுவோம்.

## மூன்றாவது.

மேலே சான்றோர்குலப்பூர்வோத்திரம் இன்னதெனவும், அரசகுலத்தவர்களுக்குச் 'சான்றோர்' என்னுங் கௌரவப் பட்டப்பெயர் வந்தகாரணம் இன்னதெனவுங் கூறியானமையால், இனிச் சான்றோர்குலக்கிளைப்பிரிவுகளைச் சொல்லுவோம்.

தமிழ்நாட்டு மூவேந்தர்களில் மூத்தவன் சேரன், அவனுக்கு இளையவன் சோழன், சோழனுக்கு இளையவன் பாண்டியன், சேரன் கொங்குகுடகநாடுகளடங்கிய மலைநாடு ஆண்டுவந்தவன். சோழன் காவிரிநதிப்பாய்ச்சற்பூமியாகிய சோணாடு ஆண்டுவந்தவன். பாண்டியன் வையைநதிப்பாய்ச்சற்பூமியாகிய வடபாண்டிநாடு, பொருநைநதிப்பாய்ச்சற்பூமியாகிய தென்பாண்டிநாடுகள் ஆண்டுவந்தவன்.

இவர்களையன்றி, இவர்களுக்குக்கிளையார்கள் கலிங்கனும் ஈழனுமாம். கலிங்கன் பூர்வத்தில் கலிங்கநாடு ஆண்டுவந்த வன், ஈழன் ஈழநாடு ஆண்டுவந்தவன். மேற்படி பிரிவுப்படிக்கு,

1. பூர்வசேரநாட்டரசகுலத்தவர்கள் சேரகுலச்சான்றோர், கொங்குச்சான்றோர்எனவும்,

2. சோழநாட்டரசகுலத்தவர்கள் சோழியகுலச்சான்றோர் எனவும்,

3. பாண்டிநாட்டரசகுலத்தவர்கள் பாண்டிகுலச்சான்றோர் எனவும்,

4. ஈழநாட்டரசகுலத்தவர்கள் ஈழக்குலச்சான்றோர் என வும் பெயர்பெற்றிருந்தனர்.

மேற்கூறிய பெரும்பிரிவுகளையன்றி, உட்பிரிவுப்பெயர்களு முண்டு. அவைகளில்முக்கியமானவைகள்,

கருக்குப்பட்டயச்சான்றோர்,
நட்டாத்திச்சான்றோர்,
மகாநாட்டுச்சான்றோர், அல்லது மாநாட்டுச்சான்றோர்,
மேனாட்டுச்சான்றோர்,
தொண்டைமண்டலச்சான்றோர், முதலான பிரிவுகளாம்.

கொங்குநாட்டில் தலையநல்லூர்எனப் பெயர்கொண்ட ஒரு பூர்வ நகரமிருக்கின்றது. அதில் வீரமாகாளிகோவிலொன் றுண்டு. அந்தக்காளிகோவில் சோழனுக்குஞ் சேரனுக்கு முரித்தானது, மேற்படி தலையநல்லூரில் சோழனுக்குஞ் சே ரனுக்கும் நேரிட்டயுத்தத்தில், சோழன்மடிந்துபோனான். அது முதல் மேற்படி வீரமாகாளிகோவிலில் சோழனுக்கு முன்பூ சையும், காளிக்குப் பின்பூசையும் நடந்துவருகின்றது. இதனா லும் காளிகாதேவி அரசர்குலத்தவர்களுக்குக் குலதெய்வமாக விருந்துவந்தது தெரியவருகிறது.

இனிவரும் பிரகரணத்தில் சான்றோர்குலத்துத் தாமிரசா சனங்களுக்கும், சான்றோர்குலப்பட்டப்பெயர்களுக்கும் விப ரங் கூறுவோம்.

## ௰. பிரகரணம்.

சான்றோர்குலத்துத் தாமிரசாதனப் பட்டயங்களுக்கும், பட்டப்பெயர்களுக்கும் விபரங்கூறுகின்றது.

மேற்கூறிய பிரகரணங்களில், தொல்காப்பியம், திவாகரம், வெற்றிவேற்கை, நாலடியார், கம்பராமாயணம், சான்றோர் புராணம் முதலான நூல்களைக்கொண்டு, சான்றோர்குலத்தவர்கள் எனப் பெயர்பெற்றிருக்கிற கோத்திரத்தார் 'அரசகுலத்தவர்கள்' என்று மிகு துலாம்பரமாக ருசுப்படுத்தியிருக்கிறோம். இன்னமும் அதன் உண்மையைச் சான்றோர்குலத்துத் தாமிரசாசனங்களும், அக்குலத்தவர்கள் பெற்றிருக்கிற பட்டப்பெயர்களுந் துலக்கிக்காட்டுகின்றமையால், அவற்றை இந்தப் பிரகரணத்தில் உய்த்தாராயக்கடவோம்.

மகா பிரளயகாலத்திற்குப்பிற்பாடு, இமயகிரியுடன்சேர்ந்து கீழ்மேலாகப் பற்பல கிளைகளாய்ச்சென்று ஆசியாக்கண்டத்து மத்தியபாகத்திற் கூடுகின்ற மலைத்தொடர்ச்சங்கமத்திலிருக்கின்ற நாட்டிற் குடியேறிய சத்தியவரதன் (Noah) எனப் பெயர்கொண்ட வைவசுவதமனுவின்குலத்தவர்கள் பெருகி விருத்தியடைந்து வருகிறகாலத்தில், அவர்களிற் பற்பல கிளைப்பிரிவார்கள் அந்த மத்திய மலைத்தொடர்ச்சங்கம நடுநாட்டிற்குக் கீழ்திசை மேல்திசைகள், வடதிசை தென்திசைகள் நோக்கிப் புறப்பட்டுப்போனகாலத்தில், கீழ்திசைநோக்கிப் போன பூர்வ தமிழாரியப்பாஷைக்காரர்கள் காபுல்நாட்டின் மார்க்கமாய்ச் சிந்துநதியெனப் பெயர்பெற்ற இந்துநதியைத் தாண்டி, கீழ்திசைநோக்கிச்சென்று, முந்தி இமயகிரிமலைமேலும், அம்மலைச்சாரிலும், பிறகு தன்றரைப்பூமியாகிய பஞ்சநதிநாடு, யமுனைநதிநாடு, கங்காநதிநாடுகளிலும் குடியிருந்து பெருகிவந்தார்கள். அத்திசையில் அவர்களுடைய தொகை விருத்திபெற்றுவருகையில், அவர்களில் ஒரு கிளைப்பிரிவினர் கிறிஸ்துப்பிறப்புக்கு உத்தேசம் ஆயிரத்தறுநூறு (1,600) வருடங்களுக்குமுன்னே,* விந்தியபருவதச்சாரலில்

* பூர்வசோதிட கணிதப்படிக்கு இது கிரேதையுகமாகும்.—*Vide Bentley's Hindú Astronomy, p.* 62.

உற்பத்தியாகி மேல்திசைநோக்கிச்சென்று மேல்கடலிற்பாய்கின்ற நருமதைநதிச்சார்பில் அதின் வடபாரிசத்திலிருந்த சௌராஷ்டிரநாட்டில் முந்திக்குடியேறி, அதற்குப்பின்பு மேற்படி நருமதை நதியைத்தாண்டி தக்ஷண இந்தியாவிற்புகுந்து, நாளடவிலே கன்னியாகுமரிமட்டுஞ்சென்று, கலிங்க மண்டலம், தொண்டைமண்டலம், சோழமண்டலம்,*பாண்டி மண்டலம், சேரமண்டலம், ஈழமண்டலம் என ஆறு இராச்சியங்களை உண்டுபண்ணி அவைகளை ஆண்டுகொண்டு பெருகிவந்தார்கள். அவர்களுடைய தமிழாரியபாஷைக்கிசைய அந்த மண்டலங்கள் தமிழ்நாடுகள் எனவும், திராவிடநாடுகள் எனவும் பெயர்பெற்றன.

இவ்வாறு தமிழாரிய இராசகுலத்தவர்கள் சம்புத்தீவு எனப் பெயர்பெற்ற இந்துதேசமடங்கலும் ஆண்டுவருகிறநாளையிலே, சிந்துநதிக்கு நேர்மேற்கிலிருந்து சமஸ்கிருதவாரியபாஷைக்காரர்கள் படையெடுத்து, மேற்படி சிந்துநதியைத்தாண்டி, இந்தியாவின் வடநாட்டிற்புகுந்து, அத்திசையிலிருந்த தமிழாரியவரசர்களோடு போர்புரிந்து, அவர்களைச்செயித்து, வட இந்தியாவைத் தங்கள் கைவசப்படுத்திக்கொண்டார்கள். அந்த வடஇந்தியாவின் தமிழ்ப்பாஷைக்காரர்களில், அழிபட்டவர்கள்போக மற்றவர்கள் நாலாதிசைகளிலுஞ் சிதறிப்போய்விட்டார்கள். பெருங்கூட்டமானபேர் விந்தியபருவதங்கட

---

* தமிழ்நாட்டு மன்னர்குலத்தவர்கள் தமிழ்நாடுகளை மண்டலங்களாகப் பிரித்து அரசுபுரிந்துவந்ததற்கு மேற்கோள் :

கம்பநாடன், ஏரெழுபது, 4 - வது கவி.

“ ஈழமண்டலமுதலெனவுலகத்தெண்ணு
 மண்டலத்தெறிபடைவேந்தர்
தாழுமண்டலஞ்செம்பியன்மரபினோர்
 தாமெலாம்பிறந்தினியபவ்வளத்தின்
வாழுமண்டலங் கனகமுமணிகளும்
 வரம்பில்காவிரிகுரம்பினிற்கொழிக்குஞ்
சோழமண்டல மிதற்கிணையாமெனச்
 சொல்லுமண்டலஞ்சொல்வதற்கில்லையே.”

இந்தக்கவியில், தமிழ்நாடு பற்பல மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டு அரசுபுரியப்பட்டதற்கு விபரங்கூறியிருக்கின்றது.

# ௰. பிரகரணம்.

*சான்றோர்குலத்துத் தாமிரசாதனப் பட்டயங்களுக்கும், பட்டப்பெயர்களுக்கும் விபரங்கூறுகின்றது.*

மேற்கூறிய பிரகரணங்களில், தொல்காப்பியம், திவாகரம், வெற்றிவேற்கை, நாலடியார், கம்பராமாயணம், சான்றோர் புராணம் முதலான நூல்களைக்கொண்டு, சான்றோர்குலத்தவர்கள் எனப் பெயர்பெற்றிருக்கிற கோத்திரத்தார் 'அரசகுலத்தவர்கள்' என்று மிகு துலாம்பரமாக ருசுப்படுத்தியிருக்கிறோம். இன்னமும் அதன் உண்மையைச் சான்றோர்குலத்துத் தாமிரசாசனங்களும், அக்குலத்தவர்கள் பெற்றிருக்கிற பட்டப்பெயர்களுந் துலக்கிக்காட்டுகின்றமையால், அவற்றை இந்தப் பிரகரணத்தில் உய்த்தாராயக்கடவோம்.

மகா பிரளயகாலத்திற்குப்பிற்பாடு, இமயகிரியுடன்சேர்ந்து கீழ்மேலாகப் பற்பல கிளைகளாய்ச்சென்று ஆசியாக்கண்டத்து மத்தியபாகத்திற் கூடுகின்ற மலைத்தொடர்ச்சங்கமத்திலிருக்கின்ற நாட்டிற் குடியேறிய சத்தியவரதன் (Noah) எனப் பெயர்கொண்ட வைவசுவதமனுவின்குலத்தவர்கள் பெருகி விருத்தியடைந்து வருகிறகாலத்தில், அவர்களிற் பற்பல கிளைப்பிரிவார்கள் அந்த மத்திய மலைத்தொடர்ச்சங்கம நடுநாட்டிற்குக் கீழ்திசை மேல்திசைகள், வடதிசை தென்திசைகள் நோக்கிப் புறப்பட்டுப்போனகாலத்தில், கீழ்திசைநோக்கிப் போன பூர்வ தமிழாரியப்பாஷைக்காரர்கள் காபுல்நாட்டின் மார்க்கமாய்ச் சிந்துநதியெனப் பெயர்பெற்ற இந்துநதியைத் தாண்டி, கீழ்திசைநோக்கிச்சென்று, முந்தி இமயகிரிமலைமேலும், அம்மலைச்சார்பிலும், பிறகு தன்றரைப்பூமியாகிய பஞ்சநதிநாடு, யமுனைநதிநாடு, கங்காநதிநாடுகளிலும் குடியிருந்து பெருகிவந்தார்கள். அத்திசையில் அவர்களுடைய தொகை விருத்திபெற்றுவருகையில், அவர்களில் ஒரு கிளைப்பிரிவினர் கிறிஸ்துப்பிறப்புக்கு உத்தேசம் ஆயிரத்தறுநூறு (1,600) வருடங்களுக்குமுன்னே,* விந்தியபருவதச்சாரலில்

---

* பூர்வசோதிட கணிதப்படிக்கு இது கிரேதையுகமாகும்.—*Vide Bentley's Hindú Astronomy, p.* 62.

உற்பத்தியாகி மேல்திசைநோக்கிச்சென்று மேல்கடலிற்பாய்கின்ற நருமதைநதிச்சார்பில் அதின் வடபாரிசத்திலிருந்த சௌராஷ்டிரநாட்டில் முந்திக்குடியேறி, அதற்குப்பின்பு மேற்படி நருமதை நதியைத்தாண்டி தக்ஷண இந்தியாவிற்புகுந்து, நாளடைவிலே கன்னியாகுமரிமட்டுஞ்சென்று, கலிங்க மண்டலம், தொண்டைமண்டலம், சோழமண்டலம்,*பாண்டி மண்டலம், சேரமண்டலம், ஈழமண்டலம் என ஆறு இராச்சியங்களை உண்டுபண்ணி அவைகளை ஆண்டுகொண்டு பெருகிவந்தார்கள். அவர்களுடைய தமிழாரியபாஷைக்கிசைய அந்த மண்டலங்கள் தமிழ்நாடுகள் எனவும், திராவிடநாடுகள் எனவும் பெயர்பெற்றன.

இவ்வாறு தமிழாரிய இராசகுலத்தவர்கள் சம்புத்தீவு எனப் பெயர்பெற்ற இந்துதேசமடங்கலும் ஆண்டுவருகிறநாளையிலே, சிந்துநதிக்கு நேர்மேற்கிலிருந்து சமஸ்கிருதவாரியபாஷைக்காரர்கள் படையெடுத்து, மேற்படி சிந்துநதியைத்தாண்டி, இந்தியாவின் வடநாட்டிற்புகுந்து, அத்திசையிலிருந்த தமிழாரியவரசர்களோடு போர்புரிந்து, அவர்களைச்செயித்து, வட இந்தியாவைத் தங்கள் கைவசப்படுத்திக்கொண்டார்கள். அந்த வடஇந்தியாவின் தமிழ்ப்பாஷைக்காரர்களில், அழிபட்டவர்கள்போக மற்றவர்கள் நாலாதிசைகளிலுஞ் சிதறிப்போய்விட்டார்கள். பெருங்கூட்டமானபேர் விந்தியபருவதங்கட

---

* தமிழ்நாட்டு மன்னர்குலத்தவர்கள் தமிழ்நாடுகளை மண்டலங்களாகப் பிரித்து அரசுபுரிந்துவந்ததற்கு மேற்கோள் :

கம்பநாடன், ஏரெழுபது, 4 - வது கவி.

“ ஈழமண்டலமுதலெனவுலகத்தெண்ணு
 மண்டலத்தெறிபடைவேந்தர்
தாழுமண்டலஞ்செம்பியன்மரபினோர்
 தாமெலாம்பிறந்தினியபவ்வளத்தின்
வாழுமண்டலங் கனகமுமணிகளும்
 வரம்பில்காவிரிகுரம்பினிற்கொழிக்குஞ்
சோழமண்டல மிதற்கிணையாமெனச்
 சொல்லுமண்டலஞ்சொல்வதற்கில்லையே.”

இந்தக்கவியில், தமிழ்நாடு பற்பல மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டு அரசுபுரியப்பட்டதற்கு விபரங்கூறியிருக்கின்றது.

ந்து, தக்ஷண இந்தியாவுக்குவந்து அங்குள்ள நாடுகளிலிருந்த தங்கள் குலத்தவர்களாகிய தமிழர்களுடன் கூடிக்கொண்டனர்.

மேற்படி சமஸ்கிருதப்பாஷைக்காரர் மேற்கே ஆரியநாட்டினின்று வந்தபடியால், இமயமலைக்கும் விந்தியமலைக்கும் இடையிலிருக்கின்ற உத்தரஇந்தியாவுக்கும் 'ஆரியநாடு' எனப் பெயராயிற்று. இந்தப்பிரகாரஞ் சம்புத்தீவிலுள்ள பரதகண்டமாகிய இந்துதேசம் உத்தரஇந்தியா, தக்ஷணஇந்தியா என இரண்டு பெரும்பிரிவாயின. இவற்றுள், உத்தர இந்தியாவுக்கு 'சமஸ்கிருதநாடு, ஆரியநாடு' எனவும், தக்ஷணஇந்தியாவுக்குத் 'தமிழ்நாடு, திராவிடநாடு' எனவும் பெயர்களுண்டாயின. இப்படியிருந்துவருகிறகாலத்தில், பூர்வ ஆரிய சம்பந்தரான கன்னடியர்களும், வடுகர் ரெட்டிகள் முதலான தெலுங்கர்களும், மலையாளபாஷைக்காரர்களும் ஒருவர்பின்னொருவராய்க் கோத்திரங்கோத்திரமாய்த் திராவிடநாட்டிற்புகுந்து, விந்தியமலைக்குத் தென்பாரிசத்திலிருந்த வடதிராவிடநாட்டைத் தங்கள் கைவசப்படுத்திக்கொண்டு, அத்திசையிலிருந்த தமிழ்ப்பாஷைக்காரர்களை நாளடவிலே திருவேங்கடம்முதல் கன்னியாகுமரி பரியந்தமிருக்கின்ற தென்திராவிடநாட்டிற்கு ஓட்டிவிட்டார்கள். பிற்காலத்தில் கன்னடியரும் வடுகரும் தென்திராவிடநாடாகிய தமிழ்நாடுகளுக்கும் அடிக்கடி படையெடுத்துத் தமிழரசர்களுடன் போர்புரிந்துவந்தனர். ஏறுங்கடைசியில், தமிழ்நாடுமுழுமையும் வடுகர்கள் கைவசமாகிப் போய்விட்டது. மலையாளப்பாஷைக்காரர் சேரநாட்டிற்புகுந்து அதன் பெரும்பாகத்தைத் தங்கள் கைக்குள்ளாக்கிக்கொண்டனர்.

இவ்வாறு தமிழ்நாடுகளில் அரசாட்சி மாறுதல்கள் உண்டாகிக்கொண்டிருந்தமையால், எளிதிலழியாத சிலாசாதனங்களுந் தாமிரசாதனங்களும் உண்டுபண்ணப்படவேண்டிய அவசியம் நேரிட்டது. தமிழ்க்குலத்தவர்களுக்குள் சிரேஷ்டகுலமானவர்களுக்கெல்லாம் இவ்வகைச்சாதனங்கள் உண்டாயிருப்பதுபோல, சான்றோர்குலத்தவர்களுக்கும் பூர்வ தாமிர

சாதனங்கள் உண்டாயிருக்கின்றன. ஆனபடியினாலே, நாம் இந்தப்பிரகாரணத்தில் சான்றோர்குலத்துச் செப்புச்சாசனங்களுக்கும் அக்குலத்துக்குரிய பட்டப்பெயர்களுக்கும் விபரங்கூறுவோம். அவைகள் நமக்குத் தீர்க்கமுறப் புலப்படுவதற்கு,

முதலாவது, திருவெண்காட்டுச் சான்றோர்குலத்துத் தாமிரசாதனத்தின் படப்பட்டயத்துப்படங்கள் விபரமும், அப்படங்களுக்குப் பொருள் விபரமும் இன்னதெனவும்,

இரண்டாவது, திருவெண்காட்டுச் சான்றோர்குலத்துத் தாமிரசாதன எழுத்துப்பட்டயத்தின் பொருளடக்கம் இன்னதெனவும்,

மூன்றாவது, சிதம்பரத்துச் சான்றோர்குலத்துத் தாமிரசாதனப் படப்பட்டயத்துக்கும் எழுத்துப்பட்டயத்துக்கும் விபரம் இன்னதெனவும்,

நான்காவது, சான்றோர்குலத்துக்குரிய முக்கியமான பட்டப்பெயர்கள் இன்னவைகளெனவும் இங்ஙனம் எடுத்துரைப்போம். இவற்றுள்,

## முதலாவது.

திருவெண்காட்டுச் சான்றோர்குலத்துத் தாமிரசாசனத்தின் படப்பட்டயத்துப்படங்கள் விபரமும் அப்படங்களுக்குப் பொருள்விபரமும் வருமாறு.

சான்றோர்குலத்து அதிபூர்வத்தாமிரசாதனங் காஞ்சிபுரத்திலிருக்கிறதாகச் சொல்லுகிறார்கள். மேலும் வேறு சில இடங்களிலும் சான்றோர்குலத்துத் தாமிரசாதனங்கள் இருக்கிறதாகச் சொல்லப்படுகிறது. அவைகளை நிச்சயித்தறிவதற்கேதுவுண்டு.

இப்போது எமதுவசத்திலிருக்கிற சான்றோர்குலத்துப் பூர்வ தாமிரசாதனங்கள் இரண்டு. ஒன்று திருவெண்காட்டுச் சான்றோர்குலத்துத் தாமிரசாதனம், ஒன்று புலியூரெனப் பெயர்கொண்ட சிதம்பரத்துச் சான்றோர்குலத்துத் தாமிரசாதனம். இவ்விரண்டு சாதனங்களில், ஒவ்வொரு சாதனத்திற்கும் இரண்டிரண்டு பக்கங்களுண்டு. வலதுபக்கப்பட்டயம்

படப்பட்டயம், இடதுபக்கப்பட்டயம் எழுத்துப்பட்டயம். நாம் இந்த முதலாவது பிரிவில் திருவெண்காட்டுச் சான்றோர்குலத்துத் தாமிரசாதனப் படப்பட்டயத்துக்கும் அதிலடங்கிய படங்களின் பொருளுக்கும் விபரங்கூறுவோம்.

திருவெண்காடானது காவேரிநதிச்சங்கமத்தில் கீழ்கடலருகில் சோழர்களுக்குப் பூர்வநகரமாயிருந்த காவிரிப்பூம் பட்டணத்திற்குச் சமீபத்திலிருக்கிற ஓர் பழையநகரம். அது நாங்கூர் எனப் பெயர்பெற்ற நாங்கைநகரையடுத்திருக்கின்றது.

திருவெண்காட்டுப்புராணம், சுவேதவனச்சருக்கம்,
64-வது கவி, கடையடி:

"சிறந்ததிருச்சாய்க்காடு தலைச்செங்காடு
திருநாங்கைநகர்புடைசூழ் திருவெண்காடு."

இந்தத் திருவெண்காடு சிதம்பரத்திற்கு முன்னுண்டான சிவஸ்தலமானதால், அதற்கு 'ஆதிச்சிதம்பரம்'* எனப் பெயருண்டாயிற்று. சிதம்பரம் எனப் பெயர்கொண்ட ஸ்தலங்கள் மூன்றுண்டு:

(1.) ஆதிச்சிதம்பரம். இது திருவெண்காடாம்.

(2.) தில்லைச்சிதம்பரம். இதற்குப் புலியூர் என்றும் பெயர். இதில் பூர்வத்தில் தில்லைவிருக்ஷவனம் இருந்தபடியால் சிதம்பரத்திற்குத் 'தில்லை' எனவும் ஒரு பெயருண்டு.

(3.) மேலைச்சிதம்பரம். இது கோயம்புத்தூருக்கு மேல் திசையில் மூன்றுகல்தூரத்திலிருக்கின்றது.

திருவெண்காடு ஆதியிலே பெருங்காடுகொண்ட வெண்மணற்பூமியாயிருந்ததினாலே, அதற்கு "வெண்காடு, திருவெண்காடு, வெள்ளைவனம், சுவேதவனம், திருச்செங்காடு, திருச்சாய்க்காடு, திருவாலங்காடு" எனப் பெயர்களுண்டாயின. இத்திருவெண்காட்டில் ஆதிபூர்வமடம் காந்தமாரிஷி மடமாம்.

---

* திருவெண்காட்டுப்புராணம், திருநகரச்சருக்கம், 61-வது கவி, காண்க.

காந்தமாரிஷிக்குச் 'சுராபாண்டியராசன், காந்தருவரிஷி, வித்தியாதரமுனி, விந்தைமுனி, விஞ்சைமுனி' எனவும் பெயர்கள் வரும். இந்தமடஞ் சபாநாயகர் சந்நிதிக்கு எதிராகக் கட்டப்பட்டிருக்கின்றது. அது நிற்கின்றஸ்தலத்தைச் சான்றோர்குலத்து மூதாக்கள் ஐம்பத்தேழரை ($57\frac{1}{2}$) வராகனுக்குச் சுத்தக்கிரயத்திற்கு வாங்கி, அதில் தங்கள்குலத்துக்கு மூலபுருஷனாகிய காந்தமாரிஷிக்கு மடங்கட்டி, அந்தமடத்தை 'ஆதிசைவர்' எனவும், 'வீரசைவர்' எனவும், 'ஆதிபூர்வ சிவபக்தர்' எனவும் பெயர்பெற்ற பூர்வ தமிழ்நாட்டுப் புரோகிதர்களாகிய குருக்கள் வமிசத்திலுதித்த பசுபதிபுனுகுசட்டநாதகுருக்கள்வசம் ஒப்பித்து அதில் பூசைமுதலானது நடந்துவரும்படி திட்டஞ்செய்திருந்தார்கள். அந்தப் பசுபதிபுனுகுசட்டநாத குருக்கள் பரம்பரையிலுதித்த பசுபதி குருக்கள் தற்காலத்தில் அந்தமடத்தைக் கண்பார்த்துவருகிறார். அவர்வசத்தில் மேற்படி தாமிரசாதனப்பட்டயமிருக்கின்றது.

வடுகராசர்காலத்தில், விசயராகவேலுநாயக்கர் நாளையில், மேற்படி விசயராகவேலுநாயக்கர் காவேரிநதிச்சங்கமத்திற் சமுத்திரத்தீர்த்தமாடப்போனபோது, வடுகவரசர்களுக்குக் குருக்களாகிய சமஸ்கிருதப்பார்ப்பார் ஒருபுறமாகவும், மேற்படி வீரசைவக்குருக்கள் மற்றொருபுறமாகவுந் திரண்டு, இரண்டுகூட்டமாகச் சமஸ்கிருத வேதசுலோகங்கள் ஓதிக்கொண்டு, மேற்படி விசயராகவேலுநாயக்கரைக் காணும்படி எதிர்கொண்டுபோனார்கள். அப்போது மேற்படி விசயராகவேலு நாயக்கர் முந்திச் சமஸ்கிருதப்பார்ப்பாருக்கு எதிர்கொண்டுபோய் அவர்களுக்கு நமஸ்காரஞ்செய்து அவர்களுடைய ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டார். பின்பு தமிழரசர் காலத்துக் குருக்களாகிய வீரசைவக்குருக்களுக்கு எதிர்கொண்டுபோய், முன் பார்ப்பாருக்குச்செய்தபிரகாரம் அவர்களுக்கும் நமஸ்காரஞ்செய்து, அவர்களுடைய ஆசீர்வாதத்தையும் பெற்றுக்கொண்டார். அவர் சமுத்திரஸ்நானஞ்செய்து, திரும்பிவந்தபின், மேற்படி சமஸ்கிருதப்பார்ப்பாரும், மேற்படி அரசனுடைய மந்திரிகள் பிரதானிகளும் அரசனிடத்தில் தனித்துப்போய் இந்த வீரசைவர்களாகிய தமிழ்நாட்டுக் குரு-

ங்களுக்கு இவ்வாறு நமஸ்காரஞ்செய்தது சரியல்லவெனச் சொல்லி, அவர்கள்மீது பகைமூட்டினார்கள். அப்போது விசய ராகவேலு நாயக்கர் அவர்கள் பேச்சுகளுக்கிசைந்து, மேற்படி வீரசைவகுருக்கண்மாருடைய பூணூலையும் அறுத்து தமது சமூகத்தைவிட்டகற்றிவிட்டார். வெகுகாலமாகப் பூணூல ற்றவர்களாயிருந்துவந்த அவர்கள் இப்போது பழயபடிக்குப் பூணூல் தரித்துக்கொண்டுவருகிறார்கள்.*

---

* பூர்வ தமிழரசர்களும், அவர்கள்குலத்தவர்களும், அவர் கள்குலப்புரோகிதர்களாகிய வீரசைவர்களும் பூர்வத்தில் பூணூல்தரித்திருந்தது பிரத்தியட்சருசுவாம். சானறோர்குல த்து முன்னவர்கள் பூணூல்தரித்திருந்ததற்கு நூல் ருசு மே லே காட்டியிருக்கிறோம். பிற்காலத்தில் மேற்படி குலத்தவர் கள் பூணூல் தரியாது அவ்வழக்கத்தைத் தள்ளிவிட்டதற்கு, அவர்கள் அரசுரிமையை யிழந்துவிட்டதும், எதிரிகளால் வெ குவெகு இமிசைகள் அடைந்துவந்ததுமே காரணமாம். இத ற்கு ஒரு மேற்கோள் இங்ஙனம் பேர்த்தெழுதிக்காட்டுவோம்.

T. H. Nelson's Madura District Manual, Part II, p. 86 :—

"It is customary with the Kavareis as with other Nayakans to wear the sacred thread : but I am informed that the descendants of the Nayakan kings who are now living at Vellei-Kuricchi do not conform to this usage on the ground that they are at present in a state of impurity and degradation, and consequently ought not to wear the sacred emblem."

மேற்படி மேற்கோளுக்குத் தாற்பரியவுரை.

"வடுகர்குலத்தவர்களுக்கொப்பந்தம் கவறைகளும் நாள தும் பூணூல்தரித்துவருகிறார்கள். இப்போது வெள்ளிக்குறிச் சியிற் குடியிருக்கிற வடுகர்குலத்தரசர்வமிசத்தவர்கள், தங் கள் அரசாட்சியை இழந்துவிட்டகாரணத்தால், இராசகுல மகிமையற்றோராய் ஈனப்பட்டுப்போனதினிமித்தம் இக்கா லத்தில் பூணூல்தரியாதிருந்துவருகிறார்கள் என்று அறிந்து கொள்ளலானேன்'என்று மேற்படி நூலாசிரியர் எழுதி வைத்திருக்கிறார். வடுகர்குலத்தைச்சேர்ந்த சமஸ்கிருதப் பார்ப்பார்களும் வடுகர்குலச்செட்டிகளும் பூணூல்தரித்து வருகையில், வடுக அரசர்குலத்தவர்களோ மானவீனநேரிட் டகாரணத்தால் பூணூல் தரியாதிருந்துவருகிறார்கள். இதைக் கூர்ந்து பார்ப்போருக்குச் சான்றோர்குலத்தவர்களும் அரசிழ ந்து உரிமைகுலைந்துபோய்விட்டதினாலேயே பூணூல்தரிக்கும் வழக்கத்தை நிறுத்துதல்செய்துவிட்டார்கள் என்று துலாம் பரமாக விளங்குகின்றதல்லவா? வடுகர்குலத்தரசர்கள் தமிழ ரசர் குருக்கண்மாருடைய பூணூல் அறுத்தவர்கள். அப்படி யாபட்டவர்கள் தமிழரசர்குலத்தவர்களை இதையிட்டு துன் பப்படுத்தாது சும்மாவிடுவார்களா? விடமாட்டார்களல்ல வா? அரசுரிமையிழந்த வடுகரும் பூணூல்தரியாதுபோயினர்.

மேலும், மைசூர்நாடாண்டுவந்த ஐதரலி காலத்தில், சோழ நாடு கொள்ளையாகிறபோது, அவனுடைய குதிரைப்படைகள் திருவெண்காட்டிற்குட்புகுந்து அதையுங் கொள்ளைசெய்தார்கள். அதின் குடிகள் நாலாதிசைக்குஞ் சிதறி ஓடிவிட்டார்கள். அந்தமுன்னுக்கு இந்த வீரசைவக்குருக்கண்மாரும் ஓடிவிட்டார்கள். அவ்வாறு அவர்கள் ஓடிப்போகிறபோது, மேற்படி தாமிரசாதனப்பட்டயம் வைத்திருந்த குருக்கள் அந்தப்பட்டயம் ஓடிப்போகுமிடங்களிற் சோர்ந்துபோகுமென அச்சங்கொண்டவராய்த் தம்முடைய வீட்டுச்சுவரைக் கில்லி இடமுண்டுபண்ணி, அதற்குள் மேற்படி தாமிரசாதனப்பட்டயத்தைவைத்துச் சுவரோடேசுவராய் மண்பூசி அடக்கிவைத்துவிட்டு ஓடிப்போய்விட்டார். அவ்வாறு அடக்கிவைத்துவிட்டு ஓடிப்போய்விட்ட குருக்கள், போனவிடத்தில் இறந்துபோய்விட்டார். மற்றவர்கள் ஊருக்குத் திரும்பிவந்த பின்பு, அந்தப்பட்டயமிருந்த விடந்தெரியாமையினாலே, அது கைசோர்ந்துபோய்விட்டதென்பதாக எண்ணிக்கொண்டிருந்துவிட்டார்கள். உத்தேசம் ஐம்பதுவருடத்திற்குப்பிறகு, அந்தத் தாமிரசாதனம் அடக்கிவைக்கப்பட்டிருந்தவீடு சீரணமாய்ப்போய்விட்டதினாலே, அந்த வீட்டுக்குடையவன், அதைப் புதுப்பித்துக்கட்டுதற்கு வீட்டுச்சுவரை மண்வெட்டிகொண்டு வெட்டித் தகர்த்துக்கொண்டுவருகிறபோது, அந்தத் தாமிரசாசனம் வைக்கப்பட்டிருந்தவிடத்திலுந் தற்செயலாய் ஓங்கியொருவெட்டுப்போட்டான். வெட்டிய வெட்டானது அந்தத் தாமிரசாதனப்பட்டயத்துக் கடைகோடியிற்பட்டு அதை வடுப்படுத்திற்று. வடுபட்டு விழுந்த அந்தப்பட்டயத்தை எடுத்து வைத்து நாளதுவரையினும் மிகு பத்திரத்துடன் பாதுகாத்து வந்திருக்கிறார்கள். அந்தத் தாமிரசாதனத்து விளிம்பிற்பட்டிருக்கின்ற வடுவை நாளதும் பார்க்கலாம். இந்தப்பட்டயம் எக்குலத்தவர்களுக்குரியதோ அக்குலத்தவர்களுக்கு நாங்கள் தீட்சைகள்கொடுத்துவந்த பூர்வகுருக்கள் என்பதாக அவர்கள் சொல்லிவருகிறார்கள்.

அன்றியும், 'நவசோழசரித்திரம்' என்றொரு நூலிருக்கின்

றது. அது ஒன்பது சோழர்களுடைய சரித்திரத்தைச் சொல்லுகிறது.* அந்த ஒன்பதுசோழர்களுக்கும்,

1. கரிகாலசோழன், அல்லது கரிக்காலசோழன்.
2. விக்கிரமசோழன்.
3. உதங்கசோழன்.
4. அதிவாரசோழன்.
5. வரதருமசோழன்.
6. சத்தியேந்திரசோழன்.
7. மனுசேந்திரசோழன்.
8. வீரசோழன்.
9. உத்தமசோழன் என்றுபேராம்.

மேற்படி கரிகாலசோழன்நாளையில் வீரசைவர்களாகிய சங்கமக்குருக்கள்மார் தமிழரசர்களுக்குப் புரோகிதர்களாயிருந்துவந்ததும், சமஸ்கிருதப்பார்ப்பாருக்கு முந்தி அந்த வீரசைவக்குருக்கள்மார் திருவெண்காட்டில் வாசஞ்செய்துவந்ததும், அங்குள்ள சிவாலயத்தில் சிவபூசைகள்செய்துகொண்டு வந்ததும், சோழராசாக்களுக்குக் குருக்களாயிருந்தவர்களே சான்றோர்குலத்தவர்களுக்குங் குருக்களாயிருந்துவந்ததும் இதனால் தீர்க்கமுறத்தெரியவருகின்றது.†

மேற்படி திருவெண்காட்டுத் தாமிரசாசனப்பட்டயச் சரித்திரக்குறிப்புகளைக் காண்பித்தானபடியால், இனி மேற்படி சாசனத்தின் படப்பட்டயத்தை இருபிரிவாக்கி இங்ஙனம் விபரங்கூறுவோம் :

I. திருவெண்காட்டுத் தாமிரசாதனப்படப்பட்டயத்துப் படங்களுக்கு விபரம்.

II. அந்தப்படங்களுக்குப் பொருளுரை.

அவற்றுள்,

---

* W. Taylor's Oriental Manuscripts, Vol. ii., Appendix, p. 37, No. 8.—Nava-Chola Charitra.

"An account of nine distinguished Chola princes, who patronised the Vira-Saiva, or Jangama. These nine kings are named—

1. Kerikala.
2. Vikrama.
3. Uttunga.
4. Athivaram.
5. Varadherma,
6. Satyendra.
7. Manujendra.
8. Vira.
9. Uttama.

† பூர்வம் ராசவமிசத்தவரே புரோகிதவேலையையும் பார்த்துவந்தனர். Vide. சான்றோர்மரபு, p. 3.

## I. திருவெண்காட்டுத் தாமிரசாதனப்படப்பட்டயத்துப் படங்களுக்கு விபரம் வருமாறு :

திருவெண்காட்டுத் தாமிரசாதனப் பட்டயத்து நீளம் 14 அங்குலம், அகலம் 10 அங்குலம். திடத்தகனங்கொண்டது, இந்தத் தாமிரசாதனத்துப் படப்பட்டயத்திற்கு ஐந்து பத்திகளுண்டு.

முதற்பத்தியிற் படங்கள் ஐந்து.*

1. விநாயகர்படம்.
2. அகோரமூர்த்திபடம். [மருத்துவாசுரனைமிதித்து நசுக்குகிறபாவனை.]
3. சபாநாயகராகிய சிவன்படம். [முயலகனாகிய பிணியைமிதித்து நசுக்குகிறபாவனை.]
4. சிவகாமியம்மனாகிய பார்வதியம்மைபடம்.
5. விஷ்ணுபடம்.

இரண்டாவது பத்தியிற் படங்கள் எட்டு.

1. காந்தமாரிஷிபடம். [சந்தனவிருக்ஷத்தின்கீழ்த்தபஞ்செய்கிறபாவனை.]
2. காளியம்மைபடம்.
3. ஏனாதிநாயனார்படம்.
4. யாககுண்டப்படம்.
5. (a.) பசுபதி புனுகு சட்டநாதகுருக்கள்படம்.
   (b.) பூசை மணிப்படம்.
6. கனகரேதனிபடம்.
7. கனகரேதபுரிபடம்.
8. கமலலோசனிபடம்.

மூன்றாவது பத்தியிற் படங்கள் பத்து.

1. மதனசவுந்தரிபடம்.
2. நாரிகிருபாகரிபடம்.
3. நாரிகுஞ்சரிபடம்.

---

* படங்கள் இடப்பக்கமுதல் எண்ணப்பட்டிருக்கின்றன.

4. ஏனுதிநாயகிபடம்.
5. காந்தன்படம்.
6. சுந்தரன்படம்.
7. கந்தன்படம். [தலைவெட்டுண்டபாவனை.]
8. கௌசலன்படம். [தலையிடறுண்டபாவனை.]
9. சாந்தன்படம்.
10. விக்கிரீமன்படம்.

நாலாவதுபத்தியிற் படங்கள் ஏழு

1. தமிழ்ப்புண்டரீகன்படம்.
2. (a) சிங்கமுகத்தண்டிகைப்படம்.
   (b) பஞ்சவர்ணப்பாவாடைப்படம்.
3. (a) இரட்டைவெள்ளையானைப்படம்.
   (b) ஆராய்ச்சிமணிப்படம்.
4. மூக்குளத்திலொருகுளத்துப்படம்.
5. இரட்டைச்சங்குப்படம்.
6. இரட்டைவெண்குடைப்படம்.
7. இரட்டைச்சுருட்டிப்படம்.

ஐந்தாவதுபத்தியிற் படங்கள் பதினறு.

1. (a) இரட்டை வெண்சாமரப்படம்.
   (b) மூக்குளத்தில் மற்றொருகுளத்துப்படம்.
2. (a) இரட்டைப் பனைவிருக்ஷப்படம்.
   (b) நூலேணிப்படம்.
   (c) மூக்குளத்தில் மூன்றாவதுகுளத்துப்படம்.
5. சிவலிங்கப்படம். [வட ஆலமரத்தின்கீழிருக்கிறபாவனை.]
6. இரட்டைவாழைமரப்படம்.
7. இரட்டை ஈச்சமரப்படம்.
8. அமுதவுற்பத்திக்குவேண்டிய ஆயுதப்பெட்டிப்படம்
9. சந்திராயுதப்படம்.
10. இடுக்கிப்படம்.

11. (a) வண்டுகுத்திப்படம்.
 (b) பாளைத்தடிப்படம்.
12. தீட்டாம்பலகைப்படம்.
13. இரட்டைச்சிலம்புப்படம்.
14. நீற்றுப்பட்டைப்படம்.
15. அமிர்தக்கமண்டலப்படம்.
16. சான்றோர்காசுப்படம்.

இந்தப்பிரகாரம், மேற்படி தாமிரசாசனத்துப் படப்பட்டயத்தில் 46 படங்களிருக்கின்றன.

II. திருவெண்காட்டுத் தாமிரசாதனத்துப்படப்பட்டயத்திலடங்கிய 46 படங்களையும் வகுத்துப் பொருளுரை கூறுவோம்.

மேற்கூறிய நாற்பத்தாறு (46) படங்களும் பொருளுக்கேற்க ஐந்துபாகமாகும்.

1. சான்றோர்குல தெய்வங்களின்படங்கள் ஏழு.
2. சிவதொண்டர்கள், ரிஷிகள், முக்குளங்களின் படங்கள் ஐந்து.
3. (a) சத்தகன்னிகள் படங்கள் ஏழு.
 (b) சினம்பலபாண்டியன் புதல்வர்கள் படங்கள் ஏழு.
4. சான்றோர்குல விருதுகளின்படங்கள், சான்றோர் காசுப்படம், ஆகப்படங்கள் எட்டு.
5. கற்பகவிருக்ஷப்படங்கள், அமுதவுற்பத்தியாயுதப்படங்கள் பன்னிரண்டு.

ஆகப்படங்கள் நாற்பத்தாறு. இப்படங்களுள்,

1. சான்றோர்குல தெய்வங்களின் படங்கள் ஏழுக்கும் பொருள் விபரம்வருமாறு :

(i) விநாயகர்படம். ‘விநாயகர்’ எனப் பெயர்பெற்ற பிள்ளையார் பரமசிவனுக்கு இமயமலையரசன் புத்திரி பார்வதியம்மையிடத்திற் பிறந்த தலைச்சன்புத்திரன். சிவபிரானுக்கு

இரண்டுதாரம். முதற்றாரமான தக்கன்மகள் உமையம்மைக்குக் குழந்தைகளில்லை. தன் பிதாவாகிய தக்கன் தன் பிராணநாயகனாகிய சிவனை யழிப்பதற்குப் புரிந்த யாககாரணத்தையிட்டு ஆறாத மனத்துயரத்துள் அழுந்தி யாககுண்டத்திற்பாய்ந்து, இறந்துபோய்விடவே சிவபிரான் இமயமலையரசன் புத்திரி பார்வதியம்மையை மணம்புரிந்தார். பார்வதியிடத்திற்பிறந்த முதற்புத்திரனுக்கு விநாயகர் என்றும் இரண்டாவது புத்திரனுக்குச் சுப்பிரமணியர் என்றும் பேர். பருவதராசன்புத்திரியானதையிட்டு 'பார்ப்பதி, பார்வதி' என்று சொல்லப்படுவதுண்டு. உமையம்மை இமயமலையரசனுக்குப் புத்திரியாகப்போய்ப் பிறந்ததாகக்கூறுவது புராணசித்தாந்தம்.

விநாயகர் இந்துக்களுக்குச் சுபசோபன கலியாணங்களுக்குங் கல்விக்கும் முதற்கும்பிடுபொருளாம். சான்றோர்குலத்தவர்களுஞ் சுபசோபன கலியாணகாரியங்களுக்குங் கல்விக்கும் முதல்வைத்துக் கும்பிட்டுவருகிறதெய்வம் விநாயகராம். விநாயகருக்குக் கணபதி என்றும் ஒருபேருண்டு. சான்றோர் குலத்து ஆடவருக்கு விநாயகருக்குரிய 'கணபதி, பிள்ளையார்' என்னும்பேர்கள் சாதாரணமாக இடப்பட்டுவருகின்றன. விநாயகர் தலையிழந்து மடிந்துபோனபின் மீண்டும் உயிர்கொடுத்தபோது, யானைத்தலை கிடைத்ததென்பது புராணசித்தாந்தம்.

(*ii*) அகோரமூர்த்திபடம். ஒருகாலத்தில் 'சலந்தரன்' எனப் பெயர்கொண்ட அசுரனொருவன் தபோபலத்தால் பற்பலவரங்கள்பெற்று சுரர்நாட்டைக் கட்டிக்கொண்டு, அந்நாட்டிற்கு அரசனாகிய தேவேந்திரனையும் அவனுடைய குடிகளாகிய சுரர்குலத்தவர்களையும் மிகவும் உபத்திரவப்படுத்திவந்தான். பிரமா, விஷ்ணு, இந்திரன் முதலானவர்கள் விண்ணப்பஞ் செய்துகொண்டதின்பேரில், சபாநாயகராகிய பரமசிவன் சலந்தரன்முன்தோன்றி, ஒருசக்கரத்தால் அவனை மாய்த்துப்போட்டார். இது புராணசித்தாந்தம். இதைச்சுட்டி, திருவெண்காட்டுப்புராணம், மருத்துவச்சருக்கம், 8-வது கவி கூறுவது :

"கானுனிவிரலாலீசன் கணத்திலேசமைத்தவாழி
யானதையெடுத்தான்வெற்பையரக்கனன்றெடுத்தாற்போலப்
பூநிறைகளத்தின்மீதே யணைந்திடும்பொழுதிற்றீயோ
னூனுறவறுத்துத்தள்ளி யிரவிபோலுதித்ததாழி."

இந்தப்பிரகாரம், சலந்தராசுரனனவன் மேற்படி ஆழியா கிய சக்கரத்தாலறுபட்டு மடிந்துபோனன். அவனுடைய ராக்ஷதப்படைகளும் அழிந்துபோயின. இவ்வாறு அசுரர்கள் சங்காரமானதை, அசுரகுலகுருவாகிய சுக்கிராசாரி கண்டு, ஆருத்துயருற்றவனுய், மடிந்துபோன அசுரர்களை மீண்டும் எழுப்புதற்கு ஒரு உபாயம்நினைத்து, மடிந்துபோன சலந்தரனுடைய எலும்புகளை ஏகமாகத்திரட்டி, அவைகளை ஒருசூத்திரத்திலிட்டுக் கடையும்படிசெய்தான். அந்த எலும்புகளைக் கடையவே, அதினின்று மருத்துவன் என்றொரு அசுரனும், ராக்ஷதர்களுந் தோன்றினர்கள். இதைச்சுட்டிய மேற்படி புராணம், மருத்துவச்சருக்கம், 17-வது கவி வருமாறு :

" கறங்கெனச்சுற்றிய களேபரத்திலே
மறங்கெழுமருத்துவன் வந்துதோன்றின
னிறந்திடுமவுணரு மெண்மடங்கதாய்ப்
பிறந்தனரமரரைப் பிடித்தபாவமே."

இந்தப்படி சலந்தரனுடைய களேபரமாகிய எலும்புகளினின்றுதித்த மருத்துவாசுரனும், அசுரப்படைகளும் எழும்பி, சுரர்நாட்டைச் செயித்து, இந்திரனையும் அவனுடைய குடிகளாகிய சுரர்குலத்தவர்களையுங் கொடியதுன்பத்திற்குள்ளாக்கி வருகையில், சிவபிரான் சுரர்களை இரட்சிக்கநாடி, மேற்படி மருத்துவாசுரனுக்குமுன்பு 'அகோரமூர்த்தி' வடிவாய்த் தோன்றி, அந்த மருத்துவனையும், அவனுடைய அசுரப்படைகளையும் மாய்த்துவிட்டனர். இதைச்சுட்டி, மேற்படி புராணம், மருத்துவச்சருக்கம், 96-வது, 97-வது, 98-வது கவிகளிற் கூறியிருப்பது :

96-வது கவி :

" கோலவெரிகுஞ்சியொட கோரவடிவாகிப்
பாலவிழிசெங்கனல் பரப்பமழைமேகம்
போலவொளிகாலநிறை பூணுடனுலண்டா
மாலையுடைசூழவனை வாளெயிறிலங்க."

இரண்டுதாரம். முதற்றாரமான தக்கன்மகள் உமையம்மை க்குக் குழந்தைகளில்லை. தன் பிதாவாகிய தக்கன் தன் பிராணநாயகனாகிய சிவனை யழிப்பதற்குப் புரிந்த யாககார ணத்தையிட்டு ஆறாத மனத்துயரத்துள் அழுந்தி யாககுண்டத் திற்பாய்ந்து, இறந்துபோய்விடவே சிவபிரான் இமயமலையர சன் புத்திரி பார்வதியம்மையை மணம்புரிந்தார். பார்வதியிட த்திற்பிறந்த முதற்புத்திரனுக்கு விநாயகர் என்றும் இரண்டா வது புத்திரனுக்குச் சுப்பிரமணியர் என்றும் பேர். பருவத ராசன்புத்திரியானதையிட்டு 'பார்ப்பதி, பார்வதி' என்று சொ ல்லப்படுவதுண்டு. உமையம்மை இமயமலையரசனுக்குப் புத் திரியாகப்போய்ப் பிறந்ததாகக்கூறுவது புராணசித்தாந்தம்.

விநாயகர் இந்துக்களுக்குச் சுபசோபன கலியாணங்களுக் கும் கல்விக்கும் முதற்கும்பிடுபொருளாம். சான்றோர்குலத் தவர்களுஞ் சுபசோபன கலியாணகாரியங்களுக்கும் கல்விக் கும் முதல்வைத்துக் கும்பிட்டுவருகிறதெய்வம் விநாயகராம். விநாயகருக்குக் கணபதி என்றும் ஒருபேருண்டு. சான்றோர் குலத்து ஆடவருக்கு விநாயகருக்குரிய 'கணபதி, பிள்ளையார்' என்னும்பேர்கள் சாதாரணமாக இடப்பட்டுவருகின்றன. வி நாயகர் தலையிழந்து மடிந்துபோனபின் மீண்டும் உயிர்கொ டுத்தபோது, யானைத்தலை கிடைத்ததென்பது புராணசித்தா ந்தம்.

(*ii*) அகோர்மூர்த்திபடம். ஒருகாலத்தில் 'சலந்தரன்' எனப் பெயர்கொண்ட அசுரனொருவன் தபோபலத்தால் பற் பலவரங்கள்பெற்று சுரர்நாட்டைக் கட்டிக்கொண்டு, அந்நாட் டிற்கு அரசனாகிய தேவேந்திரனையும் அவனுடைய குடிகளா கிய சுரர்குலத்தவர்களையும் மிகவும் உபத்திரவப்படுத்திவந் தான். பிரமா, விஷ்ணு, இந்திரன் முதலானவர்கள் விண் ணப்பஞ் செய்துகொண்டதின்பேரில், சபாநாயகராகிய பரம சிவன் சலந்தரன்முன்தோன்றி, ஒருசக்கரத்தால் அவனை மா ய்த்துப்போட்டார். இது புராணசித்தாந்தம். இதைச்சுட்டி, திருவெண்காட்டுப்புராணம், மருத்துவச்சருக்கம், 8-வது கவி கூறுவது :

"கானுனிவிரலாலீசன் கணத்திலேசமைத்தவாழி
யானதையெடுத்தான்வெற்பையரக்கனன்றெடுத்தாற்போலப்
பூநிறைகளத்தின்மீதே யணைந்திடும்பொழுதிற்றீயோ
னூனுறவறுத்துத்தள்ளி யிரவிபோலுதித்ததாழி."

இந்தப்பிரகாரம், சலந்தராசுரனனவன் மேற்படி ஆழியாகிய சக்கரத்தாலறுபட்டு மடிந்துபோனன். அவனுடைய ராக்ஷதப்படைகளும் அழிந்துபோயின. இவ்வாறு அசுரர்கள் சங்காரமானதை, அசுரகுலகுருவாகிய சுக்கிராசாரி கண்டு, ஆருத்துயருற்றவனாய், மடிந்துபோன அசுரர்களை மீண்டும் எழுப்புதற்கு ஒரு உபாயம்நினைத்து, மடிந்துபோன சலந்தரனுடைய எலும்புகளை ஏகமாகத்திரட்டி, அவைகளை ஒருசூத்திரத்திவிட்டுக் கடையும்படிசெய்தான். அந்த எலும்புகளைக் கடையவே, அதினின்று மருத்துவன் என்றொரு அசுரனும், ராக்ஷதர்களுந் தோன்றினர்கள். இதைச்சுட்டிய மேற்படி புராணம், மருத்துவச்சருக்கம், 17-வது கவி வருமாறு :

" கறங்கெனச்சுற்றிய களேபரத்திலே
மறங்கெழுமருத்துவன் வந்துதோன்றின
னிறந்திடுமவுணரு மெண்மடங்கதாய்ப்
பிறந்தனரமரரைப் பிடித்தபாவமே."

இந்தப்படி சலந்தரனுடைய களேபரமாகிய எலும்புகளினின்றுதித்த மருத்துவாசுரனும், அசுரப்படைகளும் எழும்பி, சுரர்நாட்டைச் செயித்து, இந்திரனையும் அவனுடைய குடிகளாகிய சுரர்குலத்தவர்களையுங் கொடியதுன்பத்திற்குள்ளாக்கி வருகையில், சிவபிரான் சுரர்களை இரட்சிக்கநாடி, மேற்படி மருத்துவாசுரனுக்குமுன்பு 'அகோரமூர்த்தி'வடிவாய்த் தோன்றி, அந்த மருத்துவனையும், அவனுடைய அசுரப்படைகளையும் மாய்த்துவிட்டனர். இதைச்சுட்டி, மேற்படி புராணம், மருத்துவச்சருக்கம்,96-வது, 97-வது,98-வது கவிகளிற் கூறியிருப்பது :

96-வது கவி :

" கோலவெரிகுஞ்சியொட கோரவடிவாகிப்
பாலவிழிசெங்கனல் பரப்பமழைமேகம்
போலவொளிகாலநிறை பூணுடனுலண்டா
மாலையுடைசூழவளை வாளெயிறிலங்க."

மசிவனுனவர் அகோரவடிவெடுத்ததாகக் கூறியி
'அகோரவடிவானுர்' என்பதற்கு 'மகா உக்கிர
ரபியானுர்' என்பது பொருளாம். இவ்வாறு சிவ
ந்தவடிவுக்கு 'அகோரமூர்த்தி' என்று பெயராத
பருமானே அகோரமூர்த்தியாம்.

97-வது கவி :

ரிபலகைவாள் சூலம் வெண்டலை
நான்கெனுங் கரத்திற்பற்றியே
கடப்பதிப் படியென்பாரென
னநடந்த சீராகத்தோன்றவே."

அவ்வாறு அகோரமூர்த்திவடிவெடுத்த பரமசிவ
ுததாரியாகத் தோன்றினுர் எனச் சொல்லியிருக்

98-வது கவி :

ரருமூர்த்தியா யவனைக்கிட்டிறு
பயம்பிடித் தவுணன் மாண்டுபோ
புருவாயவ ருருவிலொன்றினுன்,
ந்தானையுங் கூடமாய்ந்தவே."

வாறு அகோரமூர்த்தியென ஆயுததாரியாகத்தோ
சிவனுனவர் மருத்துவாசுரனையும், அவனுடைய
டைகளேயும் அழித்துப்போட்டாரெனவருகின்றது.
மேற்படி அகோரமூர்த்திப்படத்தில், இவ்வாறு
ர மருத்துவாசுரன் அகோரமூர்த்தியின் இருபாதங்
க்குண்டு மடிந்துபோனகுறிப்புக் காட்டப்பட்டிருக்

சபாநாயகராகிய சிவபிரான் படம்.

ஒருகாலத்தில் மத்தியந்தணனெனப் பெயர்கொ
முனிவரிருந்தார். அவருக்குப் புலிக்கால்களேயு
புத்திரனுண்டு. அந்தப் புத்திரனுக்குப் 'புலிக
ரவும், 'வியாக்கிரபாதன்' எனவும் பெயர்களுண்
வியாக்கிரம்' என்பதற்குப் புலி என்றருத்தமான

மையால், 'புலிக்காலன், வியாக்கிரபாதன்' என்னும் பெயர்கள் ஒரு பொருட்பதங்களாம். இந்த வியாக்கிரபாதமுனிவர் கல்விசாஸ்திரங்களில் மகா விற்பனராகி, நன்னெறியில் ஒழுகிவருகையில், அவரை 'முயலகன்' எனப்பட்ட ஒரு மகா கொடியபிணி பிடித்து அந்தநோயில் மிகவும் அழுந்திஞர். தந்தையானவர் கொடாதமருந்தெல்லாங் கொடுத்துப்பார்த்தும், பிணி தீராததால் அவர் வியாக்கிரபாதரைப்பார்த்து, "நீ திருவெண்காட்டிற்குப்போய்ச் சிவனைநோக்கித் தபஞ்செய்தால், இந்த முயலகபிணி தீரும்" என்ருர். இதைச்சுட்டிய மேற்படிபுராணம், வியாக்கிரபாதச்சருக்கம், 4-வது கவி வருமாறு :

"எந்தநல்வினைபுரியவுந் தீர்கிலாதிருக்க
மைந்தனெந்துளம் வருந்திஞன் வருந்தியமகனைத்
தந்தைகூறுவான் வருந்தலை வருந்தலைதனயா
சிந்தையான்மகிழ்ந் திறைவன்வெண்காட்டினிற் செல்வாய்.'

தந்தைசொல்லியபிரகாரம், வியாக்கிரபாதரானவர் திருவெண்காட்டிற்குப்போய்ச் சபாநாயகரைநோக்கித் தபத்திலிருந்தார்; அவ்வாறு தபத்திலிருந்த வியாக்கிரபாதருக்கு முன்பாகச் சிவன் ரிஷபாரூடராய்க் காட்சியாகி, மேற்படி முயலகப்பிணியைத் தம்முடைய பாதங்களால் மிதித்து நசுக்கிப்போட்டார். இதைச்சுட்டி மேற்படிபுராணம், தாண்டவச்சருக்கம், 6-வது கவியிற் கூறியிருப்பது :

"என்றிவைபுகலுவா னெதிரிற்றேற்றமாய்
நின்றவன்முயலகப் பிணியைநீக்கியே
வென்றிகொள்பதத்திஞன் மிதித்தகோரனுர்
பொன்றருங்கரத்தினிற் கொடுத்துப்போயிஞர்."

ஆனதால், மேற்படி சபாநாயகர்படத்தில் மேற்படி முயலகப்பிணியானது தாண்டவமூர்த்தியாகிய பரமசிவனுடைய பாதங்களால் மிதியுண்டழிந்துபோன குறிப்புக் காட்டப்பட்டிருக்கின்றது.

சான்ஞேர்குலத்தவர்களுக்கு ஆதிகாலத்தில் 'சிவபிரானே' இன்றியமையாத குலதெய்வமாதலால், சான்ஞேர்குலத்தவர்

கள் பூர்வமுதல் இடையருது சிவபக்தர்களாக இருந்துவந்திரு க்கிறார்கள். சான்றோர்குலத்து ஆடவருக்குச் சிவனுக்குரிய பற்பலபேர்கள் நெடுகிலுஞ் சாதாரணமாக இடப்பட்டுவருவது வழக்கம்.

(*iv*) சிவகாமியம்மன் எனப் பெயர்பெற்ற உமையம் மை படம்.

சிவகாமியம்மனுக்கு 'உமையம்மை, பார்வதியம்மை, காளியம்மை, பகவதியம்மை' எனவும் பெயர்கள் வரும். "அம்மன், அம்மை" என்னும் பதங்கள் ஒரு பொருட்பதங்களாய், 'தாய்' எனப் பொருள்கொண்டு நிற்கின்றன. ஆனதால்,

சிவகாமியம்மைக்கு, சிவகாமியம்மன் எனவும்,
உமையம்மைக்கு, உமையம்மன் எனவும்,
காளியம்மைக்கு, காளியம்மன் எனவும்,
பகவதியம்மைக்கு, பகவதியம்மன் எனவும்

பெயர்கள் வந்து வழங்குகின்றன.

சான்றோர்குலப்பெண்களுக்கு உமையம்மைக்குரிய பற்பல பெயர்கள் தொன்றுதொட்டு இடப்பட்டுவந்திருக்கின்றன. பூர்வ தமிழரசர்களும், அவர்கள்குலத்திலுதித்த சான்றோர்குலத்தவர்களும் மேற்படி சிவகாமியம்மையாகிய காளியம்மையைத் 'தாய்' எனமதித்து அம்மனுக்கு முன்பூசை செய்துவந்திருக்கிறார்கள். 'திருவாலங்காடு' எனப் பெயர்கொண்ட திருவெண்காட்டில் சிவன் காளியம்மையோடு 'சண்ட.தாண்டவம்' எனப் பெயர்கொண்ட ஊர்த்ததாண்டவமாடி முடித்தபோது, சிவன் காளியம்மனைப்பார்த்து, "நாமல்லாமல் இந்த நடனத்தொழிலில் உனக்குச் சமதையானவர்கள் ஒருவருமில்லையானதால், நமது இடதுபாகத்தில் உனக்கு ஆலயமும், பூசனையுந் தந்தருளினோம். இந்த ஆலவனத்திற்றனே எப்போதும் வசிக்கக்கடவாய். இங்குவருகின்ற அடியவர் யாவரும் உனக்கு முன்பூசைசெய்து, நமக்குப் பின்பூசைசெய்தால் பயன்பெறுவார்கள், இல்லாவிடிற் பயன்பெறார்கள்"* என்றார்.

---

* திருவாலங்காட்டுப் புராணசரித்திரம், 17-வது, 18-வது, பக்கங்கள் காண்க.

"காளிக்கு முன்பூசை, சிவனுக்குப்பின்பூசை" எனவும்,
"அம்மனுக்கு முன்கும்பிடு, சுவாமிக்குப் பின்கும்பிடு"
எனவும்,

சிவபக்தர்கள் எண்ணிப் பூசித்துவருகிறார்கள். இதுபோல வே, சிவபக்தர்களாகிய சான்றோர்குலத்தவர்களுங் காளியம் மையைத் தங்கள் குலமாதாவாகப் பாவித்து, அந்த அம்மை க்கு முதற்பூசை செய்துவருகிறார்கள். இப்போதும் சான்றோர் குலத்தவர்கள் வசிக்கின்ற நாடுநகாங்கள், ஊர்கள், கிராமங்க ளெங்கும் காளியம்மனுக்கு ஏராளமாகக் கோவில்கள் கட்டிப் பூசைகள் செய்துவருவதைக்காணலாம். சிறப்புவகையால், 'காளியம்மன்' கோவில்களெல்லாம் 'அம்மன்கோவில்கள்' எனப் பெயர்பெற்றிருக்கின்றன. 'அம்மன்கோவில்' என்பதற் குத் 'தாய்கோவில்' என்று அருத்தமாம். சான்றோர்குலத்த வர்கள் தாய்மாரை 'அம்மை' என்றே பூர்வமுதல் நாளதுவ ரையும் சொல்லிக் கூப்பிட்டுவருகிறார்கள்.

பூர்வதமிழரசர்கள் தங்கள் நகரங்களுக்குள்ளே கட்டிய சிவாலயங்களுடன் காளியம்மையாகிய உமையவளுக்கு ஆல யங்கள்கட்டிப் பூசைசெய்து வந்ததுமல்லாமல், நகரத்து வட க்குவாசல்களில் காளியம்மைக்குப் பிரத்தியேகமாகக் கோ வில்கள்கட்டி, அம்மனை முக்கியப்படுத்தி, உற்சவங்கள் கொ ண்டாடி அம்மனுக்குப் பூசைசெய்து வந்திருக்கிறார்கள். மதுக் கரைமுதலான விடங்களில் தமிழ்நாட்டரசர்கள் மூவரும் பூர்வத்தில் ஒன்றுகூடி காளியம்மைக்கு ஆலயங்கள்கட்டி, வரு ஷந்தோறுங் கொடைகொடுத்து வெகுமுழக்கத்துடன் உற்ச வங்கள் கொண்டாடிவந்தனர். இவ்வகைப்பட்ட காளியம்மன் கோவில்கள் தமிழ்வேந்தர் மூவர்க்கும் பொதுக்கோவில்க ளாக எண்ணப்பட்டு வந்தன.

(ஏ) விஷ்ணுபடம்.

சிவன், பிரமா, விஷ்ணு, இந்திரன் முதலான சுரர்குலத் தவர்கள் ஏககுலத்தினராய் பூர்வ தமிழ்ச்சத்திரியகுலத்தவர் களுக்குக் குலதெய்வங்களாயிருந்து வந்திருக்கிறார்கள். பூர்வ

தமிழ்ச்சத்திரியர் இவர்களில், மூத்தவரான சிவபிரான் ஒருவரையே ஆதிகாலத்திற் குலதெய்வமாகவைத்துப் பூசை செய்து வணங்கிவந்தனர். பிரமா, விஷ்ணுவும், இந்திரன் முதலான அட்டதிக்குப்பாலகர்களுஞ் சிவனுக்குப் பூசைகள் செய்து' அவரை வணங்கிவந்திருக்கிறார்கள். ஆதிபூர்வத்தில் தமிழ் நாடுகளிற் சிவாலயங்களேயல்லாது விஷ்ணுவாலயங்களிருக்கவில்லை. சிவசாபத்தால் பிரமாவுக்கு ஆலயங்களில்லாமற்போயின. விஷ்ணு சிவன்மனதுக்கு இணங்கநடந்துகொண்டுவந்ததால், சிவபக்தர்கள் விஷ்ணுவுக்கும் பூசைசெய்துவர இடம்பெற்றனர். ஆதிபூர்வசிவாலயங்கடோறும் அந்தச்சிவாலயங்களுக்குள்ளே விஷ்ணுவுக்கும் ஒரு சிறுகோவில்கட்டி அதில் விஷ்ணுவுக்கும் பூசைசெய்து வந்தார்கள். சிதம்பரத்துச் சிவன் கோவிலுக்குள்ளே ஒரு சிறு விஷ்ணு கோவிலுமிருக்கின்றது. இவ்வாறு செய்துவந்தும் அந்த ஆதிகாலத்திலே 'சிவபக்தர்கள்' எனும் பெயரேயல்லாது 'விஷ்ணுபக்தர்கள்' என்கிற பெயரில்லை.

சமஸ்கிருதவாரியப் பிராமணர்கள் படையெடுத்துத் தென்பரதகண்டமாகிய இந்த இந்துதேசத்திற்கு வந்தபிறகு, அவர்கள் இருகட்சியாகி ஒருகட்சிக்காரர் சிவபக்தரை விட்டுப் பிரிந்து, நூதனமாக விஷ்ணுவை மேலான தெய்வமெனக் கூறி, சிவனுக்குரிய மேன்மையெல்லாம் விஷ்ணுவுக்குமுண்டெனச்சொல்லி, தங்களுக்கு விஷ்ணுபக்தர் என நூதனப் பெயரிட்டுக்கொண்டு, சிவபக்தரை விஷ்ணுபக்தராக்குதற்கு மிகவும் பிரயாசப்பட்டு வந்தனர். ஆயினுஞ் சிவமதத்தை அழிக்க அவர்களாற் கூடாதுபோயிற்று. சிவபக்தருடைய தொகையே பெருத்திருந்தது. இவ்விருவகை மதஸ்தருங் கொடியதர்க்கவாதங்கள் செய்துகொண்டு எதிரித்தனம்பாராட்டி வருகையில், இருவகை மதங்களும் குன்றுதலடையத்தொடங்கின. அப்படியிருந்துவருகிறநாளையிலே, ஆதிச்சங்கராசாரியர் எழும்பி நூதனவகையாய் வேதவியாக்கியானஞ்செய்து, சிவபக்தருடைய உள்ளங்களில் சிவபக்தியை மூட்டி, விஷ்ணுபத்தியை யழித்துவந்தார். பிறகு விஷ்ணுசமயாசாரியரிலொருவராகிய இராமாநுசாசாரியார் எழும்பி விஷ்ணு

பக்தருக்குள் வைராக்கியத்தை மூட்டி உபதேசஞ்செய்து சிறுத்துப்போகிறதற் கேதுவாயிருந்த விஷ்ணுபக்தருடைய தொகை குறைவுபடாதிருப்பதற்கு மிகு முயற்சிசெய்துவந்தார். இக்காலத்தில் சிவபக்தர்கள் ஆதிச்சங்கராசாரியாரை சிவபக்திக்குத் தலைமைக்குருவாகவும், விஷ்ணுபக்தர்கள் இராமானுசாசாரியாரை விஷ்ணுபக்திக்குத் தலைமைக்குருவாகவும் எண்ணிவருகிறார்கள்.

தமிழ்நாடுகளில் நாளதும் சிவாலயங்கள் ஆயிரத்தெட்டு (1,008) என்றும், விஷ்ணுவாலயங்கள் நூற்றெட்டு (108) என்றுங் கணக்கிடப்பட்டிருக்கின்றன. இதனாலும் சிவபக்தர்களுடைய தொகை விஷ்ணுபக்தர்களுடைய தொகைக்கு உத்தேசம் பத்துமடங்கு அதிகமென்று தோன்றுகின்றது. ஆயினுந் தொகையிட்டுப்பார்த்தால், விஷ்ணுபக்தர்களுடைய தொகை அதிலும் அதிகக்குறைவாயிருக்கலாம்.

சான்றோர்குலத்தவர்கள் பூர்வமுதல் சிவபக்தர்களாகவே இருந்துவந்திருக்கிறார்கள். இக்காலத்தில் அவர்களுக்குள்ளே விஷ்ணுபக்தர்கள் தொகை மகா சொற்பத்தொகையாம். ஆனதால், சான்றோர்குலத்தவர்கள் நெடுகிலும் விஷ்ணுமதத்தை வெறுத்துவந்திருப்பது இதனால் தெரியவருகின்றது. அவர்கள் விஷ்ணுபத்தியை வெறுத்தபோதிலும், விஷ்ணுவை வெறுக்காமல், உமையம்மையோடுகூடப் பிறந்தவரானதினாலே, அவரையுங் கனம்பண்ணிவருகிறார்கள்.

பூர்வ தமிழ்நாட்டரசர்கள் சிவபக்தர்களாயிருந்துவருகையில், விஷ்ணுவைத் தங்கள் நகரங்களின் மேலைவாசலுக்குக் காவலாகவைத்து வணங்கிவந்திருக்கிறார்கள். ஆகவே, விஷ்ணுவினுடைய படம் சான்றோர்குலதெய்வங்களுடைய படங்களுடன் சேர்க்கப்பட்டிருக்கின்றது.

## (*vi*) காளியம்மன்படம்.

இந்தப்படந் தாண்டவமாடும் பாவனையாக இருக்கிறது. இந்தக்காளியம்மன்படத்தை உமையம்மன் படத்துடன் ஒப்பிட்டுப்பார்த்தால், இரண்டுபடமும் நிறத்திலும், வடிவத்திலும்

உடைபாவனையிலும் ஒன்றுபோலிருக்கின்றன. ஆயினும், காளியம்மன் படம் நிருத்தஞ்செய்யும் பாவனையாகவும், உமையம்மைபடம் நிற்கும்பாவனையாகவும் விளங்குகின்றன.

தாண்டவமாகிய நாட்டியவகைகளில் முக்கியநாட்டியம் இருவகையாம். அவைகளிலொன்றிற்கு 'ஆனந்தத்தாண்டவம்' எனவும், ஒன்றிற்குச் 'சண்டதாண்டவம், ஊர்த்ததாண்டவம்' எனவும்பேராம். இவற்றுள், ஆனந்தத்தாண்டவமானது கூடியசபையார்கள் மகிழ்ந்து ஆனந்தபரவசமாகும்படி ஆடுகின்ற நிருத்தமாம். சண்டதாண்டவம், அல்லது ஊர்த்த தாண்டவமென்பது முகம் அந்தரத்தை நோக்குற்றிருக்க, நிமிர்ந்துநின்று அதியுக்கிரவேகத்துடன் ஆடுகின்ற நிருத்தமாம். திருவாலங்காட்டில் சிவன் காளியுடன் முந்திச் சமநிலையாக ஆனந்தத்தாண்டவமாடினர். அதுகண்டு காளியம்மன் கருவங்கொள்ளவே, சிவபெருமான் அம்மனை ஆட்டத்தில் வெல்லநினைத்து ஒருபாதத்தைப் பூமியிலூன்றி, ஒருபாதத்தை ஆகாயத்தில்தூக்கி நின்றுகொண்டு மகா உக்கிரவேகத்துடன் ஊர்த்ததாண்டவம் பண்ணினர். காளியம்மன் அவ்வாறு நிருத்தஞ்செய்ய நாணிநின்றுவிடவே, சிவன் உபாயத்தாற் காளியை இந்த நிருத்தயுத்தத்தில் வென்றபோதிலும், அம்மனைப்புகழ்ந்துகொண்டார். இதற்கு விபரந் திருவாலங்காட்டுப் புராணசரித்திரங்காண்க.

இவ்வகை நிருத்தஞ்செய்தகுறிப்பை மேற்படி காளியம்மன்படங் காட்டுகின்றது. ஆகவே, சிவபிரானும், சிவகாமியம்மனுகிய காளியம்மையுஞ் சான்றோர்குலத்தவர்களுக்கு ஆதிமுதல் குலதெய்வங்களாக இருந்துவந்திருக்கிறார்களென்பது பிரத்தியட்சமாகிறது.

## (*vii*) சிவலிங்கப்படம்.

சிவலிங்கபூசை சிவபக்தருள் சிவதீட்சை பெற்றிருப்பவர்களுக்கு இன்றியமையாத பூசையாம். சான்றோர்குலத்தவர்களுக்குள்ளும் சிவதீட்சை பெற்றிருப்பவர்களெல்லாரும் இந்தச் சிவலிங்கபூசை நாளதும் அனுட்டித்து வருகிறார்கள்.

இந்தப்பிரகாரம், சான்றோர் குலதெய்வப்படங்களுக்குப் பொருளுரை கூறியானமையால், இனிச் சிவதொண்டர்படம் முதலான ஐந்துபடங்களுக்கு விபரங்கூறுவோம்.

(2.) சிவதொண்டர்கள், ரிஷிகள், முக்குளங்களின் படங்கள் ஐந்துக்கும் பொருளுரை :

(i) காந்தமாரிஷிப்படம்.

ஆதிப்பாண்டியனுக்குச் 'சுராபாண்டியன்' என்றுபேர். அவன் காசுமீரதேசத்து விமலேசராசன் புத்திரி பதுமாக்ஷியை மணம்புரிந்தபின் அவள் அவனுக்கு ஒருபுத்திரனைப்பெற்றாள். அவனுக்கு விக்காதிபாண்டியன் என்றுபேர். பதுமாக்ஷிக்கு இந்த ஒருபுத்திரனையன்றி வேறு புத்திரராவது புத்திரிகளாவதில்லை. ஆனதால், சுராபாண்டியராசன் கங்காநதித்தீரத்தில் ஏலாசினித் தீர்த்தத்தை*யடுத்த தபோவனத்தில் சத்திரியரிஷியாய்த் தபஞ்செய்யப்போய் அவ்விடத்தில் ஒரு சந்தனவிருக்ஷத்தின்கீழிருந்து தபாக்கினிவளர்த்து அதன் நடுவிலிருந்து தவம்புரிந்தபடியால் 'காந்தமாரிஷி' எனவும், கல்விசாஸ்திரங்களில் தீர்க்க அறிவடைந்திருந்ததினாலே 'வித்தியாதரமுனி, விந்தைமுனி, விஞ்சைமுனி' எனவும், தேவர்கூட்டத்தைச்சேர்ந்த காந்தருவரைப்போல்† அமிர்தபானங்கறந்து காத்துவந்தகாரணத்தையிட்டுக் 'காந்தருவரிஷி' எனவும், பெயர்களுண்டாயின. ஆனதால், சுராபாண்டியராசனுக்கு,

காந்தமாரிஷி,
வித்தியாதரமுனி,
விந்தைமுனி,
விஞ்சைமுனி,
காந்தருவரிஷி,

எனப் பெயர்கள் நூல்களில் வழங்கலாயின.

---

* சுராபாண்டிய புராணத்தில் 'டம்பரசந்நதி' என்று வருகிறது.

† Cf. Rig-veda, ix-113, 3 ; 4 ; 83, 85, 12.

## (ii) ஏனாதிநாயனார்படம்.

ஏனாதிநாயனார் சோழவளநாட்டில், பூர்வநகரமாகிய எயினனூரிற் சான்றோர்குலத்திற் பிறந்து, தன்குலத்துக்குரிய போர்த்தொழில் வித்தைகளில் வல்லவராகி, பதினெண்வகை யாயுதவித்தைகள், சிலம்பவித்தைகள் நன்குணர்ந்து, அரசகுலத்தவர்களுக்குப் பற்பல போராயுதவித்தைகள் படிப்பிக்கும் ஆசிரியரானார். அவர் மகா வைராக்கியராய்ச் சிவபக்தியில் முதிர்ந்து, அறுபத்துமூன்று நாயன்மார்களாகிய திருத்தொண்டர்களில் ஒருவராய், சிவனடியார்களுக்குப் பயபக்தியுடன் தொண்டுசெய்துவந்தவர். அந்த ஊரிலே அதிசூரன்எனப் பெயர்கொண்டு ஏனாதிநாயனாருக்குத் தாயாதியான சிலம்பவித்தைக்காரனொருவனிருந்தான். அவனும் அந்தவூரிலே கெட்டிக்காரன் எனப் பெயர்வாங்கினவன். அவன் சிவனடியானல்லன். இந்த அதிசூரன் ஏனாதிநாயனாரோடு போராயுதவித்தைத்திறம்பாராட்டி, அவரைப் போருக்கழைத்தான். அவருஞ் சம்மதித்தார். குறித்தநாளில், குறிக்கப்பட்டவிடத்தில், இருவருங் கைகலந்து சண்டைசெய்தார்கள். இதைச்சுட்டி, பெரியபுராணத்தில், ஏனாதிநாயனார் புராணம், 15-வது கவியில்வருவது:

"மேகவொழுங்குகண்முன்கொடு மின்னிரைதம்மிடையே
 கொடு
மாமருங்கினுமண்ணினும் வல்லுருமேறெதிர்செல்வன
வாகநெடும்பலகைக்குல மாள்வினைவாளுடையாடவர்
காகமிடைந்தகளத்திரு கைகளின்வந்துகலந்தனர்."

இவ்வாறு இருவரும் ஆயுதவித்தைகள், சிலம்பவித்தைகளாடிவருகையில், அதிசூரன் தோற்றுப்போனான், ஏனாதிநாயனார் வெற்றியடைந்தார். அதுகண்டு, அதிசூரனானவன் வஞ்சகத்தால் அவரை வெல்லக்கருதி, அவரைப்பார்த்து, 'நாம் இருவரும் நாளையதினம், தனித்தவிடத்தில், தனிப்போர்செய்வோம்' என்றுசொல்ல, ஏனாதிநாயனாரும் அதற்கு உடன்பட்டார். மறுநாள் அதிசூரனானவன் நெற்றிநிறைய விபூதி பூசிக்கொண்டு புறப்பட்டான். ஏனாதிநாயனாரும் அதிகாலையிற் புறப்பட்டு, குறிக்கப்பட்ட விடத்திற்கு முந்திப்போய்,

அவன் வருகைக்கு எதிர்பார்த்து நின்றார். அந்த வஞ்சகன் நெற்றியில் தரித்திருந்த விபூதியைத் தன்கைப்பலகையால் மறைத்துக்கொண்டுபோய்ச் சமீபித்து, நாயனார் தன்னை வெட்டவரும்போது, பலகையை அப்பால் வாங்கிவிட்டான். நாயனார் அவன் நெற்றியில் திருநீற்றைக் கண்டவுடனே, அவர் தமக்குள்ளே, "இவன் சிவபக்தனாகிவிட்டான், இனியிவனை வெட்டலாகாது" என நினைத்துச் சும்மா நின்றுவிட்டார். வஞ்சகனே அவரைத் தன் கட்கத்திற்கிரையாக்கினன்.

இதனால், ஏனாதிநாயனார் சிவபக்தரென்பதும், சத்திரியகுலச்சான்றோரென்பதும் விளங்குகிறது. ஏனாதிநாயனார் எவ்வாறு சிவபக்தியில் வைராக்கியமுடையவராயிருந்தாரோ, அவ்வாறே சான்றோர்குலத்தவர்களும் பூர்வமுதல் சிவபக்தியில் வைராக்கியமுள்ளவர்களாயிருந்துவந்திருக்கிறார்கள்.

(iii) யாககுண்டப்படம்.

பூர்வகாலத்தில் பலிகளாகிய யாகங்கள் வளர்த்து, அவிப்பாகம் அனுபவிப்பது வழக்கம். 'அவி' என்பது தேவர்களுக்குப் படைத்த படைப்பாம். அவ்வாறு ஓமாக்கினியில் நெய்யுடன்வெந்த உணவுப்பதார்த்தங்களை அந்த யாகத்திற்கு உடந்தைப்பட்ட உற்றார் உறவினர்களுக்குப் பகிட்டனுபவிப்பது வழங்கு. இனத்தார்களுக்குத் தெய்வத்திற்குப் படைக்கப்பட்ட படைப்பாகிய அவிப்பாகங் கொடாதுபோயின், அது பெருங்குறைவாக எண்ணப்பட்டது.

மருகனான சிவன் தன்னைச் சட்டைபண்ணாததினிமித்தம் விசனங்கொண்ட தக்கனென்போன் சிவனையழிப்பதற்கு வேள்வி வளர்த்தபோது, அந்த வேள்விக்குப் பிரமா, விஷ்ணு, இந்திரன் முதலான தேவர்களையழைத்தான். தக்கன்மகள் உமையம்மை தன்நாயகனாகிய சிவனிடத்தில் மேற்படி வேள்வியைப்போய்ப்பார்க்க விடைகேட்கச் சிவபிரான் "நீபோனால், அவன் உனக்கு அருமைபாராட்டான், நீ அவமானப்படுவாய், போகாதே" என்றார். இதைச்சுட்டி, திருநெல்வேலிப்புராணம், தக்கன் வேள்விச்சருக்கம், 14-வது கவியில் வருவது:

"அந்தவேள்வியிற் போவதெனவனுனதருமை
சிந்தியானுனைவாவெனச் செப்பவுஞ்செய்யான்
தந்தையென்று நீயன்புறுதயவினுலுரைத்தாய்
நிந்தைசொல்லுவான் மனக்குறையெய்துவைநீயே."

சிவன் இவ்வாறுசொல்லியும், தன்நாயகன் சொற்கேளாது யாகத்திற்குப்போனபோது தக்கன் அம்மனுக்கு மரியாதை செய்யவுமில்லை, சிவனுக்கென்று அவிப்பாகங்கொடுக்கவுமில்லை. அதுகண்டு, உமையவள் மிகுகோபமடைந்தனள். அதைச் சுட்டி, மேற்படி தக்கன்வேள்விச்சருக்கம், 21-வது கவியிற் கூறியிருப்பது :

"இருந்தகாலையிற் றக்கனுமினிதவிப்பாக
மருந்தமுன்சிவனுக்கருளுவ திலையென்றே
குருந்திலேறினேனையன்முதற் றேவர்க்குக்கொடுத்தான்
கருந்தடங்கணுளங்கது கண்டனள்கனன்ருள்."

' நாளதுஞ் சான்ருேர்குலத்தவர்கள் பூர்வவழக்கப்பிரகாரம், தங்கள்குலதெய்வங்களுக்கு ஆடுகள் கோழிகள் வெட்டி, உதிரஞ்சிந்திப், பொங்கலிட்டு வேள்விசெய்து எடுக்கும்படைப்பாகிய அவியைப் பாகஞ்செய்து, இனசுனங்களுக்கு அவிப்பாகங்கொடுத்துவருவது வழக்கம். சுற்றத்தாரில் யாருக்காவது அவிப்பாகங்கொடாதுபோயின், அதுபெரியகுறைவாக மதிக்கப்பட்டுவருகின்றது.

இக்காலத்தில் சிவபக்தருள் ஒருபிரிவார் மதுமாமிசம் அருந்ாது, மரக்கறிகள் புசிக்கும் வழக்கத்தை அனுசரித்துச் 'சைவர்' எனப் பெயர்படைத்துக்கொள்ள ஆசையுற்றிருப்பதால், யாகங்கள் செய்யும்போது சுற்பகமது அருந்துவதையும், ஓமாக்கினியில் வெந்த மாமிசமாகிய அவிப்பாகம் புசிப்பதையும் நிறுத்தல்செய்யும்பொருட்டு, ஓமகுண்டங்களை மூடிவிட்டு யாகங்களையும் நிறுத்திவிட்டதாக தெரியவருகின்றது. இந்தப்படி பூர்வத்தில் மிகு சிறப்பாகவும், பெருமையாகவுங் கொண்டாடப்பட்டுவந்த யாகங்கள் இக்காலத்தில் சிவாலயங்களில் நிறுத்துதல்செய்யப்பட்டிருப்பது சிவமதத்துக்குண்டா

யிருக்கின்ற பெரியகுறைவைக் காட்டுகிறது. ஆனதால், பூர்வ காலங்களில் யாகஞ்செய்கிறவேளைகளில் கற்பகவமுதம் உண்பதும், வேள்வியில் வெந்தமாமிசம் புசிப்பதும் சாதாரண வழக்கமாயிருந்ததால், இக்காலத்து நூதன சைவர்கள் அவற்றை அருந்தும் வழக்கத்தை அனுசரியாதிருக்கின்ற காரணமே, சிவாலயங்களில் யாககுண்டங்கள் அடைபட்டுப்போனதற்கு ஏதுவெனத் தோன்றுகிறது.

ஆயினும், இக்காலத்தில் பார்ப்பார்கள் சிவாலயங்களில் நெடுநாளாக மூடப்பட்டுக்கிடந்த ஓமகுண்டங்களைத் திறந்து அவைகளில் மிருகயாகங்கள்செய்து, அமுதபானமும் மாமிச போசனமும் அருந்திவர ஆரம்பித்திருக்கிறார்கள். சோழநாட்டில், திருவையாற்றிலும் அதைச்சூழ்ந்த சிலவிடங்களிலுமிருக்கின்ற பார்ப்பார் அங்குள்ள சிவாலயங்களில் மூடப்பட்டுக்கிடந்த யாககுண்டங்களை இப்போது திறந்து, மாதத்திற்கு இரண்டுவிசை ஆட்டுயாகஞ்செய்துவருகிறார்கள். ஒவ்வொரு யாகத்திற்குப் பத்து ஆடுகள்வரையிலும் கொண்டுவந்து பக்குவஞ்செய்து யாககுண்டத்தில் யாகத்துக்குரிய விறகுகள் அடுக்கி, ஒழுக ஒழுக நெய்வார்த்து இறைச்சியைப்போட்டுப் பாகஞ்செய்து சர்க்கரைகலந்து, இறைச்சியை உருட்டி உண்டைகளாக்கி, அந்த உண்டைகளைப் பாகஞ்செய்து, மேற்படி யாகத்திற்கு உடந்தைக்காரர்கட்கு அவிப்பாகம் பங்கிட்டுப் புசித்து மதுவும் அருந்திவருகிறார்கள். யாககுண்டங்களில் வெந்த மேற்படி மாமிச அவிப்பாகம்பெற்றுத் தின்று ருசிபார்த்த நம்முடைய இஷ்டர்களில் ஒருவர் மேற்படி இறைச்சி வெகுருசியாயிருக்கிறதென்று சொல்லுகிறார். முதலில் மாதத்திற்கு ஒருதரம் ஆட்டுயாகஞ் செய்துவந்தவர்கள், இறைச்சிதின்று ருசிகண்டுகொண்டு, இப்போது மாதத்துக்கு இரண்டுவிசை ஆட்டுமேதயாகஞ் செய்துவருகிறார்கள். இதைப்பார்த்து அவைகளுக்கடுத்தவிடங்களிலுள்ள பார்ப்பார்களும் யாகங்கள்செய்ய ஆரம்பித்துவருகிறார்கள் என அறிந்துகொள்ளலாமே.

இந்தப் படப்பட்டயத்தில் யாககுண்டப்படம் போட்டிருப்பதால், பூர்வ சான்றோர்குலத்தவர்கள் தங்கள் குலகுருக்களைக்

கொண்டு சிவாலயங்களிலும் யாகங்கள் செய்துவந்த வழக்கந் தெரியவருகின்றது.

### (iv) பசுபதிபுனுகுசட்டநாதக் குருக்கள்படம், பூசைமணிப்படம்.

திருவெண்காட்டில் சான்றோர்குலமேன்மக்கள் எழுநூறுபேர் கிறிஸ்தாப்தம் 1,333 க்குச்சரியான சாலிவாகனசகாப்தம் 1,255ல் ஆதிச்சிவஸ்தலமாகிய மேற்படி திருவெண்காட்டூற் சபைகூடி, காந்தமாரிஷிமடங் கட்டுகிறதற்கு ஒழுங்குசெய்தபோது, அவ்விடத்திலிருந்த வீரசைவர்களுக்குத் தலைமைக்குருவாயிருந்தவர் இந்தப் பசுபதிபுனுகுசட்டநாத குருக்களாம். அவரையும் அவருடைய வமிசத்தாரையும் மேற்படி சான்றோர்குலத்தவர்கள் மேற்படி காந்தமாரிஷிமடத்துவிசாரணைக்கு ஏற்படுத்திவைத்தார்கள். இப்போது மேற்படி மடத்துவிசாரணை பார்த்துவருகிறவர், மேற்படி பசுபதி புனுகுசட்டநாத குருக்கள் பரம்பரையிலுதித்திருக்கிற பசுபதி குருக்கள். இந்தப் பசுபதிகுருக்கள்வசத்தில் திருவெண்காட்டுச் சான்றோர்குலத்துத் தாமிரசாதனப்பட்டயமிருக்கிறது.

சிவபூசைக்குப் பூசைமணி வேண்டியதால், அதைப் பூசைமணிப்படங் காட்டுகின்றது.

### (v) முக்குளத்துப்படங்கள்.

#### புராணக்கதை.

திருவெண்காட்டில் பரமசிவன் காளியுடன் ஆனந்தத்தாண்டவம் பண்ணினபோது, அவருடைய திரிநேத்திரங்களிலுமிருந்து ஆனந்தமகிழ்ச்சியில் மூன்றுதுளி கண்ணீர்விழ, விழுந்தவிடங்களில் மூன்றுகுளங்களுண்டாயினவாம். சிவபிரானது மூன்றுகண்களில் வலதுகண்ணுக்குச் 'சூரியன்' எனவும், இடதுகண்ணுக்குச் 'சந்திரன்' எனவும், நெற்றிக்கண்ணுக்கு 'அக்கினி' எனவும் பெயருண்டானமையால், அந்த மூன்று குளங்களும் "ஆதித்ததீர்த்தம், சந்திரதீர்த்தம், அக்கினித்தீர்த்தம்" எனப் பெயர்பெற்றன. இப்போதும் அந்த மூன்று குளங்களையுஞ் சபாநாயகர் ஆலயத்தைச்சூழக் காணலாம்.

இப்படிச் சிவதொண்டர்படம்முதலான ஐந்துபடங்களுக்கும் விபரஞ் சொல்லியானபடியால், இனி மூன்றாவது வகுப்புப்படங்களுக்குப் பொருளுரை கூறுவோம்.

3. சத்தகன்னிகள் படங்கள் ஏழு, சினம்பலபாண்டியன் புதல்வர்கள் படங்கள் ஏழு, ஆகப்படங்கள் பதினாலு.

(க.) சமஸ்கிருத பிராமணர் இந்துதேசத்துக்கு வருகிறதற்கு வெகுகாலத்திற்கு முன்னதாக, மத்திய ஆசியாநாட்டினின்று புறப்பட்டுச் சிந்துநதியைத்தாண்டி, பரதகண்டத்துக்குவந்து, இமயமலைநாடுகளும் சிந்துயமுனைகங்காநதிநாடுகளுமடங்கிய உத்தர பரதகண்டம், விந்தியபருவதமுதல் கன்னியாகுமரிபரியந்தமிருக்கின்ற தக்ஷணபரதகண்டமெங்கும் நாளடவிலே பரவிக் குடியேறிப் பெருகிவந்த தமிழ்ச்சத்திரியகுலத்தவர்கள்வமிசத்தில் உத்தேசம் கி. மு. 1600வருடமுதல் உதித்த சூராபாண்டியராசன் சௌராஷ்டிர நாட்டிற்குத்தெற்கிலிருந்த சக்கரபுரிக்குஅரசனாய் நாடாண்டுவருகையில், காசுமீரதேசத்துக் கயிடமாநகரத்திற் செங்கோற்செலுத்திய விமலேசராசன் மகள் பதுமாக்ஷியை மணம்புரிந்தான். அவள் அவனுக்கு, விக்காதிபாண்டியனைப்பெற்றாள், இந்த விக்காதிபாண்டியன் வங்கிசத்தார் பிற்காலத்தில் பரசுராமக்ஷேத்திரமாகிய மலையமாநாட்டிற்கு அரசராயினர்.

(உ.) அதற்குப்பிறகு சூராபாண்டியராசன் மகவாசைகொண்டு, பதுமாக்ஷிசம்மதிபெற்று, கங்காநதியருகிலிருக்கின்ற ஏலாசினித்தீர்த்தக்கரையிலுள்ள காளி*கோவிலையடுத்துச் சுற்றி அக்கினிவளர்த்துத் தபஞ்செய்துகொண்டிருந்தகாரணத்தால் அந்தராசனுக்கு 'காந்தமாரிஷி' எனப் பெயருண்டாயிற்று.

(ந.) இவ்வாறு சூராபாண்டியராசன் காந்தமாரிஷியெனப் பெயர்பெற்று அங்ஙனந் தவஞ்செய்துகொண்டிருக்கிறகாலத்தில், நாகர்நாட்டில், விமலைநகரத்தில், 'சங்கருடன்' எனப் பெயர்கொண்ட ஓரரசன் நாடாண்டுவந்தான். சங்கருடவர

---

* 'ஆதிசத்தி' என்பது காளியம்மைக்குரிய பூர்வபெயர்.

சன் மனைவிக்கு மஞ்சனிதேவி என்றுபேர். இந்த மஞ்சனி தேவியிடத்தில் மேற்படி சங்கருடவரசனுக்கு ஏழுபுத்திரிகள் பிறந்தார்கள். இதைச்சுட்டி, சான்றோர்புராணம், உற்பத்திப் படலம், 14-வது கவியிற் சொல்லியிருப்பது:

" கருங்காற்கழற்சங்கருடனென்பான்
  கனகவரியாசனமீது
நெருங்குமரசர்வணங்கவர
  சிருக்குநாளினிறைகுணத்துச்
சுரங்குமருங்குற்கருங்கண்முலைத்
  தோகைச்சாயற்றூயமுல்லை
யரும்புநகைமஞ்சனிவயிற்றி
  லெழுவர்மடவாரவதரித்தார்."

(௪.) இவ்வாறுபிறந்த புத்திரிகள் ஏழுபேரும் பக்குவப் பிராயமானபின், ஒருநாள் அவர்கள் தங்கள் பிதாவின் சமு கத்திற்போய்ச் சொல்லுகிறார்கள்: "பிதாவே, இமயகிரிக் குத் தென்பாரிசத்தில் கங்கை என்றொரு நதியிருக்கின்றது. அந்த நதிக்கரையில், ஏலாசினியென்றொரு பெயர்பெற்ற தீர்த்தமுண்டு. அந்தத் தீர்த்தத்தினருகிலிருக்கிற தபோவ னத்தில் ஏலத்தருக்கள்* அடர்ந்திருக்கின்றன. ஏழு பலா மரங்களும் நிற்கின்றன. இந்த விருக்ஷங்களின் கனிகள் அவ் வனத்தில் தபஞ்செய்யும் முனீசுரர்களுக்குப் புசிப்புக்கு உதவு கின்றன. அவ்விடத்தில் அநேக ரிஷிகள் சோலைதோறும் பரமசிவனைநோக்கி அரியதவங்கள் வேள்விகள்செய்து வரம் பெற்று, முத்தியடைந்து வருகிறார்கள். இந்தக் கங்காநதியின் புனிதத்தையும், அந்நதித்தீரத்தில் தபஞ்செய்து வருகிற ரிஷி கள் பெறுகின்ற பேறுகளையும், அந்நதியில் ஸ்நானஞ்செய்கிற வர்கள் அடைகின்ற புண்ணியங்களையும் நாரதமுனிவர் எங்க ளுக்குச்சொல்ல அறிந்துகொண்டோம். நம்முடைய தேகம் நீர்க்குமிழிக்குச் சமானமென்று பெரியோர்கள் சொல்லக்

* 'ஏலி' என்று மதுவுக்குப்பேர்; ஆகவே, ஏலவிருக்ஷங்கள் 'தாலவிருக்ஷங்கள்' எனப் பொருள்படும்.

கேட்டிருக்கிறோம். ஆனதால், எங்கள்பிதாவே, நாங்கள் ஒரு முறைபோய், கங்காநதித்தீர்த்தமாடிவருகிறோம். எங்களுக்கு விடைதரவேண்டும்" என்றார்கள். இதைச்சுட்டிய, மேற்படி புராணம், உற்பத்திப்படலம், 15-வது, 16-வது, 17-வது, 18-வது கவிகள் வருமாறு:

15-வது கவி:

"நீலக்கொண்டலிளமின்போ
  னிறையும் பசும்பொற்கொடிபோல,
கோலக்கனிவாய்ச்சிறுகிள்ளைக்
  குலம்போற்கூவாச்சிறுகுயில்போல்,
வாலப்பருவத்தீராறு
  வயதுமுதிரவளர்நாளி
லேலக்குழலார்தாதைபொற்று
  ளிறைஞ்சியொருவாய்மொழிபுகல்வார்."

16-வது கவி:

"வங்கந்தவழுந்திரைத்தரைமே
  லிமயகிரியின்வரைத்தென்பா
லங்கொண்பதினுயிரமான
  வளவையுடையோசனைகடந்தாற்
கங்கையென்னும்புனிதநதிக்
  கரையில்வடபானுளதுலக
மெங்கும்புரிந்தபவந்தீர்க்கு
  மேலாசினியென்றொருதீர்த்தம்."

17-வது கவி:

"ஏலத்தருக்களிடைகலங்க வேழுபலவுண்டதன்கனிகள்
காலத்தளவையறிமுனிவ ரருந்தவளர்ந்தகாட்சித்தாஞ்
சூலப்படையானுருவிரும்பி சொன்மாமுனிவர்பலவேள்வி
மூலப்பொதும்பர்தொறும்வளர்த்து முத்தராகிச்செல்குவ
ரால்."

18-வது கவி:

" என்றுநதியின்புனிதமுமங்
  கிருப்போர்செயலுமெண்ணிறந்தோர்
சென்றுதோய்ந்துபெறும்பேறுந்
  திருநாரதனுரைமக்குரைத்தார்
பொன்றுமுடலநீர்க்குமிழி
  போலுமென்பதுலகியல்பா
நின்றுவுய்த்தோயொருமூன்றுபோய்த்
  தோய்ந்துவருதுமெனவுரைத்தார்."

இந்த ஏழுகன்னிகைகளுஞ் சான்றோர்குலத்துப் பூர்வதாய்மார்களாம்.* அவர்கள் இளம்பிராயத்தில் கடவுள்சிந்தையுடையவர்களாயிருந்தார்களென்பது இதனால் துலங்குகிறது.

சங்கருடமகாராசன் தன்புத்திரிகள் சொல்லிய வசனங்கேட்டு, விஷமும் மருந்தும் அருந்தியவன்போல மனஞ்சோர்ந்தும், மனந்தேறினவனாய், தன்புத்திரிகள்முகநோக்கிச்சொல்லுகிறான்: "இன்பமொழிபேசுகின்ற என்னருமைப்புத்திரிகளே, உங்களை நான் ஒருமாதங் காணாதிருப்பேனேயாயின், உயிர்பிழையேன். நீங்கள்போய்க் கங்காதீர்த்தமாடி விரைவில்வந்து சேருங்கள்" எனச்சொல்லி அவர்களுக்கு விடையளித்தான். இதைச்சுட்டி, மேற்படி உற்பத்திப் படலம், 19-வது கவியிற் கூறியிருப்பது:

"என்றுமளவில்வல்விடமு மருந்துமருந்தியிருந்தனன்போன்
மன்னன்மிகவுமனம்வருந்தி மடவார்தங்கண்முகநோக்கிக்
கன்னன்மொழியீரொருதிங்கட் காணுதிருக்கிலுயிர்வாழேன்
மின்னும்புனிதப்புனலாடி விரையவருகவெனவிடுத்தான்."

அந்த ஏழுகன்னிகைகளும் பிதாவினிடத்தில் விடைபெற்றபின்னர், மாதாவாகிய மஞ்சனியிடத்திலும் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுப்போய், வழிமார்க்கத்தில் தடாகங்கடோறும் நீராடிக்கொண்டு நெடுந்தூரங்கடந்து இருகரையுஞ்

---

* இக்கன்னிகைகள் 'ஆதிசேடன் புத்திரிகள்' என்பது பிராமிய புராணவழக்கு.

சோலைகள்சூழ்ந்த கங்காநதித்தீரத்தில் வந்துசேர்ந்தார்கள் இதைச்சுட்டிய மேற்படி உற்பத்திப்படலம், 20-வது கவி வருமாறு :

" அனிச்சமலர்மெல்லடித்துவர்வா
யனையுமிரங்கிவிடைகொடுப்பத்
தனித்தங்கெழுவராதுவழியாய்ச்
சார்ந்துதடங்கடொறுமிருந்து,
பனிக்கண்படைபோய்த்துங்கநெடும்
பாரிற்றூரநெறிகடந்து,
கனித்தண்டலைகள்பலசூழ்ந்த
கங்காநதியின்கரையடைந்தார்."

அவ்வாறு அந்த ஏழுகன்னியர்களும் வந்துசேர்ந்தபின்னர் அந்த கங்காநதியில் தீர்த்தமாடிக் கரையேறிக் கூந்தலாற்றித் தூத்தி முடிந்துகொண்டு, ஆடையாபரணங்களணிந்து கொண்டு, பூஞ்சோலைகள் பூங்காவனங்களிற்புகுந்து புஷ்பங்கள் கொய்துகொண்டு, விளையாடுதற்கேற்ற நல்லசோலைகள் எங்கேயிருக்கிறதென்று தேடிப்பார்த்துக்கொண்டு போகையில், வித்தியாதரமுனிவர்எனப் பெயர்கொண்ட காந்தமாரிஷியானவர் தபஞ்செய்துகொண்டிருந்த ஏலாசினித் தீர்த்தத்தையடுத்த தபோவனத்துச் சோலைகளுக்குள் வந்து புகுந்தார்கள். இதைச்சுட்டி, மேற்படி உற்பத்திப்படலம், 21-வது கவி வருமாறு :

" அடைந்தபுனிதநதியாடி
யடுக்குந்தூய்நீர்த்துறையகன்று
குடைந்துபுலர்ந்தகுழன்முடித்துக்
கொழும்பொற்பணிகள்புனைந்துமலர்
மடந்தையனையார்பூக்கொய்து
வண்டலிழைக்குமிடந்தேடி,
யிடங்கொள்வித்தியாதரமுனிவ
னிருக்குஞ்சோலையருகணைந்தார்."

அந்த ஏழுகன்னிகைகளும் அந்தச்சோலைகளுக்குள்ளே புகுந்து விளையாடிக்கொண்டு, ஒருவரோடொருவர் கலந்துபேசிக்

கொள்ளுகிற இனிய மழலைமொழிகளும், இருபாதங்களிலும் பூண்டிருந்த பொற்றண்டையாகிய சிலம்புகளின் ஓசையும், காந்தமாரிஷியின் காதில்விழ, அவர்கள் தேகத்திற்பூசிய சந்தனக்குழம்பு வாசங் கமகமவென நாசியிலேற, இந்தவனத்தில் யாரோ பெண்கள் வந்திருக்கிறார்களென்பதாக முனிவர் எண்ணங்கொண்டு, தன்னிருகண்களையுந் திறந்து, அந்த ஏழு கன்னியர்களையும்நோக்கிப் பார்த்தார். இதைச்சுட்டி, மேற்படி உற்பத்திப்படலம், 22-வது கவியிற் கூறியிருப்பது:

“பாகுநிகர்க்குஞ்செழுங்கனிவாய்
பகருமழலைமொழியும்விட
நாகவரிப்பொற்சிலம்பலம்ப
நடக்குந்தொனியுஞ்செவிப்புகுத
வாகமணியுஞ்சாந்தவிரை
நாசியிடைச்சென்றடங்குதலான்
மோகமடவார்வரவென்ன
முனியும்விழித்துநோக்கினனால்.”

இந்த ஏழுபெண்களையுங் காந்தமாரிஷி கண்ணுற்றவளவில், அவர் தன்மனதில், “இந்தப் பூலோகத்தின்கண்ணே அழகிற்சிறந்தவர்கள், வாசனைகமழுந் தாமரைமலராசனத்தில் வீற்றிருக்குஞ் சரசுவதியும், இந்திரமகாராசன்தேவி அயிராணியும், மன்மதன்தேவி இரதியும் என்பார்கள். இப்போது இந்தவனத்தில் தனித்துவருகின்ற இந்தப்பெண்கள் ஏழுபேரும் யார் என்பதாக எண்ணமிட்டார். இதைச்சுட்டி, மேற்படி உற்பத்திப்படலம், 23-வது கவி வருமாறு:

“கந்தமலராசனத்திருக்குங் கன்னியவளுமொருத்திமணிச்
சந்தப்புயத்திந்திரன்மார்பந் தழுவுமயிராணியுமொருத்தி,
சிந்தையிடத்திற்பிறந்தமதன் றேவியவளுமொருத்தியிப்போ
திந்தவனத்திற்றனிவருவா ரெழுவரிவரரெனவயிர்த்தான்.”

பின்னுங் காந்தமாரிஷி அந்த ஏழுபெண்களையும் உய்த்துணர்ந்துபார்த்துத் தன் மனதினுள்ளே “இளம்பிறைச் சந்திரனையொத்த இவர்களுடைய சிறுநெற்றிகளிற் பிரகாசம்பொ

ருந்திய இரத்தினமொன்று இலங்குகின்றது. இவர்களுடைய கமுகையொத்த அழகுபொருந்திய கழுத்துகளினுள்ளே ஒளி பொருந்திய செந்நிறமணிகளடங்கியிருக்கின்றன. ஆனதால் இந்தப்பெண்கள் நரர்நாட்டாரல்லர், பன்னகநாடாகிய நாகர் நாட்டு நாகர்குலப்பெண்களாயிருக்கவேண்டும்'' என்பதாக நினைத்தார். இதைச்சுட்டி, மேற்படி உற்பத்திப்படலம், 24-வது கவியிற் கூறியிருப்பது:

"கீற்றுமதிபோற்சிறுநுதலிற்
கிரணமணியொன்றிலங்குதலாற்
றோற்றுங்கமுகமணிக்கழுத்திற்
சுடர்ச்செம்மணியுள்ளடங்குதலா
லேற்றவிளமையார்களிந்த
வெழின்மாநிலத்தாரன்றுருவிற்
சாற்றுமிவர்பன்னகநாட்டுத்
தையலாரென்றினிதுணர்ந்தான்."

மேற்படி உற்பத்திப்படலம், 25-வது கவிமுதல் 35-வது கவி வரையினும் மேற்படி பெண்களுடைய உடலழகு கூறப்பட்டிருக்கின்றது. அவற்றுள், 32-வது கவியை இங்ஙனம் பேர்த்தெழுதுகிறோம்:

"வாங்கருமுயிரு மனங்களுந்தொடர
வனைந்தபொன்னூசலி னசைந்து
பூங்கொடிவள்ளை யெனப்புடைதாழ்ந்து
பொற்பணியணி குழையினரை
யோங்குகானகத்தி லெள்ளிளம்பூவு
முயர்ந்தசெண்பக மெனவமைந்து
கோங்குநாண்மலர்க்கு மொருமுறைமணக்கிற்
குளிர்மணங் கொடுக்குமூக்கினரை."

இக்கவியில், மேற்படி நாகர்குலப்பெண்கள் ஏழுபேரும் பொன்னூஞ்சலையொத்து வளர்ந்தகாதுகளில் பொன்னாபரணங்கள் தரித்திருந்தார்கள் எனச் சொல்லியிருக்கிறது.

சான்றோர்குலத்துப்பெண்கள், தங்கள் பூர்வதாய்மார்களைப்

போலவே, நாளதும் பொன்னூசல்போல வளர்ந்த காதுக ளையுடைத்தாயிருக்கிறார்கள்.

இந்தப்பெண்களைக்கண்ட காந்தமாரிஷி அவர்களைக் காந் தருவமணத்திற்கூட நாட்டமுற்று ரிஷிவேஷவடிவொழித் துப் பழயபடிக்கு இராசபுத்திரவடிவுகொண்டு, அவர்களுக் கெதிரேபோய் நின்றார். இதைச்சுட்டி, மேற்படி உற்பத்திப் படலம், 39-வது கவியிற் கூறியிருப்பது :

“ கணையிறுலெனை வென்றவக்காமனையானு
மிணையில்பொற்பினல் வெல்வலென்றெடுத் ததுபுரைய
வணையுஞ்செவ்வியோ டரசிளங்குமாரனுயுருக்கொண்
டிணையுமாசைநோய் கொளவவர்விழிக்கெதிருற்றான்.”

இவ்வாறு காந்தமாரிஷியாகிய சுராபாண்டியராசன் அந்த ஏழு கன்னியர்களுக்கும் முன்பாகத் தன் பழயசொரூபங்காட்டி நின்றுகொண்டு, அவர்களைப்பார்த்து, “கன்னியர்களே, அரிய தவம்புரிந்து உங்களைப்பெற்றெடுத்த தாய்தந்தையர்கள் யார்? உங்களை யலங்காரமகிமையெனப்பெற்றிருக்கின்ற நாடுநக ரங்களெவை? நீங்கள் இத்தலம்நோக்கிவந்தகாரணம்யாது?” என வினவலுற்றார். இதைச்சுட்டி, மேற்படி உற்பத்திப்பட லம், 40-வது கவி வருமாறு :

“ உற்றுமங்கையீ ரருந்தவத்துமைப்பயந்தவர்யார்,
முற்றுநீயிர்வாழ் வுறுதலான்முழுமணிபதிக்கப்
பெற்றநல்லணியெனத்திகழ்பெருந்தலம்யாது,
நற்றிறத்தினிங் கெய்துமாறென்னென நவில்வார்.”

இவ்வாறு சுராபாண்டியராசன் வினவ, அந்தக்கன்னிகள் ஏழுபேருஞ் சொல்லுகிறார்கள் : “ஓ இராசகுமாரா, எங்கள் ஏழுபேருக்கும், ‘குஞ்சரி, விந்தை, கமலை, சுந்தரி, கனகை, திலகை, தாதகை’ என்றுபேர். எங்களைப்பெற்ற பிதா சங்க ருடமகாராசன். நாங்கள் வாழும்நாடு நாகர்நாடு.* எங்கள்

* விந்தியமலைக்குத் தென்பாரிசத்திலிருக்கிற “நாகப்பூர் நாடு,” நாகர்குலத்தவர்கள் தலைமைபெற்றிருந்தகாலத்தில் அவர்களுக்குத் தலைமைநாடாகி, ‘நாகர்நாடு’ எனப் பூர்வத் திற் பெயர்பெற்றிருந்ததாகத் தெரியவருகிறது.

பிதாவிருந்து அரசுபுரிகின்ற இடம் விமலைநகரம். அந்த விமலைமாநகரத்திலிருந்து கங்காஸ்நானஞ்செய்யநாடி நாங்கள் இங்ஙனம் வந்தோம்" என்றார்கள். இதைச்சுட்டி, மேற்படி உற்பத்திப்படலம், 41-வது, 42-வது கவிகளிற் கூறியிருப்பது :

41-வது கவி :

"சொற்றவெம்பெயர் குஞ்சரிவிந்தைசொற்கமலை
யுற்றசுந்தரி கனகைநல்லொண்ணகைத்திலகை
கற்றதாதகை யெனமைபெற்றதாதைசங்கருடன்
நற்றவப்பதி நாகலோகஞ்செறிவிமலை."

இச்செய்யுளில்வரும் குஞ்சரி, விந்தை, கமலை, சுந்தரி, கனகை, திலகை, தாதகை என்னும் பெண்களுக்குத் தாமிரசாசனத்தில் நாரிகுஞ்சரி, கனகரேதபுரி, கமலலோசனி, மதனசவுந்தரி, கனகரேதனி, நாரிகிருபாகரி, ஏனுதிநாயகி எனப் பெயர்கள்வந்து வழங்கலாயின.*

இந்த ஏழுகன்னியர்களுஞ் சான்றோர்குலக்கிளைப்பிரிவினருக்குப் பூர்வதாய்மார்களாயும், காந்தமாரிஷியாகிய சுராபாண்டியராசன் அக்குலத்தவர்களுக்குப் பூர்வதந்தையாயுமிருப்பதால், உற்பத்தியைப் பார்க்குமிடத்து, தாய்வழியாலுந் தந்தைவழியாலுஞ் சான்றோர்குலத்தவர்கள் சத்திரியராம்.

சான்றோர்குலத்தவர்களுடைய உற்பத்தி இப்படியிருக்க, ஜாதிசங்கிரகசாரநூலாசிரியர் இதுதெரியாதவராய்த் தமதுநூலில் மனோசலனத்தால் மனோராச்சியம்பண்ணியிருக்கிறார் எனத் தெரியவருகின்றது.

42-வது கவி :

"விமலைமாநகரிருந்து வான்கங்கையைவிரும்பி
யமலமாயுறை பூம்புனலாடவந்தணைந்தேங்
கமலைவாழ்திரு மாநகராயெனக்கழற
நிமலனன்னவர்க் கிம்மொழிபகர்ந்தனனிவைவால்."

---

* மேற்படி நாககன்னிகைகள் எழுவருக்கும், 'ரூபசவுந்தரி, சவுகந்தி, கந்தி, கமலாயி, ஏலவல்லி, பிறைமதி, சுசீல்லாள்' எனப் பேர்கள் சுராபாண்டியபுராணத்தில் வருகின்றன.

காந்தமாரிஷியாகிய சுராபாண்டியராசன் தான் வினவிய வினாக்களுக்கு, மேற்படி கன்னியர்கள் கூறிய விடையைச் செவியுற்றபின்னர், அவர்களைப்பார்த்துக்: "கன்னியர்களே, இராசபுத்திரரானவர்கள் தங்கள் மனதிற்கொள்ளும் எண்ணத்தை முடிக்கத்தக்கவல்லவர்கள். ஆகையால், அழகிய சிறுநெற்றிகளையுடைய மங்கையர்களே, நீங்கள் என் மனக்கருத்திற்கிசைந்து, என்புயஞ்சேருங்கள்" என்றார். இதைச் சுட்டிய, மேற்படி உற்பத்திப்படலம், 43-வது கவி வருமாறு:

"உன்னியின்னநேரத்தினிலுதித்தவான் சிறுவர்
மன்னுந்தம்மன மதித்ததெல்லாமவர்முடிப்பார்
சின்னவாணுதன் மங்கையீரென்புயஞ்சேர்மி
னென்னலோடுமங் கவர்மறுத்திம்மொழியிசைப்பார்."

இவ்வசனங்கேட்டு, அந்தக்கன்னியர்கள் மேற்படி சுராபாண்டியமகாராசனைப்பார்த்து, "எங்கள் தந்தையாகிய அரசன் எங்களை உமக்கு மணமுடித்துத்தருவாரேயாயின், உம்முடன் கூடுவோம்" என்றார்கள். அதுகேட்டு, இராஜரிஷியானவர் அந்தப்பெண்களைநோக்கி, "சமுத்திரஞ்சூழ்ந்திருக்கப்படாநின்ற இந்தப் பூலோகத்தில் எட்டுவகை மணங்*களிற் 'காந்தருவமணம்' என்றொருவகை விவாகமுறையுண்டு. அந்த விவாகமுறை நமக்கு அடுக்கும்" எனச்சொல்லி, காந்தருவமணம் இன்னதென அவர்களுக்கு விதந்துகூறவே, அவர்கள் அதற்கு

---

* மணம் எட்டுவகை. அவை அஷ்டமணம் என்னப்படும். அவைகட்குப் பெயர்விபரம்:

(1.) பிரமவிவாகம்.
(2.) பிரசாபத்தியவிவாகம்.
(3.) ஆரிடவிவாகம்.
(4.) தெய்வவிவாகம்.
(5.) காந்தருவவிவாகம்.
(6.) ஆசுரவிவாகம்.
(7.) இராக்கதவிவாகம்.
(8.) பைசாசவிவாகம். இவற்றுள்,

காந்தருவவிவாகமானது, உற்றார்பெற்றார் சம்மதிகேளாது, மணச்சடங்குகளின்றி, தலைவனுந் தலைவியும் மனம்பொருந்தி இருவருந் தனிப்படச்செய்துகொள்ளும் விவாகமாம்.

"காந்தருவம், Marriage by the mutual consent of the individuals themselves; without consulting friends, or having a marriage ceremony." *Dr. Winslow's Tamil and English Dictionary*, p. 840.

இணங்கி மனம்பொருந்திக்கொண்டார்கள். இதைச்சுட்டி, மேற்படி உற்பத்திப்படலம், 44-வது கவியிற் சொல்லியிருப்பது :

"எடுக்கும்பல்புக ழெந்தையார்மணவினைமுடித்துக்
கொடுக்கிற்கூடுது மென்றனர்முனிவனுங்குணங்கொண்
டுடுக்குநீருலகத்தினிற்காந்தர்வமணமுண்
டடுக்குமென்றன னவ்வுரைக்கவரகமிகையந்தார்."

(ரு) மேலே சொல்லியிருக்கிறபிரகாரம் அந்த ஏழுபெண்களுங் காந்தருவமணமுறை வழுவாது மனம்பொருந்தி இராசரிஷியாகிய சுராபாண்டியராசனோடு கூடவே, கருப்பந்தரித்து ஏழுபுத்திரர்களைப் பெற்றூர்கள். அந்த ஏழுவழுதிகளுக்கும், (1) காந்தவீரன், (2) குலசேகரன், (3) கூட்பாண்டியன், (4) மாதிருட்டி, (5) பரஞ்சோதி, (6) சினம்பலன், (7) கவுண்டலீயன், என்றுபேராம். இதைச்சுட்டி, சான்றோர்கும்மி, 72-வது, 74-வது கவிகளிற் கூறியிருப்பது :

72-வது கவி :

"ஆயபொழுதர வப்பெண்ணெழுவரை
யாசையிற்காந்தருவ மணஞ்செய்
தேயவறிவுடை புத்திரரெழுவரை
யெய்தியவர்களை மின்னரசே."

இந்தக்கவியில், 'அரவப்பெண்ணெழுவர்' என்பதற்குப் 'பன்னகநாட்டுப்பெண்கள் எழுவர், நாகர்குலக்கன்னியர்கள் எழுவர்' என்பது தாற்பரியமாம். இங்ஙனம், நாகர்குலப்பெண்கள் ஏழுபெயர் காந்தருவமணம்புரிந்து ஏழுபுத்திரர்களைப் பெற்றூர்கள் என்று சொல்லியிருக்கிறது.

74-வது கவி :

"காந்தவீரன் குலசேகரன்கூட்பாண்டி
காமருசக்கர மாதிருட்டி
ஆப்ந்தபரஞ்சோதி யோடுசினம்பல
ஞய்கவுண்டலீயன் மின்னரசே."

'மேலே கூறியிருக்கிறபடிக்கு அந்த ஏழுகன்னியர்களிடத்

திற் பிறந்த புத்திரர்கள் ஏழுபேருக்கும், காந்தவீரன், குலசேகரன், கூட்பாண்டி, மாதிருட்டி, பரஞ்சோதி, சினம்பலன், கவுண்டலீயன் என்றுபேராம்.' சான்றோர்மரபு, அநுபந்தம், சுராபாண்டியன் சரித்திரம், 70-வது பக்கத்தில், 'இந்த ஏழு புத்திரருக்கும் காந்தவீரபாண்டியன், குலசேகரபாண்டியன், கூட்பாண்டியன், உக்கிரதிஷ்டிப்பாண்டியன் (மாதிருட்டிப்பாண்டியன்), பரஞ்சோதிப்பாண்டியன், சினம்பலபாண்டியன், கவுண்டலீயபாண்டியன்' என்று பெயரிட்டனர்என வரைந்திருக்கிறது.

(சு) அந்தப்பெண்கள் ஏழுபேரும் தாங்கள்பெற்ற புத்திரர்கள் எழுவரையுந் தந்தையாகிய காந்தமாரிஷியிடத்தில் ஒப்பித்துவிட்டு, தங்கள் சொனநாடாகிய நாகர்நாடுபோய்ச் சேர்ந்தார்கள். தந்தையானவர் ஏழுவழுதிகளையும் அங்ஙனங் கங்காநதித்தீரத்திலிருந்த காளிகாதேவி கோயிலுக்குள்ளேவைத்து, முனிவர்களுக்குப் பாலமுதளித்துவந்த மலம்பசுவாகிய காமதேனு*வின் பால்கொடுத்து வளர்த்துவந்

* காமதேனு என்பது இமயமலையிலுள்ள பெரிய பசுவுக்குப் பெயராம். இமயமலையிலிருந்த சுரர்நாடு ஆண்டுவந்த இந்திரமகாராசன் பூர்வத்தில் வைத்திருந்த பசுமாட்டிற்குக் 'காமதேனு' என்று பெயர். சுரர்நாட்டிற் கற்பகவிருக்ஷமானது விரும்பியதெல்லாமளிக்கும் விருக்ஷம் என மதிக்கப்பட்டதுபோல, அந்தநாட்டு மலம்பசுவாகிய காமதேனு எனப் பெயர்கொண்ட பசுவும் விரும்பியதெல்லாமளிக்கும் பசு என மதிக்கப்பட்டது. பூர்வத்தில் விருக்ஷசாதிகளுக்குள்ளே கற்பகவிருக்ஷமானது இனிய அமுதம், சர்க்கரைமுதலான உணவுப்பண்டங்களளித்து மானிடகுலத்தவர்களுக் குதவியதுபோல, மிருகசாதிகளுள்ளே பசுவானது பாலமுதம், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலான இனிய உணவுப்பண்டங்களளித்து மானிடகுலத்தவர்களுக்கு உதவிற்று. ஆனதால், மானிடகுலத்தவர்கள் அதற்குக் கற்பகம் எனப் பெயரிட்டு வியப்புற்று மகிழ்ந்தபிரகாரம், இதற்குக் காமதேனு எனப் பேரிட்டு வியப்புற்று மகிழ்ந்துவந்தனர். விசேஷமாய், மலைகள் வனங்களில் தபஞ்செய்துவந்த ரிஷிகளுக்கும் இந்த கற்பகவிருக்ஷமுங் காமதேனுவும் பூர்வத்தில் உணவளித்தன. See the cut *h* "The Hindoo Camadenoo" on page 658, Vol. iii., 'Jenks' Comprehensive Commentary of the Holy Bible.

தார். அவர்கள் காளிகாதேவியின் ஆலயத்திற்குள் வைத்து வளர்க்கப்பட்டபடியால் அவர்களுக்குக் காளிபுத்திரர் எனப் பெயராயிற்று. இதைச்சுட்டி, சான்றோர்கும்மி, 73-வது கவியிற் கூறியிருப்பது :

"பகவதியாகிய மாகாளிகோயிற்
பசுப்பாற்கொடுத்து வளர்த்ததினல்
புகலருமற்றிங் கெழுவருமாகாளி
புத்திரராயினர் மின்னரசே."

(எ) இவ்வாறு அவர்களை வளர்த்துவருகையில், பிதாவாகிய காந்தரிஷி அவர்களுக்கு நாலாவித்தைகளுஞ் சொல்லிக் கொடுத்து, நாலாவித கல்விசாஸ்திரங்களும் போதித்துவந்தார். பதினெண்ணுயுதவித்தைகளில் மிகு வல்லபர்களானார்கள். சத்திரியகுலத்துக்குரிய யானையேற்றம், குதிரையேற்றம், தேரேற்றம் முதலான வாகனசாரிவித்தைகளும் படிப்பித்தார். வயது பதினாறுகிறபோது அவர்களுக்கு முடிதரிப்பித்து, விந்தியபருவதத்திற்குத் தெற்கிலிருக்கின்ற கலிங்கதேசத்திலுள்ள காந்தவிஞ்சையநகரத்திற் குடியிருத்தி, அதற்குச் சமீபத்திலுள்ள பிட்டாபுரத்திற் காளிதரிசனஞ்செய்துகொண்டு அந்தநாடு ஆண்டுவரும்படியாக அவர்களில் மூத்தவனாகிய காந்தவீரபாண்டியனுக்கு நாடாள்வார்ப்பட்டங்கட்டி, அவர்களைக் காளிகாதேவி அடைக்கலத்தில் வைத்தார். இதைச்சுட்டி, மேற்படி சான்றோர்கும்மி, 75-வது, 76-வது கவிகளில் வருவது :

75-வது கவி :

"நாமந்தரித்தவர் தங்களைவிஞ்சை
நகரத்திருத்தி மகேசுரனைக்
காமநமாலிங்க ரூபமாய்ப்பூசிக்கக்
கட்டளையிட்டனன் மின்னரசே."

இதில் 'விஞ்சைநகரம்' எனக் கண்டிருப்பது கலிங்கதேசத்துக் காந்தவிஞ்சைய நகரமாம்.

திற் பிறந்த புத்திரர்கள் ஏழுபேருக்கும், காந்தவீரன், குலசேகரன், கூட்டாண்டி, மாதிருட்டி, பரஞ்சோதி, சினம்பலன், கவுண்டலீயன் என்றுபேராம்.' சான்றோர்மரபு, அநுபந்தம், சூரபாண்டியன் சரித்திரம், 70-வது பக்கத்தில், 'இந்த ஏழு புத்திரருக்கும் காந்தவீரபாண்டியன், குலசேகரபாண்டியன், கூட்டாண்டியன், உக்கிரதிஷ்டிப்பாண்டியன் (மாதிருட்டிப்பாண்டியன்), பரஞ்சோதிப்பாண்டியன், சினம்பலபாண்டியன், கவுண்டலீயபாண்டியன்' என்று பெயரிட்டனர்என வரைந்திருக்கிறது.

(சு) அந்தப்பெண்கள் ஏழுபேரும் தாங்கள்பெற்ற புத்திரர்கள் எழுவரையுந் தந்தையாகிய காந்தமாரிஷியிடத்தில் ஒப்பித்துவிட்டு, தங்கள் சொந்தநாடாகிய நாகர்நாடுபோய்ச் சேர்ந்தார்கள். தந்தையானவர் ஏழுவழுதிகளையும் அங்ஙனங் கங்காநதித்தீரத்திலிருந்த காளிகாதேவி கோயிலுக்குள்ளேவைத்து, முனிவர்களுக்குப் பாலமுதளித்துவந்த மலம்பசுவாகிய காமதேனு*வின் பால்கொடுத்து வளர்த்துவந்

* காமதேனு என்பது இமயமலையிலுள்ள பெரிய பசுவுக்குப் பெயராம். இமயமலையிலிருந்த சுரர்நாடு ஆண்டுவந்த இந்திரமகாராசன் பூர்வத்தில் வைத்திருந்த பசுமாட்டிற்குக் 'காமதேனு' என்று பெயர். சுரர்நாட்டிற் கற்பகவிருக்ஷமானது விரும்பியதெல்லாமளிக்கும் விருக்ஷம் என மதிக்கப்பட்டதுபோல, அந்தநாட்டு மலம்பசுவாகிய காமதேனு எனப் பெயர்கொண்ட பசுவும் விரும்பியதெல்லாமளிக்கும் பசு என மதிக்கப்பட்டது. பூர்வத்தில் விருக்ஷசாதிகளுக்குள்ளே கற்பகவிருக்ஷமானது இனிய அமுதம், சர்க்கரைமுதலான உணவுப்பண்டங்களளித்து மானிடகுலத்தவர்களுக் குதவியதுபோல, மிருகசாதிகளுள்ளே பசுவானது பாலமுதம், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலான இனிய உணவுப்பண்டங்களளித்து மானிடகுலத்தவர்களுக்கு உதவிற்று. ஆனதால், மானிடகுலத்தவர்கள் அதற்குக் கற்பகம் எனப் பெயரிட்டு வியப்புற்று மகிழ்ந்தபிரகாரம், இதற்குக் காமதேனு எனப் பேரிட்டு வியப்புற்று மகிழ்ந்துவந்தனர். விசேஷமாய், மலைகள் வனங்களில் தபஞ்செய்துவந்த ரிஷிகளுக்கும் இந்த கற்பகவிருக்ஷமுங் காமதேனுவும் பூர்வத்தில் உணவளித்தன. See the cut *h* "The Hindoo Camadenoo" on page 658, Vol. iii., 'Jenks' Comprehensive Commentary of the Holy Bible.

தார். அவர்கள் காளிகாதேவியின் ஆலயத்திற்குள் வைத்து வளர்க்கப்பட்டபடியால் அவர்களுக்குக் காளிபுத்திரர் எனப் பெயராயிற்று. இதைச்சுட்டி, சான்றோர்கும்மி, 73-வது கவியிற் கூறியிருப்பது:

" பகவதியாகிய மாகாளிகோயிற்
பசுப்பாற்கொடுத்து வளர்த்ததினால்
புகலருமற்றிங் கெழுவருமாகாளி
புத்திரராயினர் மின்னரசே."

(எ) இவ்வாறு அவர்களை வளர்த்துவருகையில், பிதாவாகிய காந்தரிஷி அவர்களுக்கு நாலாவித்தைகளுஞ் சொல்லிக்கொடுத்து, நாலாவித கல்விசாஸ்திரங்களும் போதித்துவந்தார். பதினெண்ணாயுதவித்தைகளில் மிகு வல்லபர்களானார்கள். சத்திரியகுலத்துக்குரிய யானையேற்றம், குதிரையேற்றம், தேரேற்றம் முதலான வாகனசாரிவித்தைகளும் படிப்பித்தார். வயது பதினாறுகிறபோது அவர்களுக்கு முடிதரிப்பித்து, விந்தியபருவதத்திற்குத் தெற்கிலிருக்கின்ற கலிங்கதேசத்திலுள்ள காந்தவிஞ்சையநகரத்திற் குடியிருத்தி, அதற்குச் சமீபத்திலுள்ள பிட்டாபுரத்திற் காளிதரிசனஞ்செய்துகொண்டு அந்தநாடு ஆண்டுவரும்படியாக அவர்களில் மூத்தவனாகிய காந்தவீரபாண்டியனுக்கு நாடாள்வார்ப்பட்டங்கட்டி, அவர்களைக் காளிகாதேவி அடைக்கலத்தில் வைத்தார். இதைச்சுட்டி, மேற்படி சான்றோர்கும்மி, 75-வது, 76-வது கவிகளில் வருவது:

75-வது கவி:

" நாமந்தரித்தவர் தங்களைவிஞ்சை
நகரத்திருத்தி மகேசுரனைக்
காமநமாலிங்க ரூபமாய்ப்பூசிக்கக்
கட்டளையிட்டனன் மின்னரசே."

இதில் 'விஞ்சைநகரம்' எனக் கண்டிருப்பது கலிங்கதேசத்துக் காந்தவிஞ்சைய நகரமாம்.

76-வது கவி:

" காசினிக்கோர்முடி யாகும்பிட்டாபுரக்
' காளிதரிசனஞ் செய்துகொண்டு
மாசறுசீர்க்காந்த வீரபாண்டிக்கலர்
வைகியசிந்துர மின்னரசே."

இதிற்சொல்லப்பட்டிருக்கிற மூத்தகுமாரனுகிய காந்தவீர பாண்டியனுக்கு நாடாள்வார்ப்பட்டங்கட்டி, அந்த நாடாளும்படி செய்தார்.

(அ) மேற்படி ஏழுபுதல்வர்களும் கங்காநதித்தீரத்திற் பிறந்து, அங்ஙனம் வளர்க்கப்பட்டபடியால், அவர்களுக்கும் அவர்கள்குலத்தவர்களுக்கும் 'சானவேயர், கங்காகுலத்தார்' எனப் பட்டப்பெயர்களுண்டாயின. இந்தப்பட்டப்பேர்களுக்கு விபரம் இப்பிரகரணத்து நான்காவது பிரிவிற்காண்க.

(க) இப்படியிருந்துவருகிறநாளையிலே, விதர்ப்பதேசத்தில், தாரிசாபுரிநகரத்தில், விசயபானு எனப் பெயர்கொண்ட ஓரரசன் செங்கோற்செலுத்திவந்தான். அவன்தேவிக்கு 'மாணிக்கமாதேவி' என்றுபேர். அந்த விசயபானுமகாராசனுக்கு அவள்வயிற்றில் ஏழுபுத்திரிகள்பிறந்தார்கள். அவர்களுக்கு, (1) சூரியகன்னிகை. (2) சந்திரகன்னிகை. (3) நாககன்னிகை. (4) அமரகன்னிகை. (5) சுரகன்னிகை. (6) சுந்தரகன்னிகை. (7) பாலகன்னிகை எனப்பெயராம். இந்த ஏழு புத்திரிகளும் பிறந்து வளர்ந்துவருகையில், அவர்கள் மாதாவாகிய மாணிக்கமாதேவி தேகவியோகமாயினள். அதன்பின்னர், மேற்படி விசயபானுமகாராசன் கோளதேசத்துக் காடவராசன்புத்திரி வன்னமாதேவியை விவாகஞ்செய்துகொண்டனன். இவள்சொல்லிய துர்யோசனைக்கிசைந்து, மேற்படி விசயபானுராசனனவன் தன்புத்திரிகள் ஏழுபேரையும் வனத்திற்கொண்டுபோய் விட்டுவிடத் தன் மந்திரிகளுக்குக் கற்பித்தான். அந்தக் கற்பனைப்பிரகாரம், அந்த ஏழுபுத்திரிகளையும் வனத்திற்கொண்டுபோய் விட்டுவிட்டார்கள். அவ்வாறு விட்டுவிடப்பட்ட அந்த ஏழுபெண்களையும், அந்த வனத்தில் தபஞ்செய்துகொண்டிருந்த தந்திமாரிஷியானவர் கண்டு,

அவர்களைத் தமது ஆச்சிரமத்திற் சேர்த்துவைத்துப் புத்திரி கள்போல வளர்த்துவந்தார். சத்திரிய ரிஷியாகிய சுராபாண் டியராசன் நாரதமுனியை அழைத்து மேற்படி தந்திமாரிஷியி னிடத்திற்குத் தூதனுப்பிப் பெண்பேசி, அந்த ஏழுபெண்க ளையும் தங்புத்திரர் ஏழுபேருக்கும் பாணிக்கிரகணஞ் செய் யக்கருதி,

(1) காந்தவீரபாண்டியனுக்குச் சூரியகன்னிகையும்,
(2) குலசேகரபாண்டியனுக்குச் சந்திரகன்னிகையும்,
(3) கூட்பாண்டியனுக்கு நாககன்னிகையும்,
(4) உக்கிரதிருஷ்டிப்பாண்டியனுக்கு அமரகன்னிகையும்,
(5) பரஞ்சோதிப்பாண்டியனுக்குச் சுரகன்னிகையும்,
(6) சினம்பலபாண்டியனுக்குச் சுந்தரகன்னிகையும்,
(7) கவுண்டலீயபாண்டியனுக்குப் பாலகன்னிகையும்,

மணமுடிக்கப்பட்டனர்.

இதைச்சுட்டி, சான்றோர்கும்மி, 86-வது கவிமுதல் 90-வது கவிவரையினும் வருமாறு:

86-வது கவி:

“பின்னரிவ்வேழு பெயரும்விதர்ப்பப்
பெருமபுவித் தாரிசர்மாநகர
மன்னன்விசயமா பானுவின்றேவிமா
ணிக்கமாதேவிக்கு மின்னரசே.”

87-வது கவி:

“தோன்றியவள்செத்த பின்னர்மற்கேரளத்
தொல்புவிக்காடவ ராசன்மகள்
ஆன்றபெயர்வன்ன மாதேவியென்னு
மணங்கரவிந்தமார் மின்னரசே.”

88-வது கவி:

“மாவிசயபானு மன்னனுக்காருயிர்
மாதாகியபின்னர் மாவனத்தில்
தேவருங்கண்டு வருந்தக்கொடுபோய்ச்
செலுத்தினதால்மறை மின்னரசே.”

89-வது கவி:

"தந்திமகாமுனி கண்டெடுத்தாங்கு
வளர்த்தசுரகன்னி சந்திரகன்னி
முந்தியசூரிய கன்னிசுந்தரகன்னி
முக்கியமாகிய மின்னரசே."

90-வது கவி:

"ஆடரவக்கன்னி மாபாலகன்னி
அமரர்கள் கன்னிகை யாகிவளர்
நீடியபெண்க ளெழுவரைவேட்டனர்
நீர்நிலம்போற்றிய மின்னரசே."

(க0) இந்தப்பிரகாரம் மேற்படி ஏழுபுத்திரர்களுக்கும் விவாகம் நிறைவேறிச் சிறிதுகாலஞ்சென்றபின், சுராபாண்டியராசாவாகிய காந்தமாரிஷியானவர் தன் புத்திரர்களுக்கும் தன் சுற்றத்தார்களுக்கும் இனி நடந்துகொள்ளவேண்டிய காரியங்களை எடுத்துக்கூறி, சகல திட்டங்களுஞ் செய்தபிறகு 'தக்ஷண கயிலாசம்' எனப் பெயர்பெற்ற பொதிகைமாமலைக்குப்போய் அவ்விடத்தில் தவநிலையில் வீற்றிருந்தார்.

இதைச்சுட்டி, சான்றோர்கும்மி, 94-வது கவி கூறுவது:

"பின்னரமிர்த மெனும்பெயர்பாண்டிப்
பெரியவன் றென்மலையைச்சார்ந்து
மன்னுமகத்திய மாமுனியைக்கண்டு
மற்றவ்விடத்தினில் மின்னரசே."

"சித்தனுக விருந்தனன்."

(கக) தங்கள் பிதாவாகிய சுராபாண்டியராசன் சந்தனுசலம் எனப் பெயர்கொண்ட பொதியமாமலைக்குத் தவஞ்செய்யப்போய்விட்டபிறகு, காந்தவீரபாண்டியன் முதலான ஏழுபாண்டியர்களும் ஒருநாள் வனவேட்டையாடுதற்குப் போயிருந்தகாலத்தில், வேட்டைகளாடிப் பசிதாகத்தால் தவித்து விடாய்த்துப்போயினர். அப்போது மூத்தவனுகிய காந்தவீரபாண்டியன் தன்தம்பி குலசேகரபாண்டியனைக் கூப்பிட்டு, "அதி

கத்தாகயிருக்கிறது, நீபோய் இந்தவனத்திலிருக்கின்ற கற்ப கங்களில் அமுதம் இறக்கிக்கொண்டுவா" என்றான். இதைச் சுட்டிய சான்றோர்கும்மி, 95-வது, 96-வது, 97-வது கவிகள் :

95-வது கவி :

" சித்தனாகவிருந்தபினிப்போது
செப்பியபாண்டி யெழுவர்களும்
அத்திரசத்திரத் தோடொருநாள்வனத்
தாடகத்தாமரை மின்னரசே."

96-வது கவி :

" வேட்டைகளாடும்படி போயிருக்கையி
லேமிகுதாபமுண்டாயினதால்,
நாட்டங்களிப்புற வேகாந்தவீரிய
நாடனுமாகம மின்னரசே."

97-வது கவி :

" நீதறுநற்குலசேகரனைப்பார்த்துச்
சென்றுவனத்திற்பனையமிர்தங்
கோதறநீயிறக்கிக்கொடுவாவென்று
கூறியனுப்பினன் மின்னரசே."

அந்தப்படிக் குலசேகரபாண்டியன்போய், அமுதவித்தை முறைப்பிரகாரம் கற்பகத்தில் அமுதமிறக்கி முதல்தானுண் டுகொண்டு, மீந்ததைத் தமையனிடத்திற்குக் கொண்டுவந் தான். அவன் ,முந்தி யமுதம் உண்டது தெரிந்துகொண்டு, அவன்மீது மிகுகோபங்கொண்டு, அவனைச்சபித்து, ' நீ யரு மைத்தொழிலாகிய இந்த அமுதவுற்பத்திசெய்யுதற்கு அயோ க்கியனாய்ப்போனபடியால், நீ தென்தேசத்திற்குப்போய் மீன் பிடித்துச் சீவனம்பண்ணக்கடவை' எனச்சொல்லி யனுப்பி விட்டான். அந்தப்பிரகாரம், குலசேகரபாண்டியன் தென் பூமிநோக்கிப்போய் மணவூரிற்சேர்ந்து தமையன்வாக்குப் படி மீன்பிடித்துச் சீவனம்பண்ணிக்கொண்டிருக்கையில், மணவூரிலிருந்து நாடாண்டுவந்த சமணராசன், குலசேகர பாண்டியனை ஒருநாள்கண்டு, இவனுடைய பூர்வோத்திரத்தை

விசாரித்தறிந்துகொண்டு, தன் புத்திரி சுலோதையம்மாளை அவனுக்கு மணமுடித்துக்கொடுத்துத் தன் பட்டத்துக்குப் புத்திரனில்லாததால், மேற்படி குலசேகரபாண்டியனுக்குப் பட்டங்கட்டி அந்த நாடாளவைத்தான். குலசேகரன் முன்னே மீன்பிடிக்குந்தொழிற் செய்துவந்தமையால், கொடியில் மீன் வடிவமைத்து மீனக்கொடிகட்டி சந்திரகுலத்துக்கு அரசனாகித் தன் வமிசத்துக்குரிய பாண்டியன் என்னும் பெயர்பெற்று விளங்கலாயினன். இவனுடைய வமிசத்திலுதித்த பாண்டியர்கள் நெடுங்காலம் பாண்டிநாடாண்டுவந்தனர்.

இதைச்சுட்டி, சான்றோர்கும்மியில்வரும் செய்யுட்கள் :

98-வது கவி :

" அப்படியேயவன் போகிமுதலி
லருந்திமிஞ்சினதை யண்ணனிடஞ்
சொற்படிதப்பிக் கொடுவந்ததாற்குல
சேகரன்றேமறு மின்னரசே."

99-வது கவி :

" பாண்டியறுவரையும் விட்டுநீங்கிப்
பரிந்துதென் பூமிக்குப் பாத்தியமாய்ப்
பூண்டவளமண னூரெனும்பூமி
புரக்குஞ்சமணனே மின்னரசே."

100-வது கவி :

" அடுத்துமீன்பிடிக்குந்தொழிலெப்போது
மாற்றிவருகைபி லேயொருநாள்
எடுக்குங்கீர்த்திச் சமணனிவனைக்கண்
டேவிருத்தாந்தத்தை மின்னரசே."

101-வது கவி :

" தூயவிசாரணை செய்துதன்புத்திரி
சுலோதையை யாவருந்தாமறிபத்
தீ பின்முன்னீந்து தனக்குயராணிலாத்
தீமையினன்மலர் மின்னரசே."

102-வது கவி :

" அரசவனுக்குங் கொடுத்தனன்மா நிலம்
யாவையுமக்குல சேகரனூர்
வருபுனலோடிய மீன்பிடிக்குந்தொழில்
மாறுதுசெய்தலான் மின்னரசே."

103-வது கவி :

" மச்சக்கொடிகட்டிச் சந்திரகுலத்துக்கு
மன்னவனுகிப் பலவுயிர்க்கோ
ரச்சமில்லாம லரசாண்டிருந்தன
னம்மனூரினின் மின்னரசே."

(கஉ) காந்தவீரபாண்டியனுனவன் தன் தம்பிமார்களுள் ஒருவனுகிய சினம்பலபாண்டியன் கற்பகவிருக்ஷங்களாகிய பனை, தெங்கு, ஈந்து என்னும் மூவகை விருக்ஷங்களில் விஞ்சை மந்திரமுறைப்படிக்கு அமுதமிறக்கி, சகலரும் அமுதபானஞ்செய்யும்படி சத்திரத்தில்வைத்துத் தருமம்நடத்திவரக் கட்டளைசெய்தான்.

இதைச்சுட்டி, சான்றோர்கும்மி, 124-வது, 125-வது கவிகள் வருமாறு :

124-வது கவி :

" நற்காந்தவீரிய நாடன்சினம்பல
நாடனைப்பார்த்து நமதுகுல
விற்பத்தியாம்பனை யீந்துதென்மூன்று
விருட்சத்திருந்தொளிர் மின்னரசே."

125-வது கவி :

" அமிர்தபான மிறக்கிச்சகலர்
களுமருந்தும்படி சத்திரத்தில்
கமழவைத்தறஞ் செய்யெனப்பற்பல
கட்டளையிட்டனன் மின்னரசே."

தன் தமையன் காந்தவீரபாண்டியன் கட்டளைப்பிரகாரம், சினம்பலபாண்டியன் கற்பகங்களில் விஞ்சைமந்திர முறைப்

படிக்கு* அமுதமிறக்கித் தருமம்நடத்திவருகிற நாளையிலே ஆதிச் சங்கராசாரியார் தமது சிஷர்களோடு வடதேசத்திற்கு யாத்திரைபோகையில், சினம்பலபாண்டியன் வானவமுதமாகிய கற்பகவமுதமிறக்கிவைத்து தருமம் நடத்திவந்த விடத்திற்குவந்து, சினம்பலபாண்டியன் விஞ்சைமந்திரப் பிரயோகத்தால் அந்தரத்தில் உற்பத்தியாகின்ற மதுரம்பொருந்திய அமுதமிறக்குஞ் சித்திரத்தை மிகுந்த பிரமிப்புடன்பார்த்து மேற்படி சினம்பலபாண்டியனை வணங்கி, அவனை யிணக்கித் தனக்குக் குருவாகவைத்து மேற்படி விஞ்சைமந்திர வுபதேசம்பெற்றுக்கொண்டனர். அதுமுதல் சினம்பலபாண்டியனுக்கு விஞ்சைமந்திரம் பலிக்காதுபோனதால், தனக்கு நேரிட்ட விபத்தை நினைத்து மிகு துயரமுற்றோனாயினன். இதைச் சுட்டி, சான்றோர்கும்மி, 128-வது கவிமுதல் 131-வது கவிவரையினும் வருமாறு :

128-வதுகவி

"வந்தனாளும்பிகை மைந்தனுஞ் சங்கர
மாமுனிமாணுக்கர் தங்களுடன்
அந்தமிகும்வட தேசத்துக்கியாத்திரை
யாகச்செலும்போது மின்னரசே."

129-வது கவி :

"எங்கும்புகழுஞ் சினம்பலன் விச்சையா
லின்னமுதிறக்கும் வகைநோக்கி
"அங்கவன்பாலி லடைந்துபணிவொடும்
அம்மந்திரத்தினை மின்னரசே."

இதில், 'விச்சையால்' என்பதற்கு "விஞ்சை மந்திரப்பிரயோகத்தால்" என்பது பொருளாம்.

130-வது கவி :

"தனக்குபதேசிக்கச் சொல்லச்சினம்பலன்
தான்விதிதன்னை மிகமறந்து
கனக்குருதானாகச் சங்கரமாமுனி
காதினிலோதினான் மின்னரசே."

* விஞ்சை மந்திரப்பிரயோகத்தாலமுதிறக்கியது புராண சித்தாந்தம்.

131-வது கவி:

தினைகுற்றத்துக் குள்ளாகிவிச்சை
யொழிந்ததனல் வழக்கப்படிக்குக்
கோதிலமிர்த மிறக்கவராமல்
குலேகுலேந்தானெளிர் மின்னரசே."

இந்தப்பிரகாரம், சினம்பலபாண்டியனுக்கு விஞ்சை மந்திரப்பிரயோகம் பலிக்காதுபோனபின்பு, காளிகாதேவியின் அனுக்கிரகத்தால், கற்பகத்தில் தாவி அமுதமிறக்கும் முறை பயின்று, அமுதவுற்பத்தி செய்துவந்தனன். காந்தவீரபாண்டியன் இதையறிந்து, சினம்பலபாண்டியனை அழைத்து, நடந்தகாரியங்களை விசாரித்து, அவன் விதிமறந்து செய்தகுற்றத்திற்குச் சாபம்விதித்தான். உடனே சினம்பலபாண்டியன் தன் குடும்பசகிதமாய் வட திராவிடநாடுவிட்டு நீஙகி, சோழ மண்டலத்திலுள்ள ஏனநாவலூருக்குவந்து அங்ஙனம் வாசஞ் செய்துகொண்டிருந்தான்.

இதைக்குறித்த சான்றோர்கும்மி, 138-வது, 139-வது கவிகள் வருமாறு:

138-வது கவி:

"ஆகியபின்னர்ச் சினம்பலபாண்டியன்
ஆகமமாரண நாற்கலைகள்
சேகறவாராய்ந் திருக்குங்காந்தவீர
தென்னவன்சாபத்தான் மின்னரசே."

இந்தக்கவியில், "ஆகமமாரண நாற்கலைகள் சேகறவாராய்ந்திருக்குங் காந்தவீரதென்னவன்" என வந்திருப்பதற்கு ஆகமங்கள், வேதங்கள், நாலாகலைகள் குற்றமறக் கற்றறிந்த காந்தவீரபாண்டியன்" என்பது தாற்பரியமாம்.

139-வது கவி:

"எப்பொழுதுந்தன்னை விட்டுநீங்காத
வுறவினரோடவ் விடத்தைவிட்டுப்
பப்பியசோழ மண்டலத்தினுவலூர்ப்
பார்வந்துசேர்ந்தனன் மின்னரசே."

அவ்வாறு சினம்பலபாண்டியன் அந்த ஏனநாவலூரில் தன் ஏழுபுத்திரரோடு வாசஞ்செய்தான். அந்தப் புத்திரருக்கு,

ஏனாதிபாண்டியன்,
செயதுங்கபாண்டியன்,
அளகேசபாண்டியன்,
விக்கிரமபாண்டியன்,
மதுலபாண்டியன்,
கமலபாண்டியன்,
இரணசூரபாண்டியன்,

என்றுபெயராம்.

இதைச்சுட்டிச் சான்றோர்கும்மி, 140-வது கவியிற் கூறியிருப்பது:

"சினம்பலனுக்கேனாதிப்பத்தனுஞ்செய
துங்கனளகேசன் விக்கிரமன்,
இனமதுலன்றிங் கமலன்மாரண
சூரனெழுவர்கள் மின்னரசே."

"மைந்தர்பிறந்தனர்."

இங்ஙனம் ஏனாதி, செயதுங்கன், அளகேசன், விக்கிரமன், மதுலன், இரணசூரன என்றுவரும் பாண்டியருக்குத் தாமிர சாதனத்தில் குஞ்சரன், விந்தை, சுந்தரன், கனகன், திலகன், சுந்தரவாகு எனப் பெயர்கள்வந்து வழங்குகின்றன.* சினம்பலன் மரபினில் இரண்டுபேர் காவேரியுடைப்பு அணைக்கட்டிற், கூடைதொடாதுபோனதற்காக வன்கொலையாய் மடிந்து போய்விட்டனர்.

இங்ஙனங் கூறியிருக்கிற சான்றோர்குலப் பூர்வ உற்பத்தியால், சான்றோர்குலத்தவர்களுக்குத் தந்தைவழி சூராபாண்டிய மகாராசன் வமிசமும், ஒருசாரார் தாய்வழி சங்கருடமகாராசன் வமிசமுமானதால், இருவழியாலும் சான்றோர்குலத்தவர் பூர்வ சத்திரியகுலத்திலுதித்தவர்கள் என்பது ருசுவாகின்றது. இதற்குப்பிற்பாடு சினம்பலபாண்டியன் புத்திரர்கள்,

---

* தாமிரசாதனப்பேர்கள் பெரும்பாலும் சத்தகன்னிகளின் பெயர்கள் ஓட்டியவைகளாயிருக்கின்றன.

காஞ்சிபுரத்திலிருந்து, தொண்டைவளநாடாண்டு, தொண்டைமண்டலச் சான்றோர் எனப் பெயர்பெற்றிருந்தனர்.

இனி நான்காவதுபிரிவுப் படங்களுக்குப் பொருளுரை கூறுவோம்.

(4) சான்றோர்குலத்து விருதுகளின் படங்களும், சான்றோர்காசுப்படமும்.

சான்றோர்குலத்துக்குரிய இராச சின்னங்களுக்கு விபரம் வருமாறு :

(i) a. சிங்கமுகத்தண்டிகைப்படம்.

சிங்கவடிவம் இராச சின்னங்களிலொன்றானமையால், சிங்கமுகத்தண்டிகை பூர்வத்தில் அரசகுலத்தவர்கள் ஏறுஞ் சிவிகையாம். சான்றோர்குல மேன்மக்கள் நாளதும் இவ்வகைத் தண்டிகைவைத்து வழங்கிவருகிறார்கள்.

b. பஞ்சவர்ணப்பாவாடைப் படம்.

இதுவும் இராசசின்னங்களில் ஒன்றாகும்.

(ii) இரட்டைவெள்ளையானைப்படம்.

இதுவும் இராசசின்னங்களிலொன்றாம்.

(iii) ஆராய்ச்சி மணிப்படம்.

ஆராய்ச்சிமணிக்கு 'அசையாமணி' என்றும்பேர். பூர்வகாலத்தில் குடிசனங்களில் துன்பத்துக்குள்ளானவர்கள் அநியாயம் அனுபவிக்கும்வேளைகளில், அவ்வாறு அநியாயம் அனுபவிப்பவன்போய், அரண்மனைவாசலிற் கட்டியிருக்கும் அந்த அசையாமணியை அசைக்கவே, அரசன் தக்ஷணமே அவனைத் தன் சமுகத்திற்கு வருத்தி, அவன் வழக்கைத் தீரவிசாரித்து நியாயஞ்செய்வது பூர்வ தமிழரசர் வழக்காம். இதற்கென்று அரண்மனைவாசலில் தூக்கிவைத்திருக்கும் பெரியமணிக்கு 'ஆராய்ச்சிமணி, அசையாமணி' எனப் பெயரிருந்தது. "ஆராய்ச்சிமணி,* A bell attached to a royal palace, rung by those who seek for justice from the king." "அசையாமணி," A bell seldom rung; attached to the royal palace

* Vide, Dr. Winslow's Tamil and English Dictionary, p. 9, 71.

to inform the sovereign of any calamity or other extraordinary event, "ஆராய்ச்சிமணி."

(*iv*) இரட்டைச்சங்குப்படம்.

இதுவும் இராசசின்னங்களிலொன்றும்.*

(*v*) இரட்டை வெண்குடைப் படம்.

இதுவும் இராசசின்னங்களிலொன்றும்.

(*vi*) இரட்டைச்சுருட்டிப் படம்.

சுருட்டிக்கு ஆலவட்டம் என்றும் பெயர். இதுவும் இராச சின்னங்களி லொன்றும்.

(*vii*) இரட்டை வெண்சாமரப்படம்.

சாமரத்துக்குச் 'சாமரை' என்றும் பெயர்வழங்கும். அது கவரிமானின் தூய்ய வெண்ணிறம்பொருந்திய வாலிஞல் உண் டுபண்ணப்படுகிறபடியால், அதற்குக் 'கவரி' எனவும் பெயர் வரும். இதுவும் இராசசின்னங்களிலொன்றாகும்.

(*viii*) சிதம்பரச்சாதனக்கொடிப்படம் இரண்டு. அவை களில் ஒன்று சிங்கக்கொடிப்படம்; ஒன்று ரிஷபக்கொடிப் படம். ஒன்றிற் சிங்கரூபம் அமைத்திருப்பதால், சிங்கக்கொடி யென்றும், ஒன்றில் காளைரூபம் அமைத்திருப்பதால், ரிஷபக் கொடியென்றும் பெயர்களுண்டாயின. சிங்கமும், ரிஷபமும் இராசசின்னங்களாகும். சான்றோர்குலத்தவர்கள் தங்கள்குல நாயகியாகிய பத்திரகாளியம்மையினது வாகனஞ் சிங்க மும், தங்கள் குலநாயகராகிய சிவபிரானதுவாகனம் ரிஷபமு மானதால், அவ்விருசின்னங்களையுந் தங்கள் துவசங்களி லமைத்துக்கொண்டனர்.

இந்தப்படிக்குச் சான்றோர்குலத்தவர்கள் பூர்வமுதல் இராச சின்னங்கள் பெற்றுவந்திருக்கின்றமையால், அவர்கள் அரச குலத்தவர்கள் என்பது தெளிவாகிறது

---

* சான்றோர் வங்கிசத்தில் முதன்முதல் விக்காதிபாண்டி யன் ரெட்டைச்சங்கை விருதாக ஸ்தாபித்துக் திருமங்கிலியத் திற்கு இருபுறத்திலும் கட்டும்படி, ஏற்பாடுசெய்ததாகச் சுரா பாண்டியபுராணம் கூறுகிறது; cf. சான்றோர்கும்மி, 52-வது, 53-வது செய்யுட்கள்.

இந்தப்பிரகாரம், சான்றோர்குலத்தவர்கள் பூர்வத்தில் இராசவிருதுகள் பெற்றிருந்ததற்கு நூற்சாட்சி இரண்டு இங்ஙனங் கூறுவோம்.

A. சான்றோர்கும்மி, 219 - வது, 220 - வது, 257 - வது, 258 - வது, 259-வது கவிகள் வருமாறு :

219-வது கவி :

"செய்துபிரவஞ்சன் கப்பங்கட்டும்படிச்
செய்தனன்சோழன் மகிழ்ந்துவலங்
கைம்மன்னராகிய சான்றோர்க்குத்தண்டிகை
காகளம்வெண்குடை மின்னரசே."

220-வது கவி :

"சிங்கக்கொடிமேள தாளங்கள்சாமரை
தெய்வவிருது களும்முடியுந்
தங்கச்சரப்பளி மோகனமாலைகள்
தான்கொடுத்தானெளிர் மின்னரசே."

இந்த இரண்டுகவிகளுக்குஞ் சார்புரை.

பிரவஞ்சன் எனப் பெயர்கொண்ட ஓரரசன் சோழராசனைச்செயித்து அவனைத் தனக்குட்படுத்தும்படிக்குச் சேனைகளோடு புறப்பட்டுச் சண்டைக்குவந்தான். அதுகண்டு சோழராசன் காளிபுத்திரர்களாகிய சான்றோர்குலத்தவர்கள் துணையால் மேற்படி பிரவஞ்சராசனைச் செயித்துத் துரத்திவிட்டான். அப்போது சோழன் சந்தோஷப்பட்டு, மேற்படி கவிகளிற் கூறியிருக்கிறபிரகாரம் அவர்களுக்குத் தண்டிகை, கருங்கொம்பு, வெண்குடை, சிங்கக்கொடி, மேளதாளங்கள், வெண்சாமரை, மகுடம், தங்கச்சரப்பணி, மோகனமாலைகள் முதலான இராசவிருதுகள் அளித்தனன்.

257-வது கவி :

"பொன்னாபரண மணிந்துபீதாம்பரம்
போர்த்திவலம்புரி யாம்பணிலம்
பன்னருமாவிரு தாகக்கொடுத்துப்
பராசத்தியாகிய மின்னரசே."

258-வது கவி:

"காளிவரபுத்திரர் நால்வரையுங்கூடக்
காமருவெள்ளானை மேலேற்றி
மேளமொடுதாளம் வாச்சியம்பற்பல
வேண்டுவிருதுகள் மின்னரசே."

259-வது கவி:

"ஓடுநகரம்வலஞ்செய் வித்தேயவர்
ஊர்க்குவிடுத்தனன் மற்றவர்போய்
நாடருங்காளிகா தேவிதிருவடி
நாடிப்பணிந்தனர் மின்னரசே."

இந்த மூன்றுகவிகளுக்குஞ் சார்புரை.

மகாமுனியொருவன் சோழனிடத்திற்குவந்து, 'கடலுக்குள்ளிருக்கின்ற தீவு ஒன்றில் செவ்வந்திப்புஷ்ப விருக்ஷமிருக்கிறது. அதின் புஷ்பங்கள் சிவபூசைக்கு ஏற்ற புஷ்பங்கள்' என்றான். அந்தத்தீவுக்குப்போய் அவ்விருக்ஷத்தைக் கொண்டுவர ஒருவருந் துணிவுகொள்ளமாட்டாதிருக்கையில், சினம்பலபாண்டியன் மரபிலுதித்த செயதுங்கபாண்டியன் நான்போய்க் கொண்டுவருகிறேனெனச் சொல்லி, அரசனிடத்தில் விடைபெற்று, சதுரங்கசேனைகளோடு புறப்பட்டுக் கப்பலேறிப்போய், அத்தீவிற்புகுந்து, அந்நாட்டாரோடு போர்புரிந்து செயம்பெற்று, அந்தச்செவ்வந்திப்புஷ்ப விருக்ஷங்களிலொன்றை வேரோடு தூரோடு பிடுங்கிக்கொண்டுவந்து, சோழன்முன்வைத்தான். அதுகண்டு, சோழராசன் ஆனந்த பரவசமடைந்து, அந்தச்செவ்வந்திப் புஷ்ப விருக்ஷத்தைத் தன்னுடைய நந்தனவனத்தில்வைத்துப் பத்திரமாக வளர்த்துவரக் கற்பித்ததுமன்றி, செயதுங்கபாண்டியனுக்கும் அவன்குலத்தவர்களுக்கும் விலைபெற்ற ஆடையாபரணங்கள், பீதாம்பரம், வலம்புரிச்சங்கு, வெள்ளையானை முதலான விருதுகளளித்து, மேற்படி செயதுங்கபாண்டியனை மேற்படி வெள்ளையானையின்மேலேற்றி, மேளதாள வாச்சியங்களோ

டும், பற்பல இராசவிருதுகளோடும் நகரத்தை வலஞ்சுற்றி வரச்செய்து, மிகவும் மேன்மைப்படுத்திவைத்தான்.

B. அயோத்திமாநகராண்ட தசரதமகாராசன் சான்றோர் குலத்தவர்களுக்கு அளித்த இராசவிருதுகள்.

இதற்கு விபரம் சான்றோர்புராணம், சம்பரன்வதைப்படலத்திற் கூறியிருக்கின்றது.*

சம்பரன் எனப் பெயர்கொண்ட ஒரு அசுரராசன் சுரர்நாட்டைக் கட்டிக்கொண்டு, இந்திரனையும், அவனுடைய குடிகளாகிய தேவர்களையும் மிகவும் இடைஞ்சற்படுத்திவந்தான். அந்தத்துன்பம் பொறுக்கமாட்டாமல், இந்திரனுந் தேவர்களும் அயோத்திமாநகருக்குவந்து, தசரதமகாராசனுக்குத் தெரிவித்து, தங்களுக்கு நேரிட்டிருக்கிற துன்பத்தை நீக்கி இரட்சிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள். அது கேட்டு, தசரதமகாராசன் தன் செங்கோலுக்குட்பட்ட அரசர்களெல்லோரும் போர்க்கோலமாகி, சம்பராசுரனோடு யுத்தஞ் செய்ய வரும்பொருட்டாக தன்னரசுக்குட்பட்ட சகல தேசங்களிலும் பறைசாத்தினன்.

இதைச்சுட்டி, சான்றோர்புராணம், சம்பரன்வதைப்படலம், 8-வது கவியிற் சொல்லியிருப்பது :

"முழங்கினபேரிகை சகடைமுருடுபணைதிமில்பம்பை
முழங்கினவெண்சங்கம் வளைமுந்நீரின்மும்மடங்கு
தழங்கினகாற்கழனெடுவிற் றழங்கினவாய்ப்படுதமரந்
தழங்கினமும்மதயானை தழங்கினவாம்பரிதிரைகள்."

தசரதமகாராசன் பறைசாத்துவித்தது கேட்டு, மற்ற அரசர்களோடு சான்றோர்குலதிலகனை மதனபாண்டியனும்† தன் சேனைகளோடு புறப்பட்டு, தசரதமகாராசனிருந்த அயோத்திமாநகரத்திற்குவந்து, யுத்தத்துக்குக்கூடப் புறப்பட்டான்.

---

* சான்றோர்கும்மி, 81—83, 91—93, செய்யுட்கள்.

† இதைச் சுராபாண்டியபுராணத்தில் வரும் பெயரோடு சமரசப்படுத்துக; சான்றோர்கும்மி, 81—83, செய்யுட்கள் காண்க.

258-வது கவி:

"காளிவரபுத்திரர் நால்வரையுங்கூடக்
காமருவெள்ளானை மேலேற்றி
மேளமொடுதாளம் வாச்சியம்பற்பல
வேண்டுவிருதுகள் மின்னரசே."

259-வது கவி:

"ஓடுநகரம்வலஞ்செய் வித்தேயவர்
ஊர்க்குவிடுத்தனன் மற்றவர்போய்
நாடருங்காளிகா தேவிதிருவடி
நாடிப்பணிந்தனர் மின்னரசே."

இந்த மூன்றுகவிகளுக்குஞ் சார்புரை.

மகாமுனியொருவன் சோழனிடத்திற்குவந்து, 'கடலுக்குள்ளிருக்கின்ற தீவு ஒன்றில் செவ்வந்திப்புஷ்ப விருக்ஷமிருக்கிறது. அதின் புஷ்பங்கள் சிவபூசைக்கு ஏற்ற புஷ்பங்கள்' என்றான். அந்தத்தீவுக்குப்போய் அவ்விருக்ஷத்தைக் கொண்டுவர ஒருவருந் துணிவுகொள்ளமாட்டாதிருக்கையில், சினம்பலபாண்டியன் மரபிலுதித்த செயதுங்கபாண்டியன் நான்போய்க் கொண்டுவருகிறேனெனச் சொல்லி, அரசனிடத்தில் விடைபெற்று, சதுரங்கசேனைகளோடு புறப்பட்டுக் கப்பலேறிப்போய், அத்தீவிற்புகுந்து, அந்நாட்டாரோடு போர்புரிந்து செயம்பெற்று, அந்தச்செவ்வந்திப்புஷ்ப விருக்ஷங்களிலொன்றை வேரோடு தூரோடு பிடுங்கிக்கொண்டுவந்து, சோழன்முன்வைத்தான். அதுகண்டு, சோழராசன் ஆனந்த பரவசமடைந்து, அந்தச்செவ்வந்திப் புஷ்ப விருக்ஷத்தைத் தன்னுடைய நந்தனவனத்தில்வைத்துப் பத்திரமாக வளர்த்துவரக் கற்பித்ததுமன்றி, செயதுங்கபாண்டியனுக்கும் அவன்குலத்தவர்களுக்கும் விலைபெற்ற ஆடையாபரணங்கள், பீதாம்பரம், வலம்புரிச்சங்கு, வெள்ளையானை முதலான விருதுகளளித்து, மேற்படி செயதுங்கபாண்டியனை மேற்படி வெள்ளையானையின்மேலேற்றி, மேளதாள வாச்சியங்களோ

டும், பற்பல இராசவிருதுகளோடும் நகரத்தை வலஞ்சுற்றி வரச்செய்து, மிகவும் மேன்மைப்படுத்திவைத்தான்.

B. அயோத்திமாநகராண்ட தசரதமகாராசன் சான்றோர் குலத்தவர்களுக்கு அளித்த இராசவிருதுகள்.

இதற்கு விபரம் சான்றோர்புராணம், சம்பரன்வதைப்படலத்திற் கூறியிருக்கின்றது.*

சம்பரன் எனப் பெயர்கொண்ட ஒரு அசுரராசன் சுரர்நாட்டைக் கட்டிக்கொண்டு, இந்திரனையும், அவனுடைய குடிகளாகிய தேவர்களையும் மிகவும் இடைஞ்சற்படுத்திவந்தான். அந்தத்துன்பம் பொறுக்கமாட்டாமல், இந்திரனுந் தேவர்களும் அயோத்திமாநகருக்குவந்து, தசரதமகாராசனுக்குத் தெரிவித்து, தங்களுக்கு நேரிட்டிருக்கிற துன்பத்தை நீக்கி இரட்சிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார்கள். அது கேட்டு, தசரதமகாராசன் தன் செங்கோலுக்குட்பட்ட அரசர்களெல்லோரும் போர்க்கோலமாகி, சம்பராசுரனோடு யுத்தஞ் செய்ய வரும்பொருட்டாக தன்னரசுக்குட்பட்ட சகல தேசங்களிலும் பறைசாத்தினான்.

இதைச்சுட்டி, சான்றோர்புராணம், சம்பரன்வதைப்படலம், 8-வது கவியிற் சொல்லியிருப்பது :

" முழங்கினபேரிகை சகடைமுருடுபணைதிமில்பம்பை
முழங்கினவெண்சங்கம் வளைமுந்நீரின்மும்மடங்கு
தழங்கினகாற்கழனெடுவிற் றழங்கினவாய்ப்படுதமரந்
தழங்கினமும்மதயானை தழங்கினவாம்பரிதிரைகள்."

தசரதமகாராசன் பறைசாத்துவித்தது கேட்டு, மற்ற அரசர்களோடு சான்றோர்குலதிலகனான மதனபாண்டியனும்† தன் சேனைகளோடு புறப்பட்டு, தசரதமகாராசனிருந்த அயோத்திமாநகரத்திற்குவந்து, யுத்தத்துக்குக்கூடப் புறப்பட்டான்.

* சான்றோர்கும்மி, 81—83, 91—93, செய்யுட்கள்.
† இதைச் சுராபாண்டியபுராணத்தில் வரும் பெயரோடு சமரசப்படுத்துக; சான்றோர்கும்மி, 81—83, செய்யுட்கள் காண்க.

இதைக்குறித்து, மேற்படி சம்பரன்வதைப்படலம், 9-வது
கவியிற் கூறியிருப்பது :

"வார்முரசிஜெலிகேட்ட சான்றூர்வெண்மதனனென்பான்
றூர்புனையுந்தடந்தோளான் றசரதன்பால்வந்தனனு
னீரலைசூழ்நிலவேந்த னீயெம்மோடினிதிருக்க
வேர்பெறுமிவ்வுலகேழுமெதிர்க்கினுமென்செயுமென்றூன்."

மதனபாண்டியன் கூறிய இவ்வசனங்கேட்டு, தசரதமகாரா
சன் மதனபாண்டியனைச் சேனைதளங்களோடு புறப்பட்டுச்
சம்பரனோடு போர்செய்யத் தன்னோடுகூடப் பயணப்படுத்தி
னன். இவர்கள் புரப்பட்டுப்போகிறபோது, தூதுவர்கள்
சென்று சம்பராசுரனுக்கு தசரதமகாராசன் வரவு கூறினர்
கள். அதுகேட்டு, சம்பராசுரனனவன் தன் சேனைகளோடு
புறப்பட்டு அவர்களுக்கு எதிர்கொண்டுபோய், முன்னணியில்
வந்த மதனபாண்டியனோடு போர்புரிந்து, அவனை மயங்க
வைத்தான். அதுகண்டு, அவன்தம்பி சுந்தரபாண்டியனென
வன் மதனபாண்டியனுக்குத் துணையாகத் தன்சேனைகளோடு
போய்ச் சம்பராசுரனோடு எதிர்த்தான். அதுகண்டு சம்பரா
சுரன் மகன் பூகம்பனுகிறவன் தன் பிதாவுக்குத் துணையாகத்
தன் சேனைகளோடுபோய் யுத்தஞ்செய்தான். அந்த யுத்தத்
தில் பூகம்பன் மடிந்துபோனுன். தன் புத்திரன் மடிந்தது
கண்டு, சம்பராசுரன் அதிகோபங்கொண்டு, 'எங்கடாகாளி
மைந்தன்' எனக் கூவிகொண்டு, மதனபாண்டியன்மேல் மிரு
மூர்க்கத்தோடு சாட, இருவரும் எதிர்த்துப் போர்செய்தார்கள்.

இதைவிளக்கும் மேற்படி சம்பரன்வதைப்படலம், 21-வது
கவி வருமாறு :

"வெங்கொலையாற்றன்மைந்தன்
விளிந்தமைகண்டிறைவெகுண்டு,
சங்கமுழங்கியசேனைச் சகரநீரிடைவந்தா
னெங்கடாகாளிமைந்த னெனப்புகலுநிருதன்முனம்,
பொங்குவளைவாளரிபோன் மதனனும்போர்க்
களத்தெதிர்த்தான்."

இவ்வாறு கடும்போர்செய்துவருகையில், சம்பராசுரன் மிகு பராக்கிரமத்தோடு யுத்தஞ்செய்கிறதைத் தசரதமகாராசன்கண்டு, தன்னோடிருந்த சகலசேனைகளையும் ஒருமுகமாகத்திரட்டி, அசுரப்படைகளோடு மிகு பராக்கிரமத்துடன் போர்புரியவே, சம்பராசுரன் அவர்களுக்கு ஆற்றமாட்டாமல் தோற்றோடிப்போய்விட்டான். அதுகண்டு, தசரதமகாராசன் இந்திரனுக்கு அவன் இழந்துவிட்டநாட்டை மீண்டுமளித்து, அவனை யவன் பதியிற் குடியிருத்திவைத்துவிட்டு, பின்பு மதனபாண்டியனோடு புறப்பட்டு, சதுரங்கசேனைகள்சூழ அயோத்திநகர் வந்து சேர்ந்தான்.

அதைச்சுட்டிய மேற்படி சம்பரன்வதைப்படலம், 32-வது கவி :

"விண்ணுலகத்தவராசி விளம்பினார் விரிசடைமுக்
கண்ணுதலுமனமகிழ்ந்தான் கடல்ஞாலந்தொழுதனவா
லண்ணலும்வந்தயோத்தி நகரடைந்தான் பிட்டாபுரத்தி
யுண்ணினைவால்வளர்ந்த மைந்தரயோத்தியர்கோனுட
னடைந்தார்."

அவ்வாறு அயோத்திமாநகரம்வந்து சேர்ந்தபின், மதனபாண்டியனும் அவனைச்சேர்ந்த சான்றோர்குலத்தவர்களும் மேற்படி யுத்தத்திற்காட்டிய புஜபலபராக்கிரமங்களையும், அவர்களுடைய யுத்திபுத்திகளையுந் தசரதமகாராசன்கண்டு வியப்புற்றோனாய், மேற்படிபாண்டியனுக்கும் அவன்குலத்தவர்களுக்கும் மிகுமரியாதைகள்செய்து, அவர்களைப்பார்த்து, "நீங்கள் சம்பராசுரனிடத்திற் பறித்துக்கொண்ட இரண்டு சங்குகளையும் உங்களுக்கே தந்துவிடுகிறேன்" எனச்சொல்லி, சம்பரனிடத்தில்பறித்த இரட்டைச்சங்கு, மகாசிங்காரம்பொருந்திய பொற்றண்டிகை, முத்துக்குடை, வெண்சாமரையாகிய கவரி, பகல்தீவட்டி, பஞ்சவர்ணப்பாவாடை முதலான விருதுகளுமளித்து, அவர்களுடைய நகரத்திற்கு அனுப்பிவிட்டான்.

இதைச்சுட்டி, மேற்படி சம்பரன்வதைப்படலம், 33-வது கவி வருமாறு:

"வந்தவர்க்குச்சம்பரன்கை வளைரண்டுமமக்கென்று
னந்தமுள்ளபொற்சிவிகை யணிமுத்தக்குடைகவரி
மூந்துநெடும்பகற்றீபம் பாவாடைமுதற்பலவு
மிந்தவளமனைத்தும்பெற் றிணையில்லாரேகலுற்றார்."

மேற்கூறிய சரித்திரத்தைப் பார்க்கும்போது, தசரதமகாராசன்காலத்தில், சுராபாண்டியன் வமிசத்தவர்களாகிய சான்றோர்குலத்தவர்கள் திராவிடநாட்டில் வாசஞ்செய்து, புஜபல பராக்கிரமர்களாய், தசரதமகாராசன் முகத்திற்கும் எலுமிச்சம்பழமென விளங்கியிருந்தனரென்றும், தசரதமகாராசன் மேற்படியார்களுக்கு அளித்த இராசவிருதுகள் சான்றோர் குலத்துத் தாமிரசாதனத்திற்கண்டிருக்கிற இராசவிருதுகளுக்கு ஒத்திருக்கின்றனவென்றும், ஆகவே, சான்றோர்குலமூதாக்கள் பூர்வத்திற் சிறந்த இராசவிருதுகள் பெற்றிருந்தது நிசம் என்றும் தெரியவருகின்றது.

சம்பராசுரனுக்குந் தசரதமகாராசனுக்கும் நேரிட்டயுத்தங் கம்பராமாயணத்திலும் வரையப்பட்டிருப்பதால், மேற்கூறிய சரித்திரத்தின் உண்மை துலங்குகின்றது.

கம்பராமாயணம், உயுத்தகாண்டம், விடைகொடுத்தபடலம், 17 - வது கவி:

"சம்பரன்றன்னைவென்று தயரதனிருந்தகாலத்
தும்பர்கள்பெருமானீய்ந்த வொளிமணிக்கடகத்தோடுங்
கொம்புடைமலையுந்தேருங் குரகதக்குழுவுந்துாசு
மம்பரத்தனந்தர்நீத்தா னலரிகாதலனுக்கீய்ந்தான்."

இங்ஙனம், "சம்பரன்றன்னைவென்று தயரதனிருந்தகாலம்" என்பதற்கு, 'தசரதமகாராசன் சம்பராசுரனைச் செயித்திருந்தகாலம்' என்பது பொருளாம்.

இதனால், சம்பராசுரனுக்குந் தசரதமகாராசனுக்கும் யுத்தம் நேரிட்டது நிசம் என விளங்குகின்றமையால், மேற்படி தசரதனுக்குத் துணையாகச் சான்றோர்குலதிலகனாகிய மதன

பாண்டியனும் சுந்தரபாண்டியனும் போனதும் ருசுவாகின்றது. தசரதமகாராசன்காலத்திற் சான்றோர்குலத்தவர்கள் மகுடாதிபதிகளாய் திராவிடநாட்டில் நாடாண்டிருந்ததும் இதனால் தெரியவருகின்றது.

இங்ஙனஞ் சான்றோர்குலத்தவர்களுக்குரிய இராசவிருதுகளுக்கு விபரங்கூறியானபடியால், இனித் தங்கக்காசுப்படத்துக்கு விபரஞ்சொல்லுவோம்.

(ix) சான்றோர் தங்கக்காசுப்படம்.

காசுகள்போட்டு நாட்டில் வழங்கிவரச்செய்வது மகுடாதிபதிகளாகிய அரசருக்கேயுரியது. ஒருகாசு உண்டாயிருந்தால், அந்தக் காசுபோட்டவர்கள் அரசர்கள் என்பது தானாக விளங்குகின்றது. தமிழ்நாடுகளிற் பூர்வமுதல் உயர்தரமாற்றுத் தங்கக்காசுகள் உண்டுபண்ணப்பட்டு, நாட்டில் வழங்கிவந்திருக்கின்றன. அந்தக் காசுகளிலெல்லாம் உயர்ந்தமாற்றுக் காசு சான்றோர்காசாம். தொல்காப்பியத்தில் தமிழரசர்களுக்குச் 'சான்றோர்' எனப் பெயர்வந்திருப்பதால், 'சான்றோர் காசு' என்பதற்குத் 'தமிழ்நாட்டரசர் போட்டகாசு' என்பது பொருளாகும்.

'சான்றோர்' என்னும்பெயர் பிற்காலத்தில் 'சாணர்' என மரூஉவாயதால், சான்றோர்காசுக்குச் 'சாணர்காசு, சாணரக் காசு' எனப் பெயராயிற்று. 'சான்றோர்காசு, சாணரக்காசு' என்னும்பெயர்கள் தொன்றுதொட்டுத் தமிழ்நாட்டுக்குலத்தவர்கள் சகலர்வாயிலும் யாதொரு விகற்பமுமின்றிப் பிறந்து இயல்பாகச் சொல்லப்பட்டு வந்திருக்கின்றன. எக்குலத்தவரை வினவினாலுஞ் சாணரக்காசு உண்டென்றும், அதிலும் உயர்ந்தமாற்றுத்தங்கம் இல்லையென்றுஞ் சொல்லுவார்கள். முக்கியமாகக் காசுக்கடைச் செட்டிகளெல்லாரும் ஒன்றுபோல் சாக்ஷிபகருகின்றனர் இந்த விஷயத்திற் பார்ப்பார், செட்டிகள், சூத்திரர், பஞ்சமர்களெல்லாரும் ஒன்றுபோல சான்றோர்காசு உண்டென்றும், அதில்பனைவிருக்ஷமுதலிய முத்திரை அடையாளங்கள் உண்டென்றுஞ் சொல்லுகிறார்கள். நாட்டி

லுள்ளவர்களெல்லாரும் உண்டென்று சாட்சிபகருகிற காசு முன் தமிழ்நாட்டில் வழங்கிவர இல்லையென்று யார்சொல்லத் துணிவான்? மேற்படிகாசு உண்டென்பதற்கு இது உலகவழக்குச்சாட்சியாம். அந்தக் காசை ஒருவன் கண்ணிணுற்காணு திருந்தபோதிலும், மேற்படி காசு உண்டென்பதற்கு உறவரும் பகைவருமாகிய தமிழ்நாட்டவரெல்லோருஞ் சொல்லி வருகிற சாட்சிபோதுமானதாம். நாடெல்லாஞ் சொல்லுஞ்சாட்சி ஒருகாரியம் உண்டென்று நம்புதற்குப் போதாதா? மேற்படிகாசு உயர்ந்தமாற்றுத் தங்கமானதால், ஆபரணங்கள் சமைப்பதற்கு அழிபட்டுப்போனமையால், சான்றோர்காசுகள் இக்காலத்தில் அருகிப்போய்விட்டதாகத் தோன்றுகின்றது. ஆயினும் அந்தக்காசு புதையல்களிலாவது, பூர்வ நகைகளிலாவது, சேர்ந்திருக்குமென்று நம்புதற்கேதுவிருப்பதால், சான்றோர்குலப் பூர்வோத்திரந் துலங்கும்படி செய்திருக்கிற கடவுள் ஏற்றகாலத்தில் அந்தக்காசு வெளியாகவுங் கிருபைபுரிவாரென்றும் நம்பலாம். உத்தேசம் இருபது வருடங்களுக்குமுன், விருதுபட்டிக்குச் சமீபமான ஓரிடத்தில் மழைத்தண்ணீரானது அறுத்துப் பிடுங்கிக்கொண்டுபோன ஓரிடத்தில், மாடுமேய்க்கிற பிள்ளைகள் கண்டெடுத்த புதையலொன்றில் சான்றோர்காசுகளிருந்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறோம்.

காசுகளெல்லாம் அழிந்துபோனபோதிலும், அந்தக்காசு உண்டாயிருந்ததென்பதற்குத் தமிழ் நாட்டாரெல்லாரும் ஒன்றுபோல சொல்லிவருகிற சாட்சி போதுமான சாட்சியாகும். இந்தக்காசுக்கிருக்கிறதுபோலொத்த சாட்சிகள் பூர்வ பரம்பரைக்கதைகளிலெதற்கும் இல்லையெனத் துணிவுகொண்டுரைக்கலாம். இது உலகவழக்காகிய சாட்சி.

சான்றோர்காசு பூர்வத்திலுண்டாயிருந்ததற்கு நூற்சாட்சிகளுமுண்டு. அவை வருமாறு:

(1.) அங்கிலேய ஆசிரியராகிய உவின்சிலோ (Dr. Winslow.) பண்டிதர் எழுதிய அகராதியில், 'காசு' என்னும் பெயருக்கடியில் "சான்றேன்காசு—சாணுரக்காசு, S. A name of the

பொற்காசு, said to have been invented by one of the சான்ரூர் Caste." என்கிருர். இதில், 'சான்ருேர்காசு' உண்டென்று தெளிவாய்ச்சொல்லியிருக்கிறது. இந்தப்படி 'சான்ருேர்காசு' உண்டாயிருக்க, சான்ருேர்குலத்தவர்கள் பூர்வத்தில் நாடாளவில்லையென்று யார்சொல்லத்துணியலாம்? அவர்கள் போட்டகாசு பொன்னிலெல்லாம் உயர்மாற்றுப் பொன்னுகிய உயர்ந்த தங்கத்தில் உண்டுபண்ணப்பட்டிருப்பதால், அவன் குலமும் குலங்களிலெல்லாம் உயர்குலமென்று அந்தக்காசு தானே பறைசாத்திவருவதுபோலிருக்கின்றது. அந்தக்காசு தமிழரசு ஒழிந்துபோகிறகாலம்வரையினும் மாறிமாறிப் போடப்பட்டுவந்ததாகத் தோன்றுகின்றது. அந்தக்காசுகள் குறைவுபடாது நெடுங்காலம் வழங்கிவந்திருப்பதினுலேதானே, நாடெல்லாம் நெடுங்காலம் அந்தக்காசுகள் காலுக்குள்ளுங் கைக்குள்ளுங் கிடந்து புழங்கியவைபோலாயின.

(2.) அங்கிலேய ஆசிரியராகிய இரட்டிலர் என்பவர் (Dr. Rottler) எழுதிய அகராதியில், 'காசு' என்னும்பெயருக்கு அடியில் " சாணுரக்காசு; a gold coin having the impression of a toddy man." என்று எழுதுகிருர். இதில், சான்ருேர்காசில் தாலவிருக்ஷமுதலிய தமிழரசகுலக் குறியடையாளங்கள் பதிந்திருந்ததெனச் சொல்லியிருப்பதால், மேற்படி இரட்டிலராசிரியர் மேற்படி அகராதி எழுதுகிறகாலத்தில் இந்த அரசகுலக் குறி அடையாளங்களையுடைய காசுகள் நாட்டில் வழங்கிய பழக்கமுண்டாயிருந்தது நிசமெனத் தெரியவருகின்றது.

இந்தக்காசு போட்டுவருகிறகாலத்தில், இந்தத் தமிழரசகுலக் குறியடையாளங்கள், அரசகுலமகிமையென நாட்டில் ஒப்புக்கொள்ளப்பட்டு நன்குமதிக்கப்பட்டு வந்திருப்பது விளங்குகின்றது. குலத்துக்கு ஈனமான குறியடையாளங்களை அரசர்கள் ஒருபோதுங் காசுகளிற் பதிக்கமாட்டார்களே! அன்றியும் இந்த அமுதவுற்பத்திக் குறியடையாளங்கள் ஒருகுலத்துக்குரிய பூர்வ மகிமைக்கேற்ற குறிப்புகளாயிராதிருக்குமேயாயின், தாமிரசாதனத்தில் அப்படங்களைச் சித்திரித்துக் காட்ட ஒருபோதுந் துணியார்களே.

இந்தப்படி சான்றோர்குலக் குறியடையாளங்களோடு போடப்பட்ட காசு உண்டாயிருக்க,சான்றோர்குலத்தவர்கள் பூர்வத்தில் நாடாளவில்லையென்று யார்சொல்லத்துணியலாம்?

(3.) சாலிவாகன சகாப்தம் 1255-ல் உற்பத்தியான திருவென்காட்டுச் சான்றோர்குலத்துத் தாமிரசாதனத்தில், சான்றோர்காசுப்படமும், தாலவிருக்ஷப்படங்களும் அமைந்திருக்கின்றன. நாளது சகாப்தம் 1796 ஆனமையால், மேற்படி சாதனம் இதற்கு 541 வருடங்களுக்கு முன்னுள்ளதாகும். ஆனதால், 541 வருடங்களுக்குமுன்னே மேற்படி காசு இருந்ததாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.* சான்றோர்குலப் பூர்வீகமகிமைகளைக்காட்டும் படங்களோடு, காசுப்படமும் தாலவிருக்ஷப்படங்களுஞ் சாசனத்தில் அமைந்திருப்பதினால், அவைகள் மேற்படிகுலப் பூர்வமகிமைகளைக்காட்டும் படங்களாம். மேற்படி காசுகள் உண்டுபண்ணப்படுகிறகாலத்தில், பனைவிருக்ஷங்கள் எவ்வாறு சான்றோர்மகிமைக் குறியடையாளங்களாக இருந்தனவோ, அவ்வாறே, மேற்படி தாமிரசாதனம் உண்டுபண்ணப்படுகிறகாலத்திலும் மேற்படி கற்பக விருக்ஷங்கள் சான்றோர்குலமகிமைக் குறியடையாளங்களாக இருந்துவந்ததுந் தெரியவருகிறது. பின்னுண்டான தாமிர சாதனத்தில் கற்பகவிருக்ஷக்குறியடையாளப் படங்களிருப்பதால், முன்னுண்டான காசிலும் மேற்படி கற்பவிருக்ஷப் படம் முத்திரிக்கப்பட்டிருந்தது உண்மையாகும்.

(4.) தக்ஷண இந்தியாவிலுள்ள சக்கரபுரிப்பட்டணத்திற் பூர்வம் செங்கோலோச்சிய சுராபாண்டிய மகாராசன்காலத்தில் ஒருபக்கந் தாலவிருக்ஷ உருவும், ஒருபக்கஞ் சிங்க உருவும், முத்திரிக்கப்பட்டு, அறுபத்தாறு பாண்டியர் பெயருக்

---

* வேனிஸ்வர்த்தகரது காசைத் தப்பிதமாய்ச் 'சான்றார் காசு' என்று சொல்வதாக ஐரோப்பியர் சிலர் கூறுவது பிசகு. ஷெ வர்த்தகரது காசுகள் 16-ம் நூற்றாண்டுக்கும் 18-ம் நூற்றாண்டுக்கும் இடையிலுள்ளவைகள்; தாமிரசாதனமோ 13-ம் நூற்றாண்டில் உற்பத்தியானது.—*C. f. 'Venetian Ducats', Madras Mail, 4th July* 1873.

கும், அறுபத்தாறுவகைத் தங்கக்காசுகள்* உண்டுபண்ணப் பட்டன. இந்தக்காசுகளைச்சுட்டி, சான்றோர்கும்மி, 53-வது, 54-வது கவிகளிற் கூறியிருப்பது:

53-வது கவி:

"திருமங்கிலியத்தொடு சேர்த்துக்கட்டிடச்
செய்தனனுத்தரவன்றியின்ன
மொருபுறந்தால மொருபுறஞ்சிங்க
முறுபொற்காசொளிர் மின்னரசே."

54-வது கவி:

"அறுபத்தாறு வகையமைத்தரல்லா
லாடன்மிகுபூத நாதனையுந்
தறைக்கண்ணில்வெற்றி கொண்டுமருமலர்த்
தாமரைவாழ்தரு மின்னரசே."

இந்தப்பிரகாரம் சுராபாண்டியபுராணச்சாட்சியால் சான்றோர்காசு பூர்வத்திற்போடப்பட்டது ருசுவாகின்றது.

(5.) சிங்கமுகவளவன் இலங்கைக்குமன்னனுகவும், விக்கிரமபாண்டியன் அவனுக்குள் இளவரசாகவுமிருந்துவருகிற நாளையிலே, சிங்கவளவன்பெயர் அகத்தும், விக்கிரமபாண்டியன்பெயர் புறத்துமாகச் சித்திரித்துத் தங்கக்காசு போடப்பட்டது. இதற்குஞ் சான்றோர்காசு என்றுபேர்.

இதைச்சுட்டிய சான்றோர்கும்மி, 214-வது, 215-வது கவிகள் வருமாறு:

214-வது கவி:

"அப்போதுவிக்கிரமன் மாமுனிசொற்படி
யாக்கியபொற்றிரளத்தனையும்
இப்புவிதன்னிற் காசாக்கித்தன்னுமத்தை
யின்பந்தருங்கடன் மின்னரசே."

215-வது கவி:

"புறத்துஞ்சிங்கமுக னுமத்தையுள்ளினு
மாகப்பொறித்துப் புனையிலங்கைத்

* சான்றோர்மரபு, 69-வது, 70-வது பக்கம் காண்க.

தறைக்குள்வழங்கும் படிக்கருள்செய்தனன்
றூனென்று கும்மியடியுங்கடி."

சான்றோர்புராணம், சிங்கவளவன்படலம், 43-வது, 44-வது கவிகளிற் கூறியிருப்பது :

43-வது கவி :

"எங்கிருந்துமவ்வானரு ளேயெனவெண்ணி
சிங்கவாகுவுக்குரைத்தனன் மருந்தினிற்சகத்திற்
றங்கமாக்கியமாடையைத் தன்பெயர்புறத்தும்
வங்கநீள்கடன்மன்னன் பெயரகத்துமாய்வரைந்து."

44-வது கவி :

"மன்னுசிங்களநாட்டிடை வழங்குவித்தியநற்
பின்னர்மேம்படு வகையனென்றொருபெயர்பெற்று,
தன்னிலெண்ணரிதாகிய தன்கிளைதழைப்ப
சொன்னதேசத்தைச் சிங்கன்றன்சொற்படிகாத்தான்."

இங்ஙனம் சிங்கவளவனும் விக்கிரமபாண்டியனும் இலங்கையில்போட்ட சான்றோர்காசுக்கு விபரங்கூறியிருக்கின்றது. மேற்கூறியவைகளினல் தமிழ்நாட்டிலுள்ள நாலா மண்டலங்களாகிய சோழமண்டலம், தொண்டைமண்டலம், பாண்டிமண்டலம், சேரமண்டலம், ஈழமண்டலங்களில் மேற்படிகாசுகள் மிகுவிஸ்தாரமாக வழங்கிவந்ததாகத் தெரியவருகிறது. புராணகாவியக்கதைகளுக்கொப்பந்தம், பொன் உற்பத்தியைச்சுட்டிக் கூறியிருக்கிற கதை புராணசித்தாந்தமென மனதில்வைத்து உள்ளுறையான சத்தியத்தைக் கொள்ளவேண்டியது.

மேற்கூறிய காசுகள் சான்றோர்குலப் பூர்வகாசுகளாம். இவைகளுக்குப் பிற்காலத்திலுஞ் சான்றோர் காசுகள் உண்டுபண்ணப்பட்டு வந்திருக்குமென்பதற்குச் சந்தேகமில்லை. ஆனதால், தமிழரசொழிந்து வெகுகாலமாகியும், மேற்படி காசுகள் நெடுகிலுமிருந்துவந்ததுமன்றி, மிகு கீர்த்திப்பிரதாபத்துடன் அதன்பெயர் நாளதுவரையினும் தமிழ்நாடெங்ஙனும் மிகு முழக்கம்பெற்றுநிற்கின்றதே. இந்தக்

காசு அற்பசொற்பமாக அதிபூர்வகாலத்தில் மூலைமுடக்கு களிற் சந்துபொந்துகளில் செய்யப்பட்டதாயின், பூலோகத் திற்றோன்றிய வெகுவெகு காசுகள் பெயர்முதலாய்த் தெரியாது மங்கிப்போய்விட்டதுபோல, இதுவும் பெயர்நாமமுமில்லாது அழிந்துபோய்விடுமல்லவா? ஒரு ஏழைமரமேறிச் சான்றான் எப்போதோ ஒருகாலத்தில் எந்த மூலையிலோ போட்டகாசு தமிழரசொழிந்து சுமார் 450 வருஷங்களாகியும், பதினெட்டுவாத்தியமும் இன்னிசையுடன் முழங்கி இன்பந்தரும்பிரகாரம், தமிழ்நாடெங்கும் எவர்வாயிலும் இன்பமுறச் "சாணாரக்காசு, சாணாரக்காசு"* எனத் தொனித்து, "அப்பா செட்டி சாணாரக்காசு, இருக்குதா" என்று வாயூற வினவிவரச்செய்யத்தக்க மகிமையுடைத்தானதாய் என்றும் வாசங்கமழுகின்ற வாடாமல்லிகைபோல் இலங்கி கமகமவென மணம்வீசி நிற்கின்றதே, இதன்காரணமென்ன? 'ஏழைமரமேறிச் சான்றானொருவன்' போட்ட காசானதினாலேயல்ல, தமிழ்நாடுகளனைத்தையும் ஏககுலத்தினராய் அரசாண்டு, மானிடகுலத்திற்கு இன்றியமையாத அமுதவுற்பத்தி கண்டறிந்து, அந்த அமுதவினிப்பை எவரும் அருந்தி இன்பங்கொள்ளும்படிசெய்த பூர்வதமிழரசர்களாகிய சான்றோர்கள் தமிழ்ச்சத்திரியகுலமகிமையாக இராசவிருக்ஷமாகிய கற்பகவிருக்ஷத்தின் வடிவையும், இராசமிருகமாகிய சிங்கத்தின் வடிவையும் அமைத்து உண்டுபண்ணிய காசானதினாலே அந்தக்காசின்பெயர் நாளதுவரையினும் தமிழ்நாட்டுக் குலத்தவர்களுக்கெல்லாம், உயர்தரத்தங்கமானதினால் இன்பமும், உயர்தர ஆபரணங்களாவதினால் மகிமையுந்தந்து நிற்கின்றது. இப்பெயர்பெற்ற காசு போட்டவர்கள் எப்படிப்பட்டவர்களாயிருந்திருக்கவேண்டும். புத்திமான்கள் சொல்லக்கடவர்கள்.

> "அரசு ஒழிந்தும், காசு ஒழியவில்லை;
> அரசின்மகிமை யொழிந்தது,
> காசின்மகிமை விளங்கிநிற்கின்றது."

---

* 'சான்றோர்காசு' என்பதன்மரூஉ.

தமிழ்நாடிருக்கும்பரியந்தம், சான்றோர்காசு மகிமையும் நிற்கும் எனவும், தமிழ்ப்பாஷையிருக்கும் பரியந்தம் 'சான்றோர்காசு, சான்றார் காசு' என்கிறபெயரும் நிற்கும் எனவும் நட்புதற்கிடமுண்டு.

இவ்வாறு சான்றோர்குலவிருதுப்படங்களுக்கும் தங்கக்காசுப்படத்துக்கும் விபரம் கூறியானமையால், இனிக் கற்பக விருக்ஷப்படங்கள், அமுதவுற்பத்தியாயுதப்படங்கள் ஆகிய 12 படங்களுக்குப் பொருளுரையெடுத்துரைப்போம்.

(உ) கற்பகவிருக்ஷப்படங்களும், அமுதவுற்பத்தியாயுதப் படங்களும்.

விருக்ஷசாதிகளில் ஐந்துவிருக்ஷங்கள் மேன்குலவிருக்ஷங்கள்என நூல்கள் பேசுகின்றன. அவைகளுக்குப் 'பஞ்சதருக்கள், ஐந்தருக்கள்' என்று பெயராம். அவை முறையே கற்பகம், அரிச்சந்தனம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பனவாம். இந்த ஐந்துவகை விருக்ஷங்களிற் கற்பகவிருக்ஷங்கள் மிகவும் அருமை பெருமையாக எண்ணப்பட்டுவந்தன. மிருகசாதிகளுக்குள் சிங்கமானது இராசமிருகமாயிருப்பது போல, விருக்ஷசாதிகளுக்குள் கற்பகவிருக்ஷம் இராசதருவாம். கற்பகாலம் என்பது இந்துக்கணிதநூல்களில் நெடுந்தொகைகொண்ட ஓர் காலவளவாகும். கற்பகவிருக்ஷங்கள் நெடுங்காலம் சுமார் ஆயிரம்வருடங்களுக்கு இருக்கத்தக்க விருக்ஷங்களானதால், அவைகளுக்குக் 'கல்பவிருக்ஷங்கள், கற்பவிருக்ஷங்கள், கற்பகவிருக்ஷங்கள்' எனப் பெயராயின.

விருக்ஷசாதிகளுக்குள் அமுதவுற்பத்திக்கேற்ற விருக்ஷங்கள் எவைகளோ அவைகளே கற்பக விருக்ஷங்கள் என்னப்படுகின்றன. கற்பகவிருக்ஷங்களுக்குள் முக்கியமானவை பனை, தெங்கு, ஈந்து என்னும் மூன்றுசாதி விருக்ஷங்களுமாம். கமுக மரமானது சாயலிற் கற்பகவிருக்ஷத்திற்கு ஒத்திருப்பதினாலும், அவ்விருவகைவிருக்ஷத்துக் கனிக்குலைகள் ஒன்றோடொன்று உருவத்தில் ஒற்றுமைபற்றியிருப்பதினாலும், அதில் விளைகின்ற பாக்குகளும் பாக்குக்குலைகளும் மங்கலசோபனதி

னங்களுக்கு இன்றியமையாது வேண்டியிருப்பதாலும், அது வும் கற்பகவிருக்ஷமென மதிக்கப்படுகின்றது. கரும்பானது சொற்ப ஆயுளுடைத்தானதாயிருந்தபோதிலும், அதில் உற்ப த்தியாகின்ற அமுதம் மற்றக் கற்பகவிருக்ஷங்களின் அமுதத் திற்கு ஒத்த மதுரமுடையதாயிருப்பதால், அதுவுங் கற்பகம் என்னப்படுகின்றது. இவற்றுள், பனை, தெங்கு, ஈந்து மூன்று மே சாதியான கற்பகவிருக்ஷங்களாம். இவைகளில் முதற் றரமான அமுதஞ்சுரப்பதால், இவைகள் பூர்வத்தில் மானிட குலத்தவர்களுக்கு மகா அருமையானதருக்களாயின. பூலோ கத்தில் மத்திய ஆசிரியாக்கண்டத்திற்கு மேற்கிலுள்ள நாட் டார்களுக்கு 'கற்பகவல்லி, சோமவல்லி' எனப் பெயர்கொ ண்ட திராட்சக்கனிமது அருமையாயிருந்துவந்தபிரகாரம், கீழ்திசைநாட்டார்களுக்கு மேற்படி மூன்றுவகைவிருக்ஷங்க ளில் ஊறி வடியும் மது அருமையாயிருந்துவந்தது. திராட்சக் கனிகளுக்குங் கனிக்குலைகளுக்கும், மேற்படி பனை தெங்கு ஈந்துவிருக்ஷக்கனிகளுங் கனிக்குலைகளுஞ் சாயலில் ஒத்திருக் கின்றமையால், அவைகள் ஒருகுலத் தாபரங்களாக மதிக்கப் படுகின்றன.

மேற்படி கற்பகவிருக்ஷங்களால் மானிடகுலத்தவர்களுக்கு விளைகின்ற பிரயோசனங்கள் மிகுதியாயிருப்பதால், அத்தருக் கள் நினைத்ததெல்லாம் அளிக்கும் விருக்ஷங்களெனப் பூர்வத் தார் மதித்துவந்தனர். சுரர்களாகிய இமயமலைநாட்டாருக்கு இந்தக்கற்பகவிருக்ஷ அமுதமே முக்கியமான உணவுப்பொரு ளாயிற்று. கற்பகவிருக்ஷச்சோலைகள் நடுவில் வசிப்பவர்க ளுக்கு வேண்டிய அருமைப்பண்டங்களெல்லாம் அம்மரங்கள் உதவின. தபோவனங்களிலெல்லாம் பூர்வத்திற் கற்பகச் சோலைகள் மிகுந்திருந்தமையால், அவ்விருக்ஷங்களின் அமு தம் ரிஷிகளுக்கு உணவுப்பொருளாயிற்று. ரிஷிகளுக்குக் கற் பகப்பாலும், காமதேனுவாகிய மலம் பசுப்பாலும், சாகமூல பலாதிகளும் முக்கிய புசிப்புப்பண்டங்களாயின. ஆனதால், ரிஷிகள் கற்பகவிருக்ஷங்களின்கீழிருந்து தபஞ்செய்துவந்த தாக நூல்கள் பேசுகின்றன.

கயிலாசகிரியைக்குறித்து எழுதப்பட்டிருக்கிற ஒருநூலிற் கூறியிருக்கிறதாவது: *

"கயிலாசகிரிக்கு வலதுபுறத்தில் மூன்றுகற்பகவிருக்ஷங்களுக்கு நடுவிலே ஆதிசேடன் தவசுசெய்கிறான். அதற்குக் கீழ்புறம் யமதருமராசன் ஒரு அக்கினிக்குண்டத்தின்மத்தியில் ஒரு கற்பகவிருக்ஷத்தின்கீழ்த் தவசுபண்ணுகிறான். அதற்குக்கீழ்புறம் மூன்று ரிஷிகள் இரண்டு கற்பகவிருக்ஷங்களின்கீழிருந்து தபஞ்செய்கிறார்கள். கயிலாசபருவதத்தடிக்கு சமீபத்தில் ஒருவன் கற்பகவிருக்ஷசொரூபமாய்ச் சுவாமியைத் தரிசனைபண்ணுகிறான். அதற்குத்தென்புறம், நாலு கற்பகவிருக்ஷத்திற்கு அப்புறம் பதுமபாதரிஷியும் அவருடைய மூன்றுசிஷர்களுந் தபஞ்செய்கிறார்கள். அதற்குத்தென்புறம் இரண்டுகற்பகவிருக்ஷமிருக்கிறது. அதற்குமேல்புறம் இரண்டு கற்பகவிருக்ஷத்தின்கீழே கிரிஷ்ணவர்மா என்கிற பிராமணன் தபசுசெய்துகொண்டிருக்கிறான். அதற்குமேல்புறம் ஒரு கற்பகவிருக்ஷத்தின்கீழாக ஓமகுண்டத்தடியில் சயனோத்தானபாதர் தபசுபண்ணுகிறார். அதற்குமேற்கே ஒரு கற்பகவிருக்ஷத்தின்மேல் சுவேதபாங்கரிஷி தபசுபண்ணுகிறார். அதற்கு வடக்கே புஷ்கரணிநதிக்கரையில், இரண்டு கற்பகவிருக்ஷத்தின்நடுவில் கிரிஷ்ணவர்மரிஷியுங் கனகரூபிரிஷியுந் தவஞ்செய்கிறார்கள்" என்பதாம்.

இதனால் கற்பகவிருக்ஷங்கள் அமுதத்தினிமித்தமும், கனியினிமித்தமும் ரிஷிகளுக்கு மிகவும் அருமையானதருக்களாயிருந்துவந்தது தெரியவருகின்றது. இவ்வாறு ரிஷிகளுக்கு அருமையாயிருந்துவந்தவிருக்ஷம் அரசர்களுக்கும் அருமையாயிருந்துவந்தன. இவ்வாறு இவ்விருக்ஷங்கள் ரிஷிகளுக்கும் அரசர்களுக்கும் அருமையாயிருந்துவந்தமையால், இவைகளைப் பரிபாலனஞ்செய்யுந்தொழிலைப் பூர்வத்தில் அரசர்கள் மகிமையான தொழிலெனமதித்துத் தங்கள்குலத்துக்குள் அமைத்துக்கொண்டார்கள்.

---

* Vide Taylor's Oriental MSS, Appendix B, p. 17,

சூத்திரகுலத்தவர்களுக்கு உழவுத்தொழிலும், வைசியகுலத்தவர்களுக்குச் செட்டுத்தொழிலும், பார்ப்பனக்குலத்தவர்களுக்கு ஏற்றுண்ணுந்தொழிலும், அநுபோகத்திற்கு வேண்டிய பூர்வ சிறந்ததொழில்களாக மதிக்கப்பட்டுவந்தபிரகாரம் அரசகுலத்தவர்களுக்கு 'விசயம்' எனப் பெயர்பெற்ற பண்டமுற்பத்தியாகும் கற்பகவமுத ஈகையாகிய தொழில் பூர்வத்தில் அரிய சிறந்த கருமமாக மதிக்கப்பட்டது. 'உழவுத்தொழில், செட்டுத்தொழில், ஏற்றற்றொழில், கற்பகவமுதவுற்பத்தித்தொழில்' இந்த நாலு தொழில்களில் அரியதொழிலெது? உழவுத்தொழில் எவரும் எளிதிற் செய்யலாம், செட்டுத்தொழில் எவரும் எளிதிற் செய்யலாம், ஏற்றற்றொழில் எவரும் எளிதிற் செய்யலாம், கற்பகவமுதவுற்பத்தித்தொழிலோ எவரும் எளிதிற் செய்யத்தக்க தொழிலல்ல. எவராலும் எளிதில் முடியத்தக்க தொழில் செய்பவனல்ல. எவராலும் எளிதில் முடியமாட்டாத தொழில் செய்பவனே பெரியவன். ஆனதால் புராதன அரசகுலத்தவர்கள் இந்த நாலு தொழில்களில் அரிய கருமமாக மதிக்கப்பட்ட தொழிலைப் பூர்வத்தில் தங்கள்குலத்துக்குள் அமைத்துக்கொண்டனர்.* பூர்வ தமிழரசர்கள் அரசருக்குரிய ஆறு தொழில்களையும் மகிமையுடன் நடப்பித்துவருகிறகாலத்தில், தங்கள்குலத்தவர்களைக்கொண்டு கற்பகவிருக்ஷ வமுதவுற்பத்தித்தொழில் நடப்பித்துவந்தும் மகிமையான கருமமாக எண்ணப்பட்டது. அரசருக்குரிய ஆறு தொழில்களையும் இழந்தவர்களாய்ப்போன காலத்தில், கற்பகவமுதவுற்பத்தித்தொழில் தனிநிலையில் அருமை பெருமையிற் குன்றிப்போய்விட்டது.

அமுதவுற்பத்திசெய்தல் பூர்வத்தில் மகிமையான தொழிலாக மதிக்கப்பட்டுவந்ததினாலே, இந்தத் தாமிரசாதனத்தில் இராசவிருதுப்படங்களுக்குப் பின்னாக, கற்பகவிருக்ஷப்படங்க

---

* வேந்தனாகியதலைவன் தலைவியைவிரும்பிச் செல்கையில், 'மடன்மா' என்று சொல்லப்பட்டுப் பனைமடல்களாலாகிய குதிரையிலேறிச்சென்று தன்னவாவின் மிகுதியைக் காட்டுவது பூர்வவழக்கு.—*cf.* குறள், *BK. iii, chap.* 114, 1.

ளும், அமுதவுற்பத்தியாயுதப்படங்களுங் குறிக்கப்பட்டிருக்கின்றன. அந்தப்படங்களுக்கு விபரம்வருமாறு:

(i.) இரட்டைப்பனைவிருக்ஷப்படம்.*—இந்தவிருக்ஷத்திற்குத் தாலவிருக்ஷம் எனவும் பெயர்வரும். கற்பகவிருக்ஷங்களுள், தாலவிருக்ஷமான்து முதற்றரவிருக்ஷமாம். இதன் அமுதமும், கனியும், விசயமும் உணவுப்பண்டங்களாகும். இது மங்கலவிருக்ஷமாகும்.

(ii.) இரட்டைத்தெங்குவிருக்ஷப்படம்.—இந்தத்தருவுக்குத் 'தென்னமரம்' என்றும்பேராம். இதன் அமுதமும், கனியும், விசயமும் உணவுப்பண்டங்களாகும். இதுவும் மங்கலவிருக்ஷமாகும்.

(iii.) இரட்டையீந்துவிருக்ஷப்படம்.—இதற்கு 'ஈச்சமரம்' என்றும் பெயர். இதன் அமுதமும், கனியும், விசயமும் உணவுப்பண்டங்களாகும். இதுவும் மங்கலவிருக்ஷமென்று சொல்லப்படும்.

இந்த மூன்றுவகைவிருக்ஷங்களும் சாயலிலும் இவற்றின் ஓலை கனிகளின் வடிவத்திலும் இசைந்திருக்கின்றன.

(iv.) அமுதவுற்பத்திக்குவேண்டிய ஆயுதங்களின்படங்கள்.

(a.) சந்திராயுதப்படம்.—இந்த அரிவாளானது 'இளம்பிறை' வடிவுபோன்றிருப்பதால், அதற்குச் சந்திராயுதம் எனப்பெயராயிற்று. இது பாளைமுதலானது சீவுகிற கருவி.

(b.) இடுக்கிப்படம்.—இது அமுதம் ஊறி வடியும் பாளைகளை உருவிப் பக்குவப்படுத்தத்தக்க ஆயுதம்.

(c.) வண்டுகுத்திப்படம்.—இவ்வாயுதம் கற்பகவிருக்ஷத்து இளம்பாளைகள், இளங்குருத்துகளில்வந்து விழுகின்ற வண்டுகளைக் குத்திக் கொல்லுதற்கேற்ற கருவியாம்.

(d.) பாளைத்தடிப்படம். இந்த ஆயுதம் அமுதம் ஊறி வடியும் பாளைகளைத் தட்டிப் பக்குவப்படுத்துங் கருவியாகும்.

---

* காஞ்சிபுரம் காமாட்சியம்மன் சன்னிதியில் உற்பத்தியான சான்றோர் பூர்வ தாமிரசாதனத்தில் முதல் ஆதித்த நாடாள் வாளுகிய சுராபாண்டியராசன் பனைவளைத்து அமிர்த நிர்மிதஞ்செய்தபாவனை வார்ப்பிலமைந்திருக்கிறது.

(*e.*) தீட்டாம்பலகைப்படம்.—இது சந்திராயுதம்முதலான கத்திகளைத் தீட்டிக் கூர்மைசெய்துகொள்ளுங் கருவியாம்.

(*f.*) இரட்டைச்சிலம்புப்படம்.—இது கற்பகவமுதவுற்பத்தி செய்கிறவர்கள் இருபாதங்களிலும் பூட்டிக்கொள்ளுந் தளையாம்.

(*g.*) நீற்றுப்பட்டைப்படம்.—இந்த ஏனம் கற்பகவமுத நஞ்சுமுறிக்குஞ் சுண்ணப்பஸ்பம் வைத்திருக்கும் சுண்ணப் பொடிச்செப்பாம்.

(*h.*) அமிர்தக்கமண்டலப்படம்.—இந்த ஏனம் கற்பகவமிர்தமிறக்கிவைக்கும் கும்பமாம்.

இந்தப்பிரகாரம், திருவெண்காட்டுத் தாமிரசாதனப்படங்களுக்குப் பொருளுரை கூறியானபடியால், இனி மேற்படித் தாமிரசாதனத்து எழுத்துப்பட்டயத்துக்கு விபரஞ் சொல்லுவோம்.

## இரண்டாவது.

## திருவெண்காட்டுச் சான்றோர்குலத்துத் தாமிரசாதன எழுத்துப்பட்டயத்தின் பொருளடக்கம்.

1. திருவெண்காடு தஞ்சைநகரஞ்ஜில்லா, சீர்காழித்தாலூகாவில், காவிரிநதிச்சங்கமத்தில், காவிரிப்பூம்பட்டணத்திற்குச் சமீபத்திலிருக்கின்றது.

2. இந்தத் தாமிரசாதனப்பட்டயம் இப்போது பசுபதி புனுகுசட்டநாதகுருக்கள் பரம்பரையிலுதித்த பசுபதிகுருக்கள்வசத்திலிருக்கிறது.

3. இந்தப்பட்டயம வீரசிங்கதேவ* மகாராயர் காலத்தில், சாலிவாகனசகாப்தம் 1255 ல் உற்பத்தியாயிற்று. இது கிறிஸ்தாப்தம் 1332 க்குச்சரி.

4. 'இலங்காபுரித்தலைவர்' எனவும், 'இலங்கைமன்னர்'

---

* 'தேவன்' என்பது பூர்வத்தில் 'அரசன்' என்னுஞ் சத்திரியகுலப் பட்டப்பெயருடன் ஒருபொருள்கொண்டபெயராக வழங்கப்பட்டது. காளிதாசன், ஸ்ரீ ஹர்சமகாராசன் முதலானவர்கள் செய்திருக்கிற வடமொழிநாடகங்களிலெல்லாம் யாதொரு விகற்பமுமின்றி அரசனுக்கு 'தேவன்' எனவும், அரசிக்கு 'தேவி' எனவும் கூறப்பட்டிருக்கிறது.

எனவும் பட்டப்பெயர்பெற்றிருந்த சான்ருேர்குலமேன்மக்கள் எழுநூறுபெயர் திருவெண்காட்டிற் சபைகூடி, காந்தமாரிஷி பரம்பரையில் வீரசைவர் மரபிலுதித்த பசுபதி புனுகு சட்டநாத குருக்களுக்கு எழுதிக்கொடுத்த தாமிரசாதனப்பட்டயம்.

5. இந்தத் தாமிரசாதனம் காந்தமாரிஷிமடத்துச் சிலாசாதனப்படிக்கு எழுதப்பட்டது.

6. சான்ருேர்குலத்தவர்கள், சுராபாண்டியமகாராசன் சத்திரியரிஷியாய்க் காந்தமாரிஷி எனப் பெயர்கொண்டு கங்கா நதித்தீரத்தில் தபஞ்செய்கையில், நாகர்குலச் சத்திரியக் கன்னியர்கள் எழுவரைக் காந்தருவமணஞ்செய்து பெற்ற ஏழு புத்திரர்களுடைய வமிசத்தவர்கள்.

7. மேற்படி சத்தவழுதிகள் வங்கிசத்தார் அண்டரெண்ட வனத்திலிருந்த தாருகன், அமந்திகன் முதலான அசுரர்களைச் சங்காரஞ்செய்து வெற்றிகொண்டவர்கள்.

8. காந்தமாரிஷி எனப் பெயர்கொண்ட சுராபாண்டிய ராசனும், அவன் வமிசத்தவர்களும் பூர்வத்தில் சுராபானமாகிய அமுதவுற்பத்திமுறை கண்டறிந்தவர்கள்.

9. அமுதவுற்பத்திக்கு வேண்டிய ஆயுதங்களுக்கு விபரம்.

10. மேற்படி சுராபாண்டியராசன் வமிசத்தவர்களாகிய சான்ருேர்கள் பூர்வத்தில் தொண்டைமண்டலம் ஆண்டவர்கள்.

11. இராவணன்மந்திரி மகோதரன் சான்ருேர்குலத்தவன்.

12. தமிழ்நாடுகளில் நாலாதிசைகளிலும் வசிக்கின்ற சான்ருேர்குலக் கிளைப்பிரிவார்களுக்கு ‘ நாடான், நாயகன், கவுண்டன், கிராமணி’ முதலான தமிழ்ச்சத்திரியகுலப் பட்டப்பெயர்களுண்டு. [வடநாட்டுச் சத்திரியகுலப் பட்டப்பெயர்களோ ‘இராசா, சிங்கு, இராயர்’ முதலியனவாம்.] தமிழ்நாட்டுச் சத்திரியர்கள் இன்னுரென்று அறியவேண்டுமேயாகில், தமிழ் நாட்டுச் சத்திரியகுலப் பட்டப்பெயர்கள் பெற்றுவந்திருக்கிற குலத்தவர்கள் யாரென்று தெளியவேண்டும்.

மேற்படி பட்டப்பெயர்களுக்குப் பொருள்விபரம் வருமாறு:

(*a.*) தமிழ்நாடு ஆண்டுவந்த சத்திரியகுலத்தவர்கள் நாடாண்டுவந்தகாரணத்தால், 'நாடான்' என்னும் பட்டப்பெயர் பெற்றிருக்கின்றனர். இது வடநாட்டுச் சத்திரியகுலப் பட்டப்பெயராகிய 'இராசா' என்னும்மொழிக்குச் சரியொத்தபேராம். தென்பாண்டி வடபாண்டிநாட்டுச் சான்றோர்குலத்தவர்கள் நாளதும் 'நாடான்' என்னும் பட்டப்பெயர் பெற்றுவருகின்றனர்.

(*b.*) தமிழ்நாடுகள் ஆண்டுவந்த சத்திரியகுலத்தவர்களாகிய சேரசோழபாண்டியர்களுக்கு 'நாயகன்' என்னும் பட்டப்பெயருண்டாயிருந்த காரணத்தால், அவர்களில் ஒருகிளைப் பிரிவார்கள் நாளதும் 'நாயகன்' எனச் சொல்லப்பட்டுவருகின்றனர். 'சேரநாயகன், சோழநாயகன், பாண்டிநாயகன்' எனப் பூர்வத்தில் தமிழரசர்கள் பெயர்பெற்றிருந்ததுபோலவே, இக்காலத்திலும் காவிரிப்பூம்பட்டணத்திற்கடுத்த திருவெண்காட்டுத்திசையிலிருக்கிற சான்றோர்குலக்கிளைப்பிரிவார்கள் 'நாயகன்' என்னுந் தமிழ்ச் சத்திரியகுலப் பட்டப்பெயர் பெற்றிருக்கின்றனர். 'நாயகன்' என்னும் பட்டப்பெயர், 'இராசா' என்கிற வடநாட்டுச் சத்திரியகுலப் பட்டப்பெயருக்குச் சரியொத்ததாம்.

(*c.*) சான்றோர்குலத்தவர்கள் பூர்வ கவுண்டலீயகோத்திரத்தை யொட்டியவர்களானதால், அவர்களில் ஒருகிளைப்பிரிவார் 'கவுண்டன்' என்னும் பட்டப்பெயர் பெற்றிருக்கின்றனர். திரிசிரபுரம், கும்பகோணந்திசைகளிலிருக்கிற சான்றோர்குலக்கிளைப்பிரிவார்கள் இக்காலத்திலுங் 'கவுண்டன்' என்கிற தமிழ்ச் சத்திரியகுலப் பட்டப்பெயர் பெற்றுவருகின்றனர்.

(*d.*) சான்றோர்குலத்தவர்கள் பூர்வசத்திரியர்களாகிய சூரர்குலத்தவர்களை யொட்டிவந்திருகிறகாரணத்தால், இக்காலத்திலும் அவர்களில் ஒருகிளைப்பிரிவார்களாகிய தொண்டைமண்டலச் சான்றோர்கள் சூரர்குலத்தரசனாகிய இந்திரமகாராசனு

க்குரிய 'கிராமணி' என்னும் பட்டப்பெயர் பெற்றுவருகின்றனர். இவர்கள் பூர்வ சுரர்குலச்சத்திரியப் பட்டப்பெயராகிய "கிராமணி" என்னும் பட்டப்பெயர் ஆதிமுதல் நாளதுவரையினும் இடையறாது பெற்றுவந்திருக்கிறபடியால், அவர்கள் 'பண்டைச்சான்றோர்' என்று சொல்லப்பட்டிருக்கின்றனர். 'கிராமணி' என்னும் பட்டப்பெயர் வடநாட்டுச் சத்திரியகுலப் பட்டப்பெயராகிய 'இராசா' என்னும்மொழிக்குச் சமரசமானதாம். ஆகவே தமிழ்நாடுகளில் மேற்கூறிய பட்டப்பெயர்கள் பெற்றுவந்திருக்கிற குலத்தவர்களெவர்களோ அவர்களே தமிழ்நாட்டுச் சத்திரியகுலத்தவர்கள் எனத் தீர்க்கமுற விளங்குகின்றது.

(13.) சான்றோர்குலத்தவர்கள் பூர்வத்திற்பெற்றிருந்த பட்டப்பெயர்கள் வருமாறு :

(*i.*) இலங்காபுரிச் சிங்கக்கொடித்தலைவர்,
(*ii.*) வைப்பிலறு தலைமடியவைத்தோர்,
(*iii.*) வாடாதமாலை வணிகேசர்நாடான்,
(*iv.*) அஞ்சுதுணி மன்னன்,
(*v.*) பஞ்சவர்ணப் பிரகாசன்,
(*vi.*) இந்திரஞாலவித்தைகற்ற பெரியோன்,
(*vii.*) தேசதேசத்தில் மனமகிழும் ராசசம்பன்னன்,
(*viii.*) தேசதேசத்திற் செங்கோற்செலுத்தி ஆடைமாடை* வழங்கிவந்தோர்.
(*ix.*) குடைதொடோம் எனநின்றோர்.
(*x.*) வேடரை வென்றோர்,
(*xi.*) பஞ்சவர்ணப்பாவாடை பெற்றோர்,
(*xii.*) துளுவம், வங்காளம், மகரம், சிங்களம், கலிங்கதேசங்களில் எவரும் மனமகிழும் ராசசம்பன்னன்.

இதற்குச் சார்புரை.

துளுவநாட்டில், மேல்கடலோரத்தில், சுராபாண்டியனிருந்தரசுபுரிந்த 'சக்கரபுரிப்பட்டணம்' இருந்தது. அந்தச் சக்கர

---

* மாடை=பொன்.

புரிக்கு இக்காலத்தில் ' வட்டக்கல்லா, வட்டக்கோட்டை, வட்டுக்கோட்டை, வட்டுநகர்' எனப் பெயராம். அங்கிலேயநூல்களில் அதற்கு Batuculla (வட்டுக்கல்லா, வட்டக்கல்,) எனப் பெயர் கூறப்பட்டிருக்கின்றது. Batuculla* என்பதற்கு Round-Town (சக்கரபுரி) என்று தாற்பரியமாகும்.

(*xiii.*) இராசவிருக்ஷங்களாகிய கற்பகத்தருக்களில் அமுதவுற்பத்தி கண்டுபிடித்து, அமுதமிறக்கிச் சுரர்குலச்சத்திரியர்களாகிய தேவர்கள் களிக்கவைத்தோர். 'தேவர்' என்னுஞ் சத்திரியகுலப் பட்டப்பெயர் பூர்வத்தில் பெற்றிருந்தவர்கள் சுரர்குலத்தவர்களாம். 'தேவர்' என்பதற்கு ' அரசர்' என்றுபொருளாம். 'தேவர்கள்' எனப் பட்டப்பெயர் பெற்றிருந்த சுரர்கள் சுவாமிகள் (Gods) அல்ல; இமயமலைநாட்டிற் குடியிருந்த மானிடகுலத்தவர்களாம். நரர்குலத்தவர்கள் சுரர்குலக் கிளைப்பிரிவார்களானமையால் பூர்வ தமிழ்நாட்டரசர்கள் 'அரசர்' என்னுங்கருத்தில் 'தேவர்' என்னும் பட்டப்பெயர் பெற்றிருந்ததுபோலவும், இக்காலத்தில் ' மறவர்குலத்தவர்களும், கள்ளர்குலத்தவர்களும்' 'தேவர்' என்னும் பட்டப்பெயர் பெற்றிருப்பதுபோலவும், பூர்வகாலத்தில் சுரர்குலத்துச் சத்திரியர்களெல்லாருந் 'தேவர்' என்கிற பட்டப்பெயர் பெற்றிருந்தனர். ' நாடான்' என்னும் அரசகுலப் பட்டப்பெயர், 'தேவன்' என்னும் அரசகுலப் பட்டப்பெயரிலும் அதிகச் சிறப்புடையதாதலால், மருதநிலப்பூமியாண்ட தமிழரசர்கள் 'தேவன்' என்னும் பெயரிலும், ' நாடான்' என்னும் பெயரையே வழங்கிவந்தனர்.

(*xiv.*) இலங்கைமன்னர், இலங்காபுரித்தலைவர். முன்னம்

---

* " I went four cosses to *Batuculla*, which means the *Round Town*. Batuculla stands on the north bank of a small river, the Sancadaholay. *Vide Wilks' History of Mysore, Vol. ii*, *p.* 292.

Batuculla, அல்லது வட்டநகர் எனப் பெயர்கொண்ட சக்கரபுரிப்பட்டணத்திலிருந்து சுராபாண்டியமகாராசன் பூர்வத்தில் அரசுபுரிந்ததாக உத்தேசிக்கலாம். மைசூர்நாட்டிலுள்ள விசயநகரத்திற்குத் தென்மேற்கிலும் 'சக்கரப்பட்டணம்' என்னும் நகரமொன்று இருக்கிறது.

ஒருகாலத்தில் சான்றோர்குலத்தவர்கள் இலங்கையையுங் கட்டியாண்டுவந்ததால், அவர்களுக்கு 'இலங்கைமன்னர்' என்கிற பட்டப்பெயருண்டாயிற்று. சான்றோர்குலத்தவர்கள் இலங்கையாண்டுவருகிறகாலத்தில் பாண்டிநாட்டிற்கும் இலங்கைக்கும் போக்குவரத்திருந்தமையால், சிலர் இது காரணந் தெரியாதவர்களாய், சான்றோர்குலத்தவர்களுக்கு உற்பத்திஸ்தானம் இலங்கை என்பதுபோலவும், அவர்கள் அத்திசையினின்று இந்தத் தமிழ்நாட்டிற்குவந்து குடியேறியதுபோலவும் எழுதியிருக்கிறார்கள். இதிகாசச் சாட்சிகளெல்லாம் இது தப்பு எனவும், நகைப்புக்கேதுவான கதை எனவும் ருசுக் கூறுகின்றன.

(*vv.*) சோலைவேளாளர்.

பூர்வத்தில் தமிழ்நாடெங்ஙனும் சான்றோர்குலத்தவர்கள் கற்பகவிருக்ஷச்சோலைகள் பரிபாலித்து அமுத்தத்தருமஞ் செய்துவந்த காரணத்தையிட்டு, அக்குலக்கிளைப்பிரிவார் 'சோலை வேளாளர்'* என்றொரு பட்டப்பெயரும் பெற்றிருந்தனர்.

14. பசுபதிபுனுகுசட்டநாதகுருக்களும், அவருடைய வமிசத்தவர்களும், பூர்வதமிழரசர்குலத்தவர்களுக்குப் புரோகிதர்களாகிய குருக்களாயிருந்துவந்தபிரகாரம், நாளதும் அவர்கள் சான்றோர்குலக் குருக்களாம். சான்றோர்குலத்துத் தாமிரசாதனப்பட்டயம் இந்த வீரசைவர்கள் வசத்திலிருந்து வருவதே அதற்குச் சாட்சியாகும். ஆரியப்பார்ப்பாருக்கும், மேற்படி பூர்வ தமிழரசர்குலப் புரோகிதர்களாகிய வீரசைவக் குருக்கண்மாருக்கும் நாளதுவரையினுங் கொடியபகையும் விரோதமுமிருந்து வருகின்றன. பூர்வத்தில் இந்த வீரசைவக்குருக்கள் தரித்திருந்த பூணூல் ஒழிதற்குக் காரணர் இந்த ஆரிய பிராமணர்களாம்.

15. திருவெண்காட்டில் சுவேதாரணியர் எனப்பெயர்கொண்ட சிவபிரான் கோவிலுக்கெதிரே மேற்படி சான்றோர்

---

* வேளாண்மை=ஈகை; சத்திரியர் அறுதொழிலிலொன்று.

குலப் பெரியோர்கள் ஐம்பத்தேழரை ($57\frac{1}{2}$) வராகனுக்கு சுத்தக்கிரயத்திற்கு நிலம்வாங்கி, தங்கள்குலத்துக்கு மூல புருஷனாகிய சுராபாண்டியராசன் எனப் பெயர்கொண்ட காந் தமாரிஷிக்கு மடங்கட்டி, அந்த மடத்தைத் தங்கள்குலகுருவா கிய 'பசுபதிபுனுகுசட்டநாதகுருக்கள்' விசாரணையில் வைத் தார்கள். அந்தக் காந்தமாரிஷிமடம் நாளதுவரையிலும் மேற்படி புனுகுசட்டநாதகுருக்கள் மரபிலுதித்த வீரசைவக் குருக்கள் விசாரணையிலிருந்து வருகின்றது. இப்போது மேற் படி மடத்துக்குத் தலைமையான குருக்களுக்குப் 'பசுபதிகுருக் கள்' என்றுபேர். அவர்வசத்தில் மேற்படி சான்றோர்குலத் தாமிரசாதனப்பட்டயம் இருக்கின்றது.

16. அவ்வாறு திருவெண்காட்டில் கூடிவந்த சான்றோர்குல மேன்மக்கள் எழுநூறுபேரும், தஞ்சைநகரம், சீர்காழி, திரு வெண்காடு, பிறையாறு, குரநாடு, திருநெல்வேலி, சிவகாசி, விருதுபட்டி, திரிசிரபுரம், கருவூர், குழித்தலை, திருச்செங் கோடு, சேலம், இடப்பாடி, காஞ்சிபுரம், சென்னபட்டணம், மதுரை, முதலான பட்டணங்களிலிருந்து வந்து கூடினார்கள்.

17. காளிபூசை, சிவபூசைமுதலான பூசைவகைகளுக்கும், உற்சவங்களுக்குங் கொடுத்துவரவேண்டிய படித்தரக்கட்ட ளைகளுக்கு விபரம்.

18. சான்றோர்குலத்தவர்கள் மேற்படி பசுபதிபுனுகுசட்ட நாதகுருக்களிடத்திலும், அவருடைய வமிசத்தவர்களாகிய 'ஆதிசைவர்' எனப் பெயர்பெற்ற வீரசைவர்களிடத்திலும், தீட்சைபெற்று வரவேண்டும்.

19. சேரமண்டலம், சோழமண்டலம், பாண்டிமண்ட லம், தொண்டைமண்டலம் முதலான மண்டலங்களில் வா சஞ்செய்துவருகின்ற சான்றோர்குலத்தவர்கள் மேற்படி சட் டநாதகுருக்கள் வமிசத்தவர்களுக்குக் கொடுத்துவரவேண்டி ய சுதந்திரக்கட்டளைக்கு விபரம்.

இவ்வகைப் பொருள்களடங்கிய மேற்படி சான்றோர்குலத் தாமிரசாதனப் பட்டயத்தாலும், எழுத்துப்பட்டயத்தா லும், சான்றோர்குலத்தவர்கள் பூர்வ தமிழ்ச் சத்திரியகுலத்த வர்கள் என்பது தெளிவுற விளங்குகின்றது.

ஒருகாலத்தில் சான்றோர்குலத்தவர்கள் இலங்கையையுங் கட்டியாண்டுவந்ததால், அவர்களுக்கு 'இலங்கைமன்னர்' என்கிற பட்டப்பெயருண்டாயிற்று. சான்றோர்குலத்தவர்கள் இலங்கையாண்டுவருகிறகாலத்தில் பாண்டிநாட்டிற்கும் இலங்கைக்கும் போக்குவரத்திருந்தமையால், சிலர் இது காரணந் தெரியாதவர்களாய், சான்றோர்குலத்தவர்களுக்கு உற்பத்திஸ்தானம் இலங்கை என்பதுபோலவும், அவர்கள் அத்திசையினின்று இந்தத் தமிழ்நாட்டிற்குவந்து குடியேறியதுபோலவும் எழுதியிருக்கிறார்கள். இதிகாசச் சாட்சிகளெல்லாம் இது தப்பு எனவும், நகைப்புக்கேதுவான கதை எனவும் ருசுக்கூறுகின்றன.

(ரு.) சோலைவேளாளர்.

பூர்வத்தில் தமிழ்நாடெங்கனும் சான்றோர்குலத்தவர்கள் கற்பகவிருக்ஷச்சோலைகள் பரிபாலித்து அமுர்தத்தருமஞ் செய்துவந்த காரணத்தையிட்டு, அக்குலக்கிளைப்பிரிவார் 'சோலைவேளாளர்'* என்றொரு பட்டப்பெயரும் பெற்றிருந்தனர்.

14. பசுபதிபுனுகுசட்டநாதகுருக்களும், அவருடைய வமிசத்தவர்களும், பூர்வதமிழரசர்குலத்தவர்களுக்குப் புரோகிதர்களாகிய குருக்களாயிருந்துவந்தபிரகாரம், நாளதும் அவர்கள் சான்றோர்குலக் குருக்களாம். சான்றோர்குலத்துத் தாமிரசாதனப்பட்டயம் இந்த வீரசைவர்கள் வசத்திலிருந்து வருவதே அதற்குச் சாட்சியாகும். ஆரியப்பார்ப்பாருக்கும், மேற்படி பூர்வ தமிழரசர்குலப் புரோகிதர்களாகிய வீரசைவக் குருக்கண்மாருக்கும் நாளதுவரையினுங் கொடியபகையும் விரோதமுமிருந்து வருகின்றன. பூர்வத்தில் இந்த வீரசைவக்குருக்கள் தரித்திருந்த பூணூல் ஒழிதற்குக் காரணர் இந்த ஆரிய பிராமணர்களாம்.

15. திருவெண்காட்டில் சுவேதாரணியர் எனப் பெயர்கொண்ட சிவபிரான் கோவிலுக்கெதிரே மேற்படி சான்றோர்

* வேளாண்மை=ஈகை; சத்திரியர் அறுதொழிலிலொன்று.

குலப் பெரியோர்கள் ஐம்பத்தேழரை ($57\frac{1}{2}$) வராகனுக்கு சுத்தக்கிரயத்திற்கு நிலம்வாங்கி, தங்கள்குலத்துக்கு மூல புருஷனுகிய சுராபாண்டியராசன் எனப் பெயர்கொண்ட காந்தமாரிஷிக்கு மடங்கட்டி, அந்த மடத்தைத் தங்கள்குலகுருவாகிய 'பசுபதிபுனுகுசட்டநாதகுருக்கள்' விசாரணையில் வைத்தார்கள். அந்தக் காந்தமாரிஷிமடம் நாளதுவரையிலும் மேற்படி புனுகுசட்டநாதகுருக்கள் மரபிலுதித்த வீரசைவக் குருக்கள் விசாரணையிலிருந்து வருகின்றது. இப்போது மேற்படி மடத்துக்குத் தலைமையான குருக்களுக்குப் 'பசுபதிகுருக்கள்' என்றுபேர். அவர்வசத்தில் மேற்படி சான்றோர்குலத் தாமிரசாதனப்பட்டயம் இருக்கின்றது.

16. அவ்வாறு திருவெண்காட்டில் கூடிவந்த சான்றோர்குல மேன்மக்கள் எழுநூறுபேரும், தஞ்சைநகரம், சீர்காழி, திருவெண்காடு, பிறையாறு, குரநாடு, திருநெல்வேலி, சிவகாசி, விருதுபட்டி, திரிசிரபுரம், கருவூர், குழித்தலை, திருச்செங்கோடு, சேலம், இடப்பாடி, காஞ்சிபுரம், சென்னபட்டணம், மதுரை, முதலான பட்டணங்களிலிருந்து வந்து கூடினார்கள்.

17. காளிபூசை, சிவபூசைமுதலான பூசைவகைகளுக்கும், உற்சவங்களுக்குங் கொடுத்துவரவேண்டிய படித்தரக்கட்டளைகளுக்கு விபரம்.

18. சான்றோர்குலத்தவர்கள் மேற்படி பசுபதிபுனுகுசட்டநாதகுருக்களிடத்திலும், அவருடைய வமிசத்தவர்களாகிய 'ஆதிசைவர்' எனப் பெயர்பெற்ற வீரசைவர்களிடத்திலும், தீட்சைபெற்று வரவேண்டும்.

19. சேரமண்டலம், சோழமண்டலம், பாண்டிமண்டலம், தொண்டைமண்டலம் முதலான மண்டலங்களில் வாசஞ்செய்துவருகின்ற சான்றோர்குலத்தவர்கள் மேற்படி சட்டநாதகுருக்கள் வமிசத்தவர்களுக்குக் கொடுத்துவரவேண்டிய சுதந்திரக்கட்டளைக்கு விபரம்.

இவ்வகைப் பொருள்களடங்கிய மேற்படி சான்றோர்குலத் தாமிரசாதனப் படப்பட்டயத்தாலும், எழுத்துப்பட்டயத்தாலும், சான்றோர்குலத்தவர்கள் பூர்வ தமிழ்ச் சத்திரியகுலத்தவர்கள் என்பது தெளிவுற விளங்குகின்றது.

## மூன்றாவது.

### சிதம்பரத்துச் சான்றோர்குலத் தாமிரசாதனப் படப்பட்டயத்திற்கும், எழுத்துப்பட்டயத்திற்கும் விபரம்.

I. சிதம்பரத்துச் சான்றோர்குலத்தாமிரசாதனப் படப்பட்டயத்திற்கு விபரம் வருமாறு:

சிதம்பரம் சோழமண்டலத்திலுள்ள மகா முக்கியமான சிவஸ்தலம். விஷ்ணுகோவில் சிவன்கோயிலுக்குள்ளாக அடக்கமான ஒரு சிறுகோவில். சிதம்பரத்தில் ஆதியில் சிவாலயங் கட்டப்பட்டகாலத்தில் விஷ்ணுவுக்குப் பிரத்தியேகமான ஆலயங்களும் பூசையும் இந்தத் திராவிடநாட்டில்* இல்லையென்று தெரியவருகின்றது. அந்த ஆதிகாலத்தில் சிவபக்தர்களே சிவனோடுகூட விஷ்ணுவையும் ஒருபட்சமாய் வணங்கிவந்ததாக அறிகிறோம். சிதம்பரத்துக்கு வடபாரிசத்தில், பள்ளியோடையில், காளிகாதேவி கோயிலிருக்கிறது. அதற்கு வருஷத்தில் பத்துநாள் உற்சவஞ் சிதம்பரத்துப் பெரியவீதிவழியாக நடந்துவருகிறது. சிதம்பரத்துக்குப் பூர்வத்தில் புலியூர், தில்லைநகர் எனப் பெயர்களுண்டாயிருந்தன. திருவெண்காடு இந்தச் சிதம்பரத்துக்கு முன்னுண்டான சிவஸ்தலமானதால், அதற்கு 'ஆதிச்சிதம்பரம்' எனப் பெயருண்டாயிற்று.

இந்தப் பட்டயத்து நீளம் பதின்மூன்று அங்குலம், அகலம் பத்து அங்குலம்.

இந்தத் தாமிரசாதனப் பட்டயம் ஆதிவீரசைவர் மரபிலுதித்த சிதம்பரகுருக்கள், தாண்டவராயகுருக்கள் பரம்பரையில் வந்திருக்கிற சுப்பராயகுருக்கள் வசத்திலிருக்கிறது. சிதம்பரத்துத் தாமிரசாதனப் படப்பட்டயத்திற்கு ஆறுபத்தியுண்டு.

முதலாவதுபத்தியில் ஐந்து படங்கள்.

(*i.*) பதஞ்சலிரிஷிப்படம். [இடுப்புக்குமேல் மானிடவடிவம், இடுப்புக்குக்கீழ்ப் பாம்புவடிவம்.]

---

* பாகவதபுராணத்தில் 'திராவிடதேசாதிபதியாகிய வைவசுவதமநு' என்று கூறியிருப்பதால் ஆதித்திராவிட பூமி வடநாட்டிலிருந்ததாக உத்தேசிக்கலாம்.

(ii.) வியாக்கிரபாதரிஷிப்படம். [புலிக்காலன்.]

(iii.) சபாநாயகர்படம். [முயலகன் பிணியை நசுக்கி யழிக்கும்பாவனை.]

(iv.) சிவகாமியம்மன்படம். [உண்மையம்மை.]

(v.) ஏனாதிநாதர்படம்.

இரண்டாவதுபத்தியில், ஐந்து படங்கள்.

(i.) காந்தமாரிஷிபடம். [சந்தனவிருக்ஷத்தின்கிழ்த் தவஞ்செய்யும்பாவனை.]

(ii.) கங்காநதித்தீரத்திலுள்ள பொய்கைப்படம்.

(iii.) ரிஷபவாகனரூடர்ாய்ச் சிவனும் பார்வதியும் எழுந்தருளியபடம்.

(iv.) ஆயுததாரியாய்விளங்கிய காளியம்மன்படம்.

(v.) கனகரேதனிபடம்.

மூன்றாவதுபத்தியில், எட்டுப்படங்கள்.

(i.) கனகரேதபுரிபடம்.

(ii.) கமலலோசனிபடம்.

(iii.) சான்றோர்காசுப்படம். [காஞ்சிபுரம் சாதனத்தில் சந்திராயுதமுதலியன வார்ப்பிலமைந்த காசு இருக்கிறது.]

(iv.) மதனசவுந்தரிபடம்.

(v.) ஆராய்ச்சிமணிப்படம்.

(vi.) நாரிகிருபாகரிபடம்.

(vii.) நாரிகுஞ்சரிபடம்.

(viii.) ஏனாதிநாயகிபடம்.

நாலாவதுபத்தியில், ஒன்பது படங்கள்.

(i.) காந்தன்படம்.

(ii.) தெங்குவிருக்ஷப்படம்.

(iii.) சுந்தரன்படம்.

(iv.) கண்டன்படம். [தலைவெட்டுண்டபாவனை.]

(v.) கௌசலன்படம். [தலையிடறுண்டபாவனை.]

(vi.) சாந்தன்படம்.

## மூன்றாவது.

### சிதம்பரத்துச் சான்றோர்குலத் தாமிரசாதனப் பட்டயத்திற்கும், எழுத்துப்பட்டயத்திற்கும் விபரம்.

I. சிதம்பரத்துச் சான்றோர்குலத்தாமிரசாதனப் பட்டயத்திற்கு விபரம் வருமாறு:

சிதம்பரம் சோழமண்டலத்திலுள்ள மகா முக்கியமான சிவஸ்தலம். விஷ்ணுகோவில் சிவன்கோயிலுக்குள்ளாக அடக்கமான ஒரு சிறுகோவில். சிதம்பரத்தில் ஆதியில் சிவாலயங் கட்டப்பட்டகாலத்தில் விஷ்ணுவுக்குப் பிரத்தியேகமான ஆலயங்களும் பூசையும் இந்தத் திராவிடநாட்டில்* இல்லையென்று தெரியவருகின்றது. அந்த ஆதிகாலத்தில் சிவபக்தர்களே சிவனோடுகூட விஷ்ணுவையும் ஒருபட்சமாய் வணங்கிவந்ததாக அறிகிறோம். சிதம்பரத்துக்கு வடபாரிசத்தில், பள்ளியோடையில், காளிகாதேவி கோயிலிருக்கிறது. அதற்கு வருஷத்தில் பத்துநாள் உற்சவஞ் சிதம்பரத்துப் பெரியவீதிவழியாக நடந்துவருகிறது. சிதம்பரத்துக்குப் பூர்வத்தில் புலியூர், தில்லைநகர் எனப் பெயர்களுண்டாயிருந்தன. திருவெண்காடு இந்தச் சிதம்பரத்துக்கு முன்னுண்டான சிவஸ்தலமானதால், அதற்கு 'ஆதிச்சிதம்பரம்' எனப் பெயருண்டாயிற்று.

இந்தப் பட்டயத்து நீளம் பதின்மூன்று அங்குலம், அகலம் பத்து அங்குலம்.

இந்தத் தாமிரசாதனப் பட்டயம் ஆதிவீரசைவர் மரபிலுதித்த சிதம்பரகுருக்கள், தாண்டவராயகுருக்கள் பரம்பரையில் வந்திருக்கிற சுப்பராயகுருக்கள் வசத்திலிருக்கிறது. சிதம்பரத்துத் தாமிரசாதனப் பட்டயத்திற்கு ஆறுபத்தியுண்டு.

முதலாவதுபத்தியில் ஐந்து படங்கள்.

(*i*.) பதஞ்சலிரிஷிப்படம். [இடுப்புக்குமேல் மானிடவடிவம், இடுப்புக்குக்கீழ்ப் பாம்புவடிவம்.]

---

* பாகவதபுராணத்தில் 'திராவிடதேசாதிபதியாகிய வைவசுவதமநு' என்று கூறியிருப்பதால் ஆதித்திராவிட பூமி வடநாட்டிலிருந்ததாக உத்தேசிக்கலாம்.

(ii.) வியாக்கிரபாதரிஷிப்படம். [புலிக்காலன்.]
(iii.) சபாநாயகர்படம். [முயலகன்பிணியை நசுக்கி யழிக்கும்பாவனை.]
(iv.) சிவகாமியம்மன்படம். [உமையம்மை.]
(v.) ஏனாதிநாதர்படம்.

இரண்டாவதுபத்தியில், ஐந்து படங்கள்.

(i.) காந்தமாரிஷிபடம். [சந்தனவிருக்ஷத்தின்கீழ்த் தவஞ்செய்யும்பாவனை.]
(ii.) கங்காநதித்தீரத்திலுள்ள பொய்கைப்படம்.
(iii.) ரிஷபவாகனரூடராய்ச் சிவனும் பார்வதியும் எழுந்தருளியபடம்.
(iv.) ஆயுததாரியாய்விளங்கிய காளியம்மன்படம்.
(v.) கனகரேதனிபடம்.

மூன்றாவதுபத்தியில், எட்டுப்படங்கள்.

(i.) கனகரேதபுரிபடம்.
(ii.) கமலலோசனிபடம்.
(iii.) சான்றோர்காசுப்படம். [காஞ்சிபுரம் சாதனத்தில் சந்திராயுதமுதலியன வார்ப்பிலமைந்த காசு இருக்கிறது.]
(iv.) மதனசவுந்தரிபடம்.
(v.) ஆராய்ச்சிமணிப்படம்.
(vi.) நாரிகிருபாகரிபடம்.
(vii.) நாரிகுஞ்சரிபடம்.
(viii.) ஏனாதிநாயகிபடம்.

நாலாவதுபத்தியில், ஒன்பது படங்கள்.

(i.) காந்தன்படம்.
(ii.) தெங்குவிருக்ஷப்படம்.
(iii.) சுந்தரன்படம்.
(iv.) கண்டன்படம். [தலைவெட்டுண்டபாவனை.]
(v.) கௌசலன்படம். [தலையிடறுண்டபாவனை.]
(vi.) சாந்தன்படம்.

(vii.) விக்கிரமன்படம்.

(viii.) இரட்டைக்குலைவாழைப்படம்.

(ix.) தமிழ்ப்புண்டரீகன்படம். [ஏனாதிநாயகன்படம்.]

ஐந்தாவதுபத்தியில், பதினாலு படங்கள்.

(i.) ரிஷபக்கொடிப்படம்.

(ii.) பஞ்சவர்ணப்பாவாடைப்படம்.

(iii.) சிங்கக்கொடிப்படம்.

(iv.) வெள்ளையானைப்படம்.

(v, & vi.) இரட்டைவெள்ளைக்குடைப்படம்.

(vii, & viii.) இரட்டைவெண்சாமரைப்படம்.

(ix, & x.) இரட்டைச்சுருட்டிப்படம்.

(xi.) இரட்டைச்சங்குப்படம். [காஞ்சிபுரம் தாமிர சாதனத்தில் இரட்டைச்சங்குத்தாலிப்படம் அமைந்திருக்கிறது.]

(xii.) சந்திராயுதப்படம்.

(xiii.) தீட்டாம்பலகைப்படம்.

(xiv.) இடுக்கிப்படம்.

ஆறுவதுபத்தியில், ஆறு படங்கள்.

(i.) அமிர்தக்கமண்டலப்படம்.

(ii.) ஆயுதப்பெட்டிப்படம்.

(iii.) சிலம்புப்படம்.

(iv.) கற்பகவமுதவுற்பத்திசெய்வோன்படம்.

(v.) ஏணிப்படம்.

(vi.) பனைவிருக்ஷப்படம்.

இந்தப்பிரகாரம் மேற்படி சிதம்பரத் தாமிரசாதனப்பட்டயத்தில் நாற்பத்தேழுபடங்களிருக்கின்றன. இந்தநாற்பத்தேழுபடங்களும், திருவெண்காட்டுத் தாமிரசாதனப்பட்டயப் படங்களுக்கொப்பத்தம்.

(i.) சான்றோர்குலதெய்வப்படங்கள்.

(ii.) ரிஷிகள்படங்கள்.

(*iii.*) சத்தகன்னிகள்படங்கள், சத்தவமுதிகள்படங்கள்.

(*iv.*) சான்ருேர்குலவிருதுப்படங்கள்.

(*v.*) கற்பகவிருக்ஷப்படங்கள், கற்பகவமுதவுற்பத்தியாயுதப்படங்கள், சான்ருேர்காசுப்படம். என ஐந்துபெரும்பிரிவுகளாகப் பிரிந்துநிற்கின்றன.

ஆயினும், இவைகளில் அநேகபடங்களுக்கு மேலே பொருள்விபரஞ் சொல்லியிருப்பதால், மேற்படி திருவெண்காட்டுத் தாமிரசாதனப் பட்டயத்திலில்லாத மூன்றுபடங்களுக்கு இங்ஙனம் பொருள்விபரங் கூறுவோம். அந்த மூன்றுபடங்களும் வருமாறு:

(*i.*) பதஞ்சலிரிஷிப்படம். (*ii.*) வியாக்கிரபாதரிஷிப்படம். (*iii.*) ரிஷபவாகனரூடராகிய தேவிபாகரான சிவபிரான்படம்.

(*i.*) பதஞ்சலிரிஷிப்படம்.

திருவெண்காட்டில் பரமசிவன் நடித்த ஊர்த்ததாண்டவம் பார்ப்பதற்குத் தன்னை அழைத்துக்கொண்டுபோகவில்லை என்பதாய்க் குறைகூறிய ஆதிசேடனைப்பார்த்து விஷ்ணுசொல்லுகிருர்: "தில்லையில் பரமசிவன் ஆனந்தத்தாண்டவஞ்செய்யப்போகிருர்; அப்போது நீ பதஞ்சலியாக அவதரித்து அத்தரிசனையைக்காண்பாய்*" என்ருர். அந்தவாக்குப்பிரகாரம், ஆதிசேடனுனவன் மேற்பாதியுடல் மானிடவடிவமுங் கீழ்ப்பாதியுடல்பாம்புவடிவமுமாக அவதரித்து, பதஞ்சலிரிஷியெனப் பெயர்கொண்டு சிவனது ஆனந்தத்தாண்டவ தரிசனைபார்த்ததாகக் கூறுவது புராணசித்தாந்தம். இந்தப் பதஞ்சலிரிஷிப் படம் மானிடதேகத்துடன் பாம்பினுடல் சேர்ந்திருக்கிறபாவனையாகச் செய்யப்பட்டிருக்கின்றது.

(*ii.*) வியாக்கிர†பாதரிஷிப்படம்.

வியாக்கிரபாதரிஷி மத்தியந்தணன் என்னும் ரிஷியினுடைய புத்திரன். புலிக்கால்பெற்று விளங்கினமையால் 'புலிக்

* திருவாலங்காட்டுப் புராணசரித்திரம், 19 - வது பக்கம் காண்க.

† வியாக்கிரம்=புலி.

காலன் வியாக்கிரபாதன்' எனப் பெயராயிற்று. இதைச்சுட்டி திருவெண்காட்டுப்புராணம், வியாக்கிரபாதச்சருக்கம், ]-வது கவியிற் கூறியிருப்பது :

> " உத்தமர்க்கெலா முத்தமனொருவன்முன் னுகத்தின்
> மத்தியந்தண னெனும்பெயர்மாதவன் பயந்த
> புத்திரன்புலிக் காலனிப்புவியிலெப்பொருளிற்
> சத்தியப்பொருளறிந்ததன்வழியிலே சார்ந்தான்."

வியாக்கிரபாதர் நன்னெறிதேர்ந்து அதில் ஒழுகிவருகையில், முயலகன் பிணியால் மிகு கஷ்டப்பட்டதுகண்டு, அவருடைய பிதாவாகிய மத்தியந்தணரிஷியானவர் அவரைப்பார்த்து, திருவெண்காட்டுக்குப்போய்ச் சபாநாயகரைத் தரிசித்து லிங்கபூஜைசெய்தால் இந்தவியாதி தீருமென்றுசொல்ல, வியாக்கிரபாதர் அந்தப்பிரகாரஞ்செய்தார். அப்படியவர் திருவெண்காட்டில் லிங்கபூஜை செய்துவருகையில், பரமசிவன் ரிஷபாரூடராய் அவருக்குத் தரிசனையாகி, அந்த முயலகன் பிணியைத் தமது கால்கொண்டு நசுக்கி யழித்துப்போட்டாரென்று புராணங் கூறுகின்றது.

(*iii.*) ரிஷபவாகனரூடராய் தேவிபாகரான சிவபிரான்படம்.

சிவனும் பார்வதியும் ஏகமாய் ரிஷபமாகிய காளையின்மேலேறி ரிஷபாரூடராய்ச் செல்லுகின்றனர் என்பது புராண சித்தாந்தம்.* சான்றோர்குலத்தவர்களுக்குச் சிவனுங் காளியாகிய பார்வதியும், அவர்களுடைய புத்திரர்களாகிய கணபதியும், சுப்பிரமணியனுங்† குலதெய்வங்களென்பதற்கிசைய அ

---

* சர்வலோகத்திலுமுள்ள சீவர்களெல்லாம் ஆண், பெண் எனும் இரண்டு பெரும்பிரிவாய்ப் பிரிந்திருப்பதற்கு இது குறிப்பாகும்.

† நாளதும் சிவன்கோவில்களிலும், சுப்பிரமணியர் கோவில்களிலும், மேற்படியார் சிலைகளெல்லாம் வடிகாதுடையவைகளாகச் செய்யப்பட்டிருப்பதைக் காண்கிறோம். ஆனால் மேற்படி குலதெய்வங்கள் நாளதும் வடிகாதுகளை யுடைத்தாயிருக்கிற சான்றோர்குலத்து மூனவர்களென்பது பிரத்தியட்சமாகிறது. இப்படியிருக்க, தொள்ளைக்காதில்லாத சூத்

வர்களுடைய படங்கள் இந்தச் சான்றோர்குலத் தாமிரசாதனப் பட்டயத்திற் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன.

II. சிதம்பரத்துச் சான்றோர்குலத்தாமிரசாதன எழுத்துப்பட்டயத்திற்கு விபரம் :

இந்த எழுத்துப்பட்டயத்தில் அடங்கிய அனேகவிஷயங்கள் திருவெண்காட்டு எழுத்துப்பட்டயத்திலுங் கூறப்பட்டிருப்ப

---

திரர், பார்ப்பார்முதலிய பிறகுலத்தவர்கள் தொள்ளைக்காதுகளையுடைய சுவாமிகளைக் கும்பிடுகிறகாரணமென்ன? வடிகாதுகளையுடைய சுவாமிகள் அமைந்திருக்குந் தலத்தையடுத்து, வடிகாதுகளையுடைய சான்றோர்குலத்தவர் வடிகாதில்லாத பிறகுலத்தவர்களைப்போல் தங்கள் குலதெய்வங்களுக்குப் பூசைசெய்வது தகுதியன்றோ? சான்றோர்குலத்துக்கினமான வடிகாதுடைய சுவாமிகளைச் சூத்திரர், பார்ப்பார்முதலிய பிறகுலத்தவர்கள் சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிட்டும், இருகைகளையுங்கூப்பிக் கும்பிட்டும் வந்தபோதிலும், அவர்கள் வடிகாதை இகழ்ந்துபேசுவதேன்? ஸ்ரீரங்கத்தில் தென்கலை வடகலைச் சண்டையாலுண்டாகிய வியாச்சியம் தென்கலைநாமத்தால் ருசுவாகித் தீர்ந்ததுபோல், வடிகாதுகளையுடைய சுவாமிகளும் நாளதும் வடிகாதுகளையுடைய சான்றோர்குலத்தவர்களுக்குரிமையானவர்களென்பதும், மேற்படி சுவாமிகளுக்கு அமைந்திருக்கிற வடிகாதுகளால் ருசுவாகுமல்லவா? மேலும் விஷ்ணுவுக்கும் விஷ்ணுபத்தரான ஆழ்வார்களுக்கும் வடிகாதுகளுண்டு. நாலாயிரப்பிரபந்தம், பெரியாழ்வாரருளிய இரண்டாம்பத்து, ௩-வது காதுகுத்தல், ௬-ம் செய்யுள் :

"வணநன்றுடைய வயிரக்கடிப்பிட்டு
வார்காதுதாழப்பெருக்கிக்
குணநன்றுடையரிக்கோபாலபிள்ளைகள்
கோவிந்தா நீ சொல்லுக்கொள்ளாய், &c."

இதில் கிருஷ்ணனுக்கு வடிகாதிருந்ததாகச் சொல்லப்படுகிறது. ஸ்ரீரங்கத்து ௪-வது திருமதில்கட்டி ஆலிநாட்டிற் செங்கோற்செலுத்தி, வடிகாதுகளையுடைய சிற்றரசர்களிலொருவர் திருமங்கையாழ்வார்; அவருடைய சிலைகள் நாளதும் வடிகாதுடையவைகளாகவே யிருந்துவருகின்றன. உற்சவதினங்களில் அவருடைய சிலையைச் சிங்காரிக்கும்போது

னால், அவற்றையொழித்து, அதிலில்லாதவிஷயங்களை இங்ஙனஞ் சொல்லுவோம். அவை வருமாறு:

1. சிதம்பரத்துச்சான்றோர்குலத் தாமிரசாதனம், சாலிவாகனசகாப்தம் 1514–ல் எழுதப்பட்டது. இது கிறிஸ்தாப்தம் 1591 க்குச் சரியொத்தது.

2. சான்றோர்குலப் பெரியோர்கள் சிதம்பரத்தில் மேல்க்கோபுரவாசற்சந்நிதிக்கு வடபக்கத்தில் குலோத்துங்கசோழன் வீதியாகிய மேல்வீதியில் கீழ்சிறகில் சுமார் இருபத்து மூன்றே அரைக்கால் ($23\frac{1}{8}$) விராகனுக்குச் சுத்தக்கிரயத்திற்கு நிலம்வாங்கி அதில் ஒருமடங் கட்டினார்கள்.

3. அந்தமடத்துவிசாரணைக்கு ஆதிவீரசைவர் மரபிலுதித்த சிதம்பரகுருக்களை நியமனஞ்செய்து, அவருக்கு மேற்படி தாமிரசாதனப்பட்டயம் எழுதிக்கொடுத்தார்கள்.

4. அந்தச் சான்றோர்குலத் தாமிரசாதனப்பட்டயம் இப்போது மேற்படி சிதம்பரகுருக்கள் மரபிலுதித்த சுப்பிரமணியகுருக்கள் வசத்திலிருக்கிறது.

5. சான்றோர்குலப் பூர்வ உற்பத்தி திருவெண்காட்டுப் பட்டயத்தில் வருகிறபடியே, இந்தப்பட்டயத்திலுங் கூறியிருக்கின்றது.

---

அச்சிலைக்கிருக்கின்ற வடிகாதுகளில் நாளது தென்பாண்டி நாட்டு நாடாள்வார்களாகிய நாடாக்களணிந்துவருகின்ற வண்டிச்சுடுக்கனையொத்த குண்டலங்களிட்டு, மேற்படி நாடாக்கள் தரித்துவருகின்ற தலைக்குட்டைகளாகிய உறுமால்கள் மேற்படியார் கட்டுகிறபிரகாரம், மேற்படி சிலைக்குக்கட்டிப் பதினெண்வகை ஆயுததாரியாக ஊர்கோலம்வரச்செய்வது நாளதும் வழக்கம். மேற்படி திருமங்கையாழ்வாருக்கு 'ஆலிநாடான்' என்பது முன்பெயர். அவர்மீது பாடப்பட்டிருக்கின்ற பாட்டுகளில் 'ஆலிநாடான்' எனகிறபேரும், அவருக்கு அலங்காரமாக அவருடைய நீண்ட துளைக்காதும், வர்ணித்துக் கூறப்பட்டிருக்கின்றன. இவைகளை ஆராய்ந்துபார்க்கும்போது, தொள்ளைக்காதுகளில்லாத சூத்திரர், பார்ப்பார் முதலியோர் தொள்ளைக்காதுகளையுடைய சுவாமிகளைப் பூர்வமுதல் கும்பிட்டுவந்திருப்பதால், பூர்வ அரசகுலத்தவர்களுக்குத் தொள்ளைக்காதுகளிருந்துவந்தது பூர்வம் அவர்களுக்கு நன்றாய்த் தெரிந்த உண்மையென விளங்குகின்றது.

6. சான்றோர்குலத்தவர்கள் 'இலங்காபுரிமன்னர்' எனப் பட்டப்பெயர் பெற்றவர்கள். சிங்கக்கொடி, ரிஷபக்கொடி, வெள்ளையானை, சிங்கமுகத்தண்டிகை, இரட்டைச்சங்கு, பஞ்சவர்ணப்பாவாடை முதலான இராசவிருதுகள் பெற்றவர்கள்.

7. அவர்களில் ஒருகிளைப்பிரிவார் பூர்வத்தில் இலங்கையாண்டவர்கள். ஆனதால், அவர்களுக்கு இலங்கைமன்னர் எனவும், இலங்காபுரித்தலைவர் எனவும் பெயர்களுண்டாயின.

8. அக்குலத்தவர்கள் பெற்றிருந்த பட்டப்பெயர்களுக்கு விபரம்.

இவைமுதலான விஷயங்கள் மேற்படி எழுத்துப்பட்டயத்திற் கூறப்பட்டிருக்கின்றன.

நான்காவது.

சான்றோர்குலத்தவர்களுக்குரிய முக்கியமானபட்டப்பெயர்கள் வருமாறு:

1. சானவேயர்,<br>கங்காகுலத்தார்.
2. காளிபுத்திரர்,<br>காளிகாதேவிமைந்தர்.
3. சான்றவர்,<br>சான்றார்,<br>சான்றோர்.
4. கருக்குப்பட்டயச்சான்றோர்.
5. இலங்கைமன்னர்,<br>இலங்காபுரித்தலைவர்.
6. வலங்கைமன்னர்,<br>வலங்கைராயர்.
7. வணிகர்மாணங்காத்தோர்,<br>செட்டிதோளேறியபெருமான்.
8. நாடாள்வார்,<br>நாடாக்கள்,*<br>ஆள்வார்.

---

* காஞ்சிபுரம் சாதனத்தில் 'அன்பத்தாறு தேசத்து நாடாக்கள்' என்று கண்டிருக்கிறது.

தால், அவற்றையொழித்து, அதிலில்லாதவிஷயங்களை இங்ஙனஞ் சொல்லுவோம். அவை வருமாறு:

1. சிதம்பரத்துச்சான்றோர்குலத் தாமிரசாதனம், சாலிவாகனசகாப்தம் 1514—ல் எழுதப்பட்டது. இது கிறிஸ்தாப்தம் 1591 க்குச் சரியொத்தது.

2. சான்றோர்குலப் பெரியோர்கள் சிதம்பரத்தில் மேல்க்கோபுரவாசற்சந்நிதிக்கு வடபக்கத்தில் குலோத்துங்கசோழன் வீதியாகிய மேல்வீதியில் கீழ்சிறகில் சுமார் இருபத்துமூன்றே அரைக்கால் ($23\frac{1}{8}$) விராகனுக்குச் சுத்தக் கிரயத்திற்கு நிலம்வாங்கி அதில் ஒருமடங் கட்டினார்கள்.

3. அந்தமடத்துவிசாரணைக்கு ஆதிவீரசைவர் மரபிலுதித்த சிதம்பரகுருக்களை நியமனஞ்செய்து, அவருக்கு மேற்படி தாமிரசாதனப்பட்டயம் எழுதிக்கொடுத்தார்கள்.

4. அந்தச் சான்றோர்குலத் தாமிரசாதனப்பட்டயம் இப்போது மேற்படி சிதம்பரகுருக்கள் மரபிலுதித்த சுப்பிரமணியகுருக்கள் வசத்திலிருக்கிறது.

5. சான்றோர்குலப் பூர்வ உற்பத்தி திருவெண்காட்டுப் பட்டயத்தில் வருகிறபடியே, இந்தப்பட்டயத்திலுங் கூறியிருக்கின்றது.

---

அச்சிலைக்கிருக்கின்ற வடிகாதுகளில் நாளது தென்பாண்டிநாட்டு நாடான்வார்களாகிய நாடாக்களணிந்துவருகின்ற வண்டிக்கடுக்கனையொத்த குண்டலங்களிட்டு, மேற்படி நாடாக்கள் தரித்துவருகின்ற தலைக்குட்டைகளாகிய உறுமால்கள் மேற்படியார் கட்டுகிறபிரகாரம், மேற்படி சிலைக்குக்கட்டிப் பதினெண்வகை ஆயுததாரியாக ஊர்கோலம்வரச்செய்வது நாளதும் வழக்கம். மேற்படி திருமங்கையாழ்வாருக்கு 'ஆலிநாடான்' என்பது முன்பெயர். அவர்மீது பாடப்பட்டிருக்கின்ற பாட்டுகளில் 'ஆலிநாடான்' என்கிறபேரும், அவருக்கு அலங்காரமாக அவருடைய நீண்ட துளைக்காதும், வர்ணித்துக் கூறப்பட்டிருக்கின்றன. இவைகளை ஆராய்ந்துபார்க்கும்போது, தொள்ளைக்காதுகளில்லாத சூத்திரர், பார்ப்பார் முதலியோர் தொள்ளைக்காதுகளையுடைய சுவாமிகளைப் பூர்வமுதல் கும்பிட்டுவந்திருப்பதால், பூர்வ அரசகுலத்தவர்களுக்குத் தொள்ளைக்காதுகளிருந்துவந்தது பூர்வம் அவர்களுக்கு நன்றாய்த் தெரிந்த உண்மையென விளங்குகின்றது.

6. சான்ேறார்குலத்தவர்கள் 'இலங்காபுரிமன்னர்' எனப் பட்டப்பெயர் பெற்றவர்கள். சிங்கக்கொடி, ரிஷபக்கொடி, வெள்ளையானை, சிங்கமுகத்தண்டிகை, இரட்டைச்சங்கு, பஞ்சவர்ணப்பாவாடை முதலான இராசவிருதுகள் பெற்றவர்கள்.

7. அவர்களில் ஒருகிளைப்பிரிவார் பூர்வத்தில் இலங்கை யாண்டவர்கள். ஆனதால், அவர்களுக்கு இலங்கைமன்னர் எனவும், இலங்காபுரித்தலைவர் எனவும் பெயர்களுண்டாயின.

8. அக்குலத்தவர்கள் பெற்றிருந்த பட்டப்பெயர்களுக்கு விபரம்.

இவைமுதலான விஷயங்கள் மேற்படி எழுத்துப்பட்டயத்திற் கூறப்பட்டிருக்கின்றன.

நான்காவது.

சான்றோர்குலத்தவர்களுக்குரிய முக்கியமானபட்டப்பெயர்கள் வருமாறு :

1. { சானவேயர், கங்காகுலத்தார்.
2. { காளிபுத்திரர், காளிகாதேவிமைந்தர்.
3. { சான்றவர், சான்றார், சான்றோர்.
4. கருக்குப்பட்டயச்சான்றோர்.
5. { இலங்கைமன்னர், இலங்காபுரித்தலைவர்.
6. { வலங்கைமன்னர், வலங்கைராயர்.
7. { வணிகர்மானங்காத்தோர், செட்டிதோளேறியபெருமான்.
8. { நாடாள்வார், நாடாக்கள்,* ஆள்வார்.

---

* காஞ்சிபுரம் சாதனத்தில் 'அன்பத்தாறு தேசத்து நாடாக்கள்' என்று கண்டிருக்கிறது.

9. { நாடான், நாடன்.
10. நாயகன்.
11. { கவுண்டலீகமரபினர், கவுண்டர்.
12. கிராமணிகள்.
13. சோலைவேளாளர்.
14. சேர்வைகாரர்.

இந்தப்பட்டப்பெயர்களுக்கு இங்ஙனஞ் சுருக்க விபரங் கூறுவோம் :

1. 'சானவேயர், கங்காகுலத்தார்.'

சன்னுமாரிஷியானவர் இமயகிரியில் தவஞ்செய்துகொண்டிருக்கும்போது, கங்காநதியானது தனக்குநேரே சுரந்தோடி வருவதுகண்டு, தன்யோகநிலைக்கு இடையூறுவராதபடிக்கு அந்த நதிச்சலத்தை ஒருசெவிவழியாய் உட்கொண்டு, அது தன்னைத்தாண்டி அப்பாற்செல்லாதபடி தடுத்துக்கொண்டிருந்தார். பகிரதன் கங்காநதியைத் தன்றரைப்பூமிக்குக் கொண்டுவரும்படியாக இமயகிரியின்மீது சென்றபோது, மேற்படி சன்னுமகாரிஷியானவர் மேற்படி கங்காநதிச்சலத்தை வெளியேறாது தடுத்துக்கொண்டிருப்பதைக்கண்டு, அந்த நதி ஜலத்தை வெளியேற்றும்படி அந்தரிஷியினிடத்தில் விண்ணப்பஞ்செய்தான். அதற்கிசைந்து, அந்த ரிஷி அந்தநதியை அப்பால் ஓடும்படி மறுசெவிவழியாய் விட்டுவிட்டார். சன்னுமகாரிஷியானவர் அந்தக் கங்காநதியை உட்கொண்டிருந்த காரணத்தால், அதற்குச் 'சானவி' என்று ஒரு பெயருண்டாயிற்று.

சூராபாண்டியராசனுகிய காந்தமாரிஷிக்குச் சத்தகன்னிகளிடத்திற்பிறந்த சத்தவழுதிகளுங் கங்காநதித்தீரத்தில் காளிகாதேவிகோவிலுக்குள்வைத்துப் பாதுகாக்கப்பட்டு, காமதேனுவெனப் பெயர்கொண்ட மலைப்பசுவின் பால்கொடுத்து வளர்க்கப்பட்டதால், கங்காதேவியே பால்கொடுத்துவளர்த்ததாகப் புராணங்கூறுகிறது. ஆகவே 'கங்கைவளர்த்தான்'

என்கிற மேற்படி புராணசித்தாந்தப்படிக்கு சத்தகன்னிகள் புத்திரர் ஏழுபேரும் அவர்கள் வமிசத்தவர்களும் 'சானவே யர், கங்காகுலத்தார்' * எனப் பெயர்கள்பெற்றிருந்தனர். ஆகையால், சான்றோர்குலத்தவர்களுக்கும் 'சானவேயர், கங்கா குலத்தார்' எனப் பெயர்களுண்டாயின. இதைச்சுட்டிச் சான்றோர்புராணம், உற்பத்திப்படலம், 49-வது, 50-வது கவிகளிற் கூறியிருப்பது:

49-வது கவி:

"தந்தைமைந்தர்களெழுவரை வித்தியாதரனுந்
தந்தைதன்கையிற் கொடுத்தவர்தன்னகரடைந்தார்
மைந்தர்கட்கனையாய் வரநதிமுனிவரத்தால்
வந்துபாலளித்திடவளர்ந்தனர் வளர்பிறைபோல்."

இங்ஙனம் சத்தகன்னிகள் ஏழுபெயர்களும் தாங்கள் பெற்ற சத்தவழுதிகள் எழுவரையும் வித்தியாதரமுனியாகிய காந்தமாரிஷியிடத்தில் ஒப்பித்துவிட்டுத் தங்கள் சுயநாடுபோய்ச்சேர்ந்தார்கள். அப்போது கங்காதேவியாகிய மாதா அந்தப் பாலகர்களுக்குப் பால்கொடுத்து வளர்த்துவந்தாள் என்று சொல்லியிருக்கிறது. சான்றோர்குலத் தாமிரசாதனப் பட்டயத்திலே, காமதேனு எனப் பெயர்கொண்ட காட்டுப்பசுவைக் கொண்டு பால்கொடுத்து வளர்த்ததாக வரைந்திருக்கின்றது.

50-வது கவி:

"மானநேர்புகழ்மைந்தரவ் வெழுவருமங்கிமேற்
தேனவாமொழிச்சானவியால்வளர்செயலாற்
சானவேயரென்றொருபெயர் தாங்கினர்மற்றுந்
தானிலாவுகங்கையின் குலத்தாரெனச்சாற்றும்."

இந்தக்கவிக்கு, இந்த ஏழுபுத்திரர்கள் கங்கையால் வளர்க்கப்பட்டார்கள் என்கிற புராணசித்தாந்தப் பிரகாரம், அவர்களுக்கும் அவர்கள்குலத்தவர்களுக்கும் 'சானவேயர்' எனவும், 'கங்காகுலத்தார்' எனவும் பெயர்களுண்டாயின வென்

* Cf. "The auspicious Ayaparasa of the world-renowned Ganga-race; * * * above this is the figure of Kali." Vide Shila Shasana at Begur, Mysore province.—*Madras Mail*, 14*th April*, 1873.

பது தாற்பரியம். ஆகவே, சான்ருேர்குலத்தவர்களுக்குச் 'சாணவேயர், கங்காகுலத்தார்' என்பன அதிபூர்வப்பட்டப் பெயர்களாம்.

2. 'காளிபுத்திரர், காளிகாதேவி மைந்தர்.'

உமையம்மையாகிய காளிகாதேவி அரசகுலத்தவர்களுக்குக் குலதெய்வமானதிஞலும், சத்தகன்னிகள் புத்திரர் ஏழு பெயர்களுங் காளிகாதேவியால் வளர்க்கப்பட்டார்கள் எனப் புராணங் கூறியிருப்பதிஞலும், சூராபாண்டியனுகிய காந்த மாரிஷிபுத்திரர் ஏழுபேர்களும் அவர்கள்குலத்தவர்களுங் காளிபுத்திரர் எனப் பெயர்பெற்றிருந்தனர். ஆகவே, சான்ருேர் குலத்தவர்களுக்குக் 'காளிபுத்திரர்' எனப் பட்டப்பெயருண்டாயிற்று. இதற்கு நூற்சாட்சி மேலேப்பிரகரணங்களிற் கூறியிருப்பதைக் கண்டுகொள்க.

3. 'சான்றவர், சான்ருர், சான்ருேர்.'

இந்த மூன்றுபெயர்களும் சான்ருேர்குலத்துக்குரிய சிறந்த பட்டப்பேர்களென மேலேப் பிரகரணங்களில் ருசுக்கூறியிருக்கிருேம். அங்ஙனங் கண்டுகொள்க.

4. 'கருக்குப்பட்டயச்சான்ருேர், இது சான்ருேர்குலத்துக்குரிய போர்த்தொழிற்றிறத்தால் அக்குலத்தவர்களுக்குப் பூர்வமுதல் வந்திருக்கிற அரசகுலப் பட்டப்பெயராம். இது நாளதும் அந்தக் குலத்தவர்களுக்குரிய பட்டப்பெயர்களிலொன்ருக வழங்கிவருகின்றது.

சான்ருேர்புராணம், பாயிரப்படலம், 6-வது கவி:

"ஒருகாலங்கற்ருேருக் குதவிசெய்யும்புகழாள
ருலகம்போற்ற
வருநதியின்குலமரபோர் வரிசையாய்ப் பதினெட்டாயு
தமும்பெற்ருேர்
பொருபடையிலெதிரேறி மதியாமல் வெற்றிகொண்ட
பொய்யில்லாதோ
ரிருவகையாய் வருசனங்களடிவணங்கக் கயிலாயத்தேகி
ஞனே."

இந்தக்கவியில், சான்றோர்குல முன்னவர்களுக்கு, 'கற்றோருக்குதவிசெய்யும் புகழாளர்' எனவும்,

'உலகம்போற்றவரு நதியின்குலமரபோர்' எனவும்,

'பதினெட்டாயுதமும் பெற்றோர்' எனவும்,

'பொருபடையிலெதிரேறி மதியாமல் வெற்றிகொண்ட பொய்யில்லாதோர்' எனவும்,

பெயர்கள் வந்திருக்கின்றன. இவைகள் சத்திரியகுலப் பட்டப்பெயர்களாகும். இவற்றுள் 'உலகம்போற்றவரு நதியின் குலமரபோர்' என்பதற்கு 'கங்காகுலத்தார்' என்பது தாற்பரியமாம்.

பதினெட்டாயுதமும்பெற்றோர் என்பதனால் சான்றோர்குலத்தவர்களுக்குக் 'கருக்குப்பட்டயச்சான்றோர்' எனப் பட்டப்பெயர் வந்திருப்பதற்குக் காரணம் விளங்குகின்றது.

5. 'இலங்கைமன்னர், இலங்காபுரித்தலைவர்.'

சான்றோர்குலத்தவர்கள் ஒருகாலத்தில் இலங்கையையுஞ் செயித்து, அதையாண்டுவந்தபடியால், அவர்களுக்கு இந்தப் பட்டப்பெயர்களுண்டாயின.

சான்றோர்புராணம், உற்பத்திப்படலம், 1 - வது கவி :

"அழியாவலியான்றருகனை யறுத்துவிகடன்றலையரிந்து
பொழியாமுகிலைப்பொழிவித்துப் பூரீசனைக்கொன்றலைகடலின்
வழியாயிறங்கியிலங்கைநக ராண்டுவணிகர் மானங்காத்
தொழியாப்புகழ்சேர் சோலைவேளாளர் பிறவியுரைசெய்வாம்."

இங்ஙனம், சான்றோர்குலத்து முன்னவர்களுக்கு,

'தாருகனைச் சங்காரஞ்செய்தவர்கள்' எனவும்,

'விகடன்தலையரிந்தவர்கள்' எனவும்,

'பொழியாமுகிலைப் பொழிவித்தவர்கள்' எனவும்,

'பூரீசனைக்கொன்றவர்கள்' எனவும்,

'அலைகடலின் வழியாயிறங்கி, இலங்கைநகராண்டவர்கள்' எனவும்,

'வணிகர்மானங் காத்தவர்கள்' எனவும்,

'சோலைவேளாளர்' எனவும், பட்டப்பெயர்கள் வந்திருக்கின்றன.

இதனால், சான்றோர்குலத்தவர்கள் முன்னொருகாலத்தில் இலங்கையைச்செயித்து ஆண்டுவந்தது தெரியவருகின்றது.

6. 'வலங்கைமன்னர், வலங்கைராயர்.'

தமிழ்நாட்டார்கள் வலங்கை இடங்கையென இரண்டு பெரும்பிரிவாகி, வருடாவருடம் ஒருவரோடொருவர் எதிரித்தனம் பாராட்டி, சண்டைசெய்துவந்திருக்கிறார்கள். இடங்கையார் ஒன்பதுசாதிகள். அவர்களுக்கு வன்னியர் தலைவர்களாயிருந்துவந்தனர். வலங்கையார்களுக்குத் தொண்டைமண்டலச் சான்றோர்குலத்தவர்கள் தலைவர்களாயிருந்துவந்தனர்; ஆனதால், அவர்களுக்கு 'வலங்கைமன்னர்' எனவும், 'வலங்கைராயர்' எனவும் பட்டப்பெயர்களுண்டாயின. வலங்கை இடங்கைப்பிரிவுக்கு உற்பத்திஸ்தானம் காஞ்சிநகர் என்று உத்தேசிக்கப்படுகிறது.*

7. 'வணிகர் மானங்காத்தோர், செட்டிதோளேறிய பெருமான்.'

இந்தப் பட்டப்பெயர் சான்றோர்குலத்தவர்கள் பெற்றிருந்ததற்கு விபரம், சான்றோர்புராணம், வணிகர்மானங்காத்த படலத்திலும், சான்றோர்கும்மி 45-வது பக்கத்திலுங்காண்க.

8. 'நாடாள்வார், நாடாக்கள், ஆள்வார்.'†

இதற்குவிபரம் மேலே ஆறுவது பிரகரணங்காண்க.

9. 'நாடான், நாடன்.'

இவைகட்கு விபரம் மேலே ஆறுவது பிரகரணங்காண்க.

---

* Vide Mysore History by Wilks, vol, I. p. 54, and vol. II. p. 14.

† An inscription on the walls of the Fane of திருவானைக்கா runs thus:—"ஸ்வஸ்த ஸ்ரீ திரிபுவன சக்ரவர்த்திகள் ஸ்ரீ ராஜ ராஜதேவர்க்கு யாண்டு உ௰-வது ரிஷபநாயற்று பூர்வ பக்ஷத்து துவாதெசியும், திங்கட்கிழமையும்பெற்ற அத்தத்து நாள் பாண்டியகுலமான வளநாட்டு உடயார் திருவானைக்கா

## 10. 'நாயகன்.'

சேரசோழபாண்டியர்களுக்கு 'நாயகன்' எனப் பட்டப்பெயருண்டாயிருந்தகாரணத்தால், அவர்கள் குலத்தவர்களுக்கும் அது பட்டப்பெயராயிற்று. நாளதும் காவிரிப்பூம்பட்டணத்தையடுத்த கிராமங்களிலிருக்கிற சான்றோர்குலக்கிளைப்பிரிவார்களில் ஓர் கிளைப்பிரிவாருக்கு 'நாயகன்' என்பது பட்டப்பெயராக வந்துவழங்குகின்றது.

---

வுடைய நாயனுற்கோயில் ஆதி சண்டிகேஸ்வரதேவர் கன்மிகளுக்குள் ஈா - ஈா - வளநாட்டுப் பரம்பிற கூற்றத்து கீழ்பாலாற்றுக் காரிசாத்தனக் குறைக்காணி உடய ஒடவுடையாரில் கூத்தன் குன்றனை கிழாற்றூர் அரயனும், இவன்தம்பி ஆரம்பூண்டானும், இவன்தம்பித் தாழியும், விடங்கரை உடயனை மழநாட்டு விழுப்பரைய நாடாள்வானும், இவன்தம்பி திருவரங்கனும், &c * * * * *. விற்றுக்குடுத்த நிலமும் மனையுமாவது * * * * *. இந்நாங்கெல்லை உள்ப்பட்ட நிலத்தால் பங்குபணி ரெண்டில் பொல்லறதான செல்வனை பொன்னிமழைநாடாழ்வானும், உடயான் நஞ்சுண்டானை நெற்குப்பைஅரனும், உள்ளிட்டார்ப் பங்காயி முன்னுளில் இந்நாயனுற்சிவநாமத்தால் விலைகொண்ட பங்கு நாலும், மணியன் தேவநான நிறைவழிசோழபல்லவனையனும், பெரியான் அம்பலவனை பொன்மலை நாடாழ்வானும், உள்ளிட்டார்பங்கு நாலும், ஆகபங்கு எட்டும் நீக்கி, எங்களுதான பங்கு நாலு. இப்பங்கு நாலில் இவ்வூரில் அய்யனுற்குன்றவளநாடர்க்குச்சிகோயிலும், திருமுற்றமும், திருநந்தவனத்துக்கும் * * * அறைமாநீக்கி நின்ற பங்கால்வந்த நிலமும், மனையும் விற்றுகொடுத்துக்கொள்வதான எம்மாவிசைந்த விலைப்பொருள், அன்றுடுக்காசு நாலாயிரம், இக்காசு நாலாயிரமும் * * * கொண்டு விற்று * * * கொடுத்தோம். கூத்தன் குன்றனைக் கிளாத்தூர் அறையனும், இவன்தம்பி ஆரம்பூண்டானும், இவன்தம்பி தாழியும், வடங்கன் உடயானை மழநாட்டு விழுப்பரை நாடாள்வானும், இவன் தம்பி திருவரங்கனும், * * * பங்கு நாலால்வந்த நிலத்துக்கும், மனைக்கும், இந்நிலத்துக்கு மேனேக்கின மரமும, கீழ்நோக்கின கிணறும், * * * ஆருமாநடுப்படுகையும், உப்பட்டுக்காசு நாலாயிரம் விலையாவதாகவும், * * * இப்படிக்குச்சும்மதித்து * * * கொடுத்தோம். உடயார் திருவானைக்காவுடைய நாயனுற்கோயில் ஆதி சண்டிகேஸ்வரதேவர் கண்மிகளுக்கு கூத்தன் குன்றனை கிளாத்தூர் அறையனும், இவன்தம்பி ஆறம்பூண்டானும், இவன் தாளியும், விடங்கன் உடயானை மளநாட்டு விழுப்பரையநாடாள்வானும், இவன்தம்பி திருவரங்கனும் * * *."

11. 'கவுண்டலீக மரபினர், கவுண்டர்.'

கவுண்டலீகரிஷியின் ஆசிர்மத்தில் சூராபாண்டிய மகாரா சன்தபத்தில் உற்பத்தியான காரணத்தையிட்டு, மேற்படியார் குலத்தவர்களுக்கு இந்தப் பட்டப்பெயருண்டானதாக விளங்கு கிறது. கொங்குநாட்டுச் சான்றோர்களுக்கும் சோழனுடைய பூர்வநகரங்களில் ஒன்ருகிய உறையூர்த்திசையில் குடியிருந்து வருகிற சான்ரோர்குலக்கிளைகளில் ஓர் கிளைப்பிரிவினருக்கும நாளதும் 'கவுண்டர்' என்னும் பட்டப்பெயர் வழங்கிவரு கிறது.

12. 'கிராமணிகள்.'

இந்தப்பெயர் தொண்டைவளநாட்டுப் பண்டைச் சான்ரோர் குலத்தவர்களுக்குப் பட்டப்பெயராகும். இதற்குவிபரம் மே லே ஐந்தாவது பிரகரணங்காண்க.

13. 'சோலைவேளாளர்.'

பூர்வத்தில் சான்ரோர்குல முன்னவர்கள் அமுதவிருக்ஷச் சோலைகள் பரிபாலித்து அமுதவிருத்திசெய்து, அமுதத்தரு மம் நடப்பித்துவந்தகாரணத்தையிட்டு, பெற்றுக்கொண்ட பட் டப்பெயர். இப்பட்டப்பெயர் மேலேயாமெடுத்துக்கூறிய, சான் ரோர்புராணத்து உற்பத்திப்படலம், 1-வது கவியில் வருகிறது. மேலும் அப்பெயர் கொடுக்கப்பட்டதற்குக் காரணம், சான் ரோர்புராணம் அபிமானபுங்கவன்படலம், 121-வது கவியிற் காண்க.

14. 'சேர்வைகாரன்.'

இதுவும் சான்ரோர்குலக்கிளைப்பிரிவொன்றுக்குரிய பட் டப்பெயராம். 'சேர்வைகாரன்' என்பதற்கு 'சேனதிபதி, படைத்தலைவன்' என்று பொருளாகும். இதுவுஞ் சத்திரிய குலப் பட்டப்பெயர்களிலொன்று.

மேற்படி பட்டப்பெயர்களை ஒருசேரத்திரட்டிப் பார்வை யிடும்போது, சான்ரோர்குலத்தவர்கள் பூர்வ தமிழரசர்குலத் திலுதித்தவர்களென்று துலாம்பரமாகத் தெரியவருகின்றது.

இனிச் சான்ரோர்குலத்தவர்களுடைய பாஷை தமிழாரிய மென்றும், சமயமதம் சைவமென்றும், பின்னொரு நூலில் விபரப்பட எழுத யோசித்திருப்பதால் இங்ஙனம் அவைகளைக் குறித்துப் பேசாது நிறுத்துதல் செய்கிரோம்.

முற்றிற்று.

